இவர் தந்தையாரால் சாதகருமம் முதலிய சடங்குகளும் வித்தியாப்பியாசமும் அவ்வப்பருவத்தே முறைப்படிசெய்வித்து வளர்க்கப்பெற்று ஓரளவு வடமொழி தென்மொழி யறிவுவாய்ந்து, மேலும் கலைக்கடல் பருகவிழைந்து, தம்மூரில் அதற்கேற்ற வாய்ப்பின்மையால், அக்காலத்துச் செந்தமிழ்ச்செல்வச் சேதுநாட்டின் தலைநகராய்த் தமிழ்மடந்தையின் முகம்போலச் சிறந்துவிளங்குதலின் முகவையென்று பெயர்வாய்ந்ததாய் உள்ள இராமநாதபுரத்தில் மழைவள்ளல் பாஸ்கரஸேதுபதி மன்னரும், ஸேதுஸமஸ்தான நிருவாக அதிகாரியாகவிளங்கிய ராஜாராமராயரும், பாண்டித்துரைத்தேவரும் கோட்டைஸாமித்தேவரும் ஆகிய பெருமக்களாதரவில் வடமொழியிலுள்ள காவியாலங்கார நாடக தர்க்க வியாகரண வேதாந்த சோதிட மருத்துவநூல் நிபுணர்களும், முத்தமிழ்த்துறையின் முறைபோகிய உத்தமப்புலவர்களும், பிறகலைத்துறைத் தேர்ச்சியுடையாரும், அவ்வச்சமயநூல்வல்லாரும் ஒருங்கு இகலிலர்குழீஇ அவ்வக்கலைத்துறைகளைப் பொருந்துமாற்றான் வளர்த்து வருவதறிந்து, அதுவே தாம் பல கலைத்துறைகளிலும் தேர்ச்சியடைதற்குத் தக்க இடமென்று துணிந்து, அங்குற்றுச் சேதுஸமஸ்தானப் புலவர்திலகராய்த்திலகிய ஸதாவதானம் முத்துஸ்வாமி ஐயங்கார்ஸ்வாமியிடம் தமிழிலக்கிய இலக்கணங்களும், ராஜாராமராயர் தன்முயற்சியால் ஸேதுஸமஸ்தானப் பொருளுதவிபெற்று முகவையில் நடைபெற்ற வடமொழிக்கல்லூரியிற் பேராசிரியராய்த் திகழ்ந்த பந்தல்குடி ஸ்ரீ. உப வே. வித்வான் வேங்கடாசாரியர்ஸ்வாமியிடம் வடமொழி வியாகரணம் முதலியவையும், பாற்கரஸேதுபதி மகாராஜரவர்கள் பாண்டித்துரைத்தேவரவர்கள் முதலியோர் வேண்டுகோட்கிசைந்து முகவையில் எழுந்தருளியிருந்த சித்தாத்திக்காடு ஸ்ரீ. உப. வே. வித்வான் ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமியிடம் ஸ்ரீபாஷ்யம் பகவத்விஷயம் முதலிய வைணவசமயநூல்களும் நன்குகற்றுத் தேர்ந்து சிறந்த புலமையடைந்தார். வடமொழி பயிலுங்கால் இவருடன் ஒருசாலைமாணவராயிருந்தோர் எட்டயபுரம் ஸமஸ்தானவித்துவான் திரு. வீ. சாமியையங்கார்ஸ்வாமி முதலியோராவர்.

ஆசிரியர், வடமொழி தென்மொழி யிலக்கிய இலக்கணநூற் புலமையோடு பலசமயநூற்புலமையும் மந்திரம் மருத்துவம் சோதிடம் தருக்கம் முதலிய பிறகலைத்தேர்ச்சியும் ஒருங்கு

திறம்படப்பெற்று 'இவர் கல்லாதகலையில்லை' யென்று சொல்லலாம் படி விளங்குதற்குக் காரணம், பலகலைத்துறைகளிலும்வல்ல புலவர்கூட்டம் இடையறாதுநிகழ்ந்த சேதுஸமஸ்தான முகவைநகர் வாசமே எனின் அது மிகையாகாது.

இவர்தம் மதிநுட்பமும் இருமொழிப்புலமையும் பலகலையறிவும் ஒழுக்கமும் அடக்கம் முதலிய உயர்குணங்களும் கண்ட புலவர்களும் ஸேதுவேந்தரும் ஸேதுஸமஸ்தான நிர்வாகிகளும் இவரை நன்குமதிப்பாராயினர். தமிழ்வள்ளலான பாலவநத்தம்ஜமீந்தார் பொன். பாண்டித்துரைத்தேவரவர்கள் இவரைத் தம் ஆஸ்தான வித்வானாக உவந்தேற்றுக்கொண்டார். கலைத்துறைமுற்றிய ஆசிரியர், அருங்கலைவிநோதரும் பெருங்கொடைவள்ளலுமாகிய பாண்டித்துரைத்தேவராதரவுபெற்றதில் வியப்பென்னை? ஆசிரியரனைய பெரும்புலவர்குழுவே பாண்டித்துரைத்தேவருள்ளத்துப் பண்டைத்தண்டமிழ்ச்சங்கநிகழ்ச்சிகளையெழுப்பி, அவர் மதுரையில் இற்றைஞான்றுவிளங்கும் நான்காஞ்சங்கத்தை நிறுவுதற்கும் மூலமாய்நின்றது

துரையவர்கள் ஆதரவுபெற்ற ஆசிரியர், ஒருநாள் அவரோடு உரையாடிக்கொண்டிருக்கும்பொழுது ஒருவடமொழிப்புலவர், துரையவர்களிடம்,

𑌗𑌜𑌭𑍁𑌜𑌙𑍍𑌗𑌮𑌵𑌿𑌹𑌙𑍍𑌗𑌮𑌬𑌨𑍍𑌧𑌨𑌂 𑌶𑌶𑌿𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌯𑍋𑌰𑍍𑌗𑍍𑌰𑌹𑌪𑍀𑌡𑌨𑌂 ।
𑌮𑌤𑌿𑌮𑌤𑌾𑌂𑌚𑌵𑌿𑌲𑍋𑌕𑍍𑌯𑌦𑌰𑌿𑌦𑍍𑌰𑌤𑌾𑌂𑌵𑌿𑌧𑌿𑌰𑌹𑍋𑌬𑌲𑌵𑌾𑌨𑌿𑌤𑌿𑌮𑍇𑌮𑌤𑌿𑌃 ॥

என்னும் சுலோகத்தைக் கூறி அதன்கண் அமைந்த நயங்களை விளக்கக்கேட்ட ஆசிரியர், அச்சுலோகத்தமைந்த பொருளும் நயங்களும் மேலும் சிறந்தமையும்படி, உடனே—

வெங்களிறு பொங்கரவு மீப்பறவை யாப்புறலும்
செங்கதிர்வெண் டிங்களராத் தீண்டுதலும்—தங்குபுகழ்
மிக்க வறிஞர் மிகவறிஞ ராதலுங்காண்
தக்க விதிவலிக்கட் சான்று.

என ஒரு வெண்பாவை விரைந்தியற்றிக் கூறினர். அதுகேட்ட துரையவர்கள், அவ்வெண்பாவின் அமைதியையும் ஆசிரியருடைய வடமொழி தென்மொழிப்புலமையினையும் மொழிபெயர்க்குமாற்றலையும் கவித்துவத்தையும் வியந்து, வடமொழியிற் சிறந்த சோதிட

நூலாக விளங்கும் ஜாதகசந்திரிகையை இனிய தமிழ்வெண்பாயாப்பின் மொழிபெயர்த்துதவுமாறு வேண்ட, ஆசிரியர் அவ்வாறே மொழிபெயர்த்துதவினர். அந்நூலின் அருமைபெருமைகளை நன்கறிந்த துரையவர்கள் அதனைப் பெரும்புலவரவைக்களத்தில் அரங்கேற்றுவித்து ஆசிரியரைப் பெரிதும் பாராட்டியதன்மேலும் அந்நூலை யாவரும் எளிதிற்பெற்றுப் பயிலுமாறு அச்சிட்டும் வெளியிடுவித்தனர்.

இவ்வாறு முகவையில் துரையவர்களாதரவும் அவர் ஸஹோதரர் கோட்டைசாமித்தேவரவர்களாதரவும்பெற்றுத்தங்கிப் பன்னூற்றிரட்டைத் தொகுத்தற்கும் பதித்தற்கும் துரையவர்களுக்கு உதவிபுரிந்துவந்த ஆசிரியர், பின் துரையவர்கள் மதுரையில் 24-5-1901ல் தமிழ்ச்சங்கம் நிறுவியகாலத்தில் அவர்களால் சங்கக் கல்லூரியின் தலைமையாசிரியராக நியமிக்கப்பெற்றுத் தம் இறுதி நாள்வரை (சற்றேறத்தாழ நாற்பத்தாறு ஆண்டுகள்) அப்பதவியைத் திறம்பட நிர்வகித்துப் பல நூறுமாணவர்க்குத் திருக்குறள் இராமாவதாரம் சங்கநூல்கள் தொல்காப்பியம் முதலான உயர்ந்த தமிழிலக்கிய இலக்கணநூல்களைச் சிறந்தமுறையிற் கற்பித்துவந்தனர். இவர்பாற்பயின்ற மாணவர்கள், நிரம்பிய புலமையடைந்து சங்கப்பரீக்ஷைகளிலும் சென்னைப் பல்கலைக்கழகத்துத் தனித்தமிழ்வித்துவான்பரீக்ஷையிலும் முதற்றரத்திற்றேறிப் பட்டமும் பரிசும் பாராட்டும் பெற்றுத் தமிழகமுழுதும் உள்ள ஆங்கிலக் கல்லூரிகள் உயர்நிலைப்பள்ளிகள் பல்கலைக்கழகங்கள் புலவர்கல்லூரிகள் முதலியவற்றில் ஆசிரியர்களாகவும் ஆராய்ச்சியாளராகவும் இருந்து சிரிய தமிழ்த்தொண்டாற்றிப் பிரசித்திபெற்றுவிளங்குதல் தமிழுலகம் அறிந்ததொன்று.

ஆசிரியர், இவ்வாறு தமிழ்ப்புலவர் பலரைத்தோற்றுவிக்கும் பணியுடன், துரையவர்கள் கட்டளைப்படி இடையே சில ஆண்டுகள் சங்கமானேஜராயிருந்து சங்கப்பணிகளை உரியகாலத்தில் இனிது நிறைவேற்றிப்போந்ததுமன்றி, 1910ஆம் ஆண்டுமுதல் இச்செந்தமிழ்ப்பத்திரிகையின் ஆசிரியர்பணியையும் மேற்கொண்டு 36 ஆண்டுகள் அதனையும் செவ்விதின் நடத்திவந்துள்ளனர். பாலொடு தேன்கலந்தாற்போன்று வடமொழிப்புலமையொடுகூடிய தென்மொழிப்புலமைவாய்ந்த ஆசிரியர் செந்தமிழில் எழுதி வெளியிட்ட

பொருளுரைகள் தமிழ்மொழி வளர்ச்சிக்கு இன்றியமையாதன என்பது, நடுநிலைதிறம்பா நாவீறுடையரான சுன்னாகம் அ. குமாரசுவாமிப்புலவர் கட்டுரை * முதலியவற்றால் விளங்கும்.

ஆசிரியர் செந்தமிழில் தமிழியல்பும் இலக்கணமும் இலக்கியமும் தருக்கமும் சோதிடமும் பழையவரலாறும் சமயக்கொள்கைகளும் பிறவும் பற்றிப் பெரியனவும் சிறியனவுமாக வரைந்து வெளியிட்ட ஆராய்ச்சிமுறையும் வாதமுறையும் பயின்றகட்டுரைகள் ஐம்பதின்மேலும் உள. அவை என்றும் நின்று பயன்விளைக்கும் நீர்மையன; இனியநடையில் எளிதிற் பொருள்விளக்குமியல்பின. அவற்றுள், வாதமுறைபயின்ற கட்டுரைகளால் ஆசிரியருடைய பலகலைத்தேர்ச்சியும், நடுநிலைபிறழாத வாதநேர்மையும், உண்மையினை யார்க்கும் அஞ்சாது எடுத்துரைக்கும் மனவலிமையும், பிழைபடாத நுண்ணறிவின்பெற்றியும், வெற்றிதோல்விகளைப் பொருட்படுத்தாது உண்மைகாணமுயலும் உயர்வும், வாதவிஷயத்தை விட்டு எதிரியை வசைபுகலாத மாண்பும் முதலிய உயர்குணங்கள் பலவும் புலனாகும்.

இவ்வாறு அரும்பெறற்பொருளுரைகளான்மட்டுமன்றிச் செந்தமிழில் அநுபந்தமாகத் தாம் ஆராய்ந்து பதித்து வெளியிடுவித்த பல நூற்பதிப்புக்களாலும் ஆசிரியர் செந்தமிழை வளப்படுத்தினர். அப்பதிப்புக்களுள் அநுமானவிளக்கமும் பாண்டியமும் மாறனலங்காரமும் பழமொழி முதலிருநூறும் அண்டகோளவிருத்தியும் அமிருதாஞ்சனியும் தலைசிறந்தன. இவற்றுள் அநுமானவிளக்கம், 'மணிமேகலை நூலுட்பங்கொள்வதெங்ஙன்' என்று பாராட்டப்பட்ட சாத்தனார் நூலுள் 29வது தவத்திறம் பூண்டுதருமங்கேட்ட காதையின் விளக்கவுரையாயெழுந்தது. பாண்டியம் என்பது தமிழ்ச் சுருக்கெழுத்துமுறையாகும். மாறனலங்காரம் சிறந்ததோர் அணியிலக்கணநூலாகும். பழமொழி பதினெண்கீழ்க்கணக்கினுள் ஒன்று. அநுமானவிளக்கம் பழமொழிக்குறிப்புரை அண்டகோளவிருத்தி அமிருதாஞ்சனியுரை முதலியவை ஆசிரியர்

---

* செந்தமிழ் ௧௧-ஆம் தொகுதியில் பக்கம்-௮0, ௧௮-ஆம் தொகுதியில் பக்கம் ௪௩௧, ௧௯-ஆம் தொகுதியில் பக்கம் ௩௯௪, ௨0-ஆம் தொகுதியில் பக்கம் ௩௩, ௩௨ பார்க்க.

கவிகருத்தறிந்துரைக்கும் சிறந்த உரையாசிரியரென்பதை நன்கு புலப்படுத்தும். இவையேயன்றி ஆசிரியர் அவ்வப்போதியற்றிய தனிப்பாடல்கள் பலவும் எழுதிய கட்டுரைகள் சிலவும் உண்டு.

இங்ஙனம் சீரிய நூலாசிரியர் உரையாசிரியர் போதகாசிரியர் பத்திராசிரியர் பதிப்பாசிரியர் என்று பாராட்டநின்ற ஆசிரியரை 1922-ஆம் ஆண்டு ஜனவரிமீ 13உ மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு விஜயம்செய்தகாலத்துச் சென்னையரசாங்கம் இளவரசர்கரத்தால் ஜோடிசால்வையும் சிங்கமுகத்தோடாவும் பதக்கமும் பரிசளிக்கச்செய்து கௌரவித்தது. மதுரைத்தமிழ்ச் சங்கத்தார் பவுஞ ஆடிமீ ௩௧உ நிகழ்ந்த சங்கத்தின் ௩௰-ஆம் வருடவிழாவில் தலைவரான சென்னைமாகாணகவர்னர் கனம் பொருந்திய ஸர் முஹம்மது உஸ்மான் ஸாஹிப்பஹதூர் அவர்கள் கரத்தால் ஆயிரத்தைந்நூறுரூபா அடங்கிய பொன்முடிப்பும் சால்வையும் அளித்துச் சிறப்பித்தனர். இம்மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் அக்கிராஸநரும் ஸேதுவேந்தர்பெருமானும் ஆன மாட்சிமைதங்கிய ஷண்முகராஜேசுவரநாகநாதஸேதுபதியவர்கள் தம் முப்பத்தேழாம் ஆண்டுநிறைவுவிழாவில் பொற்பதக்கமும் பட்டும் பரிசு நல்கிப் பாராட்டினார்கள். பாலையம்பட்டி ஜமீந்தாரும் துரையவர்களுடையஸமோதரர் கோட்டைஸாமித்தேவர்குமாரருமாகிய மாண்பு மிக்க இராமசந்திரதேவரவர்கள் ஒருமுறை ஜோடிசால்வையும் இருநூறுரூபாவும் பரிசளித்துச் சிறப்பித்தனர். தமிழ்நாட்டிலுள்ள செல்வருள்ளே சிலரும் மடாதிபதிகளிற் பலரும் போர்வையும் பட்டும் பொன்னும் பொருளும் பரிசில்நல்கியதும் உண்டு. தமிழ்நாட்டு வித்தகச்செல்வருள் தஞ்சை வக்கீல் K. S. ஸ்ரீநிவாஸபிள்ளையவர்கள் ஆசிரியர் தகுதியை உள்ளபடி உணர்ந்து பாராட்டியவரென்பது ஆசிரியர்க்கு அவரெழுதிய கடிதங்களால் அறியக்கிடக்கின்றது.

ஆசிரியர் விரும்பியிருந்தால் பிறகலைக்கழகப்பணிமேற் கொண்டு நிறைந்த ஊதியம்பெற்று மிக்கபிரசித்தியும் அடைந்திருக்கலாம். துரையவர்களிடத்தும் அவர்கள் நிறுவிய சங்கத்தினிடத்தும் அவர்க்குள்ள பேரபிமானமும், ஆடம்பரத்தில் வெறுப்பும், பொருட்பற்றற்ற மனநிலையுமே அவர்வாழ்நாள்முழுதும் சங்கப்பணியிற் கழிதற்குக் காரணமாகும்.

மதுரைத்தமிழ்ச்சங்கம் ஆசிரியரை அச்சங்கப்புலவர்தலைவராகவும் வித்யாவிஷய ஆலோசனைக்கழக உறுப்பினராகவும் தனித்தமிழ்ப்பரீக்ஷைகளுக்குப் பரீக்ஷகராகவும் பெற்றுச் சிறப்புற்றது. சென்னைப்பல்கலைக்கழகமும் யாழ்ப்பாணத்து ஆரிய திராவிடபாஷாபிவிருத்திசங்கமும் அண்ணுமலைபல்கலைக்கழகமும் பலஆண்டுகள் தத்தம் தமிழ்வித்வான் பரீக்ஷைகளுக்கு ஆசிரியரைப் பரீக்ஷகராகத் தெரிந்தெடுத்துக் கௌரவித்துச் சிறப்புற்றன.

ஆசிரியர்க்குப் பெண்மக்கள் நால்வரும் அறிவொழுக்கங்களாற் சிறந்த புதல்வர் ஒருவரும் உளர்.

ஆசிரியர் அவதரித்த ஊர் புலவர்கள் நிறைந்தது. அதினும் ஆசிரியர் குடும்பம் ஆசிரியருடைய நன்முயற்சியால் புலவர்பலரையுடையதாய் விளங்குகின்றது. (1) மதுரையிலுள்ள இராமேசுவர தேவஸ்தானபாடசாலையில் தலைமைத்தமிழாசிரியராயுள்ள T. N. அப்பனையங்காரவர்கள் ஆசிரியருடைய அருமைக்குமாரராவர்; (2) இதுவரை செந்தமிழ் உதவிப்பத்திராசிரியராயிருந்து ஆசிரியருக்குப்பின் தமிழ்ச்சங்கக்கலாசாலைத்தலைமையாசிரியராகவும் செந்தமிழ்ப்பத்திராசிரியராகவும் இருக்கும் திரு. கி. இராமாநுஜையங்கார் ஆசிரியருடைய தம்பிகுமாரராவர்; (3) சென்னைப் பல்கலைக்கழகத்து வித்வான்பரீக்ஷைகளிலும் சங்கத்துப் பண்டிதபரீக்ஷையிலும் தேர்ச்சியடைந்து மதுரை ஸெயிண்ட்மேரி உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராயிருக்கும் திரு. R வீரராகவையங்கார் ஆசிரியருடைய மற்றொருதம்பிகுமாரராவர்; (4) சங்கத்துத்தனித்தமிழ்ப்பரீக்ஷைகளிலும் சென்னைப் பல்கலைக்கழகத்துத் தனித்தமிழ்வித்வான்பரீக்ஷையிலும் தேறி மதுரைக்கல்லூரியில் தமிழாசிரியராயிருக்கும் T. இராமாநுஜையங்கார் ஆசிரியருடைய பெண்வயிற்றுப்பேரனுவர்; (5) சென்னைப் பல்கலைக்கழகத்து வித்வான்பரீக்ஷையில் தேர்ச்சியடைந்து இராமநாதபுரம்ஜில்லா திருப்புத்தூர் போர்டு உயர்நிலைப்பள்ளியில் தலைமைத்தமிழாசிரியராயிருக்கும் K நரஸிம்மையங்கார் ஆசிரியருடைய மற்றொரு பெண்வயிற்றுப்பேரனுவர். இவர்களேயன்றி இவர் குடும்பத்துள் இளம்புலவர்களும் பலர் உளர். இவரெல்லாம் ஆசிரியர்பால் வரன்முறையாற் பயின்று தேர்ச்சிபெற்ற மாணவருமாவர்.

ஆசிரியர்வாழ்க்கையிலே ஆடம்பரமின்றி நிகழ்ந்ததுபோலவே அவரது சரமநிலையும் அவருடைய உறவின்முறையாரும் நட்பினரும் மாணவரும் சூழ்ந்து துதிக்க, வேதவேதியர் மறைமுறையிற் சடங்கியற்ற ஆடம்பரமின்றி நிகழ்ந்தது. உயர்குணங்கட்கெல்லாம் உறைவிடமாய் உலகினரொழுகலாற்றுக் கொரு கட்டளையாய் முக்கால நிகழ்ச்சிகளையும் நுணித்துணரும் அறிவுத்திறனொடு திகழ்ந்த ஆசிரியர்வரலாறனைத்தும் எழுதின் மிகப்பல்கும்.

ஆசிரியர்பால் நட்புடைய புலவர்களும் அவர்பாற் பயின்ற மாணவர்களும் அவர்பிரிவாற்றாது எழுதிய அநுதாபக் குறிப்புக்களும் பாடிய இரங்கற்பாக்களும் வந்துகொண்டேயிருக்கின்றன. அவற்றையெல்லாம் வெளியிடின் அளவிறந்து விரியுமாதலின் அவற்றுள் ஆசிரியர் பெருமையும் வரலாற்றுக்குறிப்புக்களும் அமைந்த ஒருசிலவற்றையேகொண்டு இச்செந்தமிழ்ப்பகுதி ஆசிரியருடைய நினைவுமலராக வெளிவருகிறது.

ஆசிரியர்பிரிவால் தமிழ்மடந்தை தலைசிறந்த செம்புலச் செல்வப்புதல்வனை யிழந்தாள்; தமிழ்ச்சங்கம் அரை நூற்றாண்டு பேராசிரியராய்த்திகழ்ந்து தம்முடைய கற்பிக்கும் ஆற்றலாற் பலநூறு புலவர்களைத் தோற்றுவித்த தலைமைப்புலவரையிழந்தது; மாணவர் மதிநுட்பம் நூலோடுடையாராய்ச் செலச்சொலல் வல்லராய்ச் சோர்விலராய்விளங்கிய ஆசிரியப்பெருந்தகையை இழந்தனர்; செந்தமிழ்ப்பத்திரிகை தன் பேராசிரியரை யிழந்தது. ஆசிரியர்குடும்பம் உயர்ந்த தலைவரையிழந்தது. எனினும், அவர் தம் புகழுடம்பொடு நம்மிடைநெடிதுநின்று தமிழ்தழைய அருளுக.

ஆசிரியரைப் பிரிந்து ஈடுசெய்யமுடியாத பெருநட்டமடைந்து அவலிக்கும் அனைவர்க்கும் நம் அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

ஆசிரியரான்மா இறைவனடியிணைநீழலிற் சாந்தியுறுக.

உதவிப்பத்திராசிரியர்.

ஸ்ரீ:

மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமையாசிரியரும்

செந்தமிழ்ப்பத்திராசிரியருமான

## திரு. நாராயணையங்கார்ஸ்வாமி பிரிவாற்றாது

அன்பர்கள் எழுதியனுப்பிய

# அநுதாபக்குறிப்புக்கள்

---

மஹாவித்வான் ஸ்ரீ. உ. வே. பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசார்யஸ்வாமி எழுதியவை

செந்தமிழாசிரியர் அசௌக்கியமுற்றிருப்பதுதெரிந்து எழுதியது.

"இன்று கார்டுபார்க்க மிகவும் வெருப்புண்டாயிற்று.

'தஸ்மிந்நஸ்தமிதே பீஷ்மே கௌரவாணாம் துரந்தரே ।
ஜ்ஞாநாந்யஸ்தம் கமிஷ்யந்தி'

என்ற கண்ணன் ஸ்லோகமே நினைவுக்குவந்து வருந்துகிறேன். 1913-ஆம் ஆண்டுமுதல் அந்த ஸ்வாமியின் திருவருளுக்கு இலக்கானவன் நானும். ஜ்ஞாநநிதி:; ஸௌஹார்தநிதி:. திருமேனிப் பாங்குக்கு எழுதவேணும்."

இதி

ஸ்ரீ அண்ணா

காஞ்சி. 30-7-'47.

---

செந்தமிழாசிரியர் திருநாடலங்கரித்ததுதெரிந்து எழுதியது.

காஞ்சீபுரம் 31-7-'47.

விஷயம் தெரிந்தது. ஞாநஸூர்யன் அஸ்தமித்ததாகவே நினைக்கிறேன்.

கவ்யே ஸச்சித்ராஹ்வயே நிபுணோ யோ தே க்ஷீரம் வித
ஆர்யாஹ்ம் ப்ரணீதஸ்ய ததர்வ நிர்வித ஆர்யவ்யாதா ராஜதே ।
ஸார ஆர்யக்ஞாதர்ஸீ கௌரக்ஷ்யாமணி நாராயணார்ய ப்ரதானா
வித்வார்த்தி ஸூர்யதேவோ: கடாக்ஷவிஸ்வாஸ்ய வர்ஷம் வவர்ஷ ॥

ஸச்சித்கடே ஸுக்ஞாஹ்வஸ்யம் மௌநவாஸந ।
ஸ்ரீநாராயணஸூரிரிந்த்ர ஸாரஸ்வதோ நிவம் யயௌ ॥

[illegible]

இப்படி எத்தனை ஸ்லோகமியற்றினாலும் போதாது.

தாஸ

ப்ர. அண்ணா.

---

மாஜி ஜில்லா ஜட்ஜ் திவான்பஹதூர் ஸ்ரீ. உ. வே. V. பாஷ்யமையங்கார்ஸ்வாமி எழுதியது.

கீழ்ப்பாக்கம், சென்னை. 6—8—47.

"ஸ்ரீ திருநாராயணையங்கார்ஸ்வாமியின் தேகவியோகத்தை அறிந்து மிகவும் துக்கிக்கிறேன். அடியேன் மதுரையிலிருந்த போது ஸ்ரீ ஸ்வாமியை ஸேவித்திருக்கிறேன். ஸ்வாமியினுடைய ஞானமும் வித்வத்தும் த்ராவிடபாஷாநிபுணத்வமும் அபாரம். ஆனாலும் அவைகளுக்காகவன்று அடியேன் ஸ்வாமியிடம் ஈடுபட்டது; அடியேனை மேல்விழுந்து ஆகர்ஷித்தவை ஸ்வாமியின் ஸௌசீல்யமும் ஸௌலப்யமும். ஸ்வாமியினுடைய பக்திவைராக்யங்களும் விநயமும் அப்ரதிமம். ஸ்வாமியின் நித்யவிபூதிப்ராப்தி லீலாவிபூதிக்குப் பெருத்த நஷ்டம். பகவத்ஸங்கல்பம் அதுவானால் என் செய்வோம் யாம். ஸ்வாமியினுடைய தேகம் மறைந்தபோதிலும் அவருடைய ஞானமும் கல்யாண குணங்களும் என்றும் மறையக் கூடியவையல்ல. அவைகளே நமக்குச் சரண்."

மேலும்,

பாஷ்யகார தாஸ

---

உயர்திருவாளர் மஹாமஹோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியாரவர்கள் எழுதியது.

"தமிழ் வடமொழி இரண்டிலும் சிறந்த புலமையுடைத்த வித்வான் திரு. நாராயணையங்கார்சுவாமிகள் ஆசாரியன் திருவடி யடைந்தசெய்தி தமிழுலகத்திற்குப் பெரிதும் வருத்தம்விளைவிப்பதே. இவர்கள் நுண்ணிய மதிவன்மையும், தருக்கநூற்பயிற்சியும் உடையவர்கள்; 'செந்தமிழ்ப் பத்திராதிபராக நெடுங்காலம்

இருந்து செம்மைபெற நடாத்திவந்தவர்கள்; மாணவர்க்கு உயர்ந்த நூல்களைப் பயிற்றுவதில் பெரிதும் திறமைவாய்ந்தவர்கள். இவர்கள் எழுதிய ஆராய்ச்சியுரைகளும், பிறவும் அறிஞருலகை மகிழ்வுறுத்தும் இயல்பின. 'மதுரைத் தமிழ்ச்சங்கத்து'த் தலைமையாசிரியராகவும், பத்திராதிபராகவும் இருந்து செய்த அரியதொண்டுகள் பாராட்டத்தக்கன. இவர்கள் பிரிவுகுறித்து என் ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்."

மு. கதிரேசன்.

---

அண்ணாமலைபலகலைக்கழகத்து மாஜி தமிழ்ப்பேராசிரியரான உயர்திரு. ச. சோமசுந்தரபாரதியார் M.A. B. L. அவர்கள் எழுதியது.

பசுமலை 6—8—47.

"செந்தமிழாசிரியர் வியோகம் தமிழறிஞரனைவர்க்கும் தாங்கரிய இழவு. நிரம்பிய இருமொழிக்கல்வியும் வரம்பளந்த அளவை நூலறிவும் நுண்மதியும் நடுவுநிலை திறம்பாத உளச்செம்மையும் சாந்த சீலமும் வாய்ந்த பெரியாரை இழந்த தமிழகம் வறுமையுற்றதில் வருந்தாதார் இருந்திலாதார். தம் மதியைப்போல் வயதும் நிறையப்பெற்று மதுரைச்சங்கத்துக்கும் மாணவருக்கும் விலையிலாக் கலைத்தொண்டாற்றி மாண்டபுலவரும் மாண்டது நிலையிலா வுலகியல்நீர்மையன்றோ."

ச. சோ. பாரதி.

---

சென்னைப் பல்கலைக்கழகத்து மாஜி தமிழாராய்ச்சித்துறைத்தலைவர் ராவ்ஸாஹிப். திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்கள் (B.A., B.L.) எழுதியது.

மயிலாப்பூர் 3-8-'47.

"செந்தமிழாசிரியர் மறைந்துவிட்டதுதெரிந்து அவர்கள் நண்பர்களாகிய நாங்களனைவரும் பெருந்துயரமடைகின்றோம். இருமொழிப்பயிற்சியிலும் இலக்கணம் தர்க்கம் என்ற துறைகளிலும் அவர்களைப்போன்ற வித்துவான்களை இனி எப்பொழுது காணப் போகிறோம்? அவர்களுடைய குளிர்ந்த முகமும் இனிய உபசார மொழியும் என் இதயத்தில் எப்பொழுதும் தங்கியிருக்கும்"

அன்பன் S. வையாபுரிப்பிள்ளை.

---

விருதுநகர்த் தமிழ்த்தென்றலாசிரியர் வே. வ. இராமசாமி அவர்கள் எழுதியது.

விருதுநகர் ஆடிமீ 18உ

"செந்தமிழாசிரியர் திருநாடலங்கரித்தமை அறிந்து பெரிதும் வருந்துகின்றேன். இருமொழிப்புலமையும் செழுந்தமிழ்க்கொழுமையும் தருக்க நுணுக்கமும் புலவர்வியக்கும் நயங்கள் பலவும் அமைந்து தமிழ்ச்சங்கக்கல்லூரித் தலைமையாசிரியப்பதவியை நீண்டகாலந் தாங்கி அவர்களாற்றிய அரும்பெறற்றொண்டு தமிழ்ப் புலவர்வரலாற்றிலே தக்க இடம்பெறும்."

வே. வ. இராமசாமி.

---

யாழ்ப்பாணத்து வித்வான் சி. கணேசையரவர்கள் எழுதியது.

வருத்தலைவிளான், தெல்லிப்பழை.
6—8—47.

"மகாவித்வான் ஐயங்கார்ஸ்வாமிகளுடைய பெரும்பிரிவை யறிந்தபோது உள்ளம் கலக்கமடைந்தது. அவர்களுடைய கல்விப் பேரறிவும் அறிவிற்கேற்ற ஒழுக்கமும் நற்சிந்தையும் பிறரொருவருக்குமில்லாமையை யான் உண்மையாகத் தெரிவித்துக்கொள்கின்றேன். அவர்களிடம் கற்றுப் பலர் பண்டிதசிரேஷ்டர்களாக விளங்குவதையும் யான் அறிவேன். அவர்களைப் போலச் செந்தமிழை வளர்ப்பதற்கு யார் இனி வரப்போகின்றார்கள்! அவர்களை இழந்தது தமிழ்நாட்டின் தவக்குறைவே. அவர்களைப்போலத் தெளிவும் இனிமையும் தூய்மையும் வாய்ந்த உரைநடையை யார் இனிச் செந்தமிழ்க்கு அளிக்கப்போகின்றார்கள்? துக்கம்! துக்கம்!! பெருந்துக்கம்!!! ஐயங்கார்ஸ்வாமிகளுடைய உயிர் சாந்தியடையுமாறு இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்"

இங்ஙனம்,
சி. கணேசையர்.

---

ஸ்ரீ:

மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலைத் தலைமையாசிரியரும்

செந்தமிழ்ப்பத்திராசிரியருமான

## திரு. நாராயணையங்கார்ஸ்வாமிபிரிவாற்றாது

அன்பர்கள் இயற்றிய

# இரங்கற்பாக்கள்.

செந்தமிழ்ப்பத்திரிகையின் உதவியாசிரியர்

T. K. இராமாநுஜையங்கார் இயற்றியவை.

1 நாடுபுகழ் மிக்கதிரு நாராயணாரியநீ
வீடுபுகல் கேட்டழுங்கும் மேதினியோர் வெந்துயரம்
ஆடுகொடி மாடத் தயோத்தியர்கோன் அன்றொருநாட்
காடுபுகக் கண்டோர் கரைந்ததுய ரிற்கொடிதே. (1)

2 [1]திக்குற்ற கீர்த்தியெனும் தெய்வத் தமிழ்க்கவியின்
மிக்கபொரு ளெல்லாம் நினைந்து வெயின்மெழுகாய்
நெக்குருகி யந்நிலையே நீள்விசும்பிற் சென்றனையால்
மக்களிலே நின்னைப்போல் மாண்டா ருளரேயோ. (2)

3 தக்கார்கள் சூழ்ந்து [2]சரணா கதிசாற்ற
மிக்காரவ் [3]ஆர்த்தி வியன்[4]சார நூலோதத்
தொக்கா ரமரர் தொழுது வரவேற்பப்
புக்கார் திருநாட்டுன் போல்வாரைக் கண்டிலமே. (3)

4 எட்டைமிகுத்தாலும் என்றும் இன்றமிழா லாழ்வார்செய்
பாட்டை மொழிந்துகண்ணன் பாதம் பரவியெதிர்க்
கோட்டை யுறையுங் குறிக்கோ ளுடையைதிரு
நாட்டை யடைந்தனையின் றென்னோ நவில்வாயே. (4)

---

[1] இது, திருவரங்கத்தமுதனார் இராமாநுஜர்மீதியற்றிய நூற்றந்தாதியின் 26ஆம் பாடல். [2] சரணாகதியென்பது சரணாகதிகத்தியம் என்னும் தோத்திரநூலைக்குறித்துநின்றது. [3] ஆர்த்தி - மணவாளமாமுனிவர் இயற்றியருளிய ஆர்த்திப்பிரபந்தம். [4] சாரநூல் என்றது அருளாளப்பெருமாளெம்பெருமானார் இயற்றியருளிய ஞானசாரம் பிரமேயசாரம் என்னும் நூல்களை.

5 வடமொழிதென் மொழிக்கடலின் வரம்பளந்து கரைகண்ட
மடமறுநின் மதிவலியால் வையமெலாம் தமிழ்வளர்த்தாய்
படவரவி லறிதுயில்கொள் பரமனுல கினுமதன்சீர்
நடமிடவே வளர்ப்பதற்கு நடந்தனையோ நாவலனே. (5)

6 மன்னும் உபய மறையின் முடிபொருளும்
உன்னியுன்னி யுன்போ லுரைப்பார்தன் னாட்டிலிலை
என்னநினைந் துன்னை யிருவிசும்பில் ஏற்றினனோ
எந்நிலமும் தாளால் அளந்த இறையோனே. (6)

7 மேனாட் டிளவரசு நல்கும் வியன்பரிசு
தானாட்டிக் கொண்ட தமிழ்க்குரிசில் நீபுகுத
மானாட்டுத் தொண்டரொடு வந்து வரவேற்று
வானாட் டிளவரசு வண்பரிசு நல்கினனோ. (7)

8 சங்கத் தமரம் தழைமதுரை மன்னுதமிழ்ச்
சங்கத் தமர்ந்து தமிழ்வளர்த்தாய் நீபுகுதச்
சங்கத் தமிழ்மாலை தாங்குந் தடம்புயத்துச்
சங்கத் தமரர் தலைவன்வர வேற்றனனோ. (8)

9 எல்லாரும் ஏத்துபுகழ் ஏய்ந்தொளிரும் எந்தாய்நீ
கல்லாத கலையில்லை காணாத பொருளில்லை
வெல்லாத பகையில்லை மிகநுணுகும் நின்மதிதான்
செல்லாத துறையில்லை தெளியாத மறையிலையே. (9)

10 வாக்காலும் மனத்தாலும் மதிக்கருநின் மதிவலியால்
நோக்காத நூலில்லை நுவலாத வுரையில்லை
நீக்காத பிழையில்லை நினையாத நலமில்லை
ஆக்காத செயலில்லை அளவாத பொருளிலையே. (10)

11 மேதினியோர் போற்ற மிகவிளங்கும் எந்தாய்நீ
சாதுகசந்திரிகையினைத் தமிழாக்கித் தந்தனையன்
மேதகவார் கட்டுரைகள் செந்தமிழில் விரித்தெழுதித்
தீதகலச் செவியுணவு தெவிட்டும்வகை நல்கினையே. (11)

12 இப்புவியோர் புகழ்மாற னலங்காரம் இனிதளித்தாய்
எப்புவியும் உவந்தாளும் பழமொழிமுன் னிருநூறுங்
கொப்புயர்வற் றொளிர்கின்ற குறிப்புரையும் உதவியொரு
தப்பறவே அறமான விளக்கநூல் தந்தனையே. (12)

13 ‘செய்யேல்மறம்’ என்று தேசிகனார் செய்கவிக்குக்
கையிலங்கு நெல்லிக் கனியாப் பொருள்விரித்தாய்
ஐயனெழின் மாறனருள் ‘அண்டகோள’த் தமிழ்க்குப்
பொய்யில் புலவரெலாம் போற்றவுரை பொறித்தனையே. (13)

14 வையமெலாம் போற்றுகம்பன் வண்காவி யங்கொண்டு
துய்ய பரதாழ்வான் வைபவங்கள் தோற்றுவித்தாய்
ஐயமற ந்யாயப்ர வேசத்தொ டான்றதமிழ்ச்
செய்யமணி மேகலையின் சீர்தூக்கி யீந்தனையே. (14)

15 அன்றுமுதற் சங்கத் தகத்தியனார் பன்னிருவர்க்
கின்றமிழ்கற் பித்த இசையினும்நான் காஞ்சங்கத்
தின்றிலகி எந்தாய்நீ எண்ணில்பலர்க் கத்தமிழ்தான்
என்றுமுள தென்றியம்ப ஈந்த இசைபெரிதே. (15)

16 தந்தையாய்த் தாயாய்த் தலையளிசெய் தாயெம்பால்
வந்த இடரனைத்தும் மாற்றிநனி வாழ்வித்தாய்
வெந்துயருள் மூழ்கஎமை விட்டகன்றா யின்றிதுவென்
செந்தமிழ்தேர் ஆரியநீ செப்புதிரு வாய்மலர்ந்தே. (16)

17 ஊட்டி வளர்த்தாய் உயர்செந் தமிழ்வேதப்
பாட்டும் உரையும் பயிற்றினாய் விண்படர்ந்தாய்
கேட்ட மறையெல்லாம் தெளிவித்துக் கேடகற்றி
வாட்டமற எம்மை மகிழ்விப்பார் ஆரினியே. (17)

18 அறிவால் ஒழுக்கத்தால் ஆன்றோர் மதிக்கச்
செறியும் குணநலத்தால் தேசால் தெளிவால்
நெறியறிந்து கற்பிக்கு நீர்மையினால் ஞாலத்
தறிஞரிலே நிற்குநிக ராகுவா ராருளரே. (18)

19 கோதில் உளத்துக் குழவிகளும் கூர்விழைவின்
ஓதற் கெளிதா உயர்தமிழ்நூ லாராய்ந்து
போதிக்க வல்ல புலமுடையாய் நின்னைப்போற்
போதிக்க வல்லார் புவியின்மேல் ஆரினியே. (19)

20 சேனா வரையருரை தேவர் திருக்குறளுக்
கானாப் புலவன் பரிமே லழகனுரை
தேனாறு செஞ்சொல்வளச் சீராம காதையுரை
வானா ரமுதா வழங்கவல்லார் ஆரினியே. (20)

21 ஏய்ந்தபுகழ் வேதாந்த தேசிகர்செய் யின்றமிழில்
தோய்ந்த பொருளெல்லாம் சொல்லவல்லார் ஆர்; பெருமை
வாய்ந்த பழமொழியின் மற்றையிரு நூறுக்கும்
ஆய்ந்து பொருளுரைக்க வல்லாரிங் காரினியே. (21)

22 செய்யதமிழ் வாணர் தெளிதற் குரியபல
ஐய வினாவிடைகள் ஆராய்ந்து செந்தமிழில்
வையமெலாம் போற்ற வரைந்துவெளி யிட்டனையால்
ஐய! இனி ஐயம் அறுப்பாரிங் காருளரே. (22)

23 பாண்டித் துரைநிறுவும் பைந்தமிழின் சங்கத்தில்
ஈண்டு புலவோர்க் கிறைவனா வீற்றிருந்தே
ஆண்டொரு நாற்பத்தாறும் ஆன்ற தமிழ்வளர்த்தாய்
யாண்டுற்றாய் எந்தாய் இனியதமி ழேங்கிடவே. (23)

24 சென்னைசென்று நீதான் திரும்புமன வும்பிரியா
தென்னுயிரொன் றாயல் வுரையிறவா தேயிருந்தாய்
அங்கிலகண் டுன்னை யறிவிலுயர் வீடுமனு
உன்னி யுளமுருக வைத்தகன்றாய் உத்தமனே. (24)

25 காண்டற் கரிய கவியரசே கற்பகம்போல்
வேண்டிற் றுதவி விழைந்து புரந்தகன்ற
பாண்டித் துரையரசன் பாற்சென் றடைந்தனையோ
ஆண்டுற்ற காதன்மிகும் சோதரர்பாற் சென்றனையோ. (25)

26 நேசமிகும் *வேங்கடா சாரியரை நேர்ந்தனையோ
தேசுநிகழ் †ஸ்ரீநிவா ஸாரியர்பாற் சென்றனையோ
மாசில்புகழ்ச் சிங்கப் பெருமாள்பால் மன்னினையோ
பேசவாய் யாம்செய் பிழைபொறுக்கும் பெற்றியனே. (26)

27 சென்றவிடத் தெல்லாமுன் சேவடிக்கே தொண்டுபுரிந்
தொன்றி யிருக்கு மதுவே யுறுதியென
நின்றவெனை நீத்தொருநீ நீள்விசும்பு புக்கனையான்
என்றுன் திருவடிக்கீழ் இன்புற்றிருப் பேனே. (27)

---

* இவர் செந்தமிழாசிரியர்க்கு வடமொழிவியாகரண நூல்கற்பித்த ஆசிரியர்.

† இவர் சமயநூலாசிரியர்.

28 * ஆசாரியனைப் பிரிந்திருப்பார் ஆரென்று
தேசாரும் மாமுனிவர் செப்புமுறை தேறாயோ
ஆசானாய்த் தந்தை முதலனைத்தும் ஆய்நின்ற
ஈசா உனைப்பிரிந்தேன் எவ்வாறு தேறுவனே. (28)

29 துன்னுபஞ்ச பூதத் தொடர்பாற் பிறந்திட்ட
நின்னுடம்பு மாயினும்நீ நீண்ட புகழுடம்பால்
இந்நிலத்து ளெம்மிடையே தங்கியெமக் கென்றுமின்பம்
மன்னுபெரு வாழ்வளித்தி யென்றுனடி வாழ்த்துவலே. (29)

30 உன்பெருமை யெல்லாம் உரைத்தற் கரிதெனினும்
என்சிறுமை யெண்ணா தியம்ப எழுமாசை
மன்பரவு சீர்த்திமிக வாய்ந்துதிகழ் எந்தாய்!யான்
என்பிறவி தோறுநின்சீர் ஏத்த அருள்வாயே. (30)

31 சருவசித்துக் கற்கடகம் சார்பூர்வ பக்கத்
தொருபன் னிரண்டுதிதி யொண்மூல நன்னாள்
மருவியசெவ் வாயென்பர் மண்ணோர் இரங்கத்
திருமருவு நாரணனா ராரியன்றாள் சேர்தினமே. (31)

---

மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர்

திரு. சு. நல்லசிவன்பிள்ளையவர்கள் இயற்றியவை.

32 வடமொழிதென் மொழியென்னும் வாரிதியிற்
குளித்துமணி வாரி யீந்து
திடமதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலைத்
தலைமையா சிரிய ராகி
மடனகற்றுந் தமிழுணர்த்துந் திருநாரா
யணக்குருமா மணியே யின்று
படவரவப் பாயலினான் பரமபதத்
திருவைகுந்தப் பதியுற் றாயோ. (1)

---

*உபதேசரத்தினமாலை செய்யுள் 64.

33 எத்தனைபேர் நின்பானற் றமிழ்பயின்று
பண்டிதரா யிங்கு மெங்கும்
வித்தகமாம் தமிழ்பயிற்றி விளங்குகின்றா
ரிவைநினருண் மேன்மையன்றோ
அத்தனைபேர் களும்நினது பிரிவுதுய
ராற்றாரா யடையுந் துன்பம்
இத்தரையி லொருநாவே னிசைத்திடுதற்
கியல்வதொன்றோ விறைமை மிக்கோய். (2)

34 ஒன்றுமறி யேனையுமுன் னுடனிருத்தித்
தமிழ்பயிற்று மொருவ னாக்கி
நன்றுபுரி கருணைமிகு நல்லுளத்தோய்க்
கியான்செய்சிறு நலனு முண்டோ
என்றுனது திருமுகங்கண் டின்புறுவேன்
றுயர்க்கடலுக் கெல்லை காண்பேன்
பொன்றினதுன் பொய்யுடலே புகழுடலெவ்
வூழியினும் பொன்றா தன்றே. (3)

35 செந்தமிழ்ப்பத் திரிகையினுக் காசிரியப்
பெருந்தகையாய்த் திகழ்ந்து தேசம்
உயர்ந்திடுகட் டுரைகள்பல வுயர்நடையில்
வரைந்துதந்த வொப்பி லானே
வந்தமரர் வரவேற்று மந்தார
மழைபொழிந்து வாழ்த்துக் கூற
அந்தமிலாப் பசுந்துளவோ னடியிணைக்கீ
ழமர்ந்தனையோ வருளாளன் வோனே. (4)

36 தருக்கவியா கரணநூ லையமுற்றோ
ரினியெவரைச் சார்ந்து கேட்பார்
மருக்கமழ்பைந் துழாயலங்கன் மாலடியார்க்
கவையுரைக்க மனங்கொண் டோவத்

திருக்கிளரும் மணிமார்பன் சேவடிப்பத்
திமையிருந்தோர் தெய்வப் பாடல்
உருக்கமுடன் பகர்ந்துதொழு துறையுமுல
குற்றனையெற் குரைசெய் வாயே. (5)

37 அப்பனெனும் பெயர்புனைநின் னொருசுதனுங்
கற்பினுக்கோ ரணியென் றூன்றோர்
செப்புநின்பத் தினியாரும் புதல்வியரும்
பவுத்திரருந் தினமுஞ் சூழ்ந்திங்
கொப்பரிய பணிபுரிய வுடனுறைந்த
நின்பிரிவை யுன்னி யுன்னி
இப்பொழுதிங் குறுதுயரங் காணுயோ
கலைக்கடலுக் கெல்லை கண்டோய். (6)

38 மன்னர்புகழ் ஐந்தாம்ஜார்ஜரசர்பிரான்
பெற்றமுதல் மைந்த ரான
பன்னரிய திறல்சேர்வேல்ஸ் இளவரசர்
பொற்கடகம் பைம்பொற் சால்வை
யின்னபரி சளித்திடப்பெற் றிருநிலம்போற்
றிடவாழ்ந்த வெம்மா னேநின்
தன்னையிழந் திடுமிந்நாள் சகத்தினுக்கு
நன்னாளாச் சாற்றொ ணாதே. (7)

39 தந்தையினுஞ் சதமடங்குன் றனையெனுமுன்
றம்பிபெற்ற தநய னை
சிந்தையொடுன் பணிபுரிந்து திகழும்இரா
மானுஜப்பேர்ச் சிரி யோனை
மைந்தனிலும் பன்மடங்கு மதித்தருள்செய்
தனைநினது மாண்பு முற்றும்
முந்தவுணர்ந்திடு மன்னன் நின்பிரிவை
யாற்றுவனோ முறையோர் வோனே. (8)

40 சென்னைசென்று வரும்வரையென் னுயிர்பிரியா
தெனவவற்குச் செப்பி யாங்கே
முன்னர்நின் றுன் பணியனைத்தும் நனிசிறப்ப
முழுதாற்று முதன்மை யீந்தாய்
அன்னவுன்றன் கருணையினை நினைந்துநினைந்
தகநெகிழ்ந்திங் காற்றூ னுற்ற
இன்னல்களைந் தவண்மேலும் இனியபல
பேறுபெற இதஞ்செய் வாயே. (9)

41 அந்தாமப் பரந்தாமன் றிருநாட்டை
யலங்கரித்த லந்தா வாங்கு
நந்தாத தெய்வீக நிலையுடனென்
னனையருமெந் நாளும் நின்னை
யெந்தாயென் றழைத்திடுநின் மைந்தனுநின்
குடும்பமுமென் றென்றும் வாழச்
சந்தான கற்பகம்போ லருள்புரிந்து
பேரின்பந் தழைத்து வாழி. (10)

வேறு

42 சருவசித் தெனச்சொல் யாண்டுகார்க் கடகத்
தனிற்கதிர் சார்மதி திகதி
மருவுபன் மூன்று மங்கலன் வாரம்
வளர்பிறைத் துவாதசி மறைதேர்
அருவரைத் தீபம் நிகர்திரு நாரா
யணப்பெய ரணிதமி ழாசான்
திருவளர் மார்பன் றிருவடி நீழல்
சேர்ந்தனர் திருந்திடு தினமே. (11)

---

மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர் இராமநாதபுரம்
திருவாளர் K. சிவஞானம்பிள்ளையவர்கள் இயற்றியவை.

பாட்டெண் 43—57

ஆரியமும் தீந்தமிழும் ஆகுமிரு கடல்களிலே யமிழ்ந்து மேலாம்
சீரியநற் கரைகண்ட திருநாரா யணப்பெயர்கொள் தேவா சாலக்
கூரியநன் மதிபடைத்து நேரியசீ ரொழுக்கமுறும் கோதி லாதாய் !
பாரினைநீத் தாசான்றன் பதமடைந்தாய் என்றவுடன் பரிவுற் றேனே. (1)

மூலமறைப் பொருளுணர்ந்து வேதாந்த சித்தாந்தம் முறையாக் கற்றுச்
சீலமுடன் வாழுமுயர் திருநாரா யணப்பெயர்கொள் செல்வா ! நின்சீர்
பாலவனத் தம்புரந்த சீர்ப்பாண்டித் துரைதானும் பலகாற் கேட்டு
மாலெனவே நினைமதித்துப்பைந்தமிழ்தேர்ந்தின்புற்றுவாழ்ந்திட்டானே. (2)

பூவலயம் புகழ்முகவை நகர்ச்சோம சுந்தரப்பேர் புனைமா டத்து
மேவுதமிழ்ச் சங்கங்கண் டுக்கிரபாண் டியன்*இறையா வீற்றி ருக்க
நாவலருங் கீர்த்திமிகு திருநாரா யணப்பெயர்கொள் நம்பி ! நீதான்
பாவலருள் உன்னண்பர் பலரொடுமன் றமர்ந்ததிறம் பகர்தற் பாற்றே. (3)

சத்தியமும் தண்ணருளும் தாங்குதிரு நாரணப்பேர்ச் சரதா ! உன்னைப்
பத்தியுடன் வரவேற்று வேத்திரத்தா சனமுனக்குப் பரிவொ டீந்து
நித்தியா நித்யமெனும் வாதமுறை நிகழ்வித்து நீதான் வென்று
சித்தியடைந் ததனையவை யோரறியப் †பாண்டியன்றான் சிறப்பிப் பானே.

இமிழ்கடல்சூழ்வரைப்பினிலேதமிழ்வளர்க்கும்பரம்பரையிலிலங்கிவாழ்ந்த
அமிழ்தமொழிச் சேதுபதி பாற்கரவேள் முகவையினி லந்நாள் மும்மைத்
தமிழ்தழைய நிறுவுசங்கம் நிலவுவதைப் பாண்டியற்குச் சாற்றிச் சைவம்
கமழ்மதுரைதனில்நான்காஞ்சங்கநிறுவிடச்செய்தாய்கலைவல்லோனே. (5)

தென்னவர்கள்கண்டசங்கமூன்றும்போய்த்தமிழ்தேய்ந்தசிறுமைநோக்கித்
தொன்மதுரை தனினான்காஞ் சங்கமன்று தாபித்த அயோ ஞய்ந்து
நின்னையுமே மேலான ஆசிரிய னாக்கிவைத்தா னீதா னேற்று
நன்னயமாய் நடத்திவந்தாய் நாரணனே எங்குற்றாய் நவிலு வாயே. (6)

மூலமே யென்றழைத்த குஞ்சரத்தைக் காத்தருளும் முதல்வன் பேரே
பாலகுமா ரவ்விருத்தப் பருவமெலாம் மனத்தினிலே பதித்து வாழ்ந்த
சீலதிரு நாரணப்பேர்ச் சீமானே ! அத்தவத்தின் செய்கை யாலே
காலனோ நினையணுகான் எங்குற்றாய் நீயெனக்குக் கழறு வாயே. (7)

* † உக்கிரபாண்டியன், பாண்டியன் என்பவை பாண்டித்துரைத்தேவரின் பரியாயநாமங்கள்.

மன்னவரிற் சிறந்தவெங்கள் சண்முகரா ஜேசுவர வள்ளல் தானும்
கன்னலினும் இனியவுன்றன் கவிகேட்டுக் கனகமெடல் களிப்பா யீந்து
பொன்னிலவுசால்வைகொடுபோர்த்தியிட்டானவன்முன்னோர்போலஇன்னும்
சொன்னமுமே நன்கீவான் எங்குற்றாய் நாரணா!நீ சொல்லு வாயே. (8)

கொற்றவர்கள் மகிழ்வுடைய ஸ்ரீநிவா ஸப்பெயரெங் கோமான் நின்போற்
கற்றவரில் லென்றுநீ கவலையுறா வண்ணமெலாங் கருதிச் செய்து
நற்றமிழிற் றேர்ச்சியுற்றோர் சபைநடுவே பொற்கிழியும் நல்கினனே
எற்றினுக்கென் றிம்பர்விடுத் தும்பருற்றாய் நாரணா!நீ இயம்பு வாயே. (9)

சந்ததமும் தமிழ்க்குழைத்த சாமிநா தனைப்பார்க்கச் சார்ந்தாய் கொல்லோ
நிந்தையிலாக் கவியரசாய் நிலவியரா கவற்காண நினைந்தாய் கொல்லோ
சொந்தமுளார் தமைப்பார்க்கச்சென்றனையோ ஆழ்வார்செய்தொன்னூலாய்ந்து
பந்தமறத் திருவரங்கன் பதந்தொழுஞ்சீர் நாரணா!நீ பகரு வாயே. (10)

வீரியங்கொள் பாற்கரனும் பாண்டியனும் பொன்னாட்டில் மேவி யுற்றார்
சேரியநின் மதிக்குகந்த புலவரங்கு முன்சென்று நிலைத்தா ரென்றே
ஆரியமொன் றேயுடைய அந்நாட்டிற் றமிழ்ச்சங்கம் அமைக்க வேண்டிச்
சீரியநா ராயணனே சென்றனையோ நீயெமக்குச் செப்பு வாயே. (11)

பாராண்ட மன்னர்களிற் சீர்த்தியுறும் பாற்கரப்பேர்ப் பண்போன் மைந்தர்
சீராஜ ராஜேசச் செம்மலும்ரா ஜாராமத் திறல்சேர் வேந்தும்
சோராக நின்பாற்செந் தமிழ்பயின்ற திறநினைந்து நினைந்து விண்சார்ந்
தாராத காதலவர்க் கமுதனைய தமிழ்பயிற்றற் கடைந்தாய் கொல்லோ.(12)

குருக்கொசித்தா னடியிணைநீ சேர்ந்தாலும் நாரணனுன் குருவே நீதான்
அருந்தவத்தாற் பெற்றமகன் அப்பனெனும் உத்தமற்கிவ் வவனி தன்னில்
இருந்திழைநன் மனைவிமக்கள் ஒக்கலுடன் எந்நாளும் செயிரிலாத
பெருந்திருவும் கலைமாதும் மருவுபெரு வாழ்வருள்வாய் பெரிதும் மாதோ.()

பொன்னுருக் கிரியினுன் புகழொன்றே யன்றியொன்றும் புகன்றி டாத
நன்னுவ லோரேறே நாரணனே நின்பாலே நயந்து கற்றிங்
கெந்நாளும் நினக்கினிதே யியற்றுமிரா மாநுசனும் ஏனை யோரும்
பன்னாளும் பார்மிசைநற் புகழுடனே வாழவருள் பாலிப் பாயே. (14)

சருவசித்தாண் டாடிதனிற் சார்மூல நன்னாள்
வருசெவ்வாய் பூர்வபக்கம் வாய்ப்ப—மருவுதிதி
பன்னிரண்டி லாசான் பதமடைந்தான் பார்புகழ
நன்னெறியிற் சேர்நா ரணன். (15)

---

அண்ணாமலைப்பல்கலைக்கழகத் தமிழாசிரியர்
திரு. இ. சே. வரதராஜையரவர்கள் இயற்றியவை.

58 தென்மால்சேர் குறுமுனிவன் மறுபிறப்போ
தேவகுரு நிலத்துற் றான்கொல்
பன்மாண்பும் பகர்வதெவ னெனவறிஞர்
பரிதவிக்கப் பாரி னோங்கும்
பொன்மாடக் கூடனகர்ப் புலரிதிரு
நாரணப்பேர்ப் புலவன் மாய்ந்தான்
சன்மார்க்கந் தனக்கொருவன் றனைப்பிரிந்து
புலப்புவிதான் தவித்த தம்மா. (1)

59 தன்னிகரில் பொதியமுனி தந்ததமிழ்க்
கடற்றிளைத்துத் தகவி னாய்ந்து
மின்னுதுகிர் தாளமெனும் விழுப்பொருளைப்
புலக்கரத்தான் விழைந்து வாரிப்
பன்னெடுநாள் பயில்பவர்க்கு விருந்தளித்த
பெருந்தகையே பரிவில் காலன்
நின்னுயிரைக் கொண் டொளித்தான்
உயிர்க்கொலைவிட் டறிவுநலம் நேடினானோ. (2)

60 பன்னாட்டி னுறுபொருளும் பலநலமும்
படைத்துளதாற் பாரி லென்றும்
முன்னாட்டும் தமிழ்நாட்டின் மூலைத்தெழில்சேர்
புலத்துறையின் முற்றி நின்றாய்
பொன்னாட்டை விழைந்தனையாண் டிகலிலராம்
தொல்கேள்விப் புலவர் உண்டோ
மன்னு செம்புலவர்குழு மகிழ்ந்திடுநா
ராயணப்பேர் மதிவல் லோனே. (3)

61 இருக்குமுதற் பலமறையு முபநிடத
மெனுநூலும் இணையி லாத
தருக்கமுதல் வடமொழிநூல் வருக்கமெலாந்
தகவுணர்ந்து தமிழ்த்தா யென்றுஞ்

செருக்குறநின் றிலகுறுந்தொல் காப்பியமுந்
தொகைநூலும் தெளிந்து கற்றாய்
மருக்கமழுந் துளவணடி யுளங்கொளதிரு
நாரணப்பேர் மறைவல் லோனே. (4)

62 பாவலர்தம் தனிப்புகலாம் பண்ணாருந்
தமிழிருப்பாம் பாடிப் போற்றும்
நாவலர்தம் உயர்தருவாம் எனப்புகழப்
பெருமையுடன் தலைமை தாங்கித்
தேவையினி லரசியற்றும் சேதுபதி
வழிவந்த செம்ம லோர்க்கு
மேவரிய புலநிதியா யொளிர்ந்ததிரு
நாரணப்பேர் விபுத ரேறே. (5)

63 சந்தமுறத் தமிழ்பரப்பும் பத்திரிகைப்
பெருங்குழுவிற் றலைமை தாங்கிச்
செந்தமிழா மாக்கலத்தைத் திறமமைந்த
மாலுமியென் றியம்பும் வண்ணம்
அந்தணர்ந் யறிவாழி தனிற்செலுத்திப்
புகழுடலை யடைந்து நின்றாய்
விற்றையிது வணிகர்தொழில் முன்னாளில்
அந்தணர்க்கு விதித்த துண்டோ. (6)

64 கற்பகமென் றுனைப்புகழ்ந்து களித்துமகிழ்
மாணவரைக் கண்டேன் வீயா
வற்பகத்துக் கொண்டறிவுச் சுடர்கொளுத்தும்
நின்னாற்றல் அறையக் கேட்டேன்
தற்பமிலாய் கசடறநூல் தமைக்கற்றாய்
பிறர்க்குதவித் தகவி னின்றாய்
நற்பனவ வுயர்திருநா ராயணப்பேர்
மருவிநின்ற நாவல் லோனே. (7)

65 இனித்தருக்க முறையிலெழுந் தின்பூட்டும்
கட்டுரைகட் கிடனு முண்டோ
துனித்தநுழை புலத்தாய்ந்து தீட்டுபத
சாரமினித் தோன்றுங் கொல்லோ
மனித்தர்குழு வினிலறிவால் மகிபனென
நனிதிகழ்ந்த மறையோ யென்று
பனித்தவிழி கொளப்புலவர் உயர்திருநா
ரணன்விண்பாற் படர்ந்தான் மன்றோ. (8)

66 பொருவாரில் சேடனென வுயர்திருநா
ராயணப்பேர் புனைந்த செல்வா
பெருவானிற் கிறைவனைவைக் களத்தையலங்
கரிக்கவெனப் பெயர்ந்தாய் கொல்லோ
மருவாரும் விரும்பவுரை வகுக்கவலாய்
சூரிகள்நல் வரவு கூறத்
திருவாரு மலர்மார்ப னறிதுயில்கொள்
சேக்கையிடம் சேர்ந்தாய் கொல்லோ. (9)

அண்ணாமலைப்பல்கலைக்கழகத்துத் தமிழ்விரிவுரையாளர்
வித்துவான். திரு. A. பூவராகம்பிள்ளையவர்கள் இயற்றியவை.

67 உலகு புகழ்மதுரை யுற்றதமிழ்ச் சங்கத்
திலகுதிரு நாரா யணனூர்—நலமிகும்
இன்பமே யான எழில்வா னுலகடைந்தார்
அன்பர் உளமகிழ ஆங்கு. (1)

68 செந்தமிழ் ஆழி திளைத்து வடமொழியும்
முந்துறவே கற்றுணர்ந்த மூதறிவால்—முந்துநூல்
தாமாய்த் தளித்த தகைமாண் பொருளினியே
நாமா ரிடம்பெறுவேம் நன்கு. (2)

தருமபுர ஆதீனத்துக் கீழ்த்திசைக்கலைக்கழகக்கல்லூரித்
தலைமைத்தமிழாசிரியர்
திரு. பு. சி. புன்னைவனநாதமுதலியாரவர்கள் இயற்றியவை.

69 ஓங்கிரு மூன்றீ ராடை யுடுத்தநா னிலம டந்தை
தாங்குமை யறிவி னோடு சார்பகுத் தறிவா ளாகப்
பாங்குட னெழுநாக் கொண்டே பகரெட்டுத் திக்கு ளோருந்
தீங்குர லமுத மாரச் செய்கவ னார னுகேள்.* (1)

70 நன்னுநாம் பதினெண் டின்முன் நற்றமிழ் பயில்வான் சங்கம்
தன்னுறு வேலை ஓர்பாக் கழறுதி யென்னக் காட்டாப்
பண்ணிய சிவப்ர காசப் பாவலன் பாட்டோன் றோதப்
புண்ணிய பூபன் பாண்டித் துரைமொழி போற்றிச் சேர்த்தாய். (2)

71 சேர்ந்துசெந் தமிழ்நீ ராண்டு செந்தமிழ்க் கோபா லையர்
ஆர்ந்தமா ணிக்க வெள்ளன் ஆசிரி யர்பால் அன்பு
கூர்ந்துசெந் தமிழ்கற் றேனைக் குணக்கட லாய நீதான்
ஆர்ந்தசொல் லமுதச் சீரால் அழகையா சானுஞ் சேர்த்தாய். (3)

72 அழகைப் பதியில் லுறைந்தாண் டாசா னுக அமர்நாளில்
பழகும் பெரிய ராகவரும் பண்பார் பாண்டித் துரையும்எழிற்
குழகன் தமிழிற் குருவாகிக் குறையே கூறா வணங்கொடுத்தார்
அழவே தொலையா தன்னேரின் பிரிவா லாகு மருந்துயரே. (4)

73 அருமை செல்லை இந்துகலா சாலை யமர்ந்தே ஆசிரியப்
பெருமை முதிர மதுரையிற்சீர் பிறங்கு சௌராட் டிரப்பள்ளி
உரிமைத் தலைமைத் தமிழாசான் உழைப்பி லொருபத் தாண்டான
இருமை யின்ப மெய்துறவே யெழுநாட் டானோ டொருமதித்தான். (5)

74 தாளாண் மைப்பேர் வேளாளர் சங்கத் தமிழ்ப்பண் டிதர்சங்கம்
நாளாற் றொடங்கி வள்ளுவர்நூற் பரிசம் வழங்கி நல்லறிஞர்
வாளா காலம் போக்காதே வாய்க்கும் பொழுதெல் லாம்பெருஞ்சொல்
நாளா ரம்பஞ் செய்வித்த நலமுன் னூலே காரணமே. (6)

---

* இதனுள் 2 முதல் 9 இறுதியாகவுள்ள எண்கள் தொனிக்கின்றமை காண்க.

75 செய்ய தமிழ்ச்சங் கத்திடையே திகழ்ந்த தொல்காப் பியநூலும்
உய்யும் வழியிற் பயில்வார்கட் குதவா திருந்த தோர்ந்துனனி
ஐய உன்சீர் அருட்டுணையா லன்றோ மூலம் வெளிவந்த
தெய்யு மிதனை அறிவித்தா யென்பாற் கொளுநல் லன்பாலே. (7)

76 அண்ணா மலைபல் கலைக்கழகத் தமைந்த மூதற்றேர் வுக்குழுவிற்
கண்ணா மிருவ ருண்மாணாக் கர்தாம் விளங்கிக் கவின்செய்தார்
எண்ணா மைவர் ஏய்ந்தக்கால் எம்மோ டிருந்துஞ் சிறப்பளித்தாய்
எண்ணா ரிகலுங் குணச்சிறப்பால் எளிதில் வெல்லும் இனியவனே. (8)

77 நெல்லையிலும் பாளையிலும் நிகழெழுமூன் றாண்டுமிஷன் சாலை நேர்ந்தே
ஒல்லும்வகை தமிழ்ப்பயிரை ஓம்பிவளர்த் தேபின்னர் ஓய்வு முற்று
நல்லதிருச் சூசையப்பர் கல்லூரி தனிலுமிராண் டுழைத்தே நற்பேர்
சொல்லுதமிழ்த் தருமையுயர் கல்லூரித் தொண்டுநலந் தோரன் றச்செய்வன். ( )

78 தருமச்சக் கரந்திகழ்நாள் தனைக்கேட்டுங் காணாத தகைமை யென்னீ
தருமச்சக் கரன்தாளைச் சார்ந்தனைபன் மூன்றாடி தன்னிற் செவ்வாய்
தருமச்சந் தவிர்புலமை தாங்குமப்பன் தளராதே வாழ்விற் சேர்த்தான்
தருமச்சந் ததியென்றுந் தழைத்திடநின் தாள்பரவல் தருமே தக்காய்!

---

தருமபுரஆதீனவித்வான் திரு. "பாலகவி"
வயிநாகரம். வே. இராமநாதன்செட்டியாரவர்கள் இயற்றியது.

79 அந்தோ தமிழுக் கருங்கலத்தை யாமிழந்தோம்
செந்தா மரைக்கண்ணன் சேவடியில்—முந்தார்வம்
நன்றுகொடு செந்தமிழ்ப்பேர் நாராயணைப் புலவன்
இன்றுயிரிந் தானேனி தென்.

புதுக்கோட்டை மஹாராஜா கல்லூரித் தமிழ்விரிவுரையாளர் பண்டிதர்
திரு. நா. கனகராஜையரவர்கள் இயற்றியவை.

80 ஆழ்ந்தகன்ற நுண்புலமை அடைந்தசிறு
 ருளம்புகுதும் அருஞ்சொல் வன்மை
போழ்ந்தபகை தலைதூக்கும் வாதநெறி
 புகுந்திடினும் பொறுமை வாய்மை
தாழ்ந்தவரை யுயர்ந்தவர்போ லாதரிக்கும்
 பெருந்தகைமை தமிழின் செல்வம்
வாழ்ந்ததிருக் கோயில்திரு நாரணவாரிய!
 தமிழை மறந்த தேனோ. (1)

81 பரமபத வாழ்வுபெறு நித்தியசூ
 ரிகள்பயிலாப் பழமை சான்ற
வரமமைந்த தமிழ்த்துறையின் நுட்பமெலா
 மவர்செவிக்கே வழங்கு மாறோ
சிரமசைய வுளமுருக வுயோ குறுயின்
 மறந்தரியே சேட னோடும்
பரவமுதா மினியதமிழ் கேட்கவென்றோ
 நாரணவிண் படர்ந்தாய் நீயே. (2)

82 தவத்திறமே பூண்டுமணி மேகலையாங்
 கணிகைமுன்பு தருமங் கேட்ட
சிவக்கதையின் பொருள்விளங்காக் குறைதெளிந்து
 தமிழருக்கே தெளிவு செய்வான்
உவப்புவெறுப் பிலாதவர்கள் மனமாரப்
 பாராட்டும் உரையொன் றாற்றி
நவப்பணியாத் தமிழ்மகட்குப் பூட்டுதிரு
 நாரணநீ நடந்த தியாண்டே. (3)

83 கொழுச்சென்ற வழிநுழைந்து துன்னூசி
 யினிதுசெல்லும் குறிப்பைப் பற்றி
வழுச்சென்ற வழியெல்லாம் பொருள்புகன்ற
 புலவர்குழு மயக்கம் தீர

விழுச்செல்வர் மீனுட்சி சுந்தரனூ
 வலர்வாக்கின் விளக்கம் காட்டி
உழச்செல்லும் கொழுத்தாங்குந் தூன்னூசி
 யெனத்தெளிய வுரைத்திட் டாயால். (4)

84 வடமொழியிற் பெரும்புலவர் மதிக்குமொரு
 பெருநூலாய் வழங்கா நின்ற
மடமகல வருநியாயப் பிரவேசம்
 நுவல்பொருளும் வணிகன் சாத்தன்
இடமகல்தன் செய்யுளகத் திட்டுவைத்த
 நுண்பொருளும் இனிது காட்டும்
திடமுளநூ லியற்றுதிரு நாரணநீ
 யும்பருக்கும் செப்பு வாயோ. (5)

85 ஒருபனுவற் பொருள்விளக்க வொருநூலே
 யியற்றுவதற் குரிமை பூண்டாய்
தருபனுவற் பொருள்கேட்கு மாணவகர்
 மனங்களிப்பத் தருதல் செய்வாய்
வருபனுவற் பொருள்தெளிய மொழிநூலின்
 வகைமையெலாம் வகுத்து வைப்பாய்
குருபரசற் குணமணியே யினியுனைப்போ
 லொருவருண்டோ குவல யத்தே. (6)

86 இனியமொழி பணிவுபெற விசைப்பதன்றி
 வன்சொலென்றும் இசைத்தல் செய்யாத்
தனிமகிமை யுடையபெருந் தகையாள
 தமிழ்க்கடலின் தகைசால் முத்தே
இனியெவரை யுனைப்போல வாசிரிய
 ரெனயாங்கள் இசைத்தல் செய்வேம்
மனிதரிலாப் பெருநிலத்தே யாசிரிய
 நலம்பெறவோ வான்சென் றாயே. (7)

87 ஆண்டு சருவசித்தே ஆடித் திருமதியே
யீண்டு வெளியபக்கத் தீராறே—நீண்டபுகழ்ச்
செவ்வாயே நீயிர் திருநாரண குருவை
எவ்வாறு வானழைத்தீ ரே. (8)

கல்லல்நகர்ச் சாதுக்கள்மடாலயத்தலைவர்

உயர்திரு. பண்டித. சி. த. நாராயணசாமியாரவர்கள்இயற்றியவை.

பாட்டெண் 88—92.

அந்தோவிவ் வுலகநிலை யறக்கொடிதே யான்றோரு மறைய லாமோ
நொந்தேயா மயங்கிவிழ நுவலாம விருந்தாம்போல் நுணுக்கஞ் சான்ற
எந்தேவே! நாரணனே! எழிற்கலைஞ! தமிழ்க்கடலே! இயலுஞ் சங்கச்
சிந்தாதே வியுமறுக யாங்ககன்றாய் தண்ணளியின் றிறமீ தாமோ. (1)

வள்ளுவர்நூற் கருத்தறிய வடித்துரைக்கும் பெருமானே! வடநூ லாய்ந்து
தெள்ளுதமிழ்ப்பொருளனைத்துந்தெரித்துரைக்குமொருபுலவ!தேர்மாணாக்கர்
கொள்ளும்வகைமகிழ்ச்சியொடுகொடுத்தருளுங்கலைவாணர்கோவே!பின்வாய்
விள்ளுமொழிபோன்மொழியையாங்கடைந்துசெவிமடுப்போம்விதியுநன்றோ.

கலக்கமற முகமலர்ந்து கருணைவிழி பொழியநிதங் கற்போர் யார்க்கும்
இலக்கணநூ லுணர்த்துகினும் இறைநிலையும் நுனித்துணர வியல்பதாக
அலக்கணற வுரைத்திடுவாய் அங்ஙனம்யா ருரைப்பரையா! அவனி மேய
நலக்கடலே குணக்குன்றே நாரணனே ஆரணவாய் நவிலுந் தேவே. (3)

கும்பனைத்தொல் காப்பியனைக் கோச்சேனா வரையனையோ கொழித்த கல்விக்
கம்பனையும் நிகர்த்துநின்ற கலைக்கடலே! அமிழ்தனையாய்! கரிய மேனி
நம்பனரு இருந்தின்பம் நனிபருகும் பெரியவர்தம் நாப்ப ணூர
அம்புவிவிட் டனையெனினும் அளவறுமெந் துயரறியா தகற னன்றோ. (4)

என்றனையான் கூடலிலே யினியடைந்தே ஐயமெலா மேக ஐயோ
நன்றுநின்று வினவிடுவேன் நானறிய வுரைத்திடுவாய் நாத இங்கு
நின்றனையான் அடைந்தடைந்த மகிழ்வனைத்தும் வீணாக நிலையா தேகச்
சென்றனையேஇதுதகுமோசிறுமையுற்றேன்என்புரிவேன்திகைக்கின்றேனே

இராமநாதபுரம் இராஜாஸ் ஹைஸ்கூல் தமிழாசிரியர்
ஸ்ரீ. ஜெ. நாராயணசுந்தரம் ஐயங்காரவர்கள் இயற்றியவை.

93 எந்தாய் எனின்மற்று மெண்ணில்புல வோர்தமக்குத்
தந்தாய் தமிழ்ச்செல்வம் தந்தாய் தனிச்சுடராம்
சிந்தா விளக்கே திருநாரண மறைந்து
சிந்தா குலம்தந்தாய் என்னோ செயலிதுவே. (1)

94 உன்மரபி னோரெல்லாம் உன்னால் தமிழ்நிறைந்தார்
பன்மைதரு மாணவரிப் பாரெங்கும் நீயளித்தாய்
மன்மருவு மின்னதமிழ் வான்குலத்து மூதாதை
யென்மருவு சீராளா எங்குற்றாய் நாரணவோ. (2)

95 ஆதி யகத்தியனே ராசிரியனா நின்பால்
ஓதினா ரெம்மருங்கு மோங்குதமிழ்த் தொண்டாற்றத்
தீதில் கலைவளர்சீர்த் தென்மதுரைத் சங்கமுதற்
கோதில் புலவனெனக் கூடிநின்றாய் நாரணவோ. (3)

96 ஆகம் தளர்ந்தாய் அறிவு தளராய்நாப்
போகம் தளர்ந்தாய் பொருளுரைக்கும் சீர்தளராய்
வேகம் தளர்ந்தாய் விழையறத்தா றிற்றளராய்
நாகம் தளர்வலிகூர் நாரணவோ நாரணவோ. (4)

97 பாண்டித் துரைவைத்த பாரம் பொறுத்ததுவே
வேண்டிப் பிறிதொன்றும் வேண்டா தியல்காறும்
ஈண்டிக் கடனாற்றி எந்நா ரணவுலகைத்
தாண்டிக் கடந்தாயாற் சால்கபிலன் போல்மறையாய். (5)

98 இன்னா வுலகமிதா மீங்கிருக்க வொண்ணாதால்
என்னா இவண்விட்டே யேகினையோ பின்னாளில்
முன்னாளின் வள்ளியோர் முற்புலவர் பாலுற்ற
நன்னாரி னட்பு நலங்கண்ட நாரணவோ. (6)

99 எத்தனையும் பொருளறியா திருந்தனவும் ஈங்கறிய
வைத்தனைசெந்தமிழென்னும் வான்பொருட்சஞ் சிகையளித்தாய்
இத்தனையோ இன்னும் எனைப்பலநீ செய்பணிகள்
அத்தனையும் ஆதலநீ ராகாபொன் னாரணவோ. (7)

100 பெருநா வலநினது பெருமை பெரிதாங்கென்
குருநாயக வென்பாற் கூர்சிறுமை யும்பெரிதால்
ஒருநா ளெளிமை யொருவா துவந்துறவாய்
திருநா ரணனேயென் திருநா ரணனேயோ. (8)

101 என்கோவைப் பாடலிருநூற் றிரட்டியுங் கேட்
டுன்கோதி லாத வுயர்மதியி னாராய்ந்து .
நன்கோவை யென்னநலம் பாராட்டி நற்பாடல்
இன்கோல மார்பா யிரந்தந்தாய் நாரணவோ. (9)

102 நீயிருக்கு மாமதுரை நித்தியமாந் தேவருல
காயிருக்கு மெற்கதனு ளாங்கிருக்க யான்விழைவேன்
சேயிருக்கு மாலுலகு சேர்திருநா ராயணநின்
வாயிருக்கு மின்சொல் வளமிருக்கக் காண்பதென்றே. (10)

103 தென்சொற் கடந்துவட சொற்கடற்குத் தேர்ந்தெல்லை
நன்சொற்க டந்ததிரு நாரணனென்—மன்சொற்
சருவசித்து நாமஞ் சருவசித்தா மாண்டில்
உருவசித்து நீத்தான் உவந்து. (11)

---

இராமநாதபுரம் ராஜாஸ்ஹைஸ்கூல் தமிழாசிரியர்
வித்வான் திரு. ரா. இராமாநுஜையங்காரவர்கள் இயற்றியவை.

104 தாரகமும் போடகமுஞ் சார்ந்தபல போக்கியமுஞ்
சேரகங்க டற்சங்கச் சேவையென—நேரகங்கொள்
நாரா யணமாலே நாடியுற்ற விண்ணகத்துச்
சீராய சேவையெது செப்பு. (1)

105 பொங்குதமிழ்க் கொப்போவப் புத்தே ளமுதுதமிழ்ச்
சங்கமதற் கொப்போவின் சார்சங்கம்—இங்கறிஞர்
சேரின்புக் கொப்போ திவியின்பு நாரணனே
பாரின்பு கண்டாய் பகர். (2)

106 போதித்த லுண்டோ புலங்கொளவேற் பாருண்டோ
வாதித்த லுண்டோ வகைவகையாச்—சோதிக்கும்
பன்னூல்க ளுண்டோ பரகதியி னாரணனே
நன்னூல்க டந்தாய் நவில். (3)

107 நீர்தண் டமிழ்நினைவாய் தேகமுப் பேநினையாய்
சார்ந்தம் நினைவாய் தடைநினையாய்—ஏந்துதமிழ்ச்
சங்கம் நினைவாய் தழுவுமிசை தானினையாய்
எங்கடிரு நாரணனே யிங்கு. (4)

108 ஆரியமுஞ் செந்தமிழு மாழ்சமய தத்துவமுஞ்
சீரியசீ டர்க்குத் தெருட்டுவதே—பாரிலுயர்
தன்பாக் கியமாத் தழுவுதிரு நாரணனுங்
கன்பாக்குங் கைம்மாறி யாது. (5)

109 தோலாத வாலறிவாற் றென்னூல் பலவுரையின்
மேலார் விழைய வெளியிட்டு—நூலாயும்
கற்றுரைத் தோற்றிக் களிநா ரணன்றமிழுக்
குற்றனென் றேது முலகு. (6)

110 பெருந்தமிழி னுட்பமெலாம் பேணத் தெருட்டி
யருந்தமிழ்திற் றீஞ்சுவையை யள்ளித்—தருந்தொழும்பி
னுண்டா யினர்புலவ ரோங்குதிரு நாரணனு
லெண்டாய பல்லோ ரிவண். (7)

111 நல்லார் பலர்பிரிந்த நானிலத்தில் வாழ்தலினி
யொல்லா தெனவா னுகந்தனையோ—எல்லாய்
விளங்குதிரு நாரணனும் மேதினியிற் கல்வி
வளர்தருவா ராருனைப்போல் மற்று. (8)

112 ஆசான் பிரிவி லழுதார் பலசீடர்
மாசான தென்றழுதார் மாநிலத்தோர்—தேசார்
இமிழ்வான் புகுந்த விசைநா ரணற்குத்
தமிழ்மா தழுதாள் துணந்து. (9)

113 ஒப்பா ரிலாத வுயர்குணத்தோ யுன்னைவிழைந்
தப்பா வெனவழைக்கு மப்பற்கே—இப்பாரிற்
பன்னலங்க ளோங்கப் பணிநா ரணதமிழின்
மன்னலங் கார மகிழ்ந்து. (10)

---

வத்தலக்குண்டு போர்டுஹைஸ்கூல் வடமொழியாசிரியர்
வித்வான், சிரோமணி, ஸ்ரீ. V. N. ஸ்ரீராமதேசிகாசாரியர்ஸ்வாமி
இயற்றியவை.

---

பாட்டெண் 114—126.

புவிக்கணியாம் பாண்டிநன்னாட் டெதிர்க்கோட்டை நகர்ப் பிறந்த புனித! என்றும், செவிக்கினிய செஞ்சொல்லாம் அமுதார வுண்டின்பம் திளைத்த தீர!, கவிக்கரசே! கலைக்கடலே! உவர்க்கட னீத் தெழுகின்ற கதிரே போல்வாய்!, தவக்குரிசில்! திருநாரா யணப்பெரியோய்! தனிவானிற் சார்ந்திட் டாயோ. (1)

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

எல்லையற்ற கலைகளெலாம் இனியதமி ழாரியமென் றிவற்றிற் றேர்ந்து, சொல்லவொண்ணு மேதையுடன் சொல்வலவர் வியப் பெய்தித் துதிப்ப நாளும், சொல்லருஞ்சீர்ப் பரிமுகன்ற னவதார மெனவுலகு சொல்ல நின்றாய்!, எல்லையில்சீர்த் திருநாரா யணப் பெரியோய்! எழிற்பதமே எய்திட் டாயோ. (2)

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

சாத்திரங்கள் எடுத்தியம்பும் புலனடக்கம் முதலான தகவு வாய்ந்தின், காத்திகர்கட் கெடுத்துக்காட் டாய்விளங்கு பெருந்த கையே! அந்தணாள!, நேத்திரமாம் உபயமறை முடிவுமறிந் தந் நெறிசேர் நிகரி லாதாய்!, சீர்த்திரள்சேர் திருநாரா யணப்பெரி யோய்! சேணுயர்வான் சேர்ந்திட் டாயோ. (3)

ஶாஸ்த்ரம் பரீக்ஷிதுமிதம் விஹிதம் ஸமக்ரம்
ஶாந்த்யாதி ஸித்தி வதி ஶ்ருதி ஶேஷ ஸம்பத: ।
ஶாஸ்த்ரா யதஸ்ஸஹஜயா கவயிதா நயா ச
நாராயணாய விபுதாய நிதராம் ஶுபாய ॥

அலைகடல்சூ ழவனிமன்னன் மகன்முன்னாட் பாரதநா டடைந்த காலை, நலமிகுமவ் வரவதனைக் கொண்டாடும் அரசிய லார் நன்கா ராய்ந்து, கலையுததி கடந்துநின்ற திருநாரா யணப் பெரியோய்! கணிசித் துன்னைத், தலையுறுநற் சம்மானம் அளித்து நினக் கவர்கள்புகழ் தோய்ந்திட் டாரே. (4)

ப்ரஜ்ஞாவிஶேஷமதுலம் ப்ரஸமீக்ஷ்ய யஸ்ய
ஸம்பத்திவாண்யவிமல ஸம்க்ஷிப்த ராஜகீயா: ।
ராஜாதிராஜதநயாகமநப்ரஸங்கே
ஸம்மாநநம் வ்யதநுத ஸ்வாபதேஶகோஷ்டிரத்ர ॥

தன்னயமே கருதாத திருநாரா யணப்பெரியோய்! சால்பு மிக் கோய்!, நன்னலமார் மதுரைநகர்த் தேசிகநற் சபைநடுவே நாவல் லோர்முன், மன்னுபுகழ்ச் 'சீரொன்று தூப்பு' லெனுந் தனிய னுரை மகிழ்மீ தூரத், துன்னியபே ரவையினர்தம் மேனியெ லாம் புளகமெழச் சொன்னாய் மன்னோ. (5)

ஶ்ரீதேஶிகாஸ்ய குருவர ஸதஸ்ய ஸம்ஸதி
ஶ்ரீதேஶிகஸ்தவநிபந்தந வ்யாக்யயாத்தே: ।
ஶ்ரீமந் நயம் வ்யாஸயதீம் வ்யாக்யாநம்
ஶ்ருண்வந்தோ யம் வ்யாகுலிதா ஜநவந் ஸமஸ்தா: ॥

உன்பெருமை யுன்னியுயர் மாண்புமிகு சேதுமன்னன் உளம் உவந்தே, அன்பொடுநற் றமிழ்ச்சங்கக் கலைக்கழகத் தலைமை நினக் களித்த தாய்ந்து, மன்புகழ்சேர் திருநாரா யணப்பெரியோய்! நீ அதனை மகிழ்வொ டேற்று, நின்பரமாக் கொண்டுபல மாண வர்க்குத் தமிழ்க்கல்வி நிறைவித் தாயே. (6)

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

பன்னருஞ்சீர் வேதாந்த தேசிகர்தாம் உலகமுய்யப் பணித்த நூலுள், முன்னணியி னின்றிலகுந் தேசிகநற் பிரபந்தம் முழுதும் ஆய்ந்து, பன்னலங்கொள் பெரியர்பலர் உதவிடயா னுரைவ ரைந்து பதித்த காலை, மன்னுபுகழ்த் திருநாரா யணப்பெரியோய்! நின்னுதவி மறக்கற் பாற்றே. (7)

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

அன்றொருநா ளரணியஞ்சேர் பரதாழ்வான் பெரும்படைகட் களவில் பண்பாங், குன்றெனவாழ் பரத்வாச னறுசுவைசே ருண் டினி கொடுத்தா னென்பர், இன்றவன்றன் வழிவருமீ யுலக மெலாம் உவகையுட னின்பம் எய்த, என்றுமழி யாக்கலையாம் விருந்தளித்தங் கவனினுஞ்சி றிசைந்தா யன்றே! (8)

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

குடமுனிவன் மொழியிலிலக் கணவிலக்கி யங்களெனக் குழுமி நிற்கும், கடலதனின் மிகப்பெரிய நூல்களிலே யெழுமையந் தீர்த் துக் காக்கத், திடமுறுநன் னெஞ்சுடைய திருநாரா யணப்பெரி யோய்! உன்னையன்றி, இடமகன்ற இவ்வுலகில் யாவருளர் சிந்தித் தெற் கியம்பு வாயே. (9)

அகஸ்த்யவாக்விதிலக்ஷணலக்ஷ்யரூபே
த்ரமிடநிபந்த விசயாநு ஸந்தானஸங்கேஷ்வ ।
கோ நு: க்ஷமோ ஜ்ஞாதி நிவர்த்தயிதும் விமர்ஶம்
நாராயணாய ஸகலத்ருஷ்டவம் ப்ரயாதே ॥

உலகின்மிசை மனமுவப்பத் தலைக்கூடி யுள்ளநும்வகை பிரித லன்றோ, புலவர்தொழி லெனப்பொய்யா மொழிபுகலும் திருநாரா யணப்பேர் பூண்டாய்!, சலமிலுளத் தோடெமது மருணீக்கி மகிழ்வித்துச் சார்ந்த நீயாம், அலமரச்செய் தின்றுபிரிந் தமரருல கெய்துவது மழகி தாமோ? (10)

விஜ்ஞானவர்த்தி ராவஜநம் ஸஹஸம்ம
ஸர்வேஷு வியாஸ தத ஸூக்திபோஜநம் வ
ஜகத்யாஹ தேவகவிரோ தநவெஷ்டிதத்வம்
நாராயணாய விஷமஷ்டி த்ருஷ்டிவம் ப்ரயாதே ॥

விண்ணுலகின் மாமணிசேர் மண்டபத்து வீற்றிருக்கும் விபு தர் கோமான், பண்ணமரும் மறைகொண்டு நித்தியரும் முத்தரு மே தன்னைப் பாட, நண்ணுமனத் திருத்தியுறு தெங்கள் திரு நாரணனே யுன்னை நாடி, விண்ணுலகை யெய்துவித்துப் பின்னை கொடுத்தும் விடகில்லா விழைவுற்றனே. (11)

கௌஸ்துபகீர்த்திதஹாரமணிபூஷணஸ:
ஸ்ரீவாஸதேவ உரஸாயிபதன நிஷண்ண: ।
ஸம்வ்யாகிரேந ஹி ததவேஷ நித்யஸேவ்யே
நாராயணாய நயஷ்யதி தஸ் ஸுயஜ ॥

பிறந்தவர்க்குத் துஞ்சுதலு மியற்கையென வுயர்ஞானிகளை பேசு மேனும், அறந்தழைக்க அவதரித்த திருநாரா யணப்பெயர்கொள் அண்ணல்! எம்பால், மறந்தவிர்த்த நினைப்பிரிந்து தாயிழந்த கன்றெனவே வருந்து மெங்கள், திறந்தெரிந்தெம் மனமமைதி யுறும்வண்ணம் உயரருள்நீ செய்க மாதோ. (12)

மாத்ரா வியோஜிதஶிஶோ: க்ருமேதா விஷ்வு
நாராயணார்யவிரஹாஸஹமாநஸஸ்ய ।
ஜஹாது ஶ்ரிய:ஸ்வதிரோஹிததீப்தஸாக்ஷிம்
ஸ்வதா கரோது ஸதத்ம் ஸுஹ்ருகம் ஸ்வகாந்த ॥

விண்ணகரிற் பிறந்துநற்பல் கலைக்கடலைக் கடந்துபுலன் வென்று நற்பேர், மண்ணுலகிற் பெற்றொளிரும் வங்கிபுர நவநீதக் கண்ணனுசான், திண்மகனும் சீடனுமாம் சீராம தேசிகன்றன் சிறந்த செஞ்சொல், வண்மைமிகு திருநாரா யணற்பிரிந்து வருந்தி யிதை வகுத்தான் மன்னோ. (13)

ஸ்ரீவத்ஸவம்ஶஜநிக்ருஷ்ணகுரோ: ஸுதஸ்ய
தாதாக்ரஜோஸ்யாநுஜ ஸ்துஷிந்த்ர்யதேவ:
ஶ்ரீராமதேஶிககவிர் வ்யரீரசத்காதா
நாராயணார்யவிரஹேண விஷண்ணசேதா: ॥

---

மதுரை செண்ட்ஜோஸப்ஹைஸ்கூல் தலைமைத்தமிழாசிரியர்
வித்வான் திரு. S. ஆழ்வாரையங்காரவர்கள் இயற்றியவை.

127 துங்கமிகு மெதிர்க்கோட்டை மாநகரந்
துலங்கவவ தரித்த தூயோய்!
பொங்குபுகழ்க் கூடல்வளர் தமிழ்ச்சங்கக்
கலாசாலை பொலிய மேன்மை
தங்குபே ராசிரியத் தலைமைபூண்
டெம்போல்வார் தமிழ்நூல் கற்றே
யிங்குனுயர்ந் திடவருள்செய் எழிற்றிருநா
ராயணநீ யெங்குற் றாயே. (1

128 சுற்றமெலாம் பரிதவிக்கச் சொல்லவொணாப்
பெருந்துயர்நற் சுதனீங் கெய்தக்
கற்றபெரும் புலவரெலாங் கரைகாணாத்
துயர்க்கடலிற் கலங்கி வீழச்
செற்றமிலாய்! திருநாரா யணப்பெரியோய்
தேவருக்குஞ் செழுந்த மிழ்ச்சீர்
அற்றமின்றிப் போதிக்க வைகுந்த
மாநகர மடைந்தாய் கொல்லோ. (2)

129 வாவென்னப் பேரன்பான் மகிழ்ந்தழைக்கும்
நாரணநின் வாயெங்கோ மெய்த்
தேவென்னப் பொலிந்தெமக்குச் செந்தமிழ்ச்சீர்
எடுத்துரைக்குந் திருநா வெங்கோ
மேவென்னு ளமர்ந்தென்றும் விளங்குதிரு
மேனியெங்கோ! மிகுதூய் மைத்தாம்
பூவென்னப் பொலிவுமிகும் புரைதீரு
முகமெங்கோ! புகலு வாயே. (3)

130 பொறையடக்கம் எளிமையுயர் வாய்மையொடு
தூய்மையெலாம் பொருந்திச் சீலம்
நிறைபெரியோய் வடமொழிதென் மொழிக்கடலி
னிலைகண்டு நிதமு மாறன்
மறைமருவு மரும்பொருள்தேர்ந் துரைத்தெமையாள்
நாரணனே மதிவல் லோனே
துறையமைந்த தமிழ்த் தாயைச் சோர்வுறவிட்
டெங்குற்றாய் சொல்லு வாயே. (4)

மாஜி பாலபாடசாலைப் பரிசோதகர்
ஸ்ரீ. வே. முத்துஸாமிஐயரவர்கள் M.A., L.T. இயற்றியவை.

131 என்னபுலம் என்னகலை என்னபொறை என்னநிறை
என்னபணி வென்ன எளிதகைமை—மன்னன்றே
ஞாலம் பரவுதிரு நாராய ணப்பெரியோய்!
காலன் வயப்பட்டாய் காண். (1)

132 தென்மதுரைச் சங்கக்லா சாலைக்கும் செந்தமிழ்க்கும்
தொன்மைதொட்டே ஆசானாத் தோன்றியவண்—பன்னுகல்வி
சீடருக்கும் ஏனோர்க்கும் தேற்றுவித்தாய் ஐயதிரு
நாடிருக்கச் சென்றதென் இந் நாள். (2)

133 அப்பனெனும் மைந்தற்கிங் காரக் கலைதெரித்தாய்
இப்புவியில் என்றும் இயற்றமிழைச்—செப்பினையால்
எல்லாக் கலைக்கும் இவன்பதம்சார் வென்றிசைந்தாய்
புல்லாணி மால்பதம்நீ புக்கு. (3)

134 தருக்கம் இலக்கணம் சார்வைணவத்தின்
பெருக்கப் பிரபந்தம் பீடார்—உருக்க
உரைக்கும் உயர்குறட்கும் உன்போன் றொருத்தர்
உரைக்கும் தரமோ வுலகு. (4)

135 அன்றுபிரிந் தோமந்தோ சாமிநா தாரியனைப்
பின்பிராக வற்பிரிந்து பேதுற்றோம்—இன்றே
உனைப்பிரிந் தின்னல் உழக்கின்றேம் பண்டை
வினைப்பயனீ தெங்கள் விதி. (5)

136 வடமொழியிற் றென்மொழியில் வண்புலமை மிக்காய்
மடமொழியே தோராய்க்கு வாய்ப்பா—இடமொழிந்து
வைத்த புலவருயர் வானில்வா வேற்றனரோ
எய்த்தஇளைப் பாற்றி யினிது. (6)

137 பூதவுடல் நீத்தாய் புகழுடலிற் போந்துள்ளாய்
நீத மறைச்சான்றோய்! நீவிண்ணின்—மீதமர்ந்து
காணுக்கும் கண்போன்ற காதற் றமிழ்மகட்கும்
சீலமிக ஆசிநலம் செப்பு. (7)

---

மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலையின் பழையமாணவரும்
அத்தமிழ்ச்சங்கத்தின் மாஜி எழுத்தாளருமான
ஸ்ரீ. கோ. அப்பனையங்காரவர்கள் இயற்றியவை.

138 தடமதில் புடைசூழ் தண்ணெதிர்க் கோட்டைத்
தனிநக ருறைமறை யோருள்
மடமறு மாசான் கழலிணைப் பத்தி
வளத்திரு மாளிகை யார்தம்
இடமிகு குடிக்கோர் மணிவிளக் கனையாய்!
சீர்த்திரு நாரண! தமிழ்க்குக்
குடமுனி யனையாய்! உனைத்தமி ழிழந்த
கொடுமைதான் கூறுதற் கெளிதோ. (1)

139 தென்னில மொழியும் வடமொழிக் கடலும்
தேர்ந்தொளிர் புலவரிற் சிறந்தாய்!
நன்னய மொழியே நவிலு நாராய
ணாரிய! நான்மறை வல்லாய்
மன்னிய கல்வி மாணவர் களுக்கு
மாரிபோல் வழங்கிடும் வள்ளால்!
இந்நிலந் தனிற்பன் மாணவ ரிரங்க
விடுத்துநீ எங்குசென் றனையே. (2)

140 தவவுயர்ந்த புகழ்ப்பாண்டித் துரையரசு நிறுவும்
தமிழ்ச்சங்கப் புலவருளே தலைவனென நின்றாய்!
நவநவமாப் பழந்தமிழ்நூல் நாளுநுந் தந்தாய்!
ஞானமனுட் டானமிவை நன்கமையப் பெற்றாய்
அவனிமகிழ் இளவரசு பரிசுதவப் பெற்றாய்!
அருந்தமிழ்க்கே யுழைத்தழிவில் புகழுடனும் பெற்றாய்
புவிதனிலே நினைப்போலத் தமிழ்தழையப் போற்றிப்
புரத்தல்கடன் எனவிரதம் பூண்டவரும் உண்டோ? (3)

யாழ்ப்பாணத்து வித்வான். ஸ்ரீ சி. கணேசையரவர்கள் இயற்றியவை

141 மதுரையில் நான்காஞ் சங்கம் மருவிய புலவன் வாக்கிற்
சதுரன் நாராயணப்பேர் சாற்றுயர் குலத்தோன் யாரும்
துதிசெய்செந் தமிழென் றோதுந் தூயபத் திரம தற்கோ
ரதிபன்இத் தமிழ்நா டேங்க அருமுடல் விட்டான் அந்தோ.

142 எண்டிசை யெங்கு நாரா யணப்பெய ரேற வைத்தோய்!
பண்டிதர் பலரை யாக்கிப் பைந்தமிழ் வளர்க்கச் செய்தாய்
கொண்டசெந் தமிழா மேட்டிற் குலவுபே ருரைகள் தந்தாய்
தண்டமிழ் நாடு நின்றன் தகைமையை மறக்கு மோதான்.

143 துங்கமார் ஆரியத்திற் றுறைபெறு றங்க மோடு
தங்குமா மறைக ளாதி தகைமையிற் கற்ற மேலோய்!
சங்கநூல் பிறவுங் கற்றுத் தமிழ்க்குமோர் வரம்பாய் நின்றாய்
யெங்கணு நின்னை நேர்வார் இயன்மொழிப் புலவர் அம்மா!

144 தக்கமாண் டமிழின் செல்வன் சாமிநா தையன் போனான்
திக்கெலாம் புகழை நாட்டுஞ் சேதுரா கவனும் போனான்
மிக்கநா ராய ணப்பேர் வித்துவ மணியும் போனான்
புக்கதோ தமிழ்மொ ழிக்குப் புகன்மா பழியுங் காலம்.

---

மதுரை ஸௌராஷ்ட்ரகலாசாலைத் தலைமைத்தமிழாசிரியர்
வித்துவான் ஸ்ரீ. ரா. இராமையங்காரவர்கள் இயற்றியவை.

145 நல்லார்கள் பலர்வாழும் எதிர்க்கோட்டை
நகர்புரிநற் றவத்தால் தோன்றிச்
சொல்லாரும் புகழ்படைத்த சேதுபதி
முகவைநகர்த் தொன்னூல் கற்றுப்
பல்லாரும் பயன்பெறவே மதுரைநக
ரினிற்பாண்டித் துரைமுன் கண்ட
எல்லாருந் தமிழ்ச்சங்கத் திறைபுரிந்து
தமிழ்வளர்த்தாய்! எங்குற் றாயே.

146 வடமொழிதென் மொழிகளினல் வரம்புகண்டு
சங்கவிலக் கியங்க ளோடு
இடமுடைய கம்பனுரை இராமகதைப்
பெருவெள்ளந் திளைத்துச் சீர்மாண்

இடமொழியில் அன்புடையாழ் வார்களரு
ளிச்செயலில் ஈடு பட்டுக்
குடமுனியும் வியந்திடவே பன்னூறு
மாணவர்கள் குழும வாழ்ந்தாய். (2)

147 வள்ளுவர்செய் திருக்குறளின் நுண்பொருள்கள்
நின்போல்யார் வடித்து ரைப்பார்?
தெள்ளுபரி மேலழகர் உரைநயங்கள்
எவர்தெரிந்து செப்ப வல்லார்?
வள்ளலே! இனியார்தொல் காப்பியமா
கடற்குளித்து மணிநி ரைப்பார்?
அள்ளியள்ளித் தருக்கநூல் நுணுக்கங்கள்
எவரீவார்? அறைகு வாயே. (3)

148 வடமொழிதென் மொழிக்கடல்கள் வாய்மடுத்த
நாரணமா முகில்வந் தார்த்துத்
திடமுடைய தமிழ்ச்சங்கச் செழுங்குவட்டி
னிதேறித் தீஞ்சொல் மாரி
இடமுடைய மாணவராம் ஏரிகுளம்
ஆறுநிறைத் தென்றும் பெய்தே
மடமொழியக் கலைப்பயிர்கள் வளர்த்தசெயற்
குளதோகைம் மாறு மற்றே! (4)

வேறு

149 பொருளலா எனையுமொரு பொருளாக ஏற்றருளித்
திருவுளத்திற் கனிவுமிகச் செந்தமிழைய போதித்தாய்
அருள்மிகுந்த நாரணநின் னுதரவாற் புலமைதனிற்
கரையற்று விளங்குவோர் கடல்மணலிற் பலரன்றே. (5)

வெண்பா.

150 கல்விக் கடல்மன் கவின்குணக் குன்றுமன்
சொல்வித் தகன்நிகரில் தூயன்மன்—நல்ல
திருநா ரணப்பெரியோன் தெய்வநிலை யுற்றான்
பெருநா ரணன்பதமே பெற்று. (6)

151 சருவசித் தாடி தருபதின் மூன்றில்
மருவுது வாதசிசேய் மூலம்—இரவு
திருநா ரணப்பெரியோன் செய்யபுகழ் வைத்துத்
திருநாடு சேர்ந்த தினம். 7)

மதுரை ஸேதுபதி உயர்நிலைப்பள்ளித் தமிழாசிரியர்
வித்வான் ஸ்ரீ E. G. நாராயணையங்காரவர்கள் இயற்றியவை.

152 தருமேவிய சேணுடுறு தகைசால்சுர குருவே
இருமாநில முற்றுனென எவரும்புகழ் புலவன்
உருமேறெதிர் வாதம்புரி உரகர்க்குயர் புனிதன்
திருநாரண நாமன்குரு திலகன்மறை வென்றே. (1)

வேறு

153 தொல்காப் பியமுதலாத் தொன்மையுடை
யிலக்கணநூற் றுறையின் மூழ்கி
ஒல்காத பெருஞ்சிறப்பி னுண்பொருளாம்
ஒண்மணிகள் ஒளிர வாங்கி
மல்காத மதியுடைய வறியவனும்
அடியேற்கும் வாரி யீந்தாய்
அல்காத புகழுடைய வள்ளால்!உன்
அருங்கொடைதான் அறையற் பாற்றே. (2)

154 அளப்பரிய குணக்கடலே! அறிஞர்குலத்
தனிச்சுடரே! அறைவ னேநின்
துளக்கரிய மனத்திட்பம் துன்னரிய
மதிநுட்பம் சொல்லின் ஒட்பம்
உளப்பண்பாம் உயர்தட்பம் உய்த்துணரும்
கலைச்சிற்பம் ஒழுக்கின் செப்பம்
குலப்பெருமை கிளத்துவனோ கொள்கைதனை
விளக்குவனோ கூறு வாயே. (3)

வெண்பா.

155 ஊக்கம் படைத்தான் ஒளிநிறுத்தான் இவ்வுலகில்
ஆக்கம் படைத்தான் அரியசெய்தான்—நோக்கீர்
திருநா ரணன்தான் திருநாடு பெற்றான்
திருமால் தமர்வாழ்த்தச் சென்று. (4)

# மஹாவித்வான் மறைவு

தமிழ்கூறு நல்லுலகில் தென்றிசைத்திலதமாய் விளங்கிச் சீரிய அரிய நற்றொண்டாற்றிப் புலவரேறாய்த்திகழ்ந்த மதுரைத்தமிழ்ச் சங்க மஹாவித்வான் திரு. நாராயணையங்கார்ஸ்வாமி, தமிழ்ப்பல்லாண்டிசையுடன்பாடி அந்தமில்பேரின்பத்து அடியரோடிருக்க உவந்து பேராவியற்கைப் புக்கில் புகுந்தமைகேட்டு இரண்டுகன்றினுக் கிரங்குமோராவென வாயினேம். பிரபந்நர்களை அங்குக்கூவிக் கொள்ளுவதினும் அவர்கள் அங்குப்போய்ப் பெறுவதெல்லாம் இங்கே பெற்று வாழும்படி அத்திருவுக்குந்திருவாகிய செல்வன் அநுக்ரஹித்திருப்பின் உலகிற்குச் சால நன்மைபயக்கும் எனச் சற்றேறக்குறைய முப்பது ஆண்டுகளாக அப்பேரறிவாளரின் அமுதமொழிகளைப் பருகியுளோர் கருதுவது உசிதமே. கல்வியிற் பெரிய கம்பநாட்டாழ்வான் இராமபிரானைக் குறிக்கையில், 'தென் சொற்கடந்தான் வடசொற்கடற் கெல்லை தேர்ந்தான்' எனப் பெருமிதத்துடன் கூறியது, நம் மஹாவித்வான்போன்றவர்களை இத்தமிழகத்தில் தான் கண்டதைக்கொண்டே எனல் மிகையாகாது. உபயகலைகளிலும் மஹாப்ரவீணராய்ச் சாந்தமூர்த்தியாய் அறநெறிச்செல்வராய் நிறைகுணத்தவராய் இன்சொல்லராய் வித்தகராய் விளங்கிய எம் குருமூர்த்தியை இனி எவண் காண்பேம்? அம்மஹாபுருஷனை என்றும் இவ்வுலகு மறவாது. இதனை முற்றுவிக்கும் வழி ஒன்றே. அது, அவர் புலவர்தலைவராயிருந்து நடாத்திவந்த "தமிழ்ச்சங்கமும்" "செந்தமிழும்" எக்காலத்தும் நிலைநின்று மேன்மேலும் நற்றொண்டாற்றிவருமாறு செய்வதே. அதனைச் செந்தமிழ்ச்செல்வர்கள் பூர்த்திசெய்து உலகின்புற வேண்டியனவற்றை 'வேண்டுதல் வேண்டாமையிலான்' நல்குவானாக. அம்மஹாவித்வானின் அந்தமில்சீர்த்தி வளர்க.

15, கணபதிமுதலிதெரு,
திருவல்லிக்கேணி,
8—8—1947.

ப. ரே. திருமலைஐயங்கார்.
காரியதரிசி.
திருவல்லிக்கேணித்தமிழ்ச்சங்கம்.

# சுவாமி விபுலாநந்தர் மறைவு

தமிழ்வளர்த்த புலவருள் ஈழநாட்டினரும் பலர். அவருள் ஆங்கில மொழிப்புலமையொடு முத்தமிழ்ப்புலமையும் நிறைந்து வடமொழியறிவும் வாய்ந்து திகழ்ந்த உயர்திரு விபுலாநந்த அடிகளைத் தமிழுலகம் நன்கறியும். அடிகள் ஈழநாட்டிற் பிறந்தவராயினும், அவருடைய பலகலையறிவால் விளைந்த பயனைத்தினையும் ஒருங்கெய்தியது தமிழ்நாடேயாகும். மயில் வாகனம் என்பது அடிகட்குப் பெற்றோர் சூட்டிய நாமம்.

இவர் மதுரைத்தமிழ்ச்சங்கத்துப் பண்டிதபரீக்ஷையிலும், லண்டன B. SC. பரீக்ஷையிலும் தேர்ச்சிபெற்றவர்; பிரமசரியநிலைமேற்கொண்டு, சென்னையிலுள்ள ஸ்ரீராமகிருஷ்ணமடத்துத் தொடர்புடைய துறவியாய் அம்மடத்துத் தலைவரிட்ட பிரபோதசைதந்யர் என்னும் நாமத்துடன் சென்னையிற் சில ஆண்டுகள் ஸ்ரீராமகிருஷ்ணவிஜயம் என்னும் தமிழ்ப்பத்திரிகையின் ஆசிரியராயிருந்து அதனைச் செவ்விதின் நடத்திவந்தவர்; பின் ஸ்ரீராமகிருஷ்ணமடத்ததிபர்கட்டளைமேற்கொண்டு இமயமலைச்சாரலில் அம் மடத்துத்தலைவர் இட்ட விபுலாநந்தர் என்னும் தீக்ஷாநாமத்தொடு வேதாந்த கேசரீ என்னும் ஆங்கிலப்பத்திரிகையின் ஆசிரியராயமர்ந்து அதனையும் தம் அரிய பெரிய கட்டுரைகளாற் சிறப்பித்துவந்தவர்; இழுமென்மொழியால் விழுமியபொருள் பயக்குங் கட்டுரை வரைவதிலும் சொற்பொழிவாற்றுவதிலும் கவிகளியற்றுவதிலும் வல்லுநர்; இருபதாண்டுகளாக முத்தமிழும்பற்றிய எத்துணையோபல பொருளுரைகளாற் செந்தமிழை வளப்படுத்தியவர்; அண்ணாமலை பல்கலைக்கழகத்தும் இலங்கைப் பல்கலைக்கழகத்தும் தமிழ்த் துறைத்தலைவராயிருந்து பற்பல ஆண்டுகள் பெருந்தமிழ்த்தொண்டாற்றியவர்; பொருட்பற்றின்றித் தம் வருவாயிற் பெரும்பகுதியை ஸ்ரீராமகிருஷ்ண மடத்துக்கு உதவிவந்தவர்; தம் வாழ்நாள் முழுதும் துறவுநிலையினின்று பிறழாத தூயர்.

இவ்வாறு தமிழ்ப்பணியொன்றினையே குறிக்கோளாக்கொண்டொழுகிய செம்மனச்செல்வராகிய அடிகள் இமயமலைச்சாரலில் வசித்தகாலத்து அவர்களைப்பற்றிய நோயானது நீங்காதுநின்று நிகழும் ஸர்வஜித்து௵ ஆடிமீ 3௳ அடிகளை நம்மைவிட்டுப் பிரித்துவிட்டது. இவர்மறைவு தமிழுலகுக்குப் பெருநட்டமாகும். மதுரைத்தமிழ்ச்சங்கம் இவர்பிரிவால் பெரிதும் அவலிக்கின்றது. செந்தமிழ் இவ்வாடிமதியில் தன் அரும்பெறலாசிரியரையும், தனக்குச்சிறந்த பொருளுரைகளை வழங்கிவந்த புலவர்பெருமானை அடிகளையும் இழந்து வருந்துகின்றது. அடிகள் மறைவால் வருந்தும் அனைவர்க்கும் நமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

அடிகள் நம்மைப் பிரிந்துசென்றாலும் அவர் செந்தமிழில் எழுதி வெளியிட்ட கட்டுரைகளும் மதங்கசூளாமணி யென்னும் நூலும், கரந்தைத்தமிழ்ச் சங்கத்துத் தமிழ்ப்பொழில்வாயிலாக வெளியிட்ட யாழ்நூலும் அவருடைய ஞாபகச்சின்னங்களாக என்றும் நீங்காதுநின்று தமிழ்வளர்ச்சிக்குதவிவரும்.

அடிகளான்மா இறைவனடியிணைநீழலிற் கலந்து இன்புறுக.

பத்திராசிரியர்.

---

## சுவாமி விபுலானந்தர் மறைவு

சிறந்த தமிழ்ப்பேராசிரியரும், ஆங்கிலம்முதலிய பலமொழிகளிலும் மிகத் திறமைபடைத்தவரும் ஆகிய சுவாமி விபுலாநந்தரவர்கள் அணிமையில் பூதவுடல்நீத்தமை அறிந்து மிக்க வருத்தம் அடைகின்றேன். இவர்கள் தவவொழுக்கமும் அன்பு அருள் முதலிய உயர்குணங்களும் படைத்தவர்கள்; ஆங்கிலத்திலும் தமிழிலும் ஆராய்ச்சியறிவும் பேச்சுவன்மையும் வாய்க்கப்பெற்றவர்கள்; என்றும் சாந்தநிலையிற் பிறழாதவர்கள்; பல ஆண்டுகளுக்குமுன் மதுரைத்தமிழ்ச்சங்கத்தில், நாடகக்கலையைப்பற்றிச் சுவாமிகள் அரிய சொற்பொழிவு ஆற்றியபொழுது யான் கண்டு இன்புற்றேன். அந்நாள்தொட்டு அன்புநிலை சிறிதும் வேறுபாடின்றி வளர்ந்துவந்தது. அச்சொற்பொழிவின்பயனாகிய 'மதங்கசூளாமணி' என்னும் நூல் தமிழ்ச்சங்கத்தின்மூலம் வெளிவந்தது. பின்னர், அண்ணாமலைப்பல்கலைக்கழகத்தில் தமிழ்ப்பேராசிரியராக இருந்தபொழுது தமிழிசைநூல்களை ஆராய்ந்து சிறந்தமுறையில் 'யாழ்நூல்' ஒன்று எழுதத்தொடங்கி அணிமையில் நிறைவேற்றினார்கள். அந்நூல் 'கரந்தைத்தமிழ்ச்சங்கத்தின்' ஆதரவில், திருக்கொள்ளம்புதூர்ச் சிவாலயத்தில்வைத்து அரங்கேற்றப்பட்டசெய்தி தமிழ்நாடு நன்கு அறியும். இவ்வேலை முடிந்ததும், சுவாமிகள் பூதவுடல் மறைந்ததை நினையுங்கால், இதற்காகவே அவர்கள்தோற்றம் நேர்ந்ததோ எனக் கொள்ளத்தக்கதாகவுள்ளது. சுவாமிகளுக்குச் செய்யுளியற்றும் திறமையும், உரைநடையெழுதும்வன்மையும் நன்கு அமைந்திருந்தன. கோனூர் ஜமீன்தார். திரு. பெ. ராம. ராம. சிதம்பரம்செட்டியாரவர்கள் சுவாமிகள் உடல்நோயுற்றிருந்ததுகண்டு உண்டியும் மருந்தும் உறையுளும் உதவிப் பேணினார்கள். காலதத்துவம் வரையறைப்பட்ட அளவு முடிந்ததும் மிகப்பெரிய அறிவுக்களஞ்சியத்தையும் கவர்ந்துகொள்ளலாயிற்று. இந்நிகழ்ச்சி நம்மனோருள்ளத்தை வருத்தும் இயல்பினது. சுவாமிகள்

சித்தசாந்தியுடையவர்களாதலின் அவர்கள் குறிக்கோளுக்குப் பௌதிகவுடல் நீத்தது மாறுபாடன்றெனினும் அவர்கள் உடலொடுகூடி இன்னும் பல்லாண்டு இருப்பின் தமிழுலகம் பெரிதும் பயன் எய்துமே! அங்ஙனம் இல்லாமல் நேர்ந்தது பெருங்குறையே! என்செயலாம்! அடிகளைத் தமிழுலகுக்கு அளித்ததெய்வம், தமிழ் மக்கள் எதிர்பார்த்தபடி அவர்களை நெடிதுவையாமல் ஏற்றுக்கொண்டது பெரிதும் இரங்கத்தக்கதே. அடிகள் நல்லுயிர் இறையடி நீழலின்கண் அழிவிலின்பநுகர்ச்சியில் தலைப்பட்டு வாழ்வதாக.

மு. கதிரேசன்.

# மதிப்புரை

பாரதசாரவெண்பா:—[இயற்றியவர்—அருட்டிரு. வீ. சோமசுந்தரசுவாமிகளின் மாணவர் திரு. S. பெருமாள்சுவாமிகள். விலை ரூபா ஒன்று. வேண்டுவோர் 'திரு. S. பெருமாள்சுவாமிகள் c/o திருவாளர் V. ஷண்முகசுந்தரம்பிள்ளையவர்கள், M.A., B.L. வழக்கறிஞர், திண்டுக்கல்ரோடு, மதுரை' என்ற விலாசத்திற் பெறலாம்.]

பாரதம் என்பது இதிகாசமிரண்டனுள் ஒன்று; கௌரவ-பாண்டவர் வரலாறு கூறுவது; மிக்க விரிவுடையது. இதனை வில்லிபுத்தூரார் முதலியோர் பல்லாயிரம் தமிழ்ப்பாடல்களால் இயற்றியுள்ளார்கள். அவை மிக்க காலச்செலவில் ஓரளவு தமிழ்ப்பயிற்சியுடையரால்மட்டும் பயின்று பயன்கொள்ளத்தக்கனவாயுள்ளன. ஆதலின் அவற்றைப் பெரும்பாலும் தழுவிச் சுருங்கிய கால அளவில் யாவரும் பயின்று தெளிந்து பயனடையுமாறு அடியளவாற்சுருங்கிய வெண்பாயாப்பில் 750 பாடல்களிற் பாரதசாரவெண்பா என்னும் இந்நூலை இயற்றியுதவிய திருத்தகு பெருமாள்சுவாமிகளது நன்முயற்சியும், இந்நூற்பதிப்புக்கு வேண்டும் பொருளுதவிபுரிந்த வெண்ணுக்குடித் திரு. சீ. மருதப்பாதென்கொண்டாரவர்களது தமிழ்ப்பற்றும் பாராட்டத்தக்கன. இந்நூலுட்காணப்படும் பாடல்கள் பலவும் செஞ்சொல்லும் ஓசைநயமும் பொருட்டெளிவும் அமைந்தனவாயுள்ளன. அப்பாடல்களின் இயல்சிதையும்படி நேர்ந்த பிழைகள் மறுபதிப்பில் திருத்தமடையும் என்று நம்புகிறோம்.



கல்வி கரைகண்டோன் நற்றோரை யாதரித்தோன்
நல்வினையே செய்யும் நயசுதஜன்—பல்வகையால்
மாநிவா சம்புரிய வாழ்ந்தவள்ளல் புல்லாணிச்
சீநிவா சாரியன் இச் சேய்.

செந்தமிழ்.

செந்தமிழ்.

தொகுதி-௪௮.] கர௵-கார்த்திகை-மார்கழி ௴ [பகுதி. ௧-௨.
Vol. 48. November 1951—January 1952 No. 1-2.

## துணைத்தலைவர் T. C. ஸ்ரீநிவாஸையங்கார் நினைவுமலர்.

### I. ஸ்ரீமான் டி. ஸி. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் மறைவு

ஸ்ரீமான் டி. ஸி. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் 9—12—51ல் இவ்வுலக வாழ்க்கையை நீத்து இறைவன் அடியிணையடைந்தார்கள். அவர்களோடு சிறிதுகாலம் பழகினவருக்கும் அவர்கள் பிரிவு பெருந்துயரத்தை விளைவித்திருக்கிறது. அவர்கள் வாழ்க்கைவரலாற்றைக்கிடைத்தமட்டில் பத்திராசிரியரவர்கள் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள்.

உயர்ந்த கலவியும் கூர்மையான மதியும் எல்லோரிடத்திலும் அன்பும் தயையும் அவரோடு உடன்பிறந்தகுணங்கள். கற்றோர்களிடத்தில் ஒரு தனிப்பட்ட அன்பும் சலுகையும் காட்டி அவர்களுக்குத் தன்னாலான எல்லா உதவியும் புரிந்து அவர்கள் நன்றியை அடைந்துள்ளவர். உற்றார் உறவினர்களைப் பேணுதலிலும் அவரவர்வேண்டியவாறு அவரவருக் குதவுதலிலும் இணையற்ற பெருங்குணமுடையவர்.

அவர் மேற்கொண்ட தொழிலான நியாயவாதத்திலும் இணையற்ற வீரராய்விளங்கியவர். இவர் வழக்குரைக்கும் திறமையை நீதிபதிகளும் மற்றை வழக்கறிஞர்களும் மெச்சியும் போற்றியும் கொண்டாடியுமிருக்கிறார்கள். சிறுவழக்கிலுங்கூட இவர் ஒருமுறைபேசக்கேட்ட நீதிபதியோ மற்றொரு வழக்கறிஞரோ இவரை எந்நாளும் மறந்ததில்லை. இவர் 1900ம் வருஷ ஆரம்பத்தில் வழக்கறிஞராகவந்தார். சுமார் 5, 6 வருஷங்களுக்குப் பிறகு இவருக்கிருந்த வேலைமிகுதியினால் புதியராக அந்தத்தொழிலுக்குவந்தவர்களை ஆதரித்துத் தன்னுடனேவைத்து முன்னுக்குக்கொண்டுவரத் தலைப்பட்டார். இவ்விதம் இவர் உதவியால் முன்னேறியவர்கள் 25 பேர்கள் வரை உண்டு. அவர்களெல்லாரும் தங்கள் தொழிலுக்கு இவரைக் குருவாகவே என்றும் போற்றிவருகிறார்கள்.

பொதுஜன நன்மையும் கலையுணர்வும் இவர் அறிவையும் ஆற்றலையும் மிகவும கவர்ந்தன. இந்த நாடுகளிலுள்ள பொதுஜன ஸ்தாபனங்களெல்லாவற்றிலும் இவர் பெரும்பங்கெடுத்துக்கொண்டும் அவைகளில் தலைவர், உபதலைவர், காரியதரிசி முதலான பதவிகள் வகித்தும் பலபடியாக எண்ணிறந்த தொண்டுகள் பணித்தாலும் தன் மதிநுட்பத்தாலும் சரீர

*

உழைப்பாலும் ஆற்றியுள்ளார் என்பதும், இவர்பிரிவாற்றாமையால் எவ்வளவு பொதுஸ்தாபனங்கள் துயருற்றன என்பதும் இந்த மலரின் பின்பாகங்களால் நன்றாவிளங்கும். தன்னுடல்நலத்தையாவது வேறு எவ்விதமான தடங்கலையாவது சிறிதும் பொருட்படுத்தாமல் பொதுஜனசேவைக்கென்று எப்பொழுது அழைத்தாலும் உடனேவந்து உதவும் உத்தமகுணம் இவரிடம் பலமுறை கண்டது. எந்த மனிதர்களாயினும் ஸ்தாபனமாயினும் எழுத்தாயினும் எதைக்கண்டாலும் அதிலுள்ள நன்மையும் அதனால் பிறருக்குண்டாகும் நற்பயனுமே இவர் அறிவுக்கு இலக்காகி இவர் மனத்தில் நிலைத்துநிற்பன. தனக்கு யாரும் எவ்வித தீங்கும் செய்ததாக இவருக்கு நினைவேஇல்லை; சொல்லியதுமில்லை. தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளராய் இவர் ஆயுள்முழுவதும் வாழ்ந்தாரென்பது உண்மையே. இவரால் பயன் எய்தியவர் பலர்; இவரைப் புகழ்ந்துபாடியவர் பலர். இவைகளுக்கெல்லாம் இவர் விரிந்த மனப்பான்மையும் உயர்ந்த நோக்கமும் உபகாரபுத்தியும் தன்மையும் நன்மையுமே முதற்காரணமாயுள்ளன.

மதுரையில் இந்நான்காஞ்சங்கத்தைத் தோற்றுவித்து வளர்த்த பெருந்தகை பொன். பாண்டித்துரைசாமித்தேவரவர்களுடன் இவருக்கு இளவயதிலே நெருங்கிய பழக்கமேற்பட்டது. அதுமுதல் தமிழ்ச்சுவையும் மணமும் இவரைக் கவர்ந்தன. இடைவிடாது பல தமிழ்நூல்களைப் பயின்றும் கம்பராமாயணத்தையும் திருக்குறளையும் பலதரம் கற்றும் தமிழிற் பெரும்புலமை இவருக்கு வாய்த்தது. 1901-ஆம் ஆண்டு மேமீ 24-உ மதுரைத்தமிழ்ச்சங்கம் நிறுவப்பெற்றதுமுதல் இவர் சங்கத்தின்மேம்பாடுகருதித் தமிழ்மொழி வளர்ப்பதிலும் தமிழ்நூலறிவைப்பரப்புவதிலும் பெரும்பங்கெடுத்துக் கொண்டு அருந்தொண்டாற்றிவந்துள்ளார். தமிழ்ச்சங்கசரித்திரத்தில் கவலைக்கிடமான ஸமயங்களிலெல்லாம் இவர் தம்முடைய முழுச்செல்வாக்கையும் திறமைகளையும் உபயோகித்து இந்த அரும்பெரும் ஸ்தாபனத்தைக் காப்பாற்றிவந்திருக்கிறார். சங்கக்கலாசாலையிற் பயின்றுவந்த ஒரு மாணவனுக்குப் போஷணையும் எல்லாமாணவர்களுக்கும் தீபாவளிதோறும் உடையும் தந்து நெடுங்காலம் ஆதரித்துவந்தார். திரு. பொன். பாண்டித்துரைத்தேவரவர்கள் சுமார் 10 வயது வளர்த்துவிட்ட மதுரைத்தமிழ்ச்சங்கத்தைச் சேதுமன்னர்களுடைய உதவியையும் மற்றும் தமிழ்ப்பெருமக்களுடைய உதவியையும்கொண்டு பின்னால் 40 ஆண்டுகள் பரிபாலித்து வளர்த்தபெருமை இவருடையதேயாகும். உயிருள்ளவரை சங்கத்தின் நன்மையே இவர் உள்ளக்கிடக்கையாயிருந்துவந்தது. மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் சென்ற 40 ஆண்டுகளின் சரித்திரம் இவர்ஜீவியசரித்திரத்தின் ஒரு பாகமென்றே சொல்லத்தக்கது. இவரான்மா சாந்தியடைக.

N. R. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், B.A., B.L.

## II. துணைத்தலைவர் வாழ்க்கைக்குறிப்பு

| தோற்றம்:— | மறைவு:— |
|---|---|
| சகம் 1798-ல் நிகழ்ந்த தாது-ஞூ | சகம் 1874 கர-ஞூ |
| சித்திரை-மூ 28-௳ | கார்த்திகை-மூ 23-௳ |
| (கி. பி. 1876 மே-மூ 8௳) | (கி. பி. 1951 டிசம்பர்-மூ 9௳) |
| திங்கட்கிழமை பௌர்ணமிதிதி. | ஞாயிற்றுக்கிழமை சுக்லத் துவாதசிதிதி |
| விசாகநக்ஷத்ரம். | அச்சுவினிநக்ஷத்ரம். |

இம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் துணைத்தலைவர்: T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் நிகழும் கர ஞூ கார்த்திகைமீ 23௳ (9-12-'51) ஞாயிற்றுக்கிழமை மண்மிசைமாந்தருள்ளமொந்திரங்க விண்மிசைவாணர் விரைந்தெதிர்கொள்ள இறைவன்சேவடிக் கேய்ந்த நற்பணிசெய் நிறைதவச்செல்வர் நிரம்பியகுழுவின் மருவிய செய்தி மாநிலத்தினில்வாழ் மக்கட்கெல்லாம் மிக்கவெந்துயர் விளைப்பதாகும். இவர் உயர்குடிப்பிறந்தவர்; ஆங்கிலத்திலும் செந்தமிழிலும் ஒங்கியபுலமைவாய்ந்தவர்; மதிநுட்பம் நூலோடுடையவர்; சிறந்த வழக்கறிஞர்; சுற்றத்தாற் சுற்றப்பட ஒழுகிவந்தவர்; நிலவரைமிசையே நலமிகு புலவர்சிந்தாமணியாய்த் திகழ்ந்துவந்தவர்; வாழ்நாள்முழுதும் வீழ்நாள்படாது தமிழ்த் தொண்டும் பொதுநலத்தொண்டும் ஆற்றிவந்த சான்றோர்பெருந் தகை.

இவர், பவக்கடல்கடந்து முத்தியக்கரையிற்படர்பவர்க்குறு துணையாகி நிவப்புறு தெய்வத்திருவணைமேவி நீணிலமிசையிணை யின்றாய்த் தவத்துறையோரும் தேவரும்போற்றும் தகுதிவாய்ந்து விளங்கும் சேதுநன்னாட்டிலே கருங்கடல்நோக்கிக் கருணையங்கட லான இராமபிரான் பள்ளிகொண்டதலமும் சரணாகதி தருமம் விளைந்த நிலமுமான திருப்புல்லாணியென்னும் திப்பியநகரத்திலே தென்கலையும் வடகலையும் திகழ்ந்தநாவினராய்வாழும் வடகலை வயிணவவேதியருள் ஆசார்யசிரேட்டரான நடாதூரார்மரபிலே அறி வும் ஒழுக்கமும் உடையராகிய செல்லமையங்கார் என்னும் வேங்கட தேசிகாசாரியருடைய இளையகுமாரராய்த் திருத்துழாய் முளைக்கும் போதே மணத்தொடு முளைக்குமாறுபோலக் கருவிலே அமைந்த திருவொடு சகாப்தம் 1798ல் நிகழ்ந்த தாதுஞூ சித்திரைமீ 28௳

(இ. பி. 1876-ஆம் ஆண்டு மேமீ 8உ) திங்கட்கிழமையும் பூரணை யும் விசாகநக்ஷத்திரமும் கூடிய நன்னாளிலே வடகவேரவாரையிலே பிறந்தார். பூரணையும் விசாகமும் கூடிய நன்னாளிலே பிறந்தார் பலர் உலகமதித்துக் கொண்டாடும் பெரியோராயினர். இவரும் அந் நன்னாளிலேபிறந்து பெற்ற பெருமை பின்வருமாற்றாற் புல னாகும்.

இவருடைய அன்னையார், 'தற்காத்துத் தற்கொண்டாற்பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்', 'மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத் துணை' என்னும் தமிழ்மறைக்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர்; இவரைப் பெற்றமையால் பிற்காலத்து 'என்னநோன்பு நோற்றாள் கொல்லோ இவனைப்பெற்ற வயிறுடையாள்' என்று உலகுபாராட்ட நின்ற பெருமையும் உடையவர்.

மந்திரசாத்திரத்திலும் சோதிடநூலிலும் பயிற்சியுடையவரும் செல்லப்பா என்று பிரசித்தமாக வழங்கப்பட்டவருமான ஜகந்நா தையங்காரென்பவர் இவருடைய மூத்தசகோதரராவர்.

T. C. ஸ்ரீ பாலப்பருவத்திலே தந்தையையிழந்தமையால் பெற லருங்குணங்கள் வாய்ந்த தம் அன்னையின் ஆதரவிலும், ஞானநூட் டாரங்களும் குணநலங்களும் ஒருங்குதிரண்டு ஒருவடிவெடுத்து வந்தனவென்று சொல்லும்படி திகழ்ந்த தம்முடைய பிதாமகர் ஜகந்நாதையங்கார்ஸ்வாமி பாதுகாப்பிலும் வளர்வாராயினர். அறிவு ஒழுக்கம் செல்வம் செல்வாக்கு முதலியவற்றோடு கூடிய மாதுல ராதரவும் போதிய அளவு இவர்க்கு வாய்த்தது. இவ்வாறு சிறந்த தந்தைவழியினரும் தாய்வழியினரும் இவரைப் போற்றி வளர்த்ததே இவருடைய பிற்காலவாழ்வில் இவர் பலதுறையிலும் முன்னின்று நற்புகழடைதற்கு முக்கிய காரணமாயிற்று.

இவர் தம் ஒன்பதாம்வயதிலே கல்விகற்கும்பொருட்டுச் சேது நாட்டுத் தலைநகரான இராமநாதபுரத்துக்கு அனுப்பப்பட்டார். அக்காலத்தில் இராமநாதபுரம், சேதுவேந்தரும் அவர்வழியினரான பாண்டித்துரைத்தேவர் முதலிய வள்ளற்பெருமக்களும் ராஜாராம ராயர் முதலான ராஜகாரியதுரந்தரர்களும் பேரன்பொடு தக்க

பரிசுகள் வழங்கி ஆதரித்தமையால் பலகலைத்துறையும் வல்ல புலவர்கூட்டம் நித்தியவாசம்பண்ணுமிடமாயிருந்தது. அங்கே தமிழ், தெலுங்கு, வடமொழி என்னும் மூன்றுபாஷையிலும் புலமையெய்தியிருந்த லக்ஷ்மீநரஸிம்மபாரதியார் என்னும் ஆந்திர வைணவமறையவரிடம் இவர் ஓராண்டு ஆரம்பக்கல்விபயின்றார்; பின்னர் இராமநாதபுரம் S. P. G. ஹைஸ்கூலில் * நல்லதமிழறிவுடைய ஆங்கிலோ இந்தியரான F. A. ஷூமிட்டியென்பவர் தலைமையாசிரியராயிருந்தகாலத்துச் சேர்ந்து ஆங்கிலம்பயின்றுவருவாராயினர். பயிலுங்கால் தம்முடைய நல்லொழுக்கத்தாலும் நுண்மதியாலும் ஊக்கத்தாலும் ஒவ்வொருவகுப்பிலும் உற்ற சிறந்த தேர்ச்சியாலும் ஆசிரியர்களுடைய அபிமானத்தை அடைந்ததேயன்றி அக்காலத்து அப்பள்ளிக்கூடத்துக்கு விஜயம்செய்த கால்டுவெல் பாதிரியாரால் அறிவுரையோடளிக்கப்பட்ட புத்தகப்பரிசிலையும் பெற்றார். இவ்வாறு நன்குபயின்றுவந்த இவர் 1891-ஆம் ஆண்டு மெட்ரிகுலேஷன்பரீக்ஷை தேறினார்.

பின்னர் உயர்தரக்கல்விகற்கும்பொருட்டு மதுரையையடைந்தார்; மதுரைக்காலேஜில் எப்.ஏ. வகுப்பிற் சேர்ந்தார். அங்கும் பொற்பதக்கம் பரிசளிக்கும்படி நன்குகற்று எப்.ஏ. பரீக்ஷையும் தேறினார்.

இந்நிலையில் இவருடைய கலைமகள்மணங்கண்டுமகிழ்ந்த பெரியோர், இவருடைய அத்தையார்புத்திரியான குணங்களாற்சிறந்த குப்பம்மாள் என்று வழங்கும் அலமேலு அம்மாள் என்பவரை இவர்க்கு விவாகஞ்செய்விக்க நிச்சயித்து நன்னாளிலே அவ்வொரு மகள்மணமுறங்கண்டு உவப்புற்றனர். அதன்பின் அக்காலத்து மதுரையில் மேற்படிப்புக்கு வாய்ப்பின்மையால் திருச்சிராப்பள்ளி சென்று 1904-ஆம் ஆண்டு ஸெயின்ட் ஜோசப்ஸ் காலேஜில் பீ.ஏ. வகுப்பிற்சேர்ந்துகற்று 1905-ஆம் ஆண்டு பரீக்ஷைக்கு ஆஜராய் விடையும் எழுதினார். எனினும் பீ.ஏ. பரீக்ஷையில தமிழ்ப்பாடப் பிரிவில் அம்சம் குறைந்தமையால் தேர்ச்சிபெறவில்லை.

---

* இந்த S. P. G. ஹைஸ்கூல 1785-ஆம் ஆண்டு ரெவரெண்ட் ஸ்வார்ட்ஸ் பாதிரியாரால் நிறுவப்பட்டது. இதனை நிறுவியவர்பெயர்கொண்டு ஸ்வார்ட்ஸ்ஹைஸ்கூல் என்றும் வழங்குவர்.

இங்கே இவர் தேர்ச்சிபெறாதது குறையாகாது. பெரியோர் இறந்து நிகழும் தீயூழின்விளைவு பிற்காலத்து அவர்கள்வாழ்விலே பல நற்பயன்களை விளைவிப்பதுண்டு. அம்முறையில் இவர் பீ.ஏ. பரீக்ஷையில் தமிழ்ப்பாடப்பிரிவில் தேர்ச்சிபெறாதபடி தடுத்த தீயூழும் இவரைச் செந்தமிழ்வளர்த்ததேவரான பொன். பாண்டித்துரைவள்ளல்பால் அடைவித்து அவரால் இவரைச் சிறந்த தமிழறிஞராக்கித் தமிழும் தமிழ்ப்புலவரும் மதுரைத் தமிழ்ச்சங்கமும் பிற கலைக்கழகங்களும் பலதுறையிலும் வளம் பெற்றுத்திகழும்படி பல்லாண்டுதாங்கும ஆற்றலைத்தந்து நற்பயன் விளைத்ததெனில் அது மிகையாகாது.

பீ.ஏ. பரீக்ஷையில் தேர்ச்சிபெறாமையால் தளர்ந்த மனமுடைய இவர் தம் குடும்பத்தைத்தாங்கும்பொறுப்பை மேற்கொள்ளவேண்டியவராயிருந்தமையால் மேலும் கற்பதைவிட்டு உத்தியோகம் தேடமுயன்று, அப்போது தமிழ்வள்ளல் பாண்டித்துரைத்தேவரை உபதலைவராகப்பெற்றுச் சிறந்த தாலுகாபோர்டு நிலையத்தில் ஒரு எழுத்தாளர்பதவியை அபேக்ஷித்து விண்ணப்பம் அனுப்பினர். அவ்விண்ணப்பத்தைக் கண்ணுற்ற தேவரவர்கள் இவரை அழைப்பித்து இவருடைய கல்வி அறிவு அடக்கம் முகப்பொலிவு முதலியவற்றைக் கூர்ந்துநோக்கி இவர்பால் இயல்பாகவே தம் உள்ளத்து எழுந்த கருணையால் 'உயர்ந்தபதவியடையத்தக்க நீ இவ்வெழுத்தாளர்பணியைவிரும்புதல் தகாது; கவலையொழிக; இறைவன் அருள்புரிவான்' என்று உறுதியுரைகூறியதோடமையாது இவர்க்கு அவ்வப்போது வேண்டும் பொருளுதவிபுரிந்தும் பீ.ஏ. பரீக்ஷைக்குரிய தமிழ்ப்பாடங்களோடு சிறந்த தமிழ்நூல்களையும் தாமே முன்னின்று கற்பித்தும் வருவாராயினர்.

தக்க பெரும்புலவர்பாற்பெற்ற கல்வி கேள்வி சொல்வன்மை நுண்மதி முதலியவற்றான்மேம்பட்ட தேவரவர்கள்பாற் பயின்ற இவர் பின் பீ.ஏ. பரீக்ஷையில் மதிக்கத்தக்கமுறையில் தேர்ச்சியுற்றார். அதன்மேல் துரையவர்கள் பொருளுதவிபெற்றுச் சென்னைப் பிரசிடென்சிக்காலேஜில் சேர்ந்துபடித்துச் சட்டப் பரீக்ஷையும் தேறினார். பிரஸிடென்ஸிக்காலேஜிற் படித்துவருங் காலத்தும் ஆசிரியர்கள் இவரிடம் பேரன்புகொள்ளும்படி கல்வி

ஒழுக்கம் முதலியவற்றாற் சிறந்துவிளங்கினார்; போட்டிப் பரீக்ஷைகளிற் கலந்து கட்டுரைகளும் எழுதினார். இவரெழுதிய பல கட்டுரைகளுக்குப் பரிசும் கிடைத்தது.

இவர் திறத்து உற்றுழியுதவியும் உறுபொருள்கொடுத்துக் கற்பித்தும் போந்த புரவலர்பெருந்தகையும் புலவர்பெருந்தகையுமான தேவரவர்கள், இவர் பி.ஏ. பரீக்ஷை சட்டப்பரீக்ஷைகளில் தேர்ச்சி பெற்றதுகேட்டு மகிழ்ந்ததேயன்றி அப்பரீக்ஷைகளில் தேர்ச்சி பெற்றவர்களுக்குப் பட்டமளிப்புவிழாவில் அப்பட்டங்களுக்குரிய சின்னங்களை வழங்குங்கால் இவர் அவற்றைப் பெறுதலைத் தாமும் உடனிருந்துகண்டு மகிழ்ந்தசெய்தியும் இங்கே குறிக்கத்தகும்.

சட்டப்பரீக்ஷைதேறியபின்பு இவர் மதுரையையடைந்து அங்கு அக்காலத்துச் செல்வம் செல்வாக்கொடு சிறந்த வழக்கறிஞராய்த் திகழ்ந்தவரும் இவருடைய சிறியதாயார்கணவருமான கோபாலையங்காரையடுத்து வழக்கறிஞர்தொழிற்பயிற்சிபெற்று 1900-ஆம் ஆண்டுமுதல் தாமே தனித்து வழக்கறிஞர்தொழிலை நடத்திவந்தார். அப்பொழுது பாண்டித்துரைத்தேவரவர்கள், தம் ஆதரவுபெற்ற இவர் தொழிற்றிறங்கண்டுமகிழ்ந்து தக்க வாதவுறுதிகளை வழங்கியுதவினார். தம்முடைய மதிநுட்பத்தாலும் வழக்கியல் நூற்றேர்ச்சியாலும் கேட்டார்ப்பிணிக்குந்தகையவாய்க் கேளாரும் வேட்பமொழியும் சொல்வன்மையாலும் இவர் விரைவில் நீதிமன்றத்தோருடைய நன்மதிப்பினையும் பொதுமக்களுடைய அபிமானத்தையும் பெற்று மதுரை இராமநாதபுரம்ஜில்லா நீதிமன்றங்களிலும் புதுக்கோட்டை நீதிமன்றங்களிலும் தமிழ்நாட்டிலுள்ள பிற நீதிமன்றங்களிலும் வழக்குகளைச் சிக்கறப்பேசிவென்று சிறந்த வழக்கறிஞருள் ஒருவராகி விளங்கினார். தொழிற்றிறமையால் இவர்க்கு வருவாயும் மிக்கது. உயர்குடிப்பிறப்பும் தெய்வங்கொள்கையும் ஒழுக்கமேம்பாடும் வருவாய்க்குத்தக்க வண்மையும் இன்சொல்லும் ஒருவரோடும் பகைகொள்ளாது எல்லோர்க்கும் நன்றேயியற்றிமகிழ்தலும் நன்றியறிவும் ஏனைக்குணநலங்களும் வாய்ந்துவிளங்கிய இவர் தேடியடையாமல் பதவியும் புகழும் செல்வமும் இவரை நாடியடைந்து சிறந்தன. குடும்பவாழ்வும் மகிழ்ச்சியளித்தது.

இவருக்குவாய்த்த மனையாளும் இவருடைய அன்னையாரைப் போலவே மனையறவாழ்க்கைக்கேற்ற மாண்புகளெல்லாம் ஒருங்கமையப்பெற்றவர்; செல்விருந்தோம்பி வருவிருந்துபார்த்திருப்பவர். பதினைந்தாண்டுகளுக்குமுன்னே இவர் தம் வாழ்க்கைத்துணைவியை இழந்தார். அவர் வாழ்நாள்முடிவுவரை இவரில்லம் புலவர்க்கும் மாணவர்க்கும் வறியவர்க்கும் சுற்றத்தார்க்கும் பிறர்க்கும் புகலிடமாய் எப்பொழுதும் அடையாதவாயிலையுடையதாய் விளங்கியது.

பாண்டித்துரைத்தேவர் தம்திறத்துக் காலத்தினாற்செய்த பேருதவிகளை நினைந்து நினைந்து அவர் குணங்களிலும் கொடையிலும் ஈடுபட்டுநின்ற இவர், துரையவர்கள் 1901-ஆம்ஆண்டு மதுரையில் தமிழ்ச்சங்கம் நிறுவியநாள்முதல் 1935-ஆம் ஆண்டுவரை அச்சங்கத்தின் கௌரவகாரியதரிசியாயும், 1935-ஆம் ஆண்டுமுதல் தம்வாழ்நாள்முழுதும் அச்சங்கத்தின் துணைத்தலைவராயும் இருந்து சங்கப்பணிகளையெல்லாம் நன்காற்றிவந்துள்ளார். தன்னைப் பெற்றுப் பேணியதாயான பாண்டித்துரையவர்கள் பிரிந்தபின் தமிழ்ச்சங்கம் உற்ற இடுக்கண்களையெல்லாம், 'மடுத்தவாயெல்லாம் பகடன்னான் உற்ற இடுக்கண் இடர்ப்பாடுடைத்து' என்னும் பொய்யாமொழிக்கு எடுத்துக்காட்டாகநின்று தம் தளராமுயற்சியாலும் ஊக்கத்தினாலும் நீக்கித் தமிழ்ச்சங்கம் தலையெடுத்தோங்குமாறு பலதுறையிலும் செவிலித்தாயாய்நின்று தாங்கியதன்றிச் செந்தமிழ்ச் செல்வச்சேதுவேந்தரும் புலவர்பாடும் புகழுடையருமான ஸ்ரீமத் ஹிரணியகர்ப்பயாஜி ரவிகுல முத்துவிஜய ரகுநாதராஜா பா. இராஜராஜேசுவர முத்துராமலிங்கஸேதுபதியவர்களையும் அவர்களுக்குப் பின் அவர்கள் அருமைத்திருக்குமாரரும் புலவர்கற்பகமாய் நிலவுபவருமான M. ஷண்முகராஜேசுவர நாகநாதஸேதுபதியவர்களையும் மதுரைத்தமிழ்ச்சங்கம் தாங்கும் தனித்தலைவராக்கித் தாம் அவ்விருவர்க்கும்வாய்த்த மதியமைச்சருள் ஒருவராகவும் நின்று தமிழ் வளர்ச்சியுறவும் சேதுநாடு தழைத்தோங்கவும் அரும்பெரும் பணிகள் ஆற்றிவந்தார்.

'ஈதல் இசைபடவாழ்தல் அதுவல்லது ஊதியமில்லையுயிர்க்கு' என்னும் மறைமொழிப்பொருளை நன்குணர்ந்த இவர், தம் தொழிலாற்பெற்ற வருவாய்கொண்டு தம் சுற்றத்தாரும் நட்பினரும்

கொதுமலருமான எளியார்பலர்க்குத் தம் செலவில் உண்டியும் உடையும் உறையுளும் புத்தகமும் பள்ளிக்கூடக்கட்டணமும் உதவி அவரவர்தகுதிக்கேற்ற உயர்தரக்கல்விகற்பித்துத் தேர்ச்சிபெறு வித்து அவருள் வழக்கறிஞராய்வந்தாரை ஆதரித்துத் தம்மோ டிருத்தித் தொழிற்பயிற்சிதந்து சிறந்த வழக்கறிஞராக்கி அவர்க்கு மிக்க வருவாய்வருநெறிகளைத் தேடிக்கொடுத்தும் பிறதுறையிற் புகுந்தார்க்குத் தக்க உத்தியோகம் முதலிய கிடைக்கச்செய்தும் புரந்துவந்தார். இவர் பொருளுதவியாதரித்தமையால் சிறந்த வழக் கறிஞரானோர் பலர்; தமிழ்ப்புலவரானோர் பலர். பிறபணிகளையேற்று நன்னிலையுற்றோரும் பலர். இவர் வாழ்நாள்முடிவுவரை அவ்வப்போது உண்டிக்கும் உடைக்கும் பள்ளிக்கட்டணத்துக்கும் பாடபுத்தகம் வாங்குதற்கும் பொருளுதவிபெற்ற மாணவரும் பலர்.

பாண்டித்துரைத்தேவரையடுத்துத் தமிழ்பயின்ற இவர் சிறந்த தமிழ்ப்புலமையும் படைத்தவராய், வடமொழியிலமைந்த திருப்புல்லாணிமான்மியத்தைத் தெள்ளிய தமிழ்வசனமாக மொழி பெயர்த்து அச்சிட்டுதவினார். ஓய்வுவாய்த்தபொழுதெல்லாம் கல்வி யிற்பெரிய கம்பர்காவியத்தையும் தெய்வப்புலவர்திருக்குறளையும் படித்து ரசித்துரசித்துப் பற்பல குறிப்புக்களெடுத்தும் தாம் அறிந்து ரசித்தவற்றைப் பிறரும்கேட்டு ரசிக்கும்படி பேரவைகளில் உபந்யஸித்தும் வந்தார். அன்றியும் சிறந்தமுறையில் அச்சிட்டு வெளியிடப்பட்ட தமிழ்நூல்களைப்பற்றி ஹிந்துப்பத்திரிகையில் ஆங்கிலத்திலும் பிறபத்திரிகைகளில் தமிழிலும் மதிப்புரைகள் எழுதிவெளியிட்டுவந்தார்.

இவ்வாறு புலவராகவும் புரவலராகவும் விளங்கிய இவர்மீது புலவர்கள் அவ்வப்போது பாடிய பாடல்களும் சித்திரகவிகளும் அளவிறந்தன உள. இவர்மீது சேதுநாட்டு முகவையூரினரும் விருதுநகர் க்ஷத்திரிய வித்தியாசாலைத் தலைமைத்தமிழ்ப்பண்டிதரா யிருந்தவருமான P. சிவசுவாமிசேர்வை என்பவரால் இயற்றப்பட்ட * இரட்டைமணிமாலையும், சிவகங்கையூரினரும் கம்பராமாயணப் பிரசங்கியுமான திரு. செக. அரு. முத்துக்கிருஷ்ணபிள்ளை இயற்றிய † உலாவும் உள.

* இது முன்னமே அச்சிடப்பட்டது. † இது இன்னும் அச்சிடப்படவில்லை.

தனக்கெனவாழாப் பிறர்க்குரியாளராயிருந்த இவரை அங்கத்தினராகவோ, அமைச்சராகவோ, தலைவராகவோ, உபதலைவராகவோ, ஸ்தாபகராகவோ, போஷகராகவோ பெறாத பொதுநிலையங்கள் தமிழ்நாட்டில் பெரும்பாலும் இல்லையென்றே சொல்லலாம்.

பொருளும் புகழும் விரும்பாது நற்பணிபுரியும் இவரை உறுப்பினராகப்பெற்றும் உபதலைவராகப்பெற்றும் தலைவராகப்பெற்றும் முறையே இராமநாதபுரம் நாலூக்காபோர்டும் ஜில்லாபோர்டும் இராமநாதபுரம் ஜில்லாக்கல்விக்கழகமும் சிறப்பெய்தின. மேலும் இவர் பல ஆண்டுகள் மதுரைக்காலேஜ் திருவாகஸபையின் அங்கத்தினராயிருந்து அது நன்னிலையடையப் முயன்றுள்ளார். மதுரை வழக்கறிஞர்சங்கத்தலைவராகவும், கலைக்கழகத்தின் தலைவராகவும், மதுரை நகரமன்ற (விக்டோரியா எட்வர்டுஹால்) திருவாகிகளில் ஒருவராகவும், மதுரையிலுள்ள இராமேசுவரதேவஸ்தான மஹாபாடசாலை நிர்வாகக்குழுவினர்க்கு ஆலோசனைகூறும் குழுவினரில் ஒருவராகவும், மதுரை Y. M. C. A. ஸ்தாபனத்தின் போஷகராகவும், சென்னைப்பல்கலைக்கழகம் அண்ணாமலைபல்கலைக்கழகம் திருப்பதி ஸ்ரீவேங்கடேசுவரர்கோயில் திருவாகக்குழு கீழைத்திசைக்கலைக்கழகம் என்பவற்றின் உறுப்பினராகவும் இருந்து பல சிறந்த தொண்டுகளைச் செய்துள்ளார். தமிழ்நாட்டில் ஆங்காங்குள்ள கல்லூரிகள் கழகங்கள் இவற்றின் ஆண்டுவிழாப்பேரவைகளில் தலைவராகவீற்றிருந்து விழா இனிதுநிறைவேறவுதவியதன்மேலும் தம் மதிவலியால் அக்கல்லூரிகளும் கழகங்களும் நாளும் நாளும் மேனிலையடைதற்குரிய வழிதுறைகளை விரித்துரைத்துப் பொருளுதவியும் புரிந்திருக்கிறார்.

இவ்வாறு உலகியற்பணிபுரிந்துவந்த இவர் 1920-ஆம் ஆண்டு முதல் 1940-ஆம் ஆண்டு வரை மும்முறை சென்னைச் சட்டசபையுறுப்பினராயிருந்து அரசியற்பணியும் திறம்படப்புரிந்துள்ளார். இவர் கக்ஷிச்சார்பின்றிச் சுயேச்சையாய்த் தனித்து நின்றும் சென்னைச் சட்டசபையுறுப்பினராய்ப் போட்டியின்றித் தெரிந்தெடுக்கப்பட்டார். இதுகொண்டு காங்கிரஸ்கக்ஷியினரும் பிறரும் இவரிடம் வைத்திருந்த பெருமதிப்பு நன்குபுலனாகும்.

இவராற்றல்கண்டு சென்னையரசாங்கமும் இவரை நன்குமதித்து இருமுறை தன் நிதிக்கமிட்டியுறுப்பினராக்கிக்கௌரவித்ததோடு பிறகமிட்டிகளில் உறுப்பினராக்கியும், சென்னையரசாங்கம் இந்தியா கவர்ன்மெண்டுக்குக் கொடுத்துவந்த கப்பத்தைக் குறைக்கும் பொருட்டு இந்தியகவர்னர்ஜெனரலிடம் தூது அனுப்பியும் பயன் பெற்றது. இவர் விரும்பியிருந்தால் சென்னையரசாங்க அமைச்சர் குழுவில் சிறந்தவருள் ஒருவராக, அல்லது சென்னை உயர்தர நீதி மன்றத்து முறைவழங்குபவருள் ஒருவராக இருந்து பெரும்புக ழெய்தியிருக்கலாம். எனினும், சுதந்திரமாய்நின்று நாட்டுப்பணி யும் தமிழ்ப்பணியும் ஆற்ற நாட்டங்கொண்டமையால் இவர் அப் பதவிகளை ஏற்றுக்கொள்ளவில்லை.

சிறந்த மன்றுடியான இவர், தமக்குரிய வழக்குரைக்கும் பணி யுடன் பல சிறப்பட்ட நாட்டுப்பணியும் புரிந்துவந்தகாலத்து அமயம்வாய்த்தபோதெல்லாம் தமிழ்புரத்தலும் தமிழ்ப்புலவரைப் போற்றுதலும் நன்றாற்றிவந்தார். இவர், 1922-ஆம் ஆண்டு ஜனவரிமீ 13உ சென்னைக்கு விஜயஞ்செய்த ஆங்கிலநாட்டிளவரச ரால் நம்நாட்டுப் புலவர்பெருமக்கள் இருபதின்மர்க்குச் சென்னைப் பல்கலைக்கழகத்தின்சார்பில் பல்லாயிரரூபாசெலவில் ஜோடிசால் வையும் பெயர்பொறித்த பதக்கத்தொடுகூடிய பொற்கடகமும் பரிசளிப்பித்தசெய்தியும். சங்கநூல்களை இறவாதுபோற்றித்தந்த பெரும்பேராசிரியரான உ. வே. சாமிநாதையரவர்களுக்கும், அந் நூற்பொருள்களை அங்கையின் நெல்லியென ஐயமறவுதவும் ஆசிரி யர்பெருமானான செந்தமிழாசிரியர் திருநாராயணையங்காரவர்க ளுக்கும் வள்ளியோர் பலர்தம் பொருளுதவிகொண்டு பொற்கிழி வழங்கிய செய்தியும் உலகம் அறிந்தனவன்றோ.

அன்றியும், தம் சொந்தவருவாயினின்று மதுரைத் தமிழ்ச் சங்கக் கட்டிடநிதிக்கும் மூலதனத்துக்கும், தமிழ்ச்சங்கக்கலாசாலை மாணவர்க்கு 1914-ஆம் வருஷமுதல் 1950-ஆம் வருஷம்முடிய 36 வருஷம் தீபாவளிக்கு உடைவாங்கிக்கொடுப்பதற்கும், 1918-ஆம் ஆண்டுமுதல் 1946-ஆம் ஆண்டுவரை சங்கக்கலாசாலையிற்கற்ற மாணவருள் ஒருவற்குப் போஷணையளிப்பதற்கும் பெரும்பொருள்

வழங்கினார். சங்கத்துப் பாண்டியன்புத்தகசாலைக்கு அரியபெரிய விலைமதிப்புள்ள ஆங்கிலப்புத்தகம் 645ம், தமிழ்ப்புத்தகம் 402-ம், ஸம்ஸ்க்ருத புத்தகம் 76ம் ஆக மொத்தம் 1123 புத்தகங்களும் தாம் தேடிவைத்திருந்த பல ஏடுகளும் நன்கொடையாக வழங்கியுள்ளார். தம் நன்முயற்சியால் வள்ளியோர்பலருதவிகொண்டு சங்கத்துக்கு மூலதனம் தொகுத்தும் சங்கப்பணிகள் நிகழும் கட்டிடத்தை விலைக்குவாங்கிச் சங்கத்துக்கே சொந்தமாக்கியும் அக்கட்டிடத்தில் நேர்ந்த பழுதுநீக்கிப் புதுப்பித்தும் போந்தார். நோய் வாய்ப்பட்டு மெலிந்து மரணப்படுக்கையிலிருந்த பொழுதும் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் வளர்ச்சியொன்றே இவர் குறிக்கோளாயிருந்தது. இவ்வாறு தம் உடலையும் பொருளையும் உயிரையும் தமிழ்த் தெய்வத்துக்கு அர்ப்பணம்செய்து தென்னாட்டு மாளவியன் எனத் தமிழுலகு பாராட்டநின்றார்.

தமிழ்நாடெங்கும் பயிலவழங்கும் T. C. என்னும் இரண்டெழுத்துப் பெயருடைய இவர் வரலாறு அளப்பரியது. அது தமிழ்ச்சங்கவரலாறாகவும் பெரும்புலவர்வரலாறாகவும் தமிழ்நாட்டு வரலாறாகவும் கொள்ளத்தக்கது. அதனை எழுதித்தரும்படி பல நண்பர்கள் தூண்டியதன்மேல் இவர் தம் வரலாற்றைத் தாமே எழுதத்தொடங்கினார். அது காலதேவனுடைய இடையீட்டால் தொடங்கின அளவில் (முற்றுப்பெறாது) நின்றுவிட்டது தெரிந்து இரங்குகிறோம். இவருக்கு ஒரு பெண்மகளும் அவர்வழிவந்த மக்களும் ஒருகுமாரரும் பௌத்திரியும் உண்டு. குமாரர் ஸ்ரீ N. S. சுந்தரவரதையங்கார் பி.எ. பட்டப்பரீக்ஷை தேறியவர். இவருடன் வழக்கறிஞராயிருந்துதவிபுரிந்தவருள் ஸ்ரீ T. V. கிருஷ்ணையங்கார் இவருடைய மருகராவர்; N. J. V. தேசிகாசாரியர் இவருடைய தமயனார்குமாரராவர். இவர் தமிழ்நாட்டிலும் பிறநாடுகளிலும் பலதுறையிலும் உயர்ந்தநிலையெய்திவாழ்ந்த பெரியோர் பலரை நட்பினராகப்பெற்றிருந்தார்.

ஓரொருதுறையில் வல்லுநராயிருந்த பெரியார் பலரை அடுத்தடுத்திழந்த தமிழ்நாட்டுக்குப் பல துறையிலும் வல்லுநராகவும் வள்ளியாராகவும் விளங்கிய இவர் பிரிவு ஈடுசெய்யமுடியாத பெருநட்டமாகும். இவரைப் பிரிந்து வருந்தும் உற்றார் நட்பினர்

முதலியோர்க்கும் ஸ்தாபனங்களுக்கும் எமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். இவரான்மா இறைவனிணையடிநீழலில் இன்புறுக.

இவர் பிரிவாற்றாது வருந்தி எத்தனையோ சங்கங்களும் சபைகளும் கழகங்களும் குழுக்களும் தங்களுடைய ஆழ்ந்த அநுதாபத்தைத் தீர்மானமூலம் தெரிவித்துள்ளன. அவற்றுள்,

1 மதுரைத் தமிழ்ச்சங்கம்.
2 மதுரைத் திருவள்ளுவர் கழகம்.
3 மதுரை வேதாந்ததேசிகபக்த ஸபை.
4 மதுரைக்காலேஜ் திருவாசகக் குழு.
5 மதுரைக்காலேஜ ஆசிரியர் மாணவர் கழகம்.
6 மதுரைச் சேதுபதி ஹைஸ்கூல் ஆசிரியர் கழகம்.
7 மதுரைநகர பிரைமரிஸ்கூல் ஆசிரியர் குழு.
8 மதுரைக் கலைக்கழகம்
9 மதுரைநகர மக்கள் குழு.
10 மதுரை வழக்கறிஞர் சங்கம்.
11 மதுரை ஸ்ரீமீனாக்ஷிஸேவா சங்கம்.
12 மதுரை மருந்துவியாபாரிகள் குழு.
13 மதுரை விடுதலையடைந்தகுற்றவாளிகள் சகாயஸபை.
14 மதுரையூனியன்கிளப்.
15 மதுரை யுனைடெட்கிளப்.
16 சிவகங்கை வழக்கறிஞர்சங்கம்.
17 இராமநாதபுரம் வழக்கறிஞர் சங்கம்.
18 இராமநாதபுர மக்கள்குழு
19 சென்னை மஹாமஹோபாத்யாய டாக்டர் V. சாமிநாதையர் புத்தகசாலைநிர்வாகிகள் குழு.

என்பவை குறிக்கத்தக்கன.

இவர்பிரிவுபற்றிவந்த அநுதாபத்தந்திகளும் கடிதங்களும் இரங்கற்பாக்களும் எண்ணிறந்தனவுள. அவற்றுள் ஒருசிலவும் இவர் ஜீவதசையில் புலவர்களால் இவர்மீதியற்றப்பட்டு அச்சிடப் படாமல் உள்ளவற்றுள் சில பாடல்களும் அடுத்துச் சேர்க்கப் பட்டுள்ளன.

பத்திராசிரியர்.

## III. துணைத்தலைவர் பிரிவாற்றாது அன்பரும் நண்பரும் அனுப்பிய அநுதாபத்தந்திகளும் கடிதங்களும்

### TELEGRAMS (தந்திகள்)

**_10—12—'51._**

*From the Rajah of Ramnad*

Accept my heartfelt condolences. The loss is equally mine. May his soul rest in peace.

---

**_10—12—'51._**

*From Adinakarthar Koonnakudi.*

Our condolences on demise of your father. Let his soul rest in peace.

---

### கடிதங்கள்.

உயர்திரு. சி. இராஜகோபாலாசாரியர் அவர்கள் (இந்திய அரசாங்கத்து முன்னை உள்நாட்டமைச்சர்) எழுதியது.

சென்னை

12—12—'51.

"T. C. ஸ்ரீ. ஆசாரியன் திருவடியடைந்தது தெரிந்தது...... பெரியோர்களின் மறைவைப்பற்றித் துக்கப்படுவது சகஜமாயினும் அவர்களைப்பொறுத்தமட்டில் துக்கத்துக்கு இடமில்லை. சாந்தியடைந்தார்களென்றே எண்ணவேண்டும்"

இராஜகோபாலாசாரி.

மஹாமஹோபாத்யாய பண்டிதமணி உயர்திரு. மு. கதிரேசச்செட்டியாரவர்கள் எழுதியது.

மகிபாலன்பட்டி
இராமநாதபுரம் ஜில்லா
15—12—1951

"T. C. ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் வைகுண்டபதவியடைந்த செய்தியறிந்து வருந்துகிறேன். மதுரைத் தமிழ்ச்சங்கத்தைக் கண்ணுங்கருத்துமாகப் போற்றிவந்த அவர்கள்பிரிவு தமிழ்நல்லோர்க்கும் நஷ்டமே. என்செய்வது. வினையளவு நின்றொழியும் உடலின் நிலையாமையுணர்ந்து ஆறுதலடையவேண்டியதே. அவர்கள் தமிழார்வம் போற்றத்தக்கது."

மு. கதிரேசன்.

---

செட்டிநாட்டரசர் உயர்திரு. ராஜா. ஸர். முத்தையசெட்டியார்அவர்கள் எழுதியது.

அடையாறு, சென்னை
15—12—1951.

"ஸ்ரீ ஸ்ரீநிவாஸையங்காரவர்கள் தேகவியோகமானதைக்கேட்க மிகவும் வருத்தமாயிருக்கிறது. இவ்வளவு சீக்கிரம் இவர்களுடைய உயிர் பறிக்கப்படுமென்று ஒருவரும் எதிர்பார்த்திருக்கக்கூடியதில்லை. என்னசெய்யலாம். கடவுள்சித்தம் அவ்வாறிருக்க நம்மாலாகக்கூடியது ஒன்றுமில்லை. .................. அவர்கள் நம்முடைய தேசத்திற்குச் செய்த பெரியசேவை எப்பொழுதும் நிலைநிற்கும். அவர்கள்மறைவு நம் தேசத்துக்கு இத்தருணத்தில் பெரியநஷ்டம். .........ஐயங்காரவர்களையும் அவர்கள் சேவையையும் எல்லோரும் எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருப்போம் என்பதில் சந்தேகமில்லை"

மு. அ. மு.

From

V. V. Srinivasa Ayyangar,

*Retired High Court Judge, Madras.*

*10—12—1951.*

* * *

During the many decades I have known, I have been cherishing for him very great personal affection and esteem. We have all lost a valuable friend and Madura, one of its most respected leaders and the whole South India is poor to-day on account of the passing of a great and good man. Please accept my condolences for yourself and all the members of your family.

* * *

---

From

H. A. Popley, High Cliffe, Coonoor

12—12—'51.

* * *

For many years he was a consistent supporter of the work of the Y.M.C.A. in Madura and this organisation owes a very great debt of gratitude to him for his generosity and for the many services that he rendered to it. Then, he was a man of wide and deep scholarship and his knowledge of the Tamil classics and of Tamil Literature generally was very extensive and of great value to all with whom he came into contact. All those who were his friends, among whom I

am one, will cherish his memory and his life with gratitude and will pray that God will rest his soul and will give comfort and consolation to all those he has left.

*  *  *

---

Kilpauk, Madras.
12—12—'51.

From

A. S. P. Ayyar, M.A., I.C.S.
*High Court Judge*

*  *  *

He was well-known for his deep scholarship, urbane manners and ready comradeship. He was a real soldier of humanity and a pillar of culture. May his soul rest in peace.

*  *  *

---

Camp: Rajapalayam
12—12—'51.

From

P. S Kumarasami Raju, M.L.A.
*Premier, Madras.*

*  *  *

He was an outstanding public figure in the south, his capacity and ability having gained a distinction not only in the field of his profession but also in several spheres of public activity. His end is a personal loss to me. May his soul rest in eternal peace.

*  *  *

---

Hawarden, Coimbatore
14—12—'51.

From

R. K. Shanmukham Chettiar
*Retired Finance Minister.*

*          *          *

I had the privilege of knowing him since 1921. I always had great respect and regard for him. Please accept my condolences in your bereavement.

*          *          *

---

Cuttack
14—12—'51.

From

V. Ramanathan
*Member, Board of Revenue.*

He was a stirring example of men who by the superiority of their intellect adorn every place they belong, rise to heights, and are a hope and encouragement to every one who feels that although he does his best the world has not recognised him.

May his soul rest in peace and may his family continue to produce more men to serve the country in equal measure.

---

Madras

From 15—12—1951.

T. A. Ramalingam Chettiar

Since 1900 we were very good friends and worked together in various institutions like the Madras Legislative Council, Annamalai University and the Tirupati Devasthanam Committee. His services for Tamil were very great and substantial and it was only the other day that I received the fully deserved compliment paid by Dr. Swaminatha Ayyar in his சங்கத்தமிழும் தற்காலத்தமிழும். His death is a great personal loss to him.

---

Bala Vilas, Mylapore,

From 15—12—'51.

T. M. Krishnaswami Aiyar

*Retired Judge, Travancore.*

It is only recently that I came tnto close contact with him Before, I stood only at a distance in simple admiration of his vast erudition, sturdy independence, lovable and obliging temperament. He has done great service to the South Indian Culture. His disappearance is a great loss.

---

Madras

From 17—12—'51.

Sri Ramakrishna Mission Student's Home

Very few to match him, universally respected and loved he was * * * Though he was not in the best of health he never allowed his ill-health to stand between him and the discharge of what he considered to be his duty.

---

# துணைத்தலைவர் பிரிவாற்றாது
# அன்பர்கள் இயற்றிய இரங்கற்பாக்கள்

## செந்தமிழ்ப்பத்திராசிரியர் T. K. இராமாநுஜையங்கார் இயற்றியவை

### தரவுகோச்சகக்கலிப்பா.

சங்க முழக்கோங்கச் சான்றோர்கள் ஏத்தெடுப்பக்
கொங்கலரும் புல்லைக் குணகடல் வளாகத்துச்
செங்கதிரே போற்றோன்றுஞ் சீனிவா சாரியநீ
எங்கும் துயர்பரவ யாண்டு மறைந்தனையோ? (1)

குற்றம் பொறுத்துக் குணங்கொண்டு பாராட்டிச்
சுற்றம் தழுவித் துகடீர் பெருமுயற்சி
முற்றும் தமிழ்வளர்ச்சிக் காக்கும் முதல்வ! உனைப்
பெற்றும் பிரியவிட்ட பேருலகம் பேதைமைத்தே. (2)

தென்னாட்டு மாணவியன் எனப்புலவர் சீர்செப்பி
முன்னாட்டும் படிநின்றாய் முடிவுனக்கும் உண்டுகொலோ!
பன்னாட்டும் தமிழ்வளமே பரப்பியநீ அதுபுரியப்
பொன்னாட்டுப் புக்கனையோ புல்லையிற் புண்ணியனே! (3)

மண்ணோர் துயரமதி வாய்ந்தார் மனங்களையக்
கண்ணீர் பொழிந்து கவிஞர் கவலவிட்டு
விண்ணாடு புக்கவிது மேதகவோ? வேதியருள்
நண்ணாரும போற்றும் நடாதூரர் நாயகனே! (4)

சேவிக்க வாழ்விக்கும் மூர்த்திதலம் தீர்த்தங்கள்
மேவிச் சிறந்த வியன்புல்லை மாநகரை
நாவுக் கினிமைதரும் நற்றமிழைக் கைவிட்டு
நீவிட் புலம்புக்க தென்னோ! நிகழ்த்துவையே. (5)

மேனாளில் நிலத்துவரு மேலைநாட் டிளவரசால்
ஆனாத புலவர்பலர்க் கரும்பரிசில் அளிப்பித்தாய்!
வானாளும் இளவரசால் மதித்துமவர்க் கதுவழங்க
வானாடு புகுந்தனையோ மறையவர்தங் குலமணியே! (6)

வேற்றுமொழி மோகம் மிகவிளைந்த காலத்தே
ஆற்ற முயன்று தமி பூர்வம் விளைவித்த
போற்றுபுகழ்ப் பாண்டித் துரைபாற் புகுந்தனையோ?
நாற்றிசையும் ஏத்தும் நடாதூரர் நாயகமே! (7)

சங்கநிதி வளர்க்கும் தாளாளன் வந்தானென்
றங்கநிதி யாள்வோன் அதுதந் தெதிர்ந்தனனோ
மங்குல்தவழ் சோலைசூழ் மாமதுரை மன்னுதமிழ்ச்
சங்கம் நனிசிறக்கத் தண்ணளிபெய் சான்றோனே! (8)

கம்பன் கவிநயமே பேசிக் களித்திருந்தாய்
உம்பரமு துண்ணற் கொருப்பட்டுச் செல்லுவையோ?
நம்பிதிரு நாவீற னார்கவியின் சீர்திருநாட்
டும்பரு டனொன்றி யுவந்துரைக்க வுற்றனையோ! (9)

தூயபுகழ்ப் பாண்டித் துரைபிரிவு தோன்றாமல்
நேய மொடுபுரந்தாய் நீ ஐம்பதியாண்டு
நோயகன்று வந்தெம்மை நோக்குவா யென்றிருந்தேம்
தாயகன்ற கன்றில் தளரவிட்டுச் சென்றனையே. (10)

ஒன்றுதமிழ் நூலில் உறுநயமெல்லாந் திரட்டி
ஆங்கிலநூல் மேவும் அரியபொரு ளோடிணைத்துப்
பாங்கு பெறமொழியும் பண்டிதநீ எங்ககன்றாய்
ஈங்கவற்றை நின்போல் எடுத்துரைப்பார் ஆரையா! (11)

மல்லல் மிகுசென்னை மாகாணம் நல்குகப்பத்
தொல்லைச் சுமைதொலையத் தூதுநடந்து முன்பு
இல்லிக் கவர்னர் செனாவிடம் மன்றாடி
வெல்லும்நா வீறவுனை மீட்டுமென்று காண்பேமோ! (12)

மன்றத்து வழக்குரைத்து மாணவர்க்கு மதிபுகட்டி
நன்றுற்ற அவைக்களத்து நாவலருள் நாவலனா
நின்றொத்து மகிழும்வகை நிகரிலுரை முறைவழங்கிச்
சென்றுற்ற இசையனைத்துஞ் சீர்பரவ நின்றனையே! (13)

சொற்செல்வம் வழக்கறிவு தூயமதி நூற்கேள்வி
நற்குணங்கள் நல்லொழுக்கம் நவையில்கொடை நன்றாற்றல்
பற்பலகலைத் துறைத்தேர்ச்சி பாவுபெருங் குடிப்பிறப்பு
பொற்பிவற்றின் உருவானாய்! புலவர்கள்சிந் தாமணியே! (14)

உண்டியுடை யுறையுளிவை உவந்துதவி யெளியாரைப்
பண்டிதர்க ளாக்கியவர் பணிகண்டு மகிழ்ந்தனையால்
தெண்டிரைசூழ் வையகத்துச் செந்தமிழ்நா வலர்தகுதி
கண்டுவந்து பாராட்டிப் பரிசளிக்குங் கற்பகமே! (15)

ஏரா ருலாவை இரட்டைமணி மாலையினை
ஆராத பேரன்பொ டாய்ந்து தொடுத்தணிந்தான்
ஓரே இனம்புகலும் செய்யதமிழ் நாவலர்க்குப்
பேரா தரவாற் பெரும்பரிசில் நல்கினையே. (16)

ஐயகோ பழந்தமிழ்நூ லழிந்தனவென் றகலிடத்தார்
கையவிடா தவற்றையெலாம் நன்காய்ந்து நவில்பொருள்கள்
கையிலகு நெல்லியெனக் காட்டியருள் சாமிநா
தையருக்கை யாயிரம்பொன் அளித்துமகிழ் வித்தனையே. (17)

செய்யதமிழ் நூலிற் செறிபொருள்க ளத்தனையும்
பெய்யும் முகில்போல் நனிவழங்கு பேராசான்
பொய்யில் புலவர் புகழ்திருநா ராயணனார்க்
கையநீ பொற்கிழிதந் தான்றபுகழ் மேவினையே. (18)

சென்னையுறு சட்டசபை சீர்ப்பல் கலைக்கழகம்
மன்னுபுக ழண்ணா மலைபல் கலைமன்று
துன்னுவட வேங்கடத்துத் தூய கலைக்கோயில்
என்னு மிவைசிறக்க எண்ணில்பணி யாற்றினையே. (19)

சீராம நாதபுர ஜில்லாபோர் டுத்தலைவன்
ஏரார் கலைக்கழகம் எய்து பெருந்தலைவன்
பேரார் பிரசங்கி யென்றென்று பெட்பினொடும்
பாரோர் வியக்கப் பலபணிகள் ஆற்றினையே. (20)

வல்லார் பலருளரிம் மாநிலத்தி லென்றாலும்
சொல்லால் மனத்தினால் தூயவுடலாற் பொருளால்
எல்லார்க்கும் நன்றே யியற்றி மனமுவக்கும்
நல்லாய் உனையொப்பார் ஞாலத் திலையிலையே. (21)

எங்கெங்குச் சென்றாலும் எத்தொழிலைச் செய்தாலும்
சங்கப் பணியே குறிக்கொண்ட சான்றோனே
இங்கிப் பரிசே யினிப்புரப்பா ராரலர்மேல்
மங்கையுறை புல்லை மறையோர் சிகாமணியே! (22)

மாண்ட வடமொழியின் மன்னுபுல்லை மாண்மியத்தை
நீண்ட தமிழா மொழிபெயர்த்து நீடிசைகொள்
ஆண்டகையே! உன்போல் அரியதமிழ் நாவலர்க்கு
வேண்டுவன நல்கும் விழைவுடையார் யாரினியே. (23)

உற்றார் துயர்தீர்த் துயர்கல்வி கற்பித்துப்
பெற்றா ரினுநன்கு பேணியவர் நாளுநலம்
உற்றோங்கி வாழ வுறுபொருள்கள் ஈந்துவக்கக்
கற்றாய்நின் போல்வாரைக் காசினியிற் கண்டிலமே. (24)

செய்ய தமிழ்சிறக்கச் சேதுவள நாடோங்க
வையமிசை வாழ்ந்த மறையோர் குலதிலக!
ஐயமறத் தொன்னூ லறிந்தோய்! உனைப்பிரிந்த
கையறவு தீர்ப்பாரைக் காண்கிலேம் காண்கிலமே. (25)

திருமருவு தெய்வச் சிலைப்பெருமான் பாத
மருமலரின் மன்னுபெரு வாழ்வுற்றா யேனும்
தருவனையாய்! சங்கம் தழைத்தூழி வாழ
அருவுருவாய் நின்றே அருள்புரிவாய் மன்னோ! (26)

## நேரிசைவெண்பா.

காவாண்டே! நின்வரவு கண்டுகலக் குற்றேம்
காவாண்டாய் அந்தோ! கவிஞர்—திருவான
மன்சீனி வாச மறையோர் பெருமானை
நின்சீர் கெடாதோ நிலத்து. (27)

கருது காவாண்டு கார்த்திகைமுற் பக்கம்
மருவு துவாதசிமுன் வன்மீன்—ஒருபாற
வாரமிவை மாண்பிழந்த மன்னுபுகழ்ச் சீனிவா
சாரியனை விண்சாரத் தந்து (28)

---

மதுரையிலுள்ள இராமேசுவரதேவஸ்தான பாடசாலைத்
தலைமைத்தமிழாசிரியர் திரு. T. N. அப்பனையங்காரவர்கள் இயற்றியவை.

நிலைமண்டில ஆசிரியப்பா

இன்றோர் நாளா லெதிர்ந்த தீவினைப்பயன்
என்னென் றுரைக்கேன்! என்னென் றுரைக்கேன்!
திருமிகு மதுரை திகழ்தமிழ்ச் சங்கத்
தொருதுணைத் தலைவன் உயிர்நிலை யொப்போன்
பாண்டித் துரைதன் பரிபாலக னெனப்
பூண்டவன் மெய்ப்புகழ் புலங்கொள விரிப்போன்
செந்தமிழ் வாணர் சிந்தையிற் பிரியா
எந்தையின் புரவலன் என்னையும் புரந்தோன்
என்போ லெளியர்மற் றெண்ணிறந் தோரையும்
பொன்போற் போற்றிப் புகழ்வரம் பானோன்
சேது வேந்தர் சிறந்தநற் றுணைவன்
கோதில் வாய்மைக் குணப்பெருங் குன்றம்
உரைசெய லுளமொன் றாகிய லறிஞன்
கரைசெய லரிய கல்விப் பெருங்கடல்
உயர்குடிப் பிறப்பின் ஒப்புர வாளன்
நயனுடை நெஞ்சின் நவில்தொறும் இனியன்
நீதியின் வழுவா நேர்மையன் வியந்தெதிர்
வாதியும் இசைய வழக்குரை வகுப்போன்
புன்கலைப் பிணக்குகள் புந்தியிற் புகுதாத்
தென்கலை போற்றுநல் வடகலை வைணவன்
விருப்புறு நலத்தின் வேதியர் திலகம்
திருப்புல் லாணிச் சீனிவா சாரியன்
மண்ணவர் இரங்க விண்ணவர் ஏத்த
வாராச் சேட்புல வழிப்படர்ந் தனனென
ஆராத் துயர மனைஇய வெஞ்சொல்
தோய்ந்த செவித்துணை தூர்ந்து பாழாகியர்
காய்ந்தவெங் கூற்றம் கண்ணின்று கொல்லோ
தன்னுடை யனிவான் றருவிடைக் காண்பான்
அன்னவன் பிரிவாற் பொன்னகர் பொலிதர
வானவர் விழைதிரு மலிதமிழ்க் கூடல்
மாநகர் மதுரையோ வறிதுபட் டன்றே.

## நேரிசைவெண்பா

ஆய்ந்த கலைக்குரிசில் ஆன்ற வழக்கறிஞன்
வாய்ந்த புகழ்ச்சீனி வாசவள்ளல்—மாய்ந்தனனால்
துங்கப் புலவர்களின் றோற்றஞ்சால் தென்மதுரைச்
சங்கத் தமிழ்வளர்த்த தாய்.

---

மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலையாசிரியர்
உயர்திரு. சு. நல்லசிவன்பிள்ளையவர்கள் இயற்றியவை.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மதுரையினிற் றமிழ்ச்சங்கம் நிறுவியதிற்
றமிழ்பயில்மா ணாக்கர் தம்மைச்
சுதரெனக்கொண் டனமாடை தருபாண்டித்
துரைமறைவு தோன்றா வண்ணம்
மதுரகவிப் பாவலரைச் சங்கத்தை
மாணவரை வளர்த்துக் காத்த
சதுர்மறையோர் மணிசீனி வாசமுகில்
மறைந்ததந்தோ தமிழ்செய் பாவம். (1)

ஆண்டுபல சங்கக்கா ரியதரிசி
யாயுறைந்து மதன்பி னன்பு
பூண்டுதுணைத் தலைமையினை வகித்துச்செந்
தமிழ்புரந்த புயலை யென்றுங்
காண்டகைய மணிவிளக்கைக் கற்பகத்தை
யின்றிழந்து கண்ணீர் சோர்ந்து
கூண்டிழந்த புட்போல யாங்களெலாம்
வாடுசெயல் கூறற் பாற்றோ. (2)

யாதுமறி யாவெனையு மோர்பொருளா
நினைந்துசங்கத் திருத்தி யாண்டு
மூதறிவா ராசிரியப் பதவிதந்து
மாணவர்க்கு மூப்பா னேழாண்
டோதுவிக்கும் படிபுரிந்த வுத்தமனை
நினைந்துநினைந் துள்ளம் மாழ்கி
மாதவத்தா லீன்றெடுத்த தாய்காணாச்
சேயெனவே மயக்குற் றேனே. (3)

'என்றுவந்திங் கெனையடைந்தா யன்றுமுத
லின்றுவரை யிதையத் துன்பால்
நன்றுநினைந் தேன்மறவேன் உதவுவேன்
அஞ்சே'லெந் நாளு மென்றாய்
சென்றனையே யெப்பிறப்பி லுனதுதிரு
முகங்காண்பேன் சீனிவாச
மன்றலந்தார் மலர்த்துளவோன் றிருநாட்டை
யலங்கரிக்கும் வாழ்வுற் றாயோ. (4)

சென்னையுறு சட்டசபை யுறுப்பினரு
ணனிதிகழ்ந்து தேசத் தோர்க்கு
நன்னலங்கள் பலபுரிந்தாய் ஷண்முகரா
ஜேசுவர நாம வேந்தற்
கின்னுயிர்நண் பினனாகித் தமிழ்ச்சங்கத்
துணைத்தலைமை யேற்றே யெங்கள்
இன்னலெலாங் களைந்துறைந்தாய்! எங்குற்றாய்!
இனிக்காண்ப தெந்த நாளே! (5)

அந்தணர்தங் குலமணியே! நின்சுதன்
சுந்தரவரதன் அருகுற் றந்தோ
வந்திருகண் ணீர்சொரிந்து மனங்கரைந்து
கரைந் துருகி வாய்விட்டந்தோ
எந்தாயெந் தாயென்று கதறுசெயல்
கண்டிலையோ! எங்குச் சென்றாய்?
நந்தாத மணிவிளக்கே! தமிழ்புரக்கும்
நாயகமே! நவிலு வாயே. (6)

எப்பொருளை மறந்திடினுந் தமிழ்ச்சங்கத்
தினைமறவா தீன்ற தாய்போல்
ஒப்பரிய வுடல்பொருளா வியமூன்று
மொருங்களித்த வுரவோ யுன்போற்
கைப்பொருளீந் தினிச்சங்கங் காப்பவரார்?
அரசே! இக் கடல்சூழ் வைப்பிற்
செப்பரிய தமிழ்த்தாயே; சீனிவா
சேந்திரநீ செப்பு வாயே. (7)

சலவருடம் பொழிமுகிலை நிகராசே
ரீயாண்ம சாந்தி யெய்தி
நிலவரையோ ரடையவொணாப் பரலோகத்
தெய்வீக நிலையுற் றென்றும்
புலவர்குழாம் மகிழ்பூப்பத் தமிழ்ச்சங்கம்
தழைத்தோங்கப் புவனத்துள்ள
நலவரெலாம் புகழ்ந்தேத்தும் நின்குடும்பம்
வாழ அருள் நல்கு வாயே. (8)

கரவருடங் கார்த்திகையி லிருபான்மூன்
றெனுந்திகதி கதிரோன் வாரம்
விரவுசுக் கிலபக்கம் திதிதுவா தசியிரலை
விண் ணுள் ளோர்தன்
வரவுகண்டு நனிமகிழ நித்தியசூ
ரியருவந்து வாழ்த்துக் கூறச்
சிரமணிநேர் சீனிவா சேந்த்ரமுகில்
பரமபதஞ் சேர்ந்த னானே. (9)

---

சென்னைப்பல்கலைக்கழகத்தின் முன்னைத்தமிழ்த்துறைத்தலைவரும் திருவாங்கூர்ப்பல்கலைக்கழகத்துத் தற்காலம் தமிழ்த்துறைத்தலைவருமான திருவாளர் S. வையாபுரிப்பிள்ளையவர்கள் B.A. B.L. இயற்றியவை.

### நேரிசைவெண்பா.

தமிழன்னையைப் போற்றுவதில் தான்வாழ் மதுரைத்
தமிழ்ச்சங்கம் போற்றுவதிற் சாலும்—அமிழ்தனைய
சொல்லால் வசீகரித்தே இன்பிற் றுவக்குவதில்
வல்லாரார் டி வியைப்போல் மற்று.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உடலிருக்க வுயிர்நீத்தா ரெனவுரைப்ப ருலகத்தா ரோங்கு சீலக்
கடலிருக்கும் டி வி இன்றக் கட்டுரையைப் பழுதாகக் கண்டானன்றே
அடலிருக்குந் தீந்தமிழா மாருயிரை யகலவிடத்துக் கணியாய் வைத்து
விடலிருக்கும் உடல்மறைய விண்ணுலகஞ் சென்றனனால் விதியால் அந்தோ!

முன்னைப் பாலபாடசாலைப் பரிசோதகர் திராவிடக்கவிமணி
திரு. வே. முத்துஸாமி ஐயரவர்கள் M.A. L.T. இயற்றியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தென்மதுரைப் பதியினினீள் செல்வஞ்செல் வாக்கேறிச் சிறந்து வீறப்
பன்னெடுநாள்வழக்குரைக்கும்பணிதலைநின் றுயர்மதிப்புப்படைத்தேயன்பர்
தன்னயந்தே ருஞ்சீனி வாசனெனப் பேர்திகழும் நம்பீ! நின்னைத்
துன்னரிய இளைகட்புக் குழாந்துயரக் கடலுறப்பார் துறந்த தென்னே? (1)

தோன்றியகாண் முதன்மதுரைத் தமிழ்ச்சங்கத் தாக்கநலம் துதையு மாறு
தோன்றல்பாண் டித்துரைக்குஞ் சேதுபதிக் கும்மற்றைத் துணையா ளர்க்கும்
ஊன்றுகோல் போலுதவி அதற்கேற்ற பல்பணிகள் ஓவா தாற்றி
ஆன்றபுகழ் பெருக்கினையின் றதைமறந்தெங் ககன்றனையோ அண்ணலந்தோ!

முன்புசங்க மாணக்கர் பண்டிதரா ஆங்காங்கு மொய்ம்பு மேவும்
பின்பவர்தம் சேமநிலை தெரிந்துணர்ந்திற் பெரிதுவக்கும் பெரும நின்றன்
இன்பமுகம் முன்னிற்க ஆவிபிரிந் ததுகெட்டேம் எம்போன் றிந்நாள்
அன்புழல்வோர் தமிழ்நாட்டி லெனையரோ? இவர்துயரத் துடைப்பார் யாரே?

தமிழ்தழைக்க வருகுருவாம் சாமிநா தையர்தரு சங்க நூல்கள்
அமிழ்தென்றாய் அவரெழுது சுயசரிதை முற்பகுதி யாரத் துய்த்தாய்
கமழ்புகழச் சரிதைப்பிற் பகுதிதாற் குரியருளைக் கலந்து கோடல்
அமைவுறுமென் றெண்ணினரவ் வெண்ணமிந்த வண்ணமவ மாயிற் றம்மா!

செந்தமிழின் சேவையொன்றோ சிறப்புச்செய் தாய்நீதான் செம்மால்! மிக்க
சந்தமுடன் சாராத சபையுண்டோ? நகரசபை சட்ட மன்றம்
முந்துபுகழ்ச் சென்னையண்ணா மலைச்சருவ கலைச்சங்க முதலாத தெய்வ
பந்தமுறுந் திருமலைச்சீர்ச் சபைதம்மிற் பரவிநலம் பாலித்தாயே. (5)

உன்குணங்க ளுரைக்கவெனில் உறுசெயலி னூக்கத்தை யுணர்த்து வோமோ
நின்குசையின் நுதிபோலும் மதிநுட்பம் நிகழ்த்துவமோ? திருவாகச்சீர்
பொங்கவரு பணிமுகத்துன் முகமலர்ச்சி புகலுவமோ? போற்றிப் பல்லோர்
நன்குரைக்கும் நாவளத்தை நவிலுவமோ? என்செய்வேம் நலிவு மிக்கேம் ()

மாசீனி வாசப்பேர் மதியாள துதியாள மகிழ்ந்து நின்னை
டவீ என் றேசுருங்கு பெயராலே மதுரையெங்குஞ் செல்வ மாகப்
பேசாத பேரிலையே! பேதுற்றின் றுன்பிரிவைப் பேச வைத்துக்
கூசாது சதிசெய்த கூற்றுவன்வன் கொடுமையெங்ஙன் கூறு மாறே. (7)

உன்பிரிவாற் றளர்ந்துமன முடைந்தழிவேம்; இம்மாய வுலகி லென்றும்
இன்பதுன்பம் தட்பவெப்பம் பிறப்பிறப்பிவ் வின்ன இணை யிணைந்தே யெய்தும்
தன்மைநிதா னித்துணர்வேம்; தக்கபுகழ் மிக்குவிண்ணீ சார்ந்தாய் ஐயா!
நின்னருளை யவணின்றும் எமக்கும்சங் கத்துக்கும் நிரப்பி வாழி. (8)

புதுக்கோட்டை அரசர்கல்லூரித் தலைமைத்தமிழாசிரியர்
பண்டிதர் திரு. நா. கனகராஜையரவர்கள் M.O.L. இயற்றியவை.

### நேரிசைவெண்பா.

தண்டமிழே! ஆலவாய்ச் சங்கமே நும்பணியால்
அண்டர்புகழ் சீனிவா சாரியனை—விண்டனிரே
பாரே பிரிந்து பரமபதம் சேரவிட்டீர்
யாரே புரப்பார் இனி. (1)

இனியார் தமிழுக் கிதயத்தை யீவார்
இனியார் தமிழ்ப்பொறையை யேற்பார்—இனியார்
வறியதமிழ் மாணவர்க்கு வாழ்வுதர வாழ்வார்
நறியதமிழ் நாவால் நவின்று. (2)

கம்பன் தமிழ்க்கவிதை காட்டும் நயத்தையெலாம்
இம்பர் உவப்ப இசைத்தநா—உம்பரார்
செந்தமிழை யோராச் செவிக்கிசைக்கப் போயதே
எந்தவகை நாயம் இது. (3)

இறவாப் புகழை யிசைசீனிவாசன்
பிறவாப் பிறவி பெறவே—உறவாக்
கருதும் கழலைக் கடுக அடைந்தான்
பெருகும் துயரே பிரிந்து. (4)

வாழ்ந்தநா ளெல்லாம் மறந்தா னிலைதமிழை
வாழ்ந்தநா டாகிய வைகுந்தம்—வீழ்ந்த
மனத்தொடு சென்றான் மலர்மகளார் நாதன்
இனத்தொடு சேர இனிது. (5)

எத்தனை கோதுகள் எத்தனை சக்கைகள்
எத்தனை பாழுடல்கள் ஈங்குள—அத்தனையும்
கண்டான் வெறுத்தான் கமழ்சீனி வாசனைக்
கொண்டான் விரைந்துவந்து கூற்று. (6)

வளஞ்சிறந்த மன்றுடி வாக்குநயங் காணேம்
களஞ்சிறந்த மெல்லுரையுங் காணேம்—உளஞ்சிறந்த
வள்ளன்மை காணேம் மலிசீனி வாசனெனும்
வள்ளலை விட்ட மகி. (7)

நரக சதுர்த்தசியில் நற்கங்கை யாடிப்
பரவி யரியைப் பணிந்து—விரைவில்
உடுத்த எமக்கன் றுவப்பினால் தூசு
கொடுத்தனை யெஞ்சுமோ கூறு. (8)

சங்கத் தமிழமுதந் தந்து பலசிறுவர்
பங்கப் படாநிலையிற் பாலித்த—துங்கப்
புகழ்ச்சீனி வாசன் புகுந்த வுலகம்
மிகச்சீர் விளங்கும் மிளிர்ந்து. (9)

சொல்லாண்ட மாணவரைத் தூய்மை நினைப்பானே
பல்லாண்டு சென்றுமன்பாற் பார்த்துவக்கும்—நல்லானை
வைகுந்த நாட்டார் வரவேற்றார் யாமவரை
வைகின்றோம் நெஞ்சம் மருண்டு. (10)

சிறிது தமிழைத் தெரிந்தார் தமக்கும்
வறிய நிலைமை வாராமே—குறிய
முனியருளை வேண்டி முழுநலமும் செய்வார்
இனிவருத லுண்டோ இவண். (11)

பாண்டித் துரையினைப் பாற்கர வள்ளலை
ஈண்டிப் புலவர்புகழ் இன்றோனை—வேண்டிப்
பரமபதமே யழைத்தாற் பாரோரென் செய்வார்
சரமகவி பாடல் தவிர்ந்து. (12)

உள்ளம் உருக உரிமை விளங்கிடநற்
கள்ளம் இலாத கருணையுறப்—பள்ளம்
புகும்புனலே போலப் புலவர்க் களித்தான்
மிகும்புகழே பூண்டாளும் விண். (13)

புல்லணை மேய பொருளை நினைக்குமனம்
நல்லதமி ழாராயும் நாவிவற்றை—மெல்ல
அரிதூதர் கொண்டார் அவரையே கேட்பாம்
இருசீரும் வேண்டும் என. (14)

ஆண்டு கரவே அமைந்தமதி கார்த்திகையே
ஈண்டு வெளிப்பக்கத் திராறே—பூண்டுள்ள
ஞாயிறே நங்கள் நலச்சீனி வாசனுக்கு
வாயிலா வைகுந்த வாழ்வு. (15)

---

மதுரை செயின்ட்ஜோசப் மகளிர்பள்ளித் தலைமைத்தமிழாசிரியர்
வித்துவான் திரு. S. ஆழ்வாரையங்காரவர்கள் இயற்றியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமிசையே சிறந்ததிருப் புல்லாணி
மாநகரம் பொலியத் தோன்றி
நாமிசைநல் லாங்கிலமும் நற்றமிழும்
ஆரியமும் நடனஞ் செய்யப்
பாமிசைநற் பொருளுணர்ந்து பார்வியக்க
எடுத்துரைக்கும் பான்மை பெற்றே
ஆமிசையா லுயர்சீனி வாசஎவ
னூற்றாய்நீ அறைந்திடாயே. (1)

மன்பாண்டித் துரைமுன்னம் வைத்ததமிழ்ச்
சங்கத்தை வளர்த்து நாளும்
அன்பாண்ட பெருமானே! அவைதொறுஞ்சென்
றாய்ந்துபல அரும்பொருள்கள்
இன்பாண்ட வுடலுள்ள முருகச்சொல்
வன்மையெம்மால் இயம்பற் பாற்றோ
துன்பாண்ட வுளத்தேமுக் கொருவார்த்தை
சொலித்தேற்றித் துயர்தீ ராயோ. (2)

மன்னுகோ நகராண்டு விழாவுக்கு
மகிழ்ந்தழைத்த பொழுதெல் லாம்நீ
துன்னியவண் உள்ளார்பால் எனைக்காட்டி
யிவரெம்மைச் சார்ந்தா ரென்று

நன்னரெடுத் துரையன்பும் நின்னில்ல
மொருநாள்யான் நாடும் போது
என்னைப்போற் பாலியன்றீ னரையுற்று
யென்னே யென்றியம்புஞ் சொல்லும் (3)

நினைக்குந்தோ றும்மனதை யுருக்குகின்ற
நீர்மையினை நிகழ்த்து வேனோ
அனைக்குமே லாதரவு வைத்துமா
னவர்ப்புரப்ப தறைகு வேனோ
எனைப் பகுதியாரும்பே ரன்புகொள
நடக்குஞ்சீ ரியம்பு வேனோ
தனைப்போலப் பிறரை யெண்ணுந்
தனித்தகைமை பாராட்டிச் சாற்றுவேனோ (4)

சுதனோடு சுற்றமெல்லாந் துயர்கூர்ந்து
நனியாற்றச் சோர்வுற் றன்பர்
எதனாலும் துயர்தீரா திருந்தேங்கப்
புலவர்குழாம் எண்ணி யெண்ணிக்
கதறிடநற் றமிழ்ச்சங்கம் காப்பாரை
யில்லாது கவலை கீநற்
பதமான வைகுந்தஞ் சார்ந்திடுதல்
நன்றாமோ? பகரு வாயே. (5)

---

மதுரைக்காலேஜ்ஹைஸ்கூல் தலைமைத்தமிழாசிரியரும் வேம்பத்தூர்ச்
சிலேடைப்புலி பிச்சுவையாவர்கள்குமாரருமான
திரு. பி. பாஸ்கரையரவர்கள் இயற்றியவை.

நேரிசைவெண்பா.

பாண்டித் துரைபடைத்த பைந்தமிழ்ச்சங் கங்காக்க
வேண்டியிற்றை நாள்வரையும் மேவினையோ—காண்டிபன்போற்
செய்துருசி கண்டகல்விச் சீனிவா சாமறைந்தாய்
வெய்துதமிழ் கொண்டதினி மேல் (1)

ஆங்கிலமுஞ் செந்தமிழும் ஆரியமும் யாவையுமே
ஓங்கிப் பிரபலத்தை யுற்றிடவே—ஈங்கிருந்து
கற்பவர்க்கே வேண்டுவன கண்டுணவுந் தீந்துவந்தாய்
அற்பிலர்போற் சென்றனையென் னும். (2)

வேற்கரனும் பிஞ்ஞகனும் மெய்யடிமை கொண்டதமிழ்ப்
பாற்கரனும் பாண்டித் துரையரசும்—மேற்கொண்ட
சங்கத்து மாணவர் தம்வாழ்வு நின்வாழ்வாய்ச்
சங்கவங்கத் துற்றாய்தா தா. (3)

பாடஞ் சொலச்செய்தும் பல்புத்தகங் கொடுத்தன்
றூடமுணவுக்கும் ஆடைக்கும்—சேடமாய்ப்
பாண்டித் துரைபோலப் பாலித்து நீசென்றாய்
வேண்டித் தருபவரார் மேல். (4)

சாமிநாதையர் தமிழ்ச்சுவடி காத்ததைநேர்
சாமியவாள் வைத்த தமிழ்ச்சங்கம்—பூமிதனில்
பேரோங்க வேண்டுமென்றே பேணிவந்த நீமறைந்தால்
ஆரோங்கச் செய்வார் அதை. (5)

கம்பன் கவிதை களின்நயத்தை ஆங்கிலத்தார்
நம்பும் படிசெய்த நாவலவ—இம்பர்த்
தமிழர்களும் சட்டத் தலைவர்களும் துக்கத்
தமிழும் படிபிரிந்தா யால். (6)

வீட்டினிலும் மற்றை வெளியிடத்தும் கோர்ட்டினிலும்
பாட்டிலினிக் குங்கம்பன் பாவாய்ந்து—நாட்டனைப்போற்
சட்டமேற் கோள்சாற்றுஞ் சான்றோய் எமையின்னே
கட்டமுற வைத்ததென்னே காண். (7)

கம்பன் கவிப்பிரசங் கஞ்செய்த ராகவனு
சம்பன்ன னும்பாண்டிச் சாமியா—நம்முகவைச்
சேதுபதி பாற்கரனு செந்தமிழ்த்தாய் நாரணனு
சாதுவத்தி லாரழைத்தார் சாற்று. (8)

சேதுமனும் மைந்தர்களும் சேர்ந்ததுறை யாளர்களும்
வாதுதர வந்தவரும் மற்றவரும்—காதுமணம்
மிக்க மகிழ்ச்சியுற்று மேவவே பேசிவிட்டுப்
புக்கதென்னே விண்ணதினிற் போய். (9)

காகார்த் திகையிற் கருதிருபான் மூன்றில்
திரமான விண்டுபதஞ் சேர்ந்தான்—தரமாகும்
புல்லாணி வாசம் புகல்சீனி வாசனெனும்
நல்லான் புவிவிட்டு நன்கு. (10)

---

யாழ்ப்பாணத் தமிழ்ப்புலவர் திரு. வ. மு. இரத்தினேசுவரையரவர்கள்
இயவை.

கட்டளைக்கலித்துறை.

கரவாத ஈகை கருத்தூன்று பேரன்பு காண்டலின்றிக்
கரவாண்டு மேவ மறைந்தனை சீனிக் காவலனே
அரவான பஞ்சணை மால்பத தாமரை யார்ந்தனையோ
விரவாரும் போற்றும் விறற்சீனி வாசநல் வித்தகனே!

பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கற்றாய்த் தடங்கிச் செந்தமிழும் கருதற் கரிதாம் ஆரியமும்
கவினே பூப்பத் தொண்டாற்றுங் கருணை வள்ளால் கற்பகமே
முற்றாய்த் துயர்ந்த சட்டநெறி முறைமை தேரும் முதற்குருவே
முதுமை யுறினுந் தளராத முயற்சி யொன்றுங் குன்றாதாய்
சுற்றாய்த் துரையாய் நண்பர்குழாம் தளரத் தக்கோர் உறவினர்கள்
சால வருந்த விடுத்தொருநீ பிரிதல் தகுமோ சான்றோனே
பற்றாய்த் துயர்ந்த பொருளான பரமன் பாத பங்கயத்துப்
பற்றே பற்றற் குரியதென்று பரம பதமே பற்றினையோ. (2)

நேரிசைவெண்பா.

புத்திரரும் மித்திரரும் போற்றுதமிழ் வாணர்களும்
மெத்துதுயர் மேவி மெலிந்தனரே—அத்தமன
உத்தம னேசீனி வாசவுன தொண்மொழியை
எத்திறத்தாற் கேட்போம் இனி. (3)

---

இராமநாதபுரம் திரு. K. சிவஞானம்பிள்ளையவர்கள் இயற்றியவை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீராருஞ் செந்தமிழும் ஆங்கிலமும்
ஆரியமும் சிறக்கக் கற்றுப்
பாராரும் புகழ்ச்சீனி வாசப்பேர்
வழக்கறிஞ! பாரை நீத்து
நீராரும் மேகவண்ண நிமலனடி
நீசேர்ந்தாய் என்னக் கேட்டு
நாராசந் தனைக்காய்ச்சி நடுச்செவியில்
நுழைத்தாற்போல் நடுக்குற் றேனே. (1)

தண்ணளியாய் தமிழ்ச்சங்கத் துணைத்தலைவ
னெனும்பெருமை சாலக் கொண்டாய்
மண்ணுலகிற் சேதுசமத் தானவழக்
கறிஞனெனும் மாண்பு பெற்றாய்
எண்ணுதொறு மெண்ணுதொறு மெனனிலுமே
எனக்கினிய எந்தாய் நீதான்
திண்ணியநற் றிருநாட்டை அலங்கரித்தாய்
என்றவுடன் திகைத்திட் டேனே. (2)

மன்னவர்தங் குலத்துதித்த வண்பாண்டித்
துரைமகிபன் மகிழ்ந்தே யுன்னைத
தன்னுடைய பிள்ளையினும் சதமடங்காப்
பாவித்தான் தக்கோய் நீயும்
அன்னவன்றன் சொற்படியே நடந்ததையா'
ரறியாதார் அவன்தான் சென்ற
பொன்னுலகஞ் சென்றனையோ சீனிவாசா
எமக்குப் புகலு வாயே. (3)

மறையை நிகர்த்த வாய்மையுள்ளாய்
வழக்கை யறியும் வலிமையுள்ளாய்
குறையப் படித்த என்னையுமீ
கூடப் படித்தாய் எனப்புகல்வாய்
நிறையப் படிந்த கீர்த்தியுள்ளாய்
நின்பா லடைந்த என்றனது
குறையைத் தவிர்த்தாள் குணசீல
எங்குற் றாய்நீ கூறுவையே. (4)

மன்பாண்டித் துரைமகிபன் தமிழ்ச்சங்கம்
நிறுவியநாள் மாண்பார் நின்னைத்
தன்பாலே யழைத்துவைத்துத் தமிழறிவும
நுண்ணுணர்வும் தழைத்தே யுள்ள
நின்பாலே ஒப்புவித்தேன் சங்கத்தை
நிருவாகம் நீயே மேற்கொண்
டன்பாகச் செய்திடென அப்படியே
செய்துவந்தாய் அறிஞர் கோனே. (5)

உக்கிரபாண் டியனும்பர் சென்றபின்னர்
உண்மையுடன் உரவோய் நீதான்
தக்கபடி ஆட்சிசெய்து தமிழ்ச்சங்கம்
வளர்த்திட்டாய் தரணி தன்னில்
மிக்கவர்கள் புகழ்ந்தேத்தும் சீனிவா
சப்பெயர்கொள் விபுத எம்மைத்
துக்கமுற்றுப் புலம்பவிட்டே எங்குற்றாய்
நீஎமக்குச் சொல்லு வாயே. (6)

கண்ணழகுக் கிரங்குவனோ கருத்தழகுக்
குருகுவனே கற்றோர் மெச்சும்
அண்ணலுன்றன் சொற்பொழிவி னெழினினைந்திங்
கழுவேனோ அவனி தன்னில்
பெண்ணரசா மடவாரும் மடலூர
விழையழகா பெருமை வாய்ந்த
திண்ணிய TCஸ்ரீநி வாஸனெனுந்
திருப்பெயரோய் செப்பு வாயே. (7)

வருந்தியுனைப் பெற்றெடுத்த மாதாவைப்
பார்ப்பதற்கோ வண்மை வாய்ந்த
அருந்ததியை நிகரான உன்மனைவி
தனைப்பார்க்க ஆசை யுற்றோ
குருந்தொசித்தான் திருவடியைக் கூடுதற்கு
விருப்புற்றோ சூரிசில் நீதான்
இருந்தரைவாழ் வினைத்துறந்தவ் விமையவர்நா
டடைந்தனையீ தியம்பு வாயே. (8)

பார்க்கரனைப் பார்ப்பதற்கோ தமிழ்ச்சங்கம்
நடத்தினநற் பான்மை தன்னை
வேற்கரனை யொத்ததிரு ராஜரா
ஜேச்சுரற்கு விளம்பத் தானோ
ஏற்பவர்கட் கில்லையெனாப் புகழ்ப்பாண்டித்
துரையின்பால் எய்தற் கேயோ
மாற்குநிகர் ஸ்ரீநிவா சப்பெயரோய்
விண்ணுற்றாய் வழுத்து வாயே. (9)

சங்கநூல் களைப்பதித்துத் தமிழ்வளர்த்த
சீர்த்தியுள்ள சாமி நாதப்
புங்கவனைப் பார்ப்பதற்குப் போயினையோ
தமிழ்மொழியைப் புவியோர்க் கெல்லாம்
இங்கிதமாக் கற்பித்துத் தமிழ்மொழியின்
பெருமைதனை இலங்கச் செய்து
சங்கமதை விளக்குதிரு நாரணனைப்
பார்ப்பதற்குச் சார்ந்தாய் கொல்லோ! (10)

கம்பர்கவி நயம்கருது ஸ்ரீநிவா
சப்பெயரோய் கரவிலாமல்
இம்பரிலே தமிழ்ச்சங்கம் இனிநடத்தப்
பொருளுதவி எவருஞ் செய்யார்
உம்பரிலே பொன்னகரா ருதவுவரென்
றெண்ணியந்த உறுதி கொண்டே
இம்பரைவிட் டகன்றனையோ சீனிவாசா
எமக்கே இயம்பு வாயே. (11)

எத்திசையும் புகழ்ந்திடுஞ்சீர்ச் சீனிவாசப்
பெயர்கொள் ஏந்தால் நீதான்
அத்திதனக் கருளியசீ ரண்ணலடி
யடைந்தாலும் ஐய நின்றன்
புத்திரன்சுந் தரவரதன் புத்திரப்பே
றெய்தஅவன் புதல்வி பொற்பார்
உத்தமனா யகற்பெறநற் றமிழ்ச்சங்கம்
ஓங்கஅரு ளுதவு வாயே. (12)

# IV. துணைத்தலைவர்மீது இயற்றப்பட்ட பிற பாடல்கள்

## (1) சித்திரகவிகள்

### க. சதுரங்கபந்தக் கலித்துறை.

இயற்றியவர்:—மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் அங்கத்தினரும் சித்ரகவி வல்லுநருமாகிய சே. மு. முத்தையாரோட்ரீகோ அவர்கள்

பூமேவு தாரணி மார்பன் புவிமிக வேபுகழ்நற்
ஸ்ரீமானவ் வாணிச் செழுஞ்சீர்த்தி வாரஞ்செறிபுலவர்
தாமே துதிமா கவுரவ காரிய சங்கமுறு
மாமேவு பூசித ஸ்ரீனிவா சையங்கார் வாழ்கவே.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பூ | சி | த | ஸ்ரீ | னி | வா | சை | ய |
| வு | மே | மா | று | மு | க | ங் | ச |
| மா | க | வு | ர | வ | கா | ரி | ய |
| தி | து | மே | தா | ர் | வ | ல | பு |
| ர் | த் | தி | வா | ர | ஞ் | செ | றி |
| ஸ்ரீ | ஞ் | ழு | செ | ச் | ணி | வா | வ் |
| பு | க | ழ் | ந | ற் | ஸ்ரீ | மா | ன |
| வே | க | மி | வி | பு | ன் | ப | ர் |

குறிப்பு:— எழுபத்தெட்டெழுத்துக்களையுடைய மேற்குறித்த கலித்துறைப்பாடலை மேலேயுள்ள சதுரங்கஅறைகளுள் முதல்வரிசையின் முதலறைதொடங்கி எட்டாவதுவரிசையின் எட்டாம் அறைவரை மூலைக்கு மூலையாகவரைந்துசென்று பின் எட்டாவதுவரிசையின் முதலறைவரை இடப்பக்கமாகவும் அதன்மேல் ஒவ்வொருவரிசையறையிலும் முறையே வலப்பக்கமாகவும் இடப்பக்கமாகவும் முதல்வரிசையின் எட்டாம்அறை வரை வரைந்துசென்று பின் அவ்வறையிலிருந்து எட்டாம்வரிசையின் முதலறைவரை மூலைக்குமூலையாக வரைந்து முற்றுவிக்க, அச்செய்யுள் மூலைக்கு மூலையாகவுள்ள சந்தியக்கரங்கள் ஒன்றிவந்தமையால் அறுபத்து நான்கு அறைகளில் முற்றுநின்றமை காண்க.

## உ. உபயநாகபந்தக் கலிவிருத்தம்

இயற்றியவர்:—சே. மூ. முத்தையாரோட்ரீகோ அவர்கள்

தேன தாக நவிலுவ ஞரிய
தான வான்வித்வ சாகர சீரிய
மான பூமானன் மாசங்க காரிய
சீனி வாசவ சீகான் வாழியே.



குறிப்பு:— 49 எழுத்துள்ள முற்குறித்தபாடலையே, மேற்பொறிக்கப்பட்டுள்ளவாறு இரண்டு பாம்புகளின் உடலுறுப்புக்களுள் தலைமுதல் வால்முனைவரை வரைந்து பாம்பு ஒன்றுடனொன்று பிணைந்துநிற்கும் உறுப்புக்களுள் சந்தியக்ஷரங்கள் ஒன்றுபட்டு நின்றமையால் சுருங்கிய எழுத்துக்களில் முற்றிநின்றவாறுகாண்க.

## ௩. அட்டநாகபந்த நேரிசைவெண்பா

இயற்றியவர்:—இராமநாதபுரம் P. சிவஸ்வாமிசேர்வையவர்கள்

பிரம குலகலனே பீடார் நடாதூர்
மார ரசமிகு மாண்யோக மானிகா
வரநல னேசினி வாச—திரகுண
தீரநீ வாழி இனே.



குறிப்பு:—49 எழுத்துள்ள மேற்குறித்தபாடல் மேலுள்ள சித்திரத்துள் 8 பாம்புகளின் உடலிலும் சந்தியக்ஷரங்கள் ஒன்றுபட்டுநின்றமையால் சுருங்கிய எழுத்துக்களில் முற்றிநின்றவாறு காண்க.

## ௪. கமலபந்த நேரிசைவெண்பா

இயற்றியவர்:—காரைக்கால் D. சுந்தரதாசு அவர்கள்

சீலகுல பாலபல கோலகல ஞாலநில
சீலமிகு மாமதுரைச் செல்வனும்—சீலநலம்
மன்னியமா அட்வகேட் மாண்பனுஞ் சீனிவா
சன்னினிது வாழ்கமகிழ்ந் தாம்.



குறிப்பு:— 67 எழுத்துக்களால்முற்றிய மேல்வெண்பா சந்தியக்ஷரங்கள் ஒன்று பட்டமையால் 57 எழுத்தில் முற்றிநின்றவாறு மேற்சித்திரத்தால் விளங்கும்.

## ரு. கமலபந்தம்.

இராமநாதபுரம் P. சிவஸ்வாமிசேர்வையவர்கள் இயற்றியது.

நேரிசைவெண்பா.

தேகசுக மாகஇக போகமக யோகமிக
தேகமல மின்சேர் திருமாலா—லீகைமிகுங்
கண்ணியமா ருஞ்சீனி வாசகல்வி மாண்வாழ்க
நண்ணுமனை மக்களொடும் நன்கு.

இதனையும் முன்காட்டியதுபோல் பதுமம்வரைந்து அதனுள் பாடலைப் பொறித்தறிந்துகொள்க.

---

## சா. கமலபந்தம்.

மார்க்கயன்கோட்டை மா. வே. ஞானமுத்துக்கவிராயர் இயற்றியது.

நேரிசைவெண்பா.

சிலகுல பாலபல கோலநில ஞாலநல
சிலமலி தன்மதுரை சீர்த்திமான்—சாலநல
மன்சீனி வாசரவர் மங்காப் பொருட்பேறுற்
றின்னிசையாய் வாழ்க இனிது.

இதுவும் மேற்பாடல் போன்றதே.

---

## எ. கமலபந்தம்.

நேரிசைவெண்பா.

வேதநித மோதமுத மேதகத யாதனத
வேதியர்கு லாதிபவித் யாதரனும்—சாதுரிய
மாவல T. C. ஸ்ரீநி வாஸையங் கார்மகத்வ
பாவலர்க்கு நேத்திரமெண் பாம்.

இதுவும் மேற்பாட்டுப்போன்றதே. இதனை இயற்றியவர்பெயர் முதலிய ஒன்றும் தெரியவில்லை.

---

## ௮. கமலபந்தம்.

போடிநாயக்கனூர் சே. சென்னியப்பக்கவிராயர் இயற்றியது.

நேரிசைவெண்பா.

*மீகனக யோகமிக மேகநிக ராகவக*
*மீகதமிழ்ச் சங்கத்தை மேன்மைசெய்—யோககுணை*
*மன்சீனி வாசையங்கார் மாமனைச் செல்வாழ்வைப்*
*பொன்ராமா நீதான் புரி.*

இதுவும் மேற்பாட்டுப் போன்றதே.

---

## (2) பலவகைப்பாடல்கள்.

*ஐயங்காரவர்கள் இராமநாதபுரம்ஜில்லா வித்தியாபரிபாலனத் தலைமை பெற்றதை உணர்ந்து மகிழ்ந்து மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலை உபாத்தியாயர் கு. நல்லசிவன்பிள்ளையவர்கள் பாடிய*

கலிவெண்பா.

*நீரார் கடலுடுத்த நீணிலமெல லாம்புரக்கும்*
*ஓரா யிரம்பே ரொருமுதல்வன்—சீராருஞ்*
*செம்பொற் பதத்தைத் தினந்தினமுங் கைகூப்பி*
*யிம்பர்ப் புகழ்நிறைந்த வேந்தலே—பைம்பொனுயர்*
*மன்னர் விழையு மதிகலத்தாய் மாண்புறுசீர்த்*
*தென்னர் தமிழ்வளர்க்குஞ் சீரியோய்—பன்னரிய*
*வண்மை திகழ்சீநி வாஸ வரோதயனே*
*ஒண்மை திகழ் முராவோனே—தண்மையுடன்*
*மாமதுரைச் சங்கம் வளர்ந்தோங்க நந்தமிழை*
*நீமதித்துக் காக்கும் நிலைகண்டே—சாமிநினை*
*நல்லோர் புகழ்ராம நாத புரமெனும்பேர்ச்*
*ஜில்லாவின் வித்வத் செழுங்கழகம்—வல்ல*
*தலைவனெனக் கொண்டதிது சாற்றவறிந் திந்த*
*வுலகமே வுள்ளுவக்கு மென்னிற்—பலபகலும்*
*நின்னிழலைச் சார்ந்தனது நேயவருள் பெற்றுறையு*
*மென்னிலைமை கூறற் கெளிதன்றே—முன்னர்*

"இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விட"லென்—றிதமுறவே
வள்ளுவர்நூல் சொற்ற வகையேயம் மாட்சியுறு
தெள்ளறிஞ நின்னைத் தெரிந்தெடுத்த—ஒள்ளியசீர்
மேலோ ரியற்கைநன்றே மேதினியில் மேதகுபன்
னூலோர்ந் தெழிலுறுநன் னுண்ணறிஞ—மேலான
நன்னிதியும் வாழ்நாளும் நாடோறு மிக்கோங்கி
யிந்நிலத்தில் வாழ்க வினிது.

இங்ஙனம்,

சு. நல்லசிவன்பிள்ளை,

**26—11—22.**

ஐயங்காரவர்கள் இராமநாதபுரம்ஜில்லாபோர்டுறுப்பினராகத்
தேர்ந்தெடுக்கப்பட்டது தெரிந்து மதுரைத்தமிழ்ச்சங்கக்
கலாசாலையாசிரியர்

திரு. சு. நல்லசிவன்பிள்ளையவர்கள்

மகிழ்ந்துபாடிய பாடல்.

சீர்சால் ராமநாதபுரம் ஜில்லாபோர்டின் உறுப்பினராய்த்
திகழுமவரில் ஒருவனெனுஞ் சிறந்தபதவி தனையேற்ற
பேர்சால் சீநி வாசப்பேர்ப் பெரியோய் வாழி மதுரைநகர்ப்
பிறங்கு தமிழின் சங்கமதைப் பேணும் உயிர்போற் பெரிதுவந்து
நீர்சால் உலகம் புகழ்ந்தேத்த நிலவும் படிகாத் தருள்நிதியே
நின்சீர் வாழி குலம்வாழி நின்னுள் வாழி நீவாழி
ஆர்சாலுவர்நின் அருட்குநிகர் அரசே புலவோர்க் காரமுதே
அந்தீந்தமிழ்ப்பைம் பயிர்வாடா தருள்நீர் பொழியும் அம்புதமே.

இங்ஙனம்,

சு. நல்லசிவன்பிள்ளை.

சென்னைச்சட்டசபையுறுப்பினராகப் போட்டியின்றி இவர் தேர்ந்தெடுக்கப்பட்டதுதெரிந்து ஸ்ரீவில்லிபுத்தூர் சி. அ. பெ. பாப்பைய நாயுடு இயற்றியனுப்பியது.

---

சிந்தை தளர்ந்து தியங்கி மதிமயங்கி
நொந்துகவல் போதோர் நொடியினிலே—வந்தருளும்
கஞ்சம் பழிக்குமுயர் கையபயங் காட்டிநமை
அஞ்சலெனும் ஆண்டாள் அருள்.

ஆளும் பணியும் அடியேனைக் கொண்டினிதே
வாழும் உயர்திருவார் வள்ளலே—நாளும்
தொழுது வருமன்பால பாப்பையாத் தொண்டன்
எழுதுகிரு பங்காண் இது.

நல்லார் நாவின் நடம்பயில் செல்வப்
புல்லா ணிப்பதிப் புண்ணிய மூர்த்தி!
இல்லார் உறவே! எளியார் வலியே!
சொல்லார் கூடற் சுந்தரர் அருளும்
பங்கய மடவார் பரிவும் தழுவிப்
பொங்கிடும் கன்னிப் புனிதச் செந்தமிழ்ச்
சங்கம் என்றும் சங்க டங்களால்
பங்க முறுவகை பாலனஞ் செய்த
காரிய தரிசிநின் கண்ணியம் என்னே!
சீரியர் வியக்கும் செஞ்சொற் செல்வ!
உன்னருள் வலத்தால் உயர்வடைந் தோரைப்
பன்னி யுரைக்கிற் பாரதம் சிறிதாம்.
உண்டியும் உறையுளும் உடையும்நீ உதவப்
பண்டிதர் ஆனோர் பற்பலர், மேலும்,
தாயினும் தமரினும் தமிழுரைத் தாங்க
மேயதம் ஆர்வம் மேலிட் டெழுந்த
காவலர் உள்ளக் கருத்துக் கிணங்கி
நாவலர் நால்வரின் நல்லிசை நாட்டினை;
ஆசகல் சங்க ஆசிரியர்க் கோர்
தேசவிர் கடகம திகழ்தாப் பூட்டினை;
அடுத்தவர் எவர்க்கும் அருந்துணை நல்கினை;

## செந்தமிழ்

எடுத்தநற் கருமம் எவற்றினும் வெற்றி
தொடுத்துனை உயர்த்தவும் துதிபல சேரவும்
படுத்த நல்வினைப் பாக்கியம் படைத்தனை;
சனாதன தருமம் சாய்ந்திடச் சகியாது
எனாதுயி ரிறையும் பொருதெனவே சென்று
ஊக்கந் தூண்ட உழைத்தனை; அறத்தைத்
தாக்குநர் வாய்க்குறு தனையிட லாயினை;
நியாய வாதம் நிகழ்த்திடும் முறையில்
தயாவோடு வறிஞர் தன்மைக் கிரங்கிப்
பெற்றும் பெறாதும் பேசுவை; வெற்றி
பெற்றிடல் அரிதோ? பீடுறும் பெரும!
பொங்கிடு மதத்தோர் பூசல் போற்றலை;
இங்கித உரையினை; இன்னருள் நோக்கினை,
நன்றியை மறவா நற்றவ ஒழுக்கினை;
துன்றிய கிளைஞர் தாங்குதிண் டோளினை;
சில்லா போர்டும் சங்கமும் சீர்மை
வல்லாய் உன்னை வரவர உயர்த்திச்
சட்ட நிரூபண சபைக்குட் புகுத்தின;
இட்ட சித்தி எய்தும் எய்தும்;
போட்டி யின்றிப் போற்றிய பொருளோ
நாட்டின் தொகுதி நயந்தருள் தகுதி,
பற்றறு போதும் பழமை பாராட்டி
உற்றுழி உதவுவர் குடிப்பிறப் பாளரென்று
ஓதினன் ஒண்மதி யுயர்தமிழ்ப் புலவன்;
ஆதலின் அன்பர்க் கனவர தமும்நீ
கண்ணும் கருத்தும் களிப்புறு களைகணாய்
விண்ணுறு கதிர்போல் விளங்குக வென்றே
வாணுதற் கோதை வளந்தரு
மாணடி நாளும் போற்றுவல் மகிழ்ந்தே.

இங்ஙனம்,
தங்கள் அன்புள்ள,
சி. அ. பெ. பாப்பைய நாயுடு.

27—2—37. ஸ்ரீவில்லிபுத்தூர்.

**கணபதியென்பவர் தம்வழக்கை வெற்றிபெற நடத்திமுடித்துத் தம்வறுமைநீங்கிவாழவுதவுமாறுவேண்டி யெழுதியனுப்பிய கவிகள்.**

வாய்மொழி வக்காலத்துத் தந்துமுன் பீசு வாங்குஞ்
சேய்மொழி யுனது காதிற் சென்றதோ விலையோ வல்லால்
நாய்மொழிக் கக்ஷிக்காரன் கேசென நம்பி னாயோ
ஆய்மொழிச் சீனி வாச சொல்லெனு வுள்ள வாறே. (1)

மெலியவர் வக்காலத்துத் தந்தபின் மேன்மை யான
வலியவர் வக்காலத்து வாங்கவே வாங்க மாட்டாய்
ஒலிகட லுலகி னீயே யுத்தம வக்கீல் போதிற்
பொலிதிரு கணவா சீனி வாசனே புலவ ரேறே. (2)

மிடியெனுங் கொடிய வாற்றை மேதினி மேனின் செய்ய
வடியெனும் புணையைப் பற்றி யக்கரை தாண்டப் பெற்றாங்
படிமிசை யானே சீனி வாசனே பகரக் கேண்முன்
னெடியவ னருளைப் பெற்றோன் நேரிழை பாகர் தொண்டன். (3)

காவியங் கண்ணாள் சோற்றுக் காகமுன் கஷ்டப் பட்டால்
பூவியல் பன்னாட் கோதிற் புத்தியி லேறு மோசொல்
ஆவியைப் போக்கிக் கொள்ள அடியவன் எண்ணங் கொண்டேன்
நீவிரைந் தாள்வாய் சீனி வாசனே நெடிய மாலே. (4)

பங்கயப் பிரமா வென்னைப் பண்ணிய கோலந் தாலே
மங்கையர்க் கெளிய னாகி மானமும் போகப் பெற்றேன்
இங்கய லார்க ளென்னை யேசவுங் கண்டேன் முன்னம்
வெங்கயங் காத்த சீனி வாசனே விந்தை யென்னே. (5)

மந்தரம் மத்தா நாட்டி வாசுகி நாணாப் பூட்டிச்
சிந்துவைக் கடைந்து முன்னாள் தேவருக் கமிர்தந் தந்த
சுந்தரச் சீனி வாசச் சுகுணனே வறுமை தீர்க்கும்
மந்திர மொன்றுண் டேலிம் மானிக்குச் சொல்லொ ணாதோ. (6)

கைவிட மாட்டா யென்று கால்விடா துன்னைப் பற்றிச்
செய்வன செய்தே னிந்தச் சிறியவன் பிழையை நோக்கில்
உய்வகை யுண்டோ மற்றோ ருதவியு முண்டோ பொன்னின்
ஐயனே சீனிவாச அப்பனே யருள்செய் வாயே. (7)

12—8—25. K. கணபதி.

## மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள்

தமக்களித்த வாக்குறுதி விரைவிற் பலனளிக்கும்படி உதவவேண்டி எழுதியனுப்பிய செய்யுள்.

மருவாக்கும் பசுந்துளவ மாலையணி மாலையே மனத்துள் வைத்துக்
குருவாக்கும் பிடுஞ்சீநி வாசவள்ளா லெனக்கன்பு கூர்ந்து நீசொல்
திருவாக்குப்பலிக்கும்வண மதிவிரைவிற்செய்தருள்வாய்தென்கால்வெற்பி
லொருவாக்கும் பனுக்கம்ப னும்புகழுந் தமிழரசா யுற்ற தேவே.

தேவேயென்றது-பூசுரப்பேர்பற்றியென்க.

தங்களன்பும் அருளும் மறவாத,
மு. ரா. அருணாசலக்கவிராயன்,

பிரமோதூத௵ ஆனிரவி 32உ. திருப்பரங்குன்றம்.

---

இராமநாதபுரம் ராஜாஸ்ஹைஸ்கூல் தமிழாசிரியராயிருந்த V. திருஞானசம்பந்தக்கவிராயர் தம்முடைய மாதுலர் பலாவடியான்சேர்வைக்குற்ற இடரைத் தீர்த்துதவும்வண்ணம் வேண்டியெழுதியபாடல்கள்

தண்டமிழ்க்குத் திருத்தாயாய்ச் சார்ந்திடுபாண்
டித்துரையார் தமது நோக்கம்
மண்டலதிற் பலித்துவர மாமுகில்போல்
வளங்கொடுக்கும் வள்ளால் இன்பக்
கண்டனைய மொழியமைந்த கற்பகமே
சட்டசபை கவின வாழ்வோய்
எண்டிசையுங் கொண்டாடும் புகழ்ச்சீனி
வாசனெனும் இறைவ கோண்மோ. (1)

சேதுபதி நாட்டகத்திற் சிறந்தகல்வி
படைத்தனுற் றிருந்தந் நாட்டில்
நீதனுகா தாதரிக்க ராஜரா
ஜேச்சுரனுந் தேர்ந்தான் நின்னை
ஆதலினு லெமதிடுக்கண் உன்னையன்றித்
தீர்க்கவல்லா ரகிலத் தில்லை
மாதுலனும் பலாவடியான் சேர்வையிடர்
தீர்த்தினிது வாழ்விப் பாயே. (2)

என்னுரிய கல்விதனைக் கதிபதிநீ
யாதலினு லிதனைச் சாற்ற
முன்னனுற்ற சிரமமதைப் பொருட்படுத்தா
தாண்டவநீ முழுதுங் காப்பாய்
என்னிருகண் மணிகளினு முனதுசெய
லுருவகத்தா லிலங்கு கின்ற
பொன்னுலவு திருமருமப் புகழ்ச்சீனி
வாசனெனும் புனித மாலே. (3)

இங்ஙனம்,
V. திருஞானசம்பந்தன் R. H. S. Ramnad,
வைஸ்-பிரசிடெண்டு, பஞ்சாயத்துபோர்டு,
இராமநாதபுரம். 22—6—31.

---

ஐயங்காரவர்கள் கோநகர் ஞானசம்பந்தநற்சபைக்கு
விஜயம்செய்தகாலத்துக் கற்பகவிநாயகர்கலாசாலைத் தமிழாசிரியர்
திரு. S. ஆழ்வாரையங்காரவர்கள் இயற்றிப்படித்த
வாழ்த்துப்பாடல்.

சிந்து.

சீர்மல்கு புல்லாணித் தோன்றிக் கலைபல
தேர்ந்தவன் கவின் ஆர்ந்தவன் புகழ் சார்ந்தவன்—இந்தச்
செகமல்கு பூசுரர் குலவிளக் காய்நின்ற
சீரியன் மதி கூரியன்

ஏர்மல்கு மார மலைமேவு மாமுனிக்
கீசனார் உமை நேசனார் கொன்றை வாசனார்—அருள்
இசைபல்கு செந்தமிழ் திசையெங்கு மல்கிட
எண்ணினன் நலம் நண்ணினன்

கார்வெள்க மாப்பிர சங்க மழைபொழி
கண்ணியன் வெகு புண்ணியன் நிறை திண்ணியன்—புவி
காப்போர் மொழியென மேவுறு மாங்கிலங்
கற்றவன் மிகு நற்றவன்

வார்கடல் காப்பணோர் ஆலிலை யிற்றுயில்
மன்னிய திருத் துன்னிய அன்பர் உன்னிய—அந்த
மாதவன் பாதம் பணிசீநி வாசன்
வருகவே மகிழ் தருகவே. (1)

மாமே வியதிருக் கல்வி குணங்கொடை
மாட்சியான் அருள் ஆட்சியான் மாசில் காட்சியான்—எங்கும்
மன்னும் பொதுநல வாழ்விற் குளங்கொளும்
வள்ளியன் நனி தெள்ளியன்

பாமே வியபுகழ்ப் பாண்டித் துரைசங்கப்
பாங்கினுன் அதைத் தாங்கினுன் என ஓங்கினுன்—தமிழ்ப்
பற்றுடை யோர்காஞ் சேர்த்ததைப் போற்றிடும்
பான்மையான் மிகு மேன்மையான்

ஆர்மேவி னுந்தமிழ் சாலப் பயில்நெறி
ஆக்குவான குறை போக்குவான் கவல் நீக்குவான்—எப்போல்
அன்ப ரழைத்திடு முன்பு விழைந்துசெல்
காரனுன் இந்த்ர னேரினுன்

நாமேவு ஞானசம் பந்த சபையிடை
நண்ணினுன் நல முன்னினுன் இன்சொற் பன்னினுன்—அவன்
நாளுநா ளும்புகழ் மேலுமமே லும்மேவி
வாழியே பல ஊழியே, (2)

---

## (3) வரவேற்புப்பத்திரங்கள்

மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபையின் கஎ-ஆம் ஆண்டுநிறைவுவிழாவில்
தலைவராக வீற்றிருந்தகாலத்து அச்சபையார் படித்தளித்தது.

பூமாலை சூட்டிப் புனைந்தே மதுவன்றிப்
பாமாலை யுஞ்சூட்டிப் பார்க்கின்றே—மாமாது
வாழ மெழிற்சீநி வாசப் பெருந்தகாய்
சூழுந் தமிழமைச்சே சூழ்ந்து.

திருமகள்சேர் திருமார்பன் றிருவடியைத தினநினையுஞ் செல்வ மிக்க
பொருவறுநன் மறையவர்தங் குலத்துதித்துக் கல்வியொடு புகழு மோங்க
மருவுமுயர் குணநிதியாஞ் சீநிவா சப்பெயர்கொள் மதிவல் லோயின்
வருகையினுல் யாமெல்லாம் வான்வரவின் மயில்போல மகிழ்கின் றேமால். ()

மூவேந்த ரொடுபோய முச்சங்கப் பயனையெலா முறையே யாய்க்கப்
பூவேந்த னும் பாண்டித் துரைநிறுவு தமிழ்ச்சங்கம் புரத்தற் கேற்ற
மாவேந்த னுஞ்சேது மன்னர்பிரான் றமிழமைச்சாய் மன்னி யென்று
நாவேந்து முரையாலுஞ் செயலாலு முளத்தாலு நாடிக் காப்போய். (3)

ஆங்கிலமாம் பெரும்பரவை தனிற்றிளைத்து நியாயநூ லடைவிற் கற்றுப்
பாங்குறுசெந் தமிழ்மொழியாம் பாற்கடலின் சுவையுணர்ந்து பகரு நீதி
யோங்குமுயர் மன்றத்து வழக்கறிஞர் தலைமணியா யுற்றுக் கற்றோர்த்
தாங்குபெருஞ் செல்வனுஞ் சீநிவா சப்பெயர்கொள் தக்கோய் வாழ்க. (4)

சீரியதன் வாணாளைத் தமிழ்ப் பணிக்கே பயன்படுத்துஞ் சிறப்பு வாய்ந்த
பேரியலான் சாமிநா தப்பெரும்பே ராசிரியன் பெருமை நோக்கிக்
கூரியநுண் மதிப்புலவர் குழுமியபே ரவையினிநீ குறிக்கொண் டன்று
வாரியளித் திடுஞ்செல்வப் பொற்கிழிபோ லெவரிந்நாள் வழங்கு வாரே. (5)

செந்தமிழ்நூற் சுவையுணர்தல் தமிழ்ப்பேணு மவைக்களத்திற் சென்று கூறல்
கந்தலிலாப் புலமுடைய புலவர்தமை யாதரித்தல நயக்கு மன்பின்
முந்தியநட் புரிமையுளா ரொடுகலத்த லிவைமுழுது முறையாற் பெற்ற
சுந்தர! நின் வரவால்யா மின்புற்று மகிழ்கடலிற் றுளைகின் றேமால். (6)

புலவர்புகழ் திருமதுரைத் தமிழ்ச்சங்கந் தனைக்கண்போற் புரக்கு மேந்தால்
நலமருவு முயர்மேலைச் சிவபுரியா மிந்நகரி னங்கட் கெல்லாம்
திலகமெனுஞ் சன்மார்க்க சபையாண்டு திருவிழாச் சிறக்கப் போந்து
தலைமையுறு நின்னன்றி தனைமறவே முளங்கொண்டு சார்வே மின்பம். (7)

தந்நலமே பெரிதாக்கொண் டிம்மையிலிம் மியுமுதவாத் தனிகர் நாண
இந்நிலத்திற் பிறர்நலமே யெவற்றினுமே லாயதென வெண்ணிப் பேணும
துன்னியசீர்க் கொடையாளா! சீநிவாசப்பெயர்கொள் சுகுண! கற்றோர்
மன்னியசீ ரவைதிகழு மணியேநீ நீடூழி வாழ்க மாதோ. (8)

| | |
|---|---|
| மேலைச்சிவபுரி.<br>அக்ஷய-௵ ஆவணி-௴ 5௳<br>21—8—1926. | இங்ஙனம்<br>தங்களன்புள்ள,<br>சன்மார்க்கசபையார். |

## கோநகர் ஞானசம்பந்த நற்சபையின் எட்டாம்வருடவிழாவில் நகரத்தார் ஸமர்ப்பித்தது.

**அன்புமிக்க அண்ணலால்!**

எல்லாம்வல்ல இறைவன் திருவருளால் இனிதுவிளங்கும் இச் சபையின்கண் நீங்கள் நெடுநாளாகவைத்திருந்த நன்மதிப்பினையும், ஆர்வத்தினையும் இவ்வமயம் எங்கள் வேண்டுகோட்கிணங்கித் தலைமையேற்று வெளிக்காட்டியிருக்கின்றீர்கள். இத்தகைய சபைகள் ஆங்காங்குத் தோன்றி வளர வேண்டுமென எண்ணி உழைத்துவரும் தாய்மொழியன்பினராய உங்களைத் தலைவராகக்கொண்டுள்ள இச்சபையின் மகிழ்வு அளவிட்டுரைத்தற்பாலதன்று.

**அறிவும் திருவும் ஆற்றலும் அமைந்த ஐயா!**

பேரறிவும் பெருந்திருவும் செல்வாக்கும் பிறநலங்களும் ஒருங்குடையராய்த் தாய்மொழி, தாய்நாடுகட்கு உழைக்க முன்வரும் பொதுநலவிருப்பர் நம் தமிழ்நாட்டில் மிகச்சிலரேயாவர். அத்தகைய பொதுநல விருப்பமுடையோர்களில் நீவிர் ஒருவிர் என்பது முகமன அன்று. உங்களைத் தன் மகவாகப்பெற்ற பெரும்பேறுற்ற நம் தாய்மொழியாகிய தமிழ்மொழி உங்களால் அடைந்த நன்மைகள் பல; அடைகின்ற நன்மைகள் பல; அடையும் நன்மைகள் பலப்பல.

**சங்கவளர்ச்சியிற் பொங்குங் கருத்துடையீர்!**

புலவர் மனத்தினும் நாவினும் நூலினும் நாளும் வாழ்வுற்றிருக்கும் பொன்றாப் புகழ்மேனியுற்ற பாண்டித்துரைமன்னரால் நாட்டப்பெற்றதும், பாவலர் காவலனும், வழிவழித்தோன்றிய வள்ளன்மையனும் ஆகிய நம் சேதுபதிமன்னர்பெருமானால் என்றும் மாறாத் தண்ணளிகாட்டப்பெறுவதுமான மதுரைத்தமிழ்ச்சங்கத்திற்கு மதிநுட்ப நூலோடமைந்த நீங்கள் கைம்மாறுகருதாக் கவின்பெறும் அமைச்சாய் அமைந்திருக்கும் அதுவே உங்கள் தாய்மொழியன்பிற்குச் சாலுவதாகும். அதனோடும் அமையாது உங்கள் திருவால் அறிவால் சென்மொழியதனால் அச்சங்கத்திற்கு உற்றுழியுற்றுழி உதவி இடுக்கண்களைந்து நனவினுங் கனவினும் மறவாதுபோற்றிவரும் உங்கள் தாய்மொழித் தலையன்பினை யாங்கள் எங்ஙனம் எடுத்துப் பாராட்டவல்லேம்! இம்மட்டோ! இத்தமிழ்நாட்டில் ஆங்காங்குள்ள சங்கங்கள் சபைகளின் வளர்ச்சியிற் கண்ணுங் கருத்தும் உடையீராகி நீங்கள் ஆங்காங்கு வலிந்துசென்று கண்டு களித்து அவைகளையும் ஊக்கிவருதலை

இத்தமிழகம் நன்கறிந்து போற்றுகின்றதே! இங்ஙனம் உங்கள் உயர்ந்த நற்செயல்கள் குன்றின்மேலிட்ட விளக்காக யாவரும் அறிந்தவேயாகலின் ஈண்டு விரித்திலம்.

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த நீங்கள் எங்கள் வேண்டுகோட்கு எளிதின் இணங்கி இவண் சபைத்தலைமையேற்றுச் சிறப்பித்ததற்காக என்றும் நிலையுறும் எங்கள் நன்றியறிவினையும் வந்தனத்தையும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம். இச்சபையில் என்ஞான்றும் அருண்மூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கற்பகவிநாயகர்திருவருள் உங்கட்கு எல்லாநலன்களையும் மேன்மேலும் ஓங்கச்செய்தருள்வதாக. நலம்.

ரௌத்திரி-ஸு<br>
வைகாசி-மீ<br>
உ௧-உ

இங்ஙனம்,<br>
நகரத்தார்.

## தேவகோட்டை மாணவர்சங்கத்தின் ஐந்தாம்வருடபூர்த்திக்கொண்டாட்டகாலத்தில் அச்சங்கத்தார் வாசித்தளித்தது.

அன்பார்ந்த ஐயா!

நீரமலி கடல்சூழ் நிலவுலகத்திற்-சீர்பெற இந்நாட் டிகழ்த்திடும ஆங்கிலப்-பேர்மொழி நன்கு பெரிதுற பயின்றிப்-பாருளோர் நியாயம் பாஙகிற் பெறமுயன-றுறு மகிழ்தர அசசெயன் மேற்கொளீஇ-வருபொருளொன்றே கருதிமெற்றோர்-ஒருசிலர்போலா துறுபவர் பொருளுர்-தமபொருளேபோற் சால்புற நினைந்து-இப்பரி லன்னோர்க கிதஞ்சொலி பொற்றுமை-செய்யவே கருதிச் செப்பமாய் முயலுந்-தஙகள் கருணையின் றகுதிகைய நினைந்தாறும்-எங்களுள்ளத் திணையிலா உவகையுடை யராகின்றோம.

"என்னுனும ஒருதவி யாரொருவன் யார்க்கெனினுந்-தன்னுல் முடிவதனைத் தானே முடித்தறலே" என்றற்கேற்ப இவ்வுலகிற் கியன்ற உதவிபுரியக் கருதி, அருமபெரு நியாயவாதததாலாகுஞ் சிரமமுமநோககாது, டிஸ்டிரிக்ட் போர்டிலும் சென்னைச் சட்டசபையிலும மெமபர்ஸ்தானம வகித்து மன்னவனும் மன்னுயிரும் மனமகிழ ஒப்பநாடி நன்மைசெய்தலின் முன்வந்த தங்கள் பரோபகாரப்பான்மை பாராட்டற்பாலதே.

இம்மையும் மறுமையும் நன்மையே யுதவுஞ் - செந்தமி ழாரியத் திறனி ருங் கடலில்நுண்-அறிவினுய் நுண்பொருள் அருஞ்சுவை யமுதைக்-"கேட் டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்-வேட்ப மொழிவதாஞ் சொல்" விசேடத்தாற்- றந்தின்புறுத்துந் தன்மைசேர் தங்கள்-வாக்கின் வன்மை யைப் பார்க்குளோர் தம்மில்-எவர் அறியா இயல்பினராவார்.

யாவதும் அறியா இளம்பருவத்தே-துணையாய் நின்று சுகந்தருநிலையுற்- றுதவுந் தமிழ்மொழி ஓங்குற வளர்க்கும்-நலமேற்கொண்டு நான்காஞ் சங்க மென்-றோதுங் கூட லொண்டமிழ்ச் சங்கக் - காரியதரிசியாய்க் கவினிய அம்மொழி-வித்தமுங் கண்போ னிறுத்துந் தங்கள்-பெற்றிமை நலத்தை முற்றவும் பாராட்டுகின்றோம்.

எங்கள் விருப்பத்திற்கிணங்கி இவ்வருடபூர்த்திக்கொண்டாட்டத்தில் அக்கிராசனம் வகிக்க இயைந்த தங்கள் அன்புரிமைக்கு யாது கைம்மாறாற்ற வல்லேம். தங்களுக்கு எல்லா நன்மைகளுந் தந்தருளும்படி இறைவன் திருவடிகளைப் பணிந்து பிரார்த்திக்கின்றோம்.

தேவகோட்டை  இங்ஙனம்,

ரக்தாக்ஷி ஹு வைகாசிமீ ௨௪௳  மாணவர் சங்கத்தார்.

சென்னைச் சட்டசபையுறுப்பினரானமைபற்றிச்
சிவகங்கையில் வரவேற்றுக்கொண்டாடிய அன்று
சிவகங்கை செ. கு. அரு. முத்துக்கிருஷ்ணபிள்ளையவர்கள்
இயற்றிப் படித்த

## வாழ்த்துக் கவிகள்.

---

பூம்மேவு நாமாது புகுந்து போற்றப்
    பொற்பினுக்கோர் புகலிடமாய்ப் புனிதமாங்
நாமேவுந் தொண்டைநன் களிக்குந் தூய
    நாயகியார்க் கவியிடத்து நயந்து மேவும்
மாமேவு மாலினைமா லுறவே செய்து
    மலரடியைத் தொழுந் தொழும்பின் மாறுதற்றேற
காமேவு கரத்தானல் வரத்தான் மிக்க
    கல்வியறி வுண்மையெனுங் கவின் றழைத்தான். (1)

தங்குபெருந் தயையுடையான் தரத்தின் சார்பான்
சாந்தமுளான தண்ணளியாற் றகவே யுற்றான்
பொங்குமுயர் பொற்புடையான் பொறையே டக்கான்
பொருளுடையா னொழுக்கமொடு புகழே பூண்டான்
கொங்குமுதற் றேயமெலாங் குலவுஞ் சீரான்
குவலயமே பெறத்தக்க குணமே கொண்டான்
தெங்குலவிச் செறிந்தோங்குந் திருப்புல் லாணிச்
செல்லமையங்கார் செய்தவச் சிறப்பிற் சேர்ந்தான். (2)

ஆர்ந்ததமிழ்ப் பரீக்ஷைபெயி லாகப் போதும்
அமைந்தனவென் றணிவேலை யடையச் சால்ட்டிற்
கூர்ந்தளித்த மனுவகற்றிக் குமண னென்னக்
கொள்பாண்டித் துரைமகிபன் கொடையாற் சென்னை
சேர்ந்துயர்ந்த பரீக்ஷைதனிற் றேர்ந்தங் கார்ந்த
செடமணியாற் சிலாவணியாம் செல்வாயென்ன
நேர்ந்தநிரு மலனகூடல் நேசப் பேற்றால்
நித்தியவா சபுரிந்து நிலைத்து வாழ்வோன. (3)

மண்ணுலகோ டொஞ்ஞான்று மினிய தான
மதுரமொழி யாற்றனது வசமே யாகப்
பண்ணியதோர் காரணத்தின பலனால் மேவிப்
பகர்சீனி வாசனெனப் பலித்தோன் பண்டை
எண்ணியநல் நடாதூரார் வழியே வந்திங்
கிசைபெருக இசைந்துலகத் திருப்போன் பாண்டிப்
புண்ணியபூ பதியினிநீ புகலா மென்னப்
பொருந்திமையிற் றமிழ்ச்சங்கம பொலியக் காப்போன். (4)

சென்னைதனில் நம்மனோர் முதலா னனைச்
செகதத்துள்ளோர் குறையெனுந் தீர வேண்டி
உன்னியநூற் றிருபானே ழினி லொன்றாக
ஓங்கியநற் சட்டசபைக் குற்றா னன்பாய்ப்
பன்னியபத் தொன்றிருபா னொன்ற தாண்டிற்
பலித்தஆ தனத்திருந்து பார்க்குப் பணிபாய்
மன்னியவின் பளித்துயர்ந்த மதியால் மிக்க
மக்கள்மனை யொடுசுகித்து வாழ்க மாதோ. (5)

## ஆத்தங்குடி முத்துப்பட்டினம்
## நாவுக்கரசுநற்சபையின் முதலாவதாண்டு நிறைவுவிழாவில்
## வாசித்துக்கொடுத்தது.

---

சிவபெரு மானருள் செவ்விய தமிழ்மொழி
முனிவரர் போற்றும் மொய்ம்புடைத் தமிழ்மொழி
புண்ணியப் பனுவல் நண்ணிய தமிழ்மொழி
பண்ணார் வேதம பல்கிய தமிழ்மொழி
ஈங்கிதன் பெருமை யித்துணைத் தாமென
அளவிடற் கரிதென றறிந்தன ராகிப்
பாண்டி நாடாண்ட பார்த்திபர் போற்றினர்
ஈண்டிந் நாளினு மியற்றமி ழணங்கு
சீர்குன் றாது திகழுக வெனவே
இருபெருஞ் செல்வத் தொருபெருஞ் சீருடைப்
பாண்டித் துரையாம் பார்த்திபன் கூடலிற்
சங்க நிறுவித் தனை வளர்த்தனனே!
அவன்றன் பாற்கொளு மன்பென் பேமா?
அதுபசுந் தமிழி னார்வமென பேமா?
தளர்ச்சி யின்றி யச்சங்கந் தன்னை
இராஜ ராஜேச்சுர னென்னும் பேர்பெறு
சேது பதியொடு திகழ்வுறத் தாங்கிப்
பாதுகாக்கும் பண்பினை யாமே
அன்புடையார் பிறர்க் கென்பு முரியர்
என்னும் மெய்ம்மொழிக் கிலக்கிய நீயே
முதுமுறற் களிதோ வரிதே நின்செயல்
ஆங்கிலக் கலையினும் பாங்குறு தமிழினும்
கற்றவர் பாமுறையுஞ் சொற்றிற முடையாய்!
மற்றையோர் தம் மத மனுவதித்து
முற்றக் களைந்து முடிவிற் றனது
கொள்கையே மன்றவ கொண்மா நிறுவும்
வாதத் தொழிலின் வல்லோய்! வல்லோய்!!
மதுரைமா நகரின் மருவிய மணியே!
சீராக் தனையனே! ஸ்ரீநிவாச!
நாவுக் கரசு நற்சபைத் தலைமை
பூண வேண்டினம பொருந்துமன் பாலே

இசைந்தனை கைம்மா றென்செய வல்லேம்
மன்னு மாதவன் றன்னரு ளாலே
வாழி வாழியிம் மகிதல மிசையே.

பிரபவ-வருஷ — இங்ஙனம் தங்களன்புமிக்க,
சித்திரை-மீ கசு-உ — நாவுக்கரசுநற்சபையார்.

## கோநகர் ஸ்ரீ ஞானசம்பந்தநற்சபையின் பதினேழாம்வருடவிழாவில் வாசித்தளித்தது.

### நிலைமண்டில ஆசிரியப்பா.

திருவளர் மார்பப் பெருமா னென்றும்
தருப்ப சயனத்து விருப்புட னமர்ந்த
திருப்புல் லாணி செய்தவப் பயனாய்ச்
செந்தழ லோமபும் அந்தணர் வருண்டதுப்
புகழொடு தோன்றித் திகழ்பெரி யோயே!
ஸ்ரீநிவா சப்பெயர்ச் செம்மால் வருக!
ஈண்டிய புகழ்சால் பாண்டித் துரைமன்
கூடலி னிறுவிய பீடமர் சங்கங்
கண்ணெனப் போற்று புண்ணிய கண்ணிய
முறையுரை மன்றத் தறைவழக் கறிஞ!
வருக வருக மகிழ்தர வருக!
சீரிய செந்தமிழ் ஆரியம் ஆங்கிலம்
இவைநன் காராய்ந் தவைதொறு மருவி
நுட்பதிட் பங்களைப் பெட்புற வுரைக்கும்
கூரிய தீஞ்சொல் ஆரிய நீயே
அருட்பே ருறையுள் தெருட்பெ ருங்கடல்
குணப்பெருங் குன்று தணப்பில் வாய்மையை
சட்ட நிரூபண சபைசார் தகவினை
நீயெம் வேண்டலுக் கிசைந்திப் பேரவைத்
தலைமைவீற் றிருந்து தந்தபே ருவகை
எம்ம னோரா லியம்புதற் கரிதுநீ
மல்லாண்ட திண்டோள் மாலருள் பெற்றுப்
பல்லாண்டு வாழியிப் பார்மிசை யினிதே.

கோநகர்
அக்ஷய-வருஷ
வைகாசிமீ உகஉ.

இங்ஙனம்,
ஞானசம்பந்தநற்சபையார்.

## சிதம்பரம் இராமசாமிசெட்டியார் டவுன்ஹைஸ்கூல் ஆண்டுவிழாவில் படித்தளித்தது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமகள்சேர் திருமார்பன் புல்லாணித்
 திருப்பதியிற் றிகழ்ந்து வாழும்
அருமறையோர் குலச்செல்லம் ஐயங்கார்
 ஆற்றியநற் றவத்தி னாலே
மருவவரு குணக்குன்றே ஸ்ரீநிவாசப்
 பெயர்கொள் மதிவல் லோய்நின்
வருகையினால் யாமெல்லாம் மழைகண்ட
 பைங்கூழ்போல் மகிழ்கின் றேமால். (1)

ஆங்கிலமாங் கடல்கடந்து வழக்கியலை
 யறத்தெளிந்தே யான்றோர் போற்றும்
பாங்குயர்செந் தமிழ்மொழியாம் பாற்கடலிற்
 றிளைத்ததனிற் பண்பிற் கண்ட
ஓங்கியநற் பொருளமுதைத் தமிழ்வளர்க்கும்
 பேரவைகட் குவந்து சென்று
தேங்கியபேர் ஆதரவாற் றெளித்துரைக்கும்
 பெருமானே செப்பக் கேண்மோ. (2)

பரவுறுவார் வினைதீர்க்கும் பங்கயமா
 மலர்ச்செல்வி பயின்ற மார்பின்
அரவணையான் அடியிணையை அனுதினமும்
 உளத்தமைக்கும் அன்பு சான்றோய்
அரசியலார் நமக்கென்றே ஆய்ந்தநலம்
 பலவற்றுள் அரிதிற் கண்ட
விரவியசீர்ச் சென்னைநகர் விளங்குசட்ட
 சபையினருள் ஒருவ னானாய். (3)

மூவேந்தர் பாலித்த முத்தமிழ்சேர்
முச்சங்கம் முடிந்த பின்றை
மாவேந்தர் காப்பின்றி மாணவரும்
மாணவையும் மாழ்குங் காலைப்
பூவேந்தர் குலத்துதித்த புகழுக்ர
பாண்டியனும் புலவர் போற்றும்
பாவேந்தன் மதுரையினிற் பரிந்தளித்தான்
தமிழ்ச்சங்கம் பண்பி னோடே. (4)

நலமிகுமச் சங்கத்தைக் கண்ணிமைபோல்
எந்நாளும் நயந்து காத்துப்
புலமைமிக மாணவர்க்குப் பொருள்செறிநற்
கல்வியொடு பொருளும் ஈவோய்
இலகுறுமித் தில்லைதனில் இணையறுநல்
அறம்பலசெய் இராம சாமிக்
கலைவலான் உளங்கருதிக் கண்டனனிக்
கலாசாலை கவின மாதோ. (5)

தந்நலமே மேற்கொள்ளும் தனிகருளம்
நனிநாணத் தகுதி வாய்ந்த
நன்மைதரு பொருட்குவையைப் பல்கலைக்கே
மிகவாரி நல்கும் அண்ணல்
மன்னர்மகிழ் வணிகரிறை யெனும்
அண்ணாமலைவள்ளல் வளர்க்கு மிந்தத்
தன்மைமிகு கலாசாலை யாண்டுவிழா
விற்கேற்ற தலைவ னானாய். (6)

செந்தமிழ்க்குப் பணிசெய்யும் சிறப்பொன்றே
சிறப்பாகக் கொண்டு வாழும்
அந்தமிலாப் புகழாள! அறிஞருளம்
குடிகொண்ட அறிஞர் ஏறே
எந்தமுளம் களிகூர இளையோர்க்குப்
பரிசளித்தே இயைந்து வாழி
இந்தநிலத் திறைமகனும் எழில்
அண்ணாமலைவள்ளல் இனிது வாழி. (7)

## மதுரைத் தமிழ்ச்சங்கக்கலாசாலை மாணவர் ஞானாபிவிருத்திசபையின் 28-வது வருடபூர்த்திக்கொண்டாட்ட மங்களவாழ்த்து.

---

நேரிசையாசிரியப்பா.

*வாழிய பெரிதே வாழிய பெரிதே
ஊழிதோ றூழி வாழிய பெரிதே
தாய்பணி யுஞற்றல் செய்கட னென்னத்
தேறிய மதியோய் ஊறிய நிதியோய்
ஞானிலம் பரவும் சீனி வாசன்
என்னும் பெயர்நனி மன்னும் பெரும
புலவர் குழாமுணப் புத்தமு துரைபொழி
கலாநிதி யாக நிலாவியிந் நன்னாள்,
வேண்டியார் வேண்டிய வேண்டியாங் குதவிய
ஆண்டகை யுக்கிர பாண்டியன் சங்கத்
தமிழ்தினு மினிய தமிழ்நடை பயிலு
மாணவர் குழுவிய ஞானாபி விருத்தி
யவையார் நடாத்து மிருபதிற் றெட்டெனும
ஆண்டுநிறை விழாவிற் காண்டகு சிறப்பொடு
தலைமை யார்ந்த புலமை யாள!
மன்மன் றுறுவோய் வாழிய பெரிதே
அண்டமு மண்டத் தணுவும் போலும
பல்லவை யகத்தும் பரிவுட னவற்றின்
இறையா யிறைகொண் டுறைமா லெனவும்
ஓரே ருழவற்கு மொப்ப வளந்தரு
கைம்மாறு வேண்டா மைம்மாரி யெனவும்
இன்றமர்ந் தெமக்கு நன்றருள் புரிந்தனை
அதற்கே புகழ்வதை யன்றி
நிற்புகழ்ந் தேத்து நற்றக விலமால்
அன்பெனு நறவ மருந்தின மன்னால்
வாழி வாழி வாழியர்
ஊழிதோ றூழி வாழிய பெரிதே.*

இங்ஙனம்,

1932. மாணவர் ஞானாபிவிருத்திசபையார்.

நாட்டரசன்கோட்டை

# ஸ்ரீபாரதிவாசகசாலையின்

## முதலாவதாண்டு நிறைவுவிழாவில் மகிழ்ந்தளித்தது.

**செந்தமிழ் முழக்கும் அந்தணாளரே! உங்கள் வரவு நல்வரவாகுக.**

காலஞ்சென்ற தமிழ்வள்ளல் பாண்டித்துரைத்தேவரவர்கள் உவந்துதவிய நான்காம் தமிழ்ச்சங்கத்தை, அவர்கட்குத் துணையாயிருந்தும், அவர்கள் விண்ணவர்க்குத் தமிழருத்தச் சென்றபின் தமிழ்ச்சங்கத்தொண்டில் முதலணியில் முன்மதலையாக நின்றும் தாங்கித் தாளாண்மையால அதனை ஒழுங்குமுறை வகையால் ஓவாதுழைத்துவரும் தங்கள் தமிழ்த்தொண்டு தமிழரனைவராலும் போற்றற்பாலது.

**பொதுநலம் பேணி முத்த மதிநலம் நூம்பாடுடையீர்!**

மதுரை, இராமநாதபுரம் ஜில்லாபோர்டுகளிலும் இராஜதானி சட்டசபையிலும் பலஆண்டுகளாக நாட்டுக்கும் நம்மவருக்கும் வேண்டிய நலங்களை விரும்பி வளர்க்கும் அறமுயற்சி மேற்கொண்டு உழைத்துதவிய தங்கள் சான்றாண்மை தமிழகமட்டுமேயன்றிப் பிறவுலகும் பாராட்டுவதாகும்.

**நீதிவாத நிபுணரே!**

தங்கள் நிறைநூற் கல்வியையும் முறைதிறம்பா நுண்ணறிவையும் வாதமன்றங்களின் வழக்கறத்துக்கு வன்துணையாகச் செலுத்துவாயெல்லாம் செலுத்தி, ஆற்றுரை அன்பொடு போற்றி, மாற்றாரும் மகிழ, நீதியதிபருளநெகிழ, முறைவகுத்துப் பேசுந் திறமையும், ஒப்ப நிறைந்த செவ்வியால் பெரும்புகழு மிருநிதியும் வளர்க்கும் பெற்றியும் மிகப் பெரிதேயாம. "தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்தற்பொருட்டே" விநியோகித்து மனையறத்தை வினைத்திறத்தால் நிதமுயரப் பண்டிதரும பாமரரும் கொண்டாட முயல்வாருளெல்லாம் தலைநின்று வாழ்க்கையியற்றிவரும் தங்கள் சால்பெல்லாம் தமிழ்த்தலைவர்க்கு எடுத்துக்காட்டாக இலங்குகிறது.

எல்லார்க்கும் இனியவரே!

"நல்லவைநாடி இனியசொல்லின் அல்லவைதேய அறம்பெருகும்" என்ற தமிழ்மறையின் இலக்கியமாய் அதன் தத்துவத்தை வாழ்ந்துகாட்டும் தகவுமிகவுடையீர்! எங்கள் வேண்டுகோட்கிணங்கி ஈண்டுவந்து தலைமைதாங்கிய தங்கள் உதவிக்கு எமது மறவா நன்றிகூறுதலன்றி வேறு கைம்மாறின்று. இன்னும் பல்லாண்டிருந்து தமிழுக்கும் தமிழருக்கும் வாழ்வுயர, வளம் வளர வாழ்ந்திடுமாறு இறைவன் தங்கட்கு அருளுவாராக.

நாட்டரசன்கோட்டை,
ஸ்ரீமுக ஆவணி, 19.

இங்ஙனம்
தங்களன்புமிக்க,
ஸ்ரீபாரதிவாசகசாலையார்.

சென்னை ராஜதானிக் கிராமவுத்தியோகஸ்தர்கள்சங்கத்தின்
11-வது மகாநாடு இராமநாதபுரத்து 1936-ம் வருஷம் பிப்ரவரி மீ 20௳
குருவாரம் நடந்தகாலை வாசித்துக்கொடுத்தது.

---

## நேரிசையாசிரியப்பா.

சீர்மலிந் திலகுஞ் செவ்விய வுலகிடைப்
பேர்மலிந் தொளிரும் பாண்டிமா நாட்டில்,
இலகிடுஞ் சிவத்தல மீரேழுவற்றுள்
இராமநாத புரமெனு மிரம்மிய நகரம்
பொன்னுல கோரும் போற்றுதொல் பதியாம்
மன்னிய வளமெலா மல்குமிப் பதியி
லெண்ணில் மன்னுயிர்க ளித்தலம் புக்கே
எண்ணுன் கறமு மினிதுற வியற்றி
மூர்த்தியுந் தீர்த்தமு முறைமுறை கண்டே
இகத்தும் பரத்தும் வேண்டுவ பெறுவதும்
மன்னுமித் தலமதில் மகிழ்வுடன் கூடும்
துன்னு கிராம உத்தியோகஸ்தர் சங்கம்
பதினோரா மாண்டு பாங்குள மகாநாட்டுத்
தலைமை வகித்துப் புலமை நடாத்தத்
தக்கவர் தாங்களென் றொருக்கவே யுன்னித்
தஞ்சமென் றடைந்தோந் தயவுட னெங்கள்

நெஞ்சினி லுற்ற நலங்களை யோர்ந்தே
அஞ்சலென் றருளி யாதரித் தருளும்
பண்டைநாட் டொடங்கியெம் பரம்பரை யுரிமைகொள்
இண்டைமுடி மன்னர்கி ழினிதுற வாழ்ந்தோம்
தொன்றுதொட் டின்றுவரை தொல்லையொன் றுமிலை
இன்றோர் குறையிதி லியங்கச் செய்யுமிந்
நன்றிலாச் செய்கையை நாத வோர்ந்து
வாழையடி வாழையாய் வந்தவெம் முரிமையில்
தாழ்வுறு திலங்கத் தண்ணளி புரிகுவாய்!
அருமறை நிதந்துதி யந்தணா!
பவமறுத் தின்பப் பயனளித் துதவுந்
திருமகள் கொழுநனின் றிருவடி தொழுவோய்!
மன்னுயிர் யாவையுந் தன்னுயி ரேபோல்
துன்னு நியாயம் வழங்குறுந் தூய!
தானமுந் தவமுந் தழைய வாற்றுவோய்!
வான மளாவுஞ் சீர்த்திமிக் குடையோய்!
கற்பகத் தருவெனக் கொடைமிக வுடையோய்!
நற்பய னுயிர்க்கெலாம் நல்கிடு மண்ணல்!
ஒப்புயர்வற்ற வுத்தம குணத்தோய்!
தன்னலங் கருதாத் தகைமை யாள!
பிறர்நலம் பேணும் பெருமைக் குணத்தோய்!
ஸ்ரீதரனடி நிதஞ் சிந்தைகொள் டி. வி.
ஸ்ரீனிவாசப் பேர்ச் செம்மலே வருக!
மண்ணிடை வாழும் மானிடர் பலரும்
எண்ணிய யாவும் இன்புட னல்கச்
சட்ட சபையிற் சார்ந்திடு சான்றோய்!
எங்கள் சிறுமை யாவையும் போக்கி
மங்கள மாக்க வள்ளலே வருக!
வருக! வருக!! வருக!!!
பெரியவர்ப் பேணும் இருந்தவத் தோயே!

20—2—36.
இராமநாதபுரம்.

இங்ஙனம், உழுவலன்பு கெழுமிய
உபசரணைக்கமிட்டியார்.

---

*சென்னை மாகாணக் கிராமவுத்தியோகஸ்தர்களின்*

11வது மாகாண மகாநாடு இராமநாதபுரத்தில் (20-2 36ல்) நடந்தபோது சென்னைராஜதானிக் கிராமவுத்தியோகஸ்தர்கள் வாசித்தளித்தது.

---

மகாநாட்டுத்தலைவ! வருக! வருக!

*தங்கள் வரவால் எங்கள் நலம் வளர்க*

மாநிலம் போற்றும் மதியுடையோய்!

*இத்தருணத்தில் தங்கள் நற்குணங்களின் அமைதிக்கேற்ப, எம்மவர்வேண்டுகோளின்படி தங்கட்குஏற்பட்டுள்ள பலபொறுப்புக் களுக்கிடையே, இம்மகாநாட்டிற்குத் தலைமைவகிக்க இசைந்து வந்து விஜயஞ்செய்திருப்பதுபற்றி யாங்கள் அடையும் மகிழ்ச்சிக் கும் அளவுண்டோ!*

நீதிபெற மன்றுடும் நேயரே!

*தாங்கள் பயன் தூக்காதுசெய்யும் உதவிக்குக் கைம்மாறு யாது மறியோம்.*

சென்னைச் சட்டசபைச் செம்மலே!

*எம்மனோர் குறையைத் தவிர்ப்பானகருதித் தாங்கள் சென்னைச் சட்டசபையில் அங்கத்தினராயிருந்து ஆற்றிவரும் தொண்டு எங் கட்குப் பெருநன்மையும் பேருவகையும் அளிப்பதாகும்.*

கலியின்வலியைக் கடிவார் கைதொழும் திருமால்தலமாம் திருப்புல் லணையில் தோன்றிய தோன்றலே!

*தங்கள் தலைமைப்பேருதவியால் எங்கள் இடர் தீர்ந்தது. தாங் கள் எங்கள் மாமூல்வழக்கங்களுக்கே உரியவர்களாகச் சட்டசபை யின்மூலம் கிளர்ச்சிசெய்யவேண்டி எங்கள்பால் இரக்கங்கொண்டு எங்களுக் கிடர்செய்வோரை எதிர்த்து அடைந்தோரை ஆதரிக்க முற்பட்டுள்ள அண்ணல ஸ்ரீனிவாஸஐயங்கார் என்னும் சீமானே! தங்களுக்கு இறைவன் நீடித்த ஆயுளும், நிறை செல்வமும், திட காத்திரமும் நலகிப் பொதுஜனசேவையாளராகத் திகழுமபடிசெய் யப் பிரார்த்திக்கின்றோம்.*

இராமநாதபுரம், 20-2-1936.

*இங்ஙனம் தங்கள் பணிவுள்ள*

சென்னைமாகாணக் கிராமவுத்தியோகஸ்தர்கள்.

---

# சாத்தூர்த் தமிழ்ச்சங்கத்தின்
## 26-வது ஆண்டுநிறைவு விழாவில் படித்தளித்தது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேவருக் கன்று நல்ல திவ்விய வமிர்தம் தந்தான்
மூவருக் குயர்ந்த மூர்த்தி மேதினி யுள்ள மாந்தர்
யாவரும் நுகரத் தந்தான் அமிழ்தினி னல்ல தாகும்
மேவரும் சுவையின் மிக்க வென்றிகொள் தமிழை யம்மா! (1)

செந்தமி ழாகும் நல்ல திருமகள் தன்னை யென்றும்
அந்தமி லழகின் மிக்க வணிபெறப் புலவர் செய்து
நந்தலில் தவிசி லேற்றி நனிமிக வழிபட் டார்கள்
பைந்தமிழ் மன்னர் மூவர் பணிமிகச் செய்து வாழ்ந்தார். (2)

அரசருக் கரசி யான அன்னைசெந் தமிழும் நைந்தாள்
முரசுடைத் தானை மூவர் முறைமுறை போன பின்றைப்
பிரசநன் மலர்த்தார் வேந்தர் பெரும்புகழ்ச் சேது மன்னர்
உரைசெறி யரசி தன்னை உன்னத நிலையில் வைத்தார். (3)

அத்தகு வேந்தர் தம்முள் அலகிலாக் கலைகள் தேர்ந்தான்
வித்தக னான பாண்டித் துரைவிறல் மிக்க வேந்தன்
மெய்த்தநற் புலவர்க் கெல்லாம் விருந்துமாய்த் தலைவ னாகி
வைத்தனன் நான்காம் சங்கம் மதுரைமா நகரில் அன்றே! (4)

அற்றைநாள் வந்த சங்கத் தரும்பணி யாற்றி நின்றாய்
உற்றநற் புலவர்க் கெல்லாம் உறுதுணை யாகி நிற்போய்
கற்றநற் கலைகள் எல்லாம் கையினில் நெல்லி யென்னத்
தெற்றென உணர்த்து மாற்றற் சீனிவா சப்பே ரண்ணால்! (5)

மன்னவர் சேது வேந்தர் மலிவளம் மிக்க நாட்டில்
தென்னைகள் சூழும் நல்ல செழுந்திருப் புலனை வந்த
பன்னலம் சேரும் மேன்மைப் பழங்குடி யந்தணாள!
கன்னலின் சொல்லாய் எங்கள் கழகமோ டமர வாவே (6)

பொதுநலம் பேணும் சான்றோய் புலவருட் புலவ பண்டு
யதுகுலம் வந்த மூர்த்தி யடியிணைக் கன்பு செய்வோய்
இதுபொழு தெங்கள் சங்கத் திருபதோ டாறு சேரும்
குதுகல வாண்டு மேன்மை கொள்ளவே வருக வையா! (7)

அறநெறி தேரும் சட்ட அவையினுக் கணியு மானாய்
அறநெறி முறைசெய் வாருக் கறவுரை தெருட்ட வல்லாய்
உறநெறி வழக்கி யாவும் உணர்வழக் கறிஞ ரானாய்
பெறலரும் திருவும் பெற்றாய் பெருங்கலை யாவும் கற்றாய்! (8)

திருவுமெய்ப் பொருளும் மற்றும் செல்வமும் நலமும் எல்லாம்
கருதுமெய் பொருளும் நிற்குக் கவினுற அளிக்குமாறு
சுருதியும் காண மாட்டாச் சோதியை யுளத்திற் கொண்டு
கருதியும் வழிபட் டேத்திக் கழலடி பணிதல் செய்வாம். (9)

சாத்தூர்,
23-12-'40.

இங்ஙனம்,
சாத்தூர்த் தமிழ்ச்சங்கத்தார்.

---

முத்தமிழ்க் கலா வித்வரத்ன T. K. S சகோதரர்கள்
மதுரை, ஸ்ரீ பாலஷண்முகானந்தசபையின் சார்பில் மதுரையில்
நடத்திய 108-வது சிவலீலா நாடகத்தன்று தலைமைவகிக்குமாறு
மதுரை இ. மா. கோபாலகிருஷ்ணக்கோனார் வாசித்தளித்த
வரவேற்புப்பத்திரத்தின் ஒருபகுதி.

* * * *

மதுரை தமிழ்ச்சங்கம் உள்ள இடம். இங்குள்ள புலவர்களிடம் நற்சாட்சிப்பத்திரம் பெறவேண்டும் என்று கருதிய இக் கம்பெனியின் தலைவரவர்கள் புலவர் பலரை வேண்டினார்கள். அவர்களது வேண்டுகோளுக்கிணங்கிய தமிழ்ப்புலவர் பலர் இங்கு விஜயம்செய்துள்ளார்கள். அவர்களை வரவேற்கும் பணியை என்னை ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொண்டார்கள். ..............
..............................................................
அவர்களது வேண்டுகோளை மறுத்தற்கியலாது இப்பொழுது உங்கள் முன்னிலையில் நிற்கின்றேன்.

அன்பர்களே! இக்குழுவிற்குத் தலைமைதாங்கும் பதவியை ஏற்றுக்கொண்டவர் நமது நகரத்துப் பிரமுகரும், நீதிமன்றத்து

## கண்டவராயன்பட்டி
## ஸ்ரீ பணிச்சாருடையவர் தருமகலாசாலையின்
## பத்தொன்பதாம் ஆண்டுநிறைவுவிழாவைத் தொடங்கிவைத்தபோது
### வாசித்தளித்தது

---

**நீதியை உரைக்கும் நேர்மையாளரே!**

வருக வருக!! தங்கள் வரவு நல்வரவாகுக! எங்கள் வேண்டுகோட்கிணங்கி இங்கு விஜயம் செய்ய இசைந்தது எங்கட்கு எல்லையில்லா உவகையூட்டுகின்றது. எங்கள் நன்றியை ஏற்றருள்க. தங்கள் வரவால் எங்கள் பள்ளி நலம்பெற்றுவிட்டதென்பது வெளிப்படை.

**அருந்தமிழறிஞரே!**

ஓயாத உழைப்பும், தளராத ஊக்கமும், சீரிய ஒழுக்கமும், பரந்த அறிவும், சிறந்த கல்வியும், புலமையும், பண்பும், உண்மையும் உறைவிடமாய் விளங்கும் தாங்கள் இங்கு வந்து இவ்விழாவைத் தொடங்கிவைக்க ஒப்பியதை நாங்கள் பெருமகிழ்வுடன் பாராட்டுகின்றோம்.

**சீரிய சிந்தனையாளரே!**

தாங்கள் பட்டம், பதவி, செல்வாக்கு, கௌரவம் முதலியன படைத்திருக்கும்போதிலும் எங்களை நெருங்குவது எளிது. தங்களைப் போன்ற பெரியார்கள் அடிக்கடி வரவேண்டும். வந்து வந்து பழகவேண்டும். எங்கள் பள்ளியின் முன்னேற்றத்திற்கும், திருத்தத்திற்குமான பல சீரிய யோசனைகளைச் சொல்லவேண்டும் என்பதே எங்கள் கோரிக்கை

**சங்கத்தமிழ்வளர்க்கும் சட்டநாதரே!**

இக்கலாசாலை மாணவ மாணவிகள் தங்களையொத்த பண்புடையவர்களாகத் திகழவும் தாங்கள் நீண்ட ஆயுள், செல்வம், நலனில் அனைத்தும் பெற்றுத் திகழவும் எல்லாம்வல்ல இறைவனை வழுத்துகின்றோம்.

கண்டவராயன்பட்டி.
12—6—'49.

சி. உ. ராம. ராமசாமிச்செட்டியார்,
ஸ்தாபகர்.

# ADDRESS OF WELCOME.

**On the occasion of his opening the**
**First Provincial Conference of Local Board Employees,**
**TANJORE.**

---

RESPECTED SIR,

We beg to welcome you most heartily to this ancient city and to present you with this address of welcome in token of our esteem and our gratitude to you for so kindly coming over here at considerable personal inconvenience to bless our endeavours and wish our Conference success.

A lawyer of immense reputation and a citizen of very great influence, "T. C." is a house-hold word in all the southern districts. You have been, as a member of taluk and district boards and latterly as Vice-President of the Ramnad District Board, closely connected with local fund administration of several years. You have also been a distinguished Member of the Madras Legislative Council for a number of terms. Your membership of the Senate of the Annamalai University and Vice-Presidentship of the Madura Tamil Sangam are just a few of your activities that evidence your abiding interest in the cause of education and your invaluable services to Tamil Language and Literature.

We thank you, Sir, once again for your sympathy for our cause and pray that you would use your influence to improve the conditions of Local Fund Service in this province and earn the eternal gratitude of thousands of helpless employees.

We beg to remain,
Sir,
Your most obedient servants,
**Members of the Reception Committee.**

TANJORE,
26-12-1931.

*திருப்புல்லாணிமான்மிய வெளியீடுபற்றி*

**ஸ்ரீ. உ.ப. வே. வித்வான் மோ. ரங்கநாதாசாரியர்**

*எழுதியனுப்பிய பாராட்டுரை.*

---

### விநயவிஜ்ஞாபநா

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible] ।
[illegible] ॥

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ 4

[illegible]
[illegible]
[illegible]
[illegible] ॥ 5

[illegible]

[illegible]

---

சென்னை உயர்நீதிமன்றத்து முன்னாள் மொழிபெயர்ப்பாளர்
திரு. மின்னூருத்தீன் அவர்கள் இயற்றியனுப்பிய
இரங்கல்வெண்பா.

*இன்பாம் காணும் இசைசேர்பாண் டித்துரையும்*
*அன்பாய் வளர்த்த வருந்தமிழைத்—தன்பால்*
*வருவிருந்தென் றின்னளிசெய் மானத்தோ பேர்ந்தான்*
*திருவிருந்த மார்பன்றன் றேம்.*

மின்னூருத்தீன்,

12—3—52. 52, Sami Pillai Street, Madras-7.

---

# பத்திராசிரியர் குறிப்பு

௧௰ ஐப்பசியோடு செந்தமிழ் 47-ஆம் தொகுதி முற்றுப்பெற்றுக் கார்த்திகைமுதல் 48-ஆம் தொகுதி தொடங்கி நடைபெற்று வரவேண்டும். ஆயினும் சில எதிர்பாராத நிகழ்ச்சிகளால் செந்தமிழ் மிகத்தாழ்த்துவிட்டதுபற்றி வருந்துகிறோம். உரியகாலத்திலே செந்தமிழை வெளியிடுதற்குரிய முயற்சிகள் நடக்கின்றன. 47-ஆம் தொகுதியை முற்றுவித்து 48-ஆம் தொகுதியைத் தொடங்கின் மிகவும் தாழ்க்குமென்றுகருதி 47—48 தொகுதிகளுக்குரியபகுதிகளைத் தனித்தனி அடுத்தடுத்து வெளியிட்டு முற்றுவித்து 49-ஆம் தொகுதியை உரியகாலத்தில் (அதாவது நந்தன கார்த்திகை)யில் தொடங்கக்கருதி, இதுபொழுது 48-ஆம் தொகுதியின் முதலிரண்டு பகுதிகளாகத் துணைத்தலைவர்நினைவுமலராகிய இது வெளியிடப்பட்டுளது. 47, 48 தொகுதிகளுக்குரிய பிறபகுதிகள் இனி முறையே கூடியவிரைவில் வெளிவரும். 48-ஆம் தொகுதியின் 3, 4-ஆம் பகுதி சங்கத்தின் அங்கத்தினர்க்கும் செந்தமிழ்ச்சந்தாதார்களுக்கும் அத்தொகுதியின் சந்தாத்தொகைக்கு வி. பி. மூலம் அனுப்பப்படும். செந்தமிழபிமானிகள் வி. பி. யை அன்புடன் பெற்றுப் பத்திரிகையை ஆதரித்துவரவும் பண்டிதர்கள் சிறந்த விஷயதானமளித்துச் செந்தமிழைச் சிறப்பித்துவரவும் வேண்டிக்கொள்ளப்பெறுகிறோர்கள்.

உ

# மதுரைத் தமிழ்ச்சங்கத்தின் துணைத்தலைவர்

# J. C. ஸ்ரீநிவாஸையங்கார் B.A., B.L. அவர்கள் மீது

# நான்மணிமாலை

[இராமநாதபுரம் K. கணபதிசேர்வைகாரர் இயற்றியது]

## காப்பு.

### விநாயகர்

திருமங்கை மன்னன் திருவடியைப் போற்றி
வருமங் களச்சீனி வாசத்—திருவன்மேல்
பாடுகின்ற நான்மணிமா லைக்குப் பதந்தருகூத்
தாடிதந்த மூத்தபிள்ளை தான். (1)

### சிவன்

கானங் கடந்து கடல்கடக்கக் காத்தவபி
மானன் மகிழ்சீனி வாசன்மேல்—யானுரைக்கும்
நான்மணிமா லைக்குவந்து நன்றாய்த் துணைசெய்வான்
வான்மதியஞ் சூடுபெரு மான். (2)

### சத்தி

அன்று புவியளந்த மாலே யவதரித்தா
னென்று புலவோ ரெடுத்தேத்தும்—வென்றியுள்ள
மன்சீனி வாசன் மணிமாலை வாழவரும்
தென்றமிழ்நா டாளுஞ் சிவை. (3)

### திருமால்

தேசமெல்லாங் கொண்டாடுஞ் சீனிவா சன்மதுரை
வாசனுக்கு நான்மணி மாலைதர—வீசுபுகழ்ச்
‘சேது பதி’போற்றிசெயும் தெய்வச் சிலையான் பொற்
பாதுகைதான் காக்கப் படும். (4)

## முருகவேள்

கத்திக் கதறுங் கரியின் றுயர்தீர்த்த
சத்தியவான் சீனிவா சன்மீது—நித்திலஞ்சேர்
மாலையென்ன நான்மணி மாலைசொல்ல வந்தருள்வான்
வேலையிலே வேலெறிந்த வேள். (5)

## நாமகள்

செந்தமிழாஞ் செந்நெல் விளையும் வயல்செங்கோல்
மைந்தன் றிருச்சீனி வாசனுக்குச்—சுந்தரஞ்சேர்
நான்மணி மாலைதர நாமகளின் செய்யவிரு
கான்மலர்கள் எந்நாளுங் காப்பு. (6)

## மாணிக்கவாசகர்

நான்மறையோன் நற்சீனி வாசன்மேல் நானுரைக்கும்
நான்மணிமா லைக்குவரம் நல்குவான்—ஊனிடர்போம்
ஆணிப்பொன் னம்பலத்தி லாடுந் திருவடிவாழ்
மாணிக்க வாசகன்முன் வந்து. (7)

## அன்னதாதாசேதுபதிகள்

புன்னை மலர்ப்பொழில்சூழ் புல்லாணி வந்துதித்த
மன்னன் புகழ்ச்சீனி வாசனுக்குக்—கன்னலென
நாவலர்சொல் நான்மணி மாலைதர என்சேது
காவலவர் சொற்றுணை யென்க. (8)

சொல்—உணவு

# நூல்.

## நேரிசைவெண்பா

திருமாது மார்பன் றிருவடியைப் போற்றும்
பெருமான் கவிராயர் பேசும்—பெருமையுள்ள
புல்லாணி வாழ்சீனி வாசன் புவித்தேவர்
பல்லா யிரவர் பதி. (1)

### கட்டளைக்கலித்துறை

பதினான் குலகத்து மிவ்வுல கேபெரும் பாக்கியஞ்சேர்
நிதிநான்கு வேதபா ராயண மூர்த்தி நெடியமணி
மதினன்கு சூழ்மது ராபுரி வாசிபுல் லாணிவந்த
பதிநான் புகழ்சீனி வாசனை யீன்று பலன்பெற்றதே. (2)

### அறுசீர்க்கழிநெடலடியாசிரியவிருத்தம்

பெற்றவரைத் தேடிவரும் பிள்ளையுல கிற்பெரிய பிரபு வானல்
கற்றவர்கள் தேடிவரு வார்களிது கைகண்ட காட்சி யாகும்
பெற்றவருங் கொடைகொ டுக்கும் பெரும்பிரபுவும் புல்லாணிச்சீனி வாசக்
கொற்றவனே யாகிவிடில் மற்றவரைத் தேடுவது கொழுப்புத் தானே. (3)

### நிலைமண்டலவாசிரியப்பா

கொழுங்கயற் கண்ணி கோகநக மங்கை
தொழுங்கடல் வண்ணன் துணையடி மலர்கள்
முடிமிசை யணிந்து படிமிசை வாழும்
ஞாய வாதி நான்மறை யாளன்
தூய நெஞ்சன் சொன்னசொற் கடவான்
கற்பக தாரு கவிரா யர்க்குப்
பற்பல காவியம் பகரும் பண்டிதன்
கருணை நோக்கம் கைப்பிடித் திருப்போன்
திருமணம் பொலியும் பெருமனை வாழ்க்கைப்
புல்லாணிச் சீனி வாசன் புவிக்கு
நல்லாணி முத்தென நவிலுதல் நலமே. (4)

### நேரிசைவெண்பா

நவிலுங் கொடையாளன் நான்மறை யாளன்
செவியைத் தமிழ்க்குதவுஞ் சீமான்—புவியரசர்
கொண்டாட வாழ்சீனி வாசனைப்போய்க் கும்பிட்டுக்
கண்டாலும் போமே கலி. (5)

### கட்டளைக்கலித்துறை

கற்றவர் வாழ்த்துங் கருணா கடாக்ஷன் கயற்கணியென்
பெற்றவள் வாழ்மது ராபுரி வாசன் பெருங்கொடையோ
டுற்றவனின்பந் தருஞ்சீனி வாசமன் ஒன்னலர்கள்
அற்றவனே சூதுவா தக னுருமின் கற்றவனே. (6)

## எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

அன்றாலிற் பள்ளிகொண்ட வரதே யிந்த
ஆர்கலிசூழ் வையகத்தில் அரசாய்த் தோன்றி
என்றாலி காத்தருளுஞ் சீனி வாசன்
எல்லார்க்கு நல்லவன்ற னிடத்திற் சென்று
மூன்றானை யேந்திவிடில் முழுமா ணிக்கம்
முத்துநிறை யன்புகொண்ட மூட்டை தூக்கிக்
கன்றாத மனத்துடனே மீள்வார்க் காணுங்
கண்ணிரண்டும் புண்ணியஞ்செய் கண்க ளாமே. (7)

## நிலைமண்டலவாசிரியப்பா

கண்ணக லிலத்து விண்ணவ ரறியாத்
திருவடித் தெரிசனை தருமணி வண்ணன்
அருள்குடி கொண்டிடுந் திருமுக மண்டலம்
கிழக்கே நோக்கிய வழக்க மாகி
நின்றதிருக் கோல நெடியோன் வாழும்
மன்றலம் பொழிலிற் றென்றல்வந் தடிக்கும்
புல்லாணை வந்த கல்யாண குணவேள்
செந்தமிழ் விளைபுலஞ் செழிக்கப் பெய்யுஞ்
சுந்தர முகிலென் வந்தனங் கொள்வோன்
மைத்தடங் கண்ணியர் மடலூர் மன்மதன்
நித்தியம் நேம நிஷ்டைகள் தவறான்
சீனி வாசகச் சீனி வாசப்
புண்ணிய மூர்த்தி பூமியி லிருக்க
எண்ணிய நினைவுக் கெக்குறை யுண்டே. (8)

## நேரிசைவெண்பா

உண்டு களித்திடலாம் உள்ளம்போல் வாழ்ந்திடலாம்
கண்டுவிழி பெற்றபலன் கைக்கொளலாம்—தண்டுளவத்
தாரான் புயன்சீனி வாசன் றருமுகத்தை
நாராயண னெனவே நாம்.

## கட்டளைக்கலித்துறை

*காட்டும் புகழ்ச்சீனி வாசனைப் போற்றமிழ் நாவலர்சொல்*
*பாட்டின் பொருளை யுணர்பவ ரார்பெரு ப முற்றுக்*
*கோர்ட்டில் நுழைந்தவக் கிலென்று செ வி கூட்டமதிற்*
*சூட்டுந் தொடைமணம் மூக்கிருப் பார்க்குச் சுகந்தருமே.* (10)

## அறுசீரடிஆசிரியவிருத்தம்

*தருவது தருவென் பார்க்குத் தம்பிரான் சொல்லிக் கொள்வேன்*
*விரிகட லுலகிலெந்த வித்துவான் கண்டு கேட்டார்*
*ஒருபிடி யன்னம் பெற்றார் உண்டெனில் உரையின் எல்லாந்*
*தருவது சீனி வாசத் தருவிது சாக்ஷி தானே.* (11)

## நிலைமண்டலவாசிரியப்பா

*தானவர் தலையைத் தள்ளுதற் கெண்ணி*
*வானரர் தொடரக் கானகங் கடந்து*
*புல்லணைக் கிடந்தோன் பொன்னடித் தொண்டன்*
*அல்லியம் பொகுட்டில் அயன்போல் நான்கு*
*வேத மோதும் மாதவப் பூசுரன்*
*பூமகள் நாமகள் பொருந்தி வாழும்*
*மாமனை யுள்ள மண்ட லாதிபன்*
*முத்தமிழ்ச் சங்க வித்துவான் களுக்குப்*
*பத்தரை மாற்றுத் தங்கப் பதக்கம்*
*சித்தங் களித்துக் கொடுக்குஞ் சீமான்*
*உத்தியோ கஸ்தர் ஒன்பது கோடி*
*நித்தியம் வணங்கும் புத்திமான் நெடிய*
*நான்மாடக் கூடல் வக்கீல் நாயகம்*
*சீனி வாசன் செய்ய சமூகம்*
*கண்டால் போதுங் கவலை நீங்கும்*
*பண்டா விலையிற் பள்ளி கொண்ட*
*புண்டரீ காக்ஷப் புண்ணியன் இவனே.* (12)

## நேரிசைவெண்பா

*இவனுயிரைக் காக்க வெழுந்திருப்பா யன்றேல்*
*இவனுயிராம் மாலைதனை யவாய்—இவளோபுன்*
*மாலைவந்தா லென்சீனி வாசன்வந்தா னென்பாள்*
*காலைவந்து கண்டுகொண்டேன் காண்.* (13)

## கட்டளைக்கலித்துறை

காணாத பேர்களைக் கண்டுகொண் டாலென்ன காரியமாம்
வீணாளைப் போக்கித் திரிகின்ற வித்துவ வேந்தர்களே
பூணார மார்பன் மணிச்சீனி வாசன் சபைபுகுந்தால்
காணாமல் அள்ளி வரலாம் பலவித நாணயமே. (14)

## அறுசீரடியாசிரியவிருத்தம்

நானிலத் துள்ளார் யார்க்கும் நன்மையைத் தேடி வாழும்
சீனிவா சையங் காரின் சிந்தையே சிந்தை மற்றக்
கானில்வாழ் கழுதைபோலக் கத்துவார் சிந்தை யெல்லாம்
ஈனர்கள் கூடுஞ் சந்தை மொந்தைகந் தையென் பேனே. (15)

## நிலைமண்டலவாசிரியப்பா

என்னுள மிருக்கும ஈசுவரன் உமையாள்
மன்னும் பாகன் மணிவிடை யூர்தி
கால காலன் கங்கைச் சடையான்
நீல கண்டன் நெற்றிக் கண்ணன்
மலையத் துவசன் மருமக னாகி
அலைகடற் புவியை யாளுஞ் சொக்கனும்
வருணன் பொருட்டுக் கருணை கூர்ந்து
சர்ப்ப சயனந் துறந்து தனியே
தர்ப்ப சயனந் தழைக்க வந்த
ஆரா வமிர்தம் நாரா யணனும்
சீனி வாசச் சீமான் றனக்கு
நீண்ட வாயுள் வேண்டிய செல்வம்
கொடுக்கும் படிக்குக் கும்பிடு வேன்வேல்
எடுக்கும் பெருமான் இணையடி மலரையே. (16)

## நேரிசைவெண்பா

மலைமேல் முகிலெழுந்து வந்துவிட்ட தையோ
முலைமே கலையவிழும் மோகந்—தலைமீறிக்
கொண்டதடி சீனிவா சையங்கார்க் கென்குறையைக்
கண்டுசொல்லு வாயென் கருத்து. (17)

## கட்டளைக்கலித்துறை

காந்தூக்க நிற்குங் கவிராயர் வந்திடக் கண்டுகொண்டால்
சிரந்தூக்கி நின்று செவிகொடுப்பான் தங்கச் சேர்கொடுப்பான்
இரந்தூக்கிய மின்றிய நெஞ்சகத் திற்றிரு வேற்றிவைப்பான்
பருந்தூர்தி பாதந் தொழுஞ்சீனி வாசப் பருணிதனே. (18)

## அறுசீரடியாசிரியவிருத்தம்

பனிமதிய மணிசடிலப் பரமசிவன் பங்கயத்தான் பழவ யோத்திக்
குனிசிலைக்கை ராமனிவர் கூடியொரு பெருங்கூட்டங் கூடச் செய்தே
இனியிவனே பூதலத்துக் கிறைவனென எல்லாரு மியம்ப என்றன்
சனிவிலக்க வந்துதித்த சீனிவா சையங்கார் தழைக்க மாதோ. (19)

## நிலைமண்டலவாசிரியப்பா

மானி னோர்விழி மங்கையர் பாடும்
தேனினு மினிய கானம் பருகிக்
கிள்ளை தனது பிள்ளைக் களிக்க
வெள்ளை யன்னங் கள்ளத் தனமாய்க்
கேட்டுத் தன்னுயிர்ப் பேட்டுக் கருத்தி
மாகனக மயமாங் கோகனக வீட்டிற்
கூடிக் குலாவி நாடக மாடும்
அன்ன வயலும் புன்னையம் பொழிலும்
மாட மாளிகைக் கூடகோ புரமும்
முத்தமிழ்ச் சங்க வித்துவக் கோட்டியும்
ஆழ்வா ராதிகள் அருளிய பாசுரம்
நாலா யிரமும் நான்கு வேதமும்
பாரா யணஞ்செய் சீரார் வீதியும்
இராவ ணன் றலைகள் இராவணஞ் செய்ய
அராவணை நீங்கி அயோத்தியிற் பிறந்த
நீர்கொண்ட மேகம் நெடியோன் கோவிலும்
தேர்கொண்ட விழாவின் திவ்விய சேவை
ஓங்கும் புல்லணை தாங்க வந்தோன்
கல்லார் மனதில் நில்லாப் புனிதன்
கருங்கடல் வண்ணன் கழலைப் பணிவோன்
பெருங்கொடை யாளி பிரபல வக்கீல்
சீனி வாசன் செந்தமிழ்க் குரிசில்
நானிலம் புகழ வாழிவா ழியவே. (20)

### நேரிசைவெண்பா

நாதியற்ற பேர்க்கினிய நாதனென மார்தட்டி
ஊதியத்தைத் தந்தருளும் உத்தமவான்—நீதியுற்ற
சீனிவா சையங்கார் செந்திருவாழ் மார்பனைப்போல
நானிலத்தில் வாழி நமக்கு. (21)

### கட்டளைக்கலித்துறை

கலந்தருஞ் சங்கந் தருஞ்செந்நெ லோங்கிடும் நன்செய் புஞ்செய்த்
தலந்தருந் தண்டிகை தான்றருந் தங்கத் தவிசுதரும்
பலந்தரும் த்ரேகப் பணிதரும் பீதாம் பரந்தரும்பொற்
கலந்தரும் பொன்னி னருட்சீனி வாசநற் கற்பகமே. (22)

### எண்சீரடியாசிரியவிருத்தம்

கற்றவரே நீரரிய கவியைப் பாடிக்
கண்கெட்ட மூடர்களைக் கண்டு கொண்டால்
மற்றவர்தா னஃதறியும் மார்க்க முண்டோ
மருந்தருமை தெரிந்திடுமோ மடநாய் தானும்
நற்றமிழின் சுவைதெரிந்து நம்மைக் காக்க
நான்முகனும் புல்லாணி நகரி யாளுங்
கொற்றவனுஞ் சீனிவா சையங் காரைக்
கொடுத்திட்டான் அன்னவன்பாற் குறுகு வாமே. (23)

### நிலைமண்டலவாசிரியப்பா

குடிக்குக் கூழு மில்லையே யிடுப்பில்
உடுக்கத் துணியு மில்லையே யுலகில்
படுக்கப் பாயு மில்லையே பாவிகள்
அடிப்பா ருண்டிங் காதரிப் பாரிலை
கடுஞ்சொற் சொல்லுங் கடன்கா ரப்புலி
நடுங்கப் பாயில் நானென் செய்வேன்
காப்பா யினியொரு கதியிலை யென்னக்
கைகட்டி நின்று கரங்குவிப் பாரை
மெய்கட்டித் தழுவி மெத்தை வீடளித்துப்
பாலுஞ் சோறும் பரிந்தினி தருத்தி

வேல்விழி யார்கள் விசிறி வீசச்
சேது பதிபோற் சிறப்புற் றோங்க
ஓது பதினென் குலரும் வாழ்ந்தப்
பரிசு கொடுக்கும் பருணிதப் பாரி
சீனி வாசச் சீமான் பிறந்த
நகரி யாதெனிற் பகரக் கேண்மின்
முத்து நகையார் குத்துத் தனத்தில்
அப்பிய சந்தனம் எப்பொழுதுங் கமழ்
பொய்கை சூழ்திருப் புல்லாணி யாமே. (24)

### நேரிசைவெண்பா

ஆரா வமிர்தாங் கவியை யவர்க்களித்தால்
பாரான் பதவி பரிசுதரும்—சீராமன்
சங்கம புரக்குந் தருசீனி வாசனுக்கு
மங்கள முண்டாகு மாம், (25)

### கட்டளைக்கலித்துறை

ஆரே யினது பெயருரை யாதவர் அம்புவியில்
பாராளுஞ் சேது பதியுரைப் பான்படிப் பாருரைப்பார்
வாராருங் கொங்கை மடவா ரெழுது மடலுரைக்கும்
தாராளமான கொடைச் சீனி வாசத் தியாகியே. (26)

### அறுசீரடியாசிரியவிருத்தம்

தமருகந் துட்டிக் கையிற் றலையோட்டை யேந்திக் கங்கைச்
சுமையுடன் பிச்சை வாங்கச் சொன்னதார் சிவனைப் பன்னாள்
அமரர்கள் தொழும்புல் லாணி அச்சுத னடிமை யான
தமர்புகழ் சீனி வாசத் தாட்டிக னிருக்கத் தானே. (27)

### நிலைமண்டலவாசிரியப்பா

தாதவிழ் தாமரைத் தையல் போலும்
மாதர் கூடி மரகத மேடையில்
உத்தம மான நித்திலம் பவளம்
பந்துக ளாகச் சுந்தரக் கையால்
அடிக்கும் போதவை யெடுத்துக் கொடுக்க

வானரப் பெண்களை வரிசைப் படுத்தி
வைத்ததி லவர்கள் இச்சை கொண்டு
கச்சி லொளித்து வைச்சுக் கட்டித்
திருவிளை யாட்டுத் தீர்ந்த பின்னர்க்
கருவிழி மங்கையர் கலைந்து போய்த்தம்
நாயக ரிடத்து நல்க வேய்தரும்
முத்தே தொத்தில் முளைத்த துகிரோ
பைத்தலை நாகப் பருமணி யோநீ
என்பால் வைத்த அன்பால் தந்த
இந்தப் பொருள்கள் இலங்கை தேடி
உந்தி பூத்தோ னுடன்செலுஞ் சமயம்
புன்னைப் பொழில்சூழ் புல்லணை நகருள்
முன்னைத் தவத்தால் அன்னை வயிற்றில்
கருவுரு வாகும் போதே கண்ணன்
திருவடித் தொண்டு தெரிந்து கொண்ட
சீனி வாசச் சீமான் வீட்டினில்
போனக முண்ணப் போன போது
வாசற் படியில் இவ்வகை கண்டேன்
ஆசைக் கடற்கோ ரளவைக் காணேன்
பதும நாதன் பக்கத் திருந்தால்
இதுபெருந் தப்பென் றெண்ணிக் கொண்டேன்
அற்புத மற்புத விற்பொலி நுதலி
கழுத்தணி யாகக் கட்டிக் கொள்வாய்
வழக்கெடுத் தன்பால் வரவே மாட்டார்
ஆதலா லெனது காதலி மனதில்
அச்ச மென்பதை யகற்றி விடுவாய்
என்று பேசும் வென்றிவா னரங்கள்
குன்றினு முயர்ந்த கோபுரந் தோறும்
நாடக நவிற்றும் பாண்டி நாட்டின்
வளத்தைச் சேடனும் வழுத்துதல் அரிதே. (28)

## நேரிசைவெண்பா

அரிய விருபொருளு மள்ளியள்ளி யீயத்
தெரிய வொருபிரபு தேடில்—அரியயனும்
வள்ள லருட்சீனி வாசனைப்போய்க் கண்டுகொண்டால்
வள்ளுவா னென்பார் விரைந்து. (29)

## கட்டளைக்கலித்துறை

விரும்புஞ் சபைகடு வேபடித்தார் கள்முன் வீற்றிருந்து
கரும்புக் கினிக்க மணிவாய் திறக்கும் கனதனவான்
பெரும் புண்ணியம் பெற்றுவாழ் சீனிவாசனைற் பேர்சொல்லுவார்
விருந்துண்டு சந்தனம் பூசி யுலாவரும் வேதியரே. (30)

## அறுசீரடியாசிரியவிருத்தம்

வேதியர் விரும்பிக் கேட்க விரிஞ்சனுர் தந்த ஞாய
வாதி யாஞ் சீனிவாசன் மதுரைமா நகரி வாசன்
ஆதியன் திருப்புல் லாணிக் கயோத்திமுன் னாண்ட ராமன்
சீதன வதனங் கண்டால் திருமகள் நயவுண் டாமே. (31)

## நிலைமண்டலவாசிரியப்பா

தமிழ்மணங் கமழும் இமிழ்திரை வையைத்
துறைதொறும் புதுமணத் தோகையர் கூடி
நிறைபுன லாடும் நேர்த்தி கண்டு
தவளத் தாமரைத் தவிசி லிருக்கும்
பவளக் காலனம் பச்சை மயிலுடன்
எட்டிப் பார்க்க இளமுலை யார்கள்
மட்டவிழ் குழலால் மறைத்துக் கொண்டு
வானர வரசை வாவெனக் கூவி
மானுட மடவா ரல்லேம் யாங்கள்
வானவர் மக்கள் வந்தோ மிவ்விடம்
ஈனப் பிறவி யெடுத்தபிணி முகங்கள்
அஞ்சிறை விரித்துப் பஞ்சடி நோவ
நடந்து மடியு நகையது செய்தன
கடம்பொழி களிறும் உடம்பெலாம் வெளுத்த

கொக்கும் கிளியும் கோகிலங் களுமாய்
பக்க மிருந்து பார்த்திருப் பார்கள்
பெண்ணென் றாலோ பேதையு மிரங்கும்
அண்ணன் நீதான் யாரிடஞ் சொல்வோம்
விசாரிப் பாயென உசாவிப் பிடித்துப்
புட்களைக் கேட்கக் கட்கினி தாகிய
சீர்கிளை யாட்டில் நெடுங்கண் ணிமைப்பதும்
பாரக மடிகள் பரவி நிற்பதும்
வண்ண மாலை வாருவ துங்கடுங்
கண்ணால் யாங்கள் கண்டோ மில்லை
பூதல மகளிர் போல வில்லையாம்
மாதர்க ளென்று மதிக்கப் பெற்றோம்
உள்ளதைச் சொன்னோம் வெள்ளறி வுடையேம்
காத்தருள் வாயெனக் காலைப் பிடிக்கத்
தீத்தொழில் புரிந்தோ ராயினும் வேந்திடம்
உண்மை வார்த்தை உரைத்தீ ராதலால்
பெண்ணமிர் தங்கள் கண்கலங் காமல்
போகச் செய்வன் நீவிரும் போமெனத்
தண்டலைச் சேகி வண்டமர் குழலுடன்
சுகித்து வாழும் மகத்துவம் பொருந்திய
பதுமை நகருள் வசிக்கும் புண்ணியன்
விதுரன் வீட்டில் விருந்தாய் நம்பான்
புல்லணைச் சேனி வாசப் புனிதன்
நல்லவர் மனத்தில் மெய்ம்மையை வசிப்போன்
ஆழி புடைசூழ் அவனி மீது
ஊழி யூழி வாழிய வுவந்தே. (32)

## நேரிசைவெண்பா

வாங்கப் பிறந்தமகாம் வள்ளலிடம் நம்மையவன்
தாங்கப் பிறந்தான் தயாநிதியாய்ப்—பூங்கமலப்
பொன்னிருந்து வாழும் புயன்சீனி வாசனெனு
கன்னனென்று சொல்வேன் களித்து. (33)

## கட்டளைக்கலித்துறை

கனகாம் புயத்தியும் மீனும் பிறையும் கருணைசெய்து
மனதாரத் தந்திட்ட மாணிக்க மேகன் மதிப்புலவோர்
இனவான னங்கள் விகசிக்குந் தட்பவி ரவிபெறுந்
தனதா சதுர்மறை வாழ்சீனி வாசனே தாங்குதியே. (34)

## அறுசீரடியாசிரியவிருத்தம்

தாதவிழ் கமல வாழ்க்கைத் தந்தையின் தந்தை யான
சீதரா திருப்புல் லாணிச் சீனிவா சையங் காரை
நீதயை செய்து காப்பா யென்றிடல் நியாய மாமோ
காதலன் றன்னைக் காத்தல் தாதையின் கடமை தானே. (35)

## நேரிசையாசிரியப்பா

கங்கைச் சடையான் கண்ணுதற் கடவுள்
அங்கயற் கண்ணி மணாளன் வெங்கயம்
உரித்த மூர்த்தி கரிக்குரு விக்கு
முத்தி தந்த முதல்வன் முன்னால்
முத்தமிழ்ச் சங்கம் முழங்கும் மதுரையில்
விறகு சுமந்து விற்றதும் வளையல்
பிறைநுத லார்க்குப் பேசிக் கொடுத்ததும்
வலை வீசியதும் வயிற்றின் பொருட்டாய்
ஊர்தொறும் பிச்சைக் கோடி யலைந்ததும்
யாரறி யாதார் வார்கட லுலகில்
பாணன் பொருட்டு நாண மின்றிச்
சேர னுக்குச் சீட்டுக் கொடுத் தான்
திருப்புல்லாணிச் சீனி வாசனை முன்
கருப்பணி யிருந்தால் கவலை யில்லையே!
எல்லாம் வல்ல சித்தனென் றவனைச்
சொல்வதி லென்ன சுகமோ தெரியேன்
பூசுரன் பிறந்த புண்ணியத் தாலே
தேசமெல்லாஞ் செககோ லோங்க
அண்டர் நாத னறிந்து கொண்டதால்
தானே கா தருந் தோன்
தேனமர் தெரியல் திருவா ளனையே. (36)

### நேரிசைவெண்பா

இத்திக்குந் தெய்வச் சிலையான் திருவடியைச்
சித்தத்தில் வைக்குஞ் சிரஞ்சீவி—முத்தமிழைக்
காக்கின்ற சீனிவா சப்புனித கற்பகத்தைப்
பார்க்கப் பசிபறக்கும் பார். (37)

### கட்டளைக்கலித்துறை

பாராளுஞ் செல்வப் படைக்குங் குபேரனற் பத்தியொடும்
சீராமன் பாதந் தொழுஞ்சீனி வாசன் திருமனைக்குள்
ஆராகிலும்புகுந் தாலழைத் தன்ன மருத்திப் பின்பு
நீரா ரிவண்வந்த காரண மேதென்று நேசிப்பரே. (38)

### அறுசீரடியாசிரியவிருத்தம்

பஞ்சணையிற் கண்ணுறங்காள் நெஞ்சணைப்பாள்
தலையணையைப் பஞ்ச பாணன்
வஞ்சனையா லவளுடைய வயிற்றெரிச்சல்
பார்த்துவிடில் வடியுங் கண்ணீர்
அஞ்சலென முன்னிற்பா யன்றேனின்
திருமாலை யருள்வா யந்தோ
தஞ்சமவள் புல்லாணிச் சீனிவா சேந்திரநீ
தயை செய் வாயே. (39)

### நிலைமண்டலயாசிரியப்பா

தண்டமிழ்ப் பொதிகைச் சந்தனக் க
தெண்டிரை வே......ன் றிறைதரும்......
திருமுகங் கை ... ...
இலங்கையி லிருக்குங் கலங்க .......
... ... ... ...
... ... .... ... (40)

குறிப்பு:—இத்தொகுதியின் முதற்பகுதி துணைத்தலைவர் நினைவு மலரா வெளிவந்தது. துணைத்தலைவர் மீது பாடப்பட்டதும் இதுவரை அச்சில் வாராததுமான இந்நான்மணிமாலையும் அவர் பெருமை களை இனிதுவிளக்குதலாற் செந்தமிழ் நேயர் இதனையும் படித் தின்புறுமாறு வெளியிடலாயிற்று.—பத்திராசிரியர்.



*ஸேதுஸமஸ்தான மஹாவித்வான் பாஷாகவிசேகரர்*

**ஸ்ரீ ரா. இராகவையங்காரவர்கள்.**

செந்தமிழ்.

தொகுதி—௪௩.] விய-௵ ஆனி-௴ [பகுதி. ௮.

Vol. 43. June—July 1946. No. 8.

# மஹாவித்துவான் மறைவு

நிகழும் வியஆண்டு ஆனி௴ ௨௭ (11—7—46) உ வியாழக்கிழமை, இராமநாதபுரம் ஸேதுஸமஸ்தான மஹாவித்வான் பாஷாகவிசேகரர் ஸ்ரீ. ரா. இராகவையங்காரவர்கள் பரகதியடைந்தது தெரிந்து மிகவும் வருந்துகிறோம். இவர், தென்னவராயன்புதுக்கோட்டை என்னும் ஊரில் நயித்துருவகாசிபகோத்திரத்தினராய் நிலவிய ஸ்ரீ இராமாநுஜையங்கார் புத்திரர்; ஸேதுஸமஸ்தான மஹாவித்துவானுகவிளங்கிய ஸதாவதானம் ஸ்ரீமுத்துசாமிஐயங்காரவர்களின் மருகர் (சோதரிபுத்திரர்); இளமைப்பருவம் தொடங்கித் தம் மாதுலரிடம் தமிழ்க்கல்வி பயின்று சிறந்து கவிபாடும் திறமும் உடையராய்த் திகழ்ந்தவர்; சிறந்த கேள்வியும், வடமொழியறிவும், ஆங்கிலமொழிப்பயிற்சியும் வாய்ந்தவர்; தென்னாட்டுப் பெருவள்ளலாய்த்திகழ்ந்த சேதுவேந்தர்பெருமானுன பாஸ்கரஸேதுபதியவர்கள், அவர் திருமைந்தரான இராஜராஜேசுவர முத்துராமலிங்க ஸேதுபதியவர்கள், அவர் தம் அருமைக்குமாரரும் தமிழ்வள்ளலும் மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் சாசுவத அக்கிராசனரும் ஆன ஸ்ரீமது ஹிரணியகர்ப்பயாஜி ரவிகுல முத்துவிஜய ரகுநாத ராஜாமஹாமாட்சிமைதங்கிய ஷண்முகராஜேசுவரநாகநாதஸேதுபதி மஹாராஜரவர்கள் ஆகிய மூன்று அரசர்காலத்தும் ஸமஸ்தான மஹாவித்வானுக வீற்றிருந்து அவர்கள் சபையை அலங்கரித்தவர்; அம்மூன்றுவேந்தர்கள்மீதும் பல சிறந்த தமிழ்ப்பிரபந்தங்களை இயற்றி, அவர்களாற் பரிசளித்துப் பாராட்டப்பெற்றமையால், விக்கிரமன் குலோத்துங்கன் இராஜராஜன் என்னும் சோழமன்னர் மூவரையும் உலா முதலியவற்றாற் சிறப்பித்துப்பாடி அவர்களால் நன்குமதித்துப் போற்றிக்கொள்ளப்பட்ட ஒட்டக்கூத்தர் என்னும் புலவர்பெருமானுடொப்பிட்டு உலகம் புகழநின்ற பெருமையுடையவர்; தமிழ்க்குரிசிலான பொன். பாண்டித்துரைத்தேவரவர்கள் சேதுவேந்தராதரவுபெற்று மதுரைத்தமிழ்ச்சங்கத்தை

நிறுவியகாலத்தில் அதன் வெளியீடான இச்செந்தமிழ்ப்பத்திரிகைக்கு முதலாசிரியராயிருந்து பலதுறையிலும் அது சிறப்புற நன்குநடத்தியவர்; அதில் வெளியிட்ட சீரிய ஆராய்ச்சிக்கட்டுரைகளாற் பிற்காலத்து ஆராய்ச்சியாளர்க்கு ஆராய்தற்குரிய பொருள்களை விளக்கி வழிகாட்டியாயும் நிலவியவர்; செந்தமிழ்ப்பத்திரிகையில் அநுபந்தமாக நூற்பதிப்பை மேற்கொண்டு, தொல்காப்பியப் பொருளதிகாரத்துச் செய்யுளியற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரையினையும், ஐந்திணையைம்பது களவழி நாற்பது இனியவைநாற்பது நேமிநாதம் பன்னிருபாட்டியல் திருநூற்றந்தாதி முதலியவற்றையும் நன்குஆராய்ந்து அச்சிட்டு வெளியிட்டவர்; தம் ஆயுட்காலம் முழுவதும் தமிழ்ச்சங்கத்து வித்யாவிஷய ஆலோசனைசபையங்கத்தினராயிருந்தும் நிர்வாகஸபையங்கத்தினராயிருந்தும் சங்கத்துத் தனித்தமிழ்ப்பரீக்ஷைகளுக்குப் பரீக்ஷகராயிருந்தும், பல ஆண்டுகள் சென்னைப்பல்கலைக்கழகத்துப் பரீக்ஷகராகவும் பாடபுத்தகக் குழுவினரில் ஒருவராகவும் இருந்தும், ராஜா ஸர் அண்ணாமலை வள்ளலார் அமைத்த பல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராகவும் பரீக்ஷகராகவும் இருந்தும் தமிழ் வளர்ச்சியடையச் சலியாது உழைத்தவர்; வடமொழியிலுள்ள பகவத்கீதையையும் சாகுந்தலநாடகத்தையும் சொல்வளமும் பொருள்வளமும் முதலிய பல வளங்களும் நிரம்பிய தமிழ்ச் சந்தப்பாக்களாக மொழிபெயர்த்துதவியவர்; பாரிகாதையினைச் சிந்தைக்கினிய செவிக்கினிய வாய்க்கினிய வெண்பாயாப்பினால் இயற்றிப் பெரும்புலவர் பலரும் வியந்து பாராட்டுமாறு இக்காலத்துப் பாரியாய்விளங்கும் ராஜா ஸர் அண்ணாமலைசெட்டியாரவர்கள் நிறுவிய பல்கலைக்கழகத்தில் அரங்கேற்றி, அவர்கள் பெரிதுவந்தளித்த ஆயிரம்பொன் பரிசு பெற்றவர்; கவிஞர் வியக்குமாறு இராமாயணஸாரம் புவியெழுபது புல்லையமகவந்தாதி இராஜராஜேச்சுரக்கோவை முதலிய பலநூல்களை இயற்றியவர்; உயர்ந்த பழந்தமிழிலக்கிய இலக்கண நூற்கடற் புகுந்து நிலைத்துக் கரைகண்ட கூர்த்த மதிநலம் உடையவர்; தொல்காப்பியம் முதலிய இலக்கண நூலுணுக்கங்களையும் சிந்தாமணி கம்பராமாயணம் முதலிய பாரகாவிய நூலுணுக்கங்களையும் 'கேட்டார்ப்பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப' இனிது விரித்துரைக்கும் நாவீறுமிக்கவர்; மேலைச்சிவபுரிச்சன்மார்க்க ஸபையினரால் 'மஹாவித்வான்' என்ற பட்டமும், சென்னை வடமொழிக்

கலைக்கழகத்தாரால் 'பாஷாகவிசேகரர்' என்ற விருதும் சூட்டிச் சிறப்பிக்கப்பெற்றவர்; அவையிலுள்ளோர் விரும்பும் எப்பொருள் பற்றியும் அவகாசம் வேண்டாமலும் இடர்ப்படாமலும் தடையின்றி இனிய அமுதவாறு பெருக்கெடுத்தாற்போல விரிவுரை வழங்கும் ஆற்றல் மிக்கவர்; தாம் உண்மையென்று கண்டதை அஞ்சாது கூறி நிலைநாட்டும் மதிவலியும், மனவலியும் வாய்ந்தவர்; சைவ வைணவசபையாராலும் மடாதிபதிகளாலும் நன்குமதித்து வித்வத் ஸம்மானம் வழங்கப்பெற்றவர்; அரசர்களாலும் செல்வர்களாலும் புலவர்களாலும் பிறமொழியினராலும் பிறநாட்டினராலும் பாராட்டப்பெற்றவர். இவர்பெருமையெல்லாம் தனிப்புத்தகமாக விரித்தெழுதத்தக்கன. இவர் அண்ணாமலைபல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவராயிருந்தகாலத்தில் ஆராய்ந்தெழுதிய கட்டுரைகளிற்பல ஒரு புத்தகமாக அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ளன. எஞ்சிய கட்டுரைகளும் குறுந்தொகைக்கு இவர் எழுதிய அரிய பெரிய விரிவுரையும், பகவத்கீதை முதலியனவாக இவரியற்றிய நூல்கள் பலவும் இனி அச்சிட்டு வெளியிடத்தக்கனவாய் உள்ளன. அவற்றைச் செவ்வியமுறையில் அச்சிட்டு வெளியிட்டு, யாவரும் பயின்று பயனடையுமாறுபுரிதல் இவர்சிறத்துத் தமிழ்நாட்டார்செய்யவேண்டிய முதற்கடமையாகும். சிறந்த நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியர், பத்திராசிரியர், பதிப்பாசிரியர், ஆராய்ச்சியாளர், சொற்பொழிவாளர், கவிஞர், மொழிபெயர்ப்பாளர், சமயநூலறிஞர், மொழிநூலறிஞர் என்று இத்திறத்தோருள் முன்னெண்ணத்தக்கவரான இவர்மறைவு தமிழ்க்கு ஈடுசெய்யமுடியாத பெருநஷ்டமாகும். இவர் தம் ஒளியைநிறுத்தி மறைந்தது,

முத்தமிழும் வல்லாய்! முதுராகவ கவிஞ!
இத்தரையில் எல்லாய் இலங்கினாய்—அத்தமித்தாய்
மன்மறைவு கண்ட வளநகரிபோல் வாடிற்றே
உன்மறைவு கண்ட வுலகு.

என்று நம்மால் இரங்கத்தக்கதாயிற்று. இவர் மறைவினால் வருந்தும் எல்லோர்க்கும் நமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். இந்த ஆனிமாதச் செந்தமிழ்ப்பகுதி இவர் நினைவிதழாக வெளிவருகிறது. புலவர்பாடும் புகழுடைய இவரது ஆன்மா இறைவனடியிணை நீழலிற் சாந்தியடைக. பத்திராசிரியர்.

# பெரும்புலவர் பிரிவு

திருவாளர். மஹாமஹோபாத்தியாய பண்டிதமணி
மு. கதிரேசச்செட்டியாரவர்கள் எழுதியது.

சேதுஸமஸ்தான மகாவித்துவானும் பாஷாகவிசேகாரும் ஆகிய ரா. இராகவையங்காரவர்கள் தம் புகழுடலை நிறுத்திப் பூதவுடல் மறையப்பெற்றசெய்தியறிந்து பெரிதும் வருத்தமடை கின்றேன். நாற்பதுயாண்டுகளுக்குமேலாக இவர்களை யான் அறி வேன். ஏழு ஆண்டுகள் இடையறாது அண்ணாமலைப்பல்கலைக்கழகத் தில் இவர்களோடு பழகியதுண்டு. சிறப்பாகத் தமிழ்மொழியும் பொதுவாக வடமொழி ஆங்கிலமொழிகளும் பயின்றவர்கள்; நிகரற்ற பெரும்புலமை வாய்ந்தவர்கள்; தமிழிலுள்ள சங்கநூல் களிற் பரந்த பயிற்சியுடையவர்கள். நூலாசிரியர்களின் ஆழ்ந்த எண்ணங்களை எளிதிலறிந்து மிக்க சுவைபடப்பேசுந்திறமையில் இவர்களைப்போற் காண்டல் அரிது. தமிழிற்கண்ட நயங்களை ஆங்கிலநூலோடும் வடமொழிக்கருத்துக்களோடும் இயைத்துத் தாரதம்மியங்கண்டு அறிவுடையோர் வியக்கக்கூறும் அழகு நினைந்து நினைந்து இன்புறத்தக்கது. தமிழிற் புலமைக்கூறுகளாக வுள்ள செய்யுளியற்றல், உரைநடைவரைதல், நுண்ணியபொருள் களைத் துருவியாராய்தல், நிரல்படக்கோவைசெய்து இனிமையாகச் சொற்பொழிவாற்றல் ஆகிய எல்லாத்துறைகளிலும் சிறந்துயர்ந்த பேராற்றல் படைத்தவர்கள். மதுரைத்தமிழ்ச்சங்கத்தினின்று வெளிவரும் செந்தமிழ்ப்பத்திரிகையின் தொடக்கம் இவர்கள் கட்டுரைகளாலேயே சிறப்புற்றதென்பது யாவரும் உணர்வர். அரிய ஆராய்ச்சியுரைகளை அப்பத்திரிகையிற் கண்டு வியவாதார் யாரே? இவர்களுக்குச் சந்தப்பாடல்கள் இயற்றுவதிலும் தாழிசை பாடுவதிலும் மிகுதியான விருப்பம் உண்டு. இவர்கள் பாடல்களி லுள்ள சொற்களும் பொருள்நயங்களும் அறிஞருலகைத் தம்வயப் படுத்தும் இயல்பினவாகும். கம்பர் கவிநயங்களை இவர்கள் பேசத் தொடங்கினால், கேட்பவருள்ளம் அப்பேச்சில் ஈடுபட்டுச் சுவை யுலகத்தில் இன்புற்று உலவும் என்பது மிகையாகாது. மகா வித்துவான் ஐயங்காரவர்களோடு அறிவுடையார் சந்திக்கநேர்ந்தால் வேறு உலகியற்பேச்சுக்களைப் பேசக்காண்டல் அரிதாகும். பேச் செல்லாம் தமிழிலக்கியமணமாகவே இருக்கும். எத்துணை நேர

மாயினும் இலக்கியப்பொருள்நயங்களைச் சலிப்பின்றிப் பேசி மகிழ்விக்கும் ஆற்றல் இவர்களிடத்து விஞ்சிநிற்பதுண்டு. பழைய முறையில் அழுந்திக்கற்றுப் புதியகாலத்திற்கும் ஏற்பத் தமிழ்க் கலைநயத்தை விளக்கிச்சொல்லும் இவர்களுடைய வாக்குவன்மையை மேனாட்டுநூல்களிலே திளைத்த அறிவுடையார்பலரும் மிகப் பாராட்டி வியந்துபேசுதல் உண்டு. அண்ணமலைப்பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சித்துறையில் இவர்கள் இருந்தபொழுது தாம் கண்ட நுண்பொருள்களை எடுத்துரைத்து ஆசிரியர்களையும் மாணவரையும் அடிக்கடி இன்புறுத்துவது உண்டு. மற்றைப்புலவர்கள் அறிந்த நூல்நயங்களைக்கேட்டு இன்புறுதலும் அன்னாரைப் பாராட்டுதலும் ஆகிய நற்குணங்களும் இவர்களிடம் விளங்கின. நாலாயிரப்பிரபந்தங்களுக்குப் பேருரையாகவுள்ள வியாக்கியானங்களை இவர்கள் நுண்ணிதின் ஆராய்ந்து விளக்கிப்பேசுங்கால் அத்துறையில் மிகப்பயின்றாரும் கேட்டு வியப்பதுண்டு. பாரிகாதையை அழகிய வெண்பாக்களாகப்பாடித் தாமே சிறந்த உரைக் குறிப்பும் எழுதியுள்ளார்கள். செய்யுள்வடிவிலும், உரைநடையிலும் இன்னும் பலநூல்கள் இவர்களால் இயற்றப்பட்டனவாகும். எல்லாவகையாலும் நிரம்பிய புலமையுடைய மகாவித்துவான் ஐயங்காரவர்களை இழந்தது தமிழ்நாட்டிற்கே குறையாகும். என்செய்யலாம்! கூற்றுவன் கொடியனன்றே! வினையளவு நின்று அதன் ஒழிவில் ஒழியும் உடலின் நிலையாமை இருந்தவாறு இது !! ஐயங்காரவர்களைப்போற் பேரறிவுபடைத்த புலவர்மணியொருவரைக் காணவேண்டுமானால் எளிதில் இயல்வது அன்று. பெறலரும் மணியாகிய அவர்களை இனிக் காண்டல் எங்ஙனம் இயலும்?

அறிஞருலகத்தைக் கவலுறச்செய்து மறைந்த அவர்களின் பிரிவு நெஞ்சத்தை உருக்குந்தன்மைத்து. திருமாலுலகத்தில் நித்திய சூரிகளின் முன்னிலையில் தமிழ்நயத்தை இனிமைபெற எடுத்துரைத்து அன்னாரையும் இன்புறுத்தித் தாமும் இன்புறச் சென்றாரோ! இன்புற்று வாழ்க.

மகாவித்துவான் அவர்களின் அருமைக்குமாரரும் என் நண்பருமாகிய வித்துவான் இராமாநுஜ ஐயங்காரவர்களுக்கு இறைவன் ஆறுதலளிப்பாராக.

உ

ஸேதுஸமஸ்தான மஹாவித்வான் பாஷாகவிசேகரர்

# ஸ்ரீ. ரா. இராகவையங்காரவர்கள்பிரிவாற்று

புலவர்கள் இயற்றிய

# இரங்கற்பாக்கள்

திருவாங்கூர்ப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர்,
ஸ்ரீ ராவ்ஸாஹிப் மு. இராகவையங்காரவர்கள் இயற்றியவை.

கம்பன் பிறப்போ கபிலாவ தாரமோ
இம்பரிவ னென்ன இருந்தா னிறந்தானே
செம்பதுமை ஈன்றருளும் சீராகவனோடும்
அம்புவியிற் காண்டற் கரும்புலமை மாய்ந்ததுவே.

வித்தைப் பெருக்கினை நா வீறமைந்த சொற்பொழிவைப்
புத்தமுதப் பாவளத்தைப் போற்ற லுறுங்குணத்தை
எத்தைநினைந் தாலும் இடிந்துகுமென் னெஞ் சென்னருமை
அத்தை மகனார் பிரிந்ததுய ராற்றலனே.

நுண்மா ணுழைபுலத்தாய் நூற்கடலின் தேக்கமனாய்
எண்மாண் புகழாளா ராகவநீ எம்மைவிட்டு
விண்மான மேறி விரசா நதிகடந்தால்
கண்மாறு மெங்கள் கதியென்ன சொல்லாயே.

இத்தா ரணியு ளிசைபடம்பை யிங்குவைத்துச்
செத்தார் குழுவிடைநீ சேர்ந்த செயலென்னே
அத்தானே! உன்னருமை யன்பர்தமக் கவ்வுடல்தான்
எத்தாற் பயன்படும்நீ இல்லா நிலையாயே.

கல்விக் கடலே! கவிசேகர! சொல்லின்
செல்வப் பெருமானே சீராகவ! உன்னைக்
கொல்வித் ததுமுடக் கூற்றம் அஃதுனது
சொல்வித் தகத்தின் சுவையறிய வல்லதுவோ.

மாரி மழைபோல மண்புலவர் தேக்கிடநீ
வாரி வழங்கினையால் மாளாத வாக்கமுதம்
வீரியஞ்சே ரன்னதனை விண்புலவ ரும்விழைய
ஆரியநீ சென்றாயோ அன்னோரை யூட்டுதற்கே.

மன்றேறி வாதிப்போர் வாயடங்க வேகல்விக்
குன்றேறி நின்று குமுறுகின்ற கோளரியே
சென்றே பிரிந்தனையேற் சீரா கவவுன்றன்
இன்றேன் மொழிகேளா தெஞ்செவிகள் தூராவோ.

மூத்த துடலேனும் மூவாத நாவலத்தால்
எத்திளமை கொண்டா யிறந்தாயென் றேங்குமணம்
கோத்திருவன் சேதுபதி கொற்றமணி வாயிலுக்கோர்
கூத்தனென நின்றதமிழ்க் கோவே யிராகவனே.

நாடு புகழ்ச்சாமி நாதனைநாம் அன்றிழந்தோம்
ஈடில் பெரும்புலவன் இராகவனை இன்றிழந்தோம்
பீடுபெற வாழ்ந்த பெருந்தமிழின் தாயந்தோ
கூடுமிரு கண்போய்க் குருடாய் வருந்தினளே.

செந்தமிழின் பாவளமோ தேர்சமய தத்துவமோ
அந்தமில்சீ ராழ்வார் அரும்பா சுரநயமோ
இந்த உலகியலோ இராகவன்வாய் வாய்த்தவெலாம்
விந்தைதமிகுத் தோர்க்கு வியப்பே விளைத்தனவால்.

கீதை மொழிபெயர்த்தான் கேடில் புகழ்க்காளி
தாதனார் சாகுந் தலத்தைத் தமிழ்செய்தான்
தீதகல எம்மான் திருவடிமேற் பாமாலை
ஓதியே யுய்ந்தான் உரைத்தான் தொழிற்சிறப்பே.

வஞ்சி நகரை வரையறுத்தான் வண்புவியின்
விஞ்சு நலம்விரித்தான் வேள்பாரி பாட்டிசைத்தான்
செஞ்சொற் பொருளுரையாற் செந்தமிழை மேம்படுத்தான்
எஞ்சும் இவைநிதிகள், இராகவனார் வைத்தனவே.

சங்கத் தமிழ்வளத்தைச் சாற்றுபவரார் ? உலகிற்
பங்கமறக் கம்பன்றன் பாநயங்கள் சொல்பவரார் ?
எங்கள்மத மேன்மை இசைப்பவரார் ? வாதிப்
சிங்கம் இராகவன்றான் விண்பாய்ந்து சென்றபினே.

எந்தைக் கினிய மருமகனே என்னுடைய
புந்திக் கினித்துவந்த புத்தமுதே ! நீநினைத்த
விந்தைப் பெருங்கடலில் மேலுமெமை வீழ்த்தாது
சிந்தைத் துயர்க்கடலிற் சேர்த்த தழகேயோ.

மாடுமனை மக்களினும் மைத்துனனைப் பெற்றதுவே
ஈடிலதென் றெண்ணி யிருந்து மகிழ்ந்தேனே
தேடியுமென் அத்தை திருமகனை யான்காணேன்
நீடுலக மென்முன் இருளாய் நிறைந்ததுவே.

தென்சொற் கடல்பருகித் தெய்வமொழியிற் றிளைத்து
மன்சொற் கடலாடி மன்றிவரும் மாமுகிலே
இன்சொற் பொருட்பொழிவால் இராகவநீ ஈங்கிறைத்த
நன்சொன் மணிபொறுக்கி நாவலர்கள் வாழ்வாரே.

சின்ன வயதுமுதற் சிராகவ! நீசெல்
நன்னெறியே சென்று நலம் படைத்தேன் நாடறிய
'என்னருமை யம்மான்சேய்' என்றெனையும் போற்றினையால்
பின்னமுற என்னோ பிரிந்திங் ககன்றாயே.

ஏய்ந்ததமிழ் வாழ்வி லிருவே மொருவேமென்
றாய்ந்துபல ஒப்பை யறைந்து மகிழ்ந்தாயால்
போந்தனையே பொன்னுலகம் போகியாய் என்னைவிட்டு
வாய்ந்த பெருநா வலரா கவமணியே.

பன்னாட்கள் கொண்டு பலவாண் டழுதாலும்
செந்நாப் புலவனெங்கள் சிராகவன் திரும்பான்
பின்னு மவர்க்கவன்றன் பீடும் பெருமையுமே
மின்னாகி நன்னெறியே காட்டி விளக்குமரோ.

'உன்னுடையன்' என்ற உயர்மொழியே யோதியுடல்
மின்ன லெனநழுவி விண்ணகர்சென் றின்புற்றான்
தென்னுடைய சீர்த்தி திகழ்ரா கவன் கவிஞர்
மன்னுடைய காதைநமை வாழ்விக்க வல்லதுவே.

மதுரையம்பதித் திருவாளர் குமாரகவி

மு. நாராயணசாமிபிள்ளையவர்கள் இயற்றியது.

தொன்றுநிகழ் தமிழ்ப்பெருநூற்பொருளுணரவியலார்முன் றுணிந்தெப்போதும்
குன்றுநிகர் தமிழறிவு பலவித்தத்து மவர்திகைக்கக் கூற வல்லோய்!
மன்றுபுகழ் சேதுபதி உயராங்கின் தமிழ்த்தலைவ மன்றந்தா யந்தோ!
என்றுனையா மினிக்காண்போம் இராகவனே! தமிழ்க்கடலே ஈடில் லோனே!

திருவாளர் ச. சோமசுந்தரபாரதியார் M.A.,B.L. அவர்கள் இயற்றியவை.

அறங்கூறும் வள்ளுவனும் அருங்கவிசொற் கபிலனுமாம் அஞ்சா நெஞ்சத்
திறங்கூறும் கீரனவன் திட்பமதி யொட்பமிகத் திகழும் செஞ்சொல்
மறங்கூறும் பாவரசன் வண்புகழா ரிராகவப்பேர் வம்பக் கம்பன்
புறங்கூறும் பழியஞ்சும் புலவனைநம் தமிழிழக்கும் புதுமை என்னே !

தன்காலத் தமிழ்வானிற் புலமையொளித் தனிச்சுடர்நற் றகவார் கல்வி
மின்கால விளங்கியகார் மேதினியிற் பழையதமிழ் விழைவோ ருள்ள
நன்கால வரைநிலவ வரையாத கொடைப்பாரி பாட்டை நல்கித்
தென்காலன் அறத்தாணை திறம்பாமற் சென்றனன்சீர் இறவாச் செம்மல்.

விற்போரில் எதிர்த்தவர்தம் விறலழிக்கும் வீரனிரா கவன்போல் விஞ்சிச்
சொற்போரில் நிகரில்பெரு நாவலனும் இராகவன்நாம் துயரச் சென்றான்
கற்போர்வின் புலவர்சுவை கண்டறியாத் தமிழருத்தக் கருதியோ? நம்
அற்போரு மவன்அதனை அவர்க்குணர்த்து மருத்திகொலோ அறிகி லோமே.

அம்புவியாள் செம்பியர்மூ வரசர்தொழத் தமிழாண்ட கூத்தர் போலச்
செம்பியர்சீர்ச் சேதரசர் மூவர்முறை முதல்வரிசைச் சிறப்புச் செய்யத்
தம்புலமை வீறுபுதுச் சங்கச்செந் தமிழ்த்தலைமை தாங்கி ஓங்கிப்
பம்பிசையார் பாவலர் இராகவனார் பெருமையெவர் பகர வல்லார்.

அந்தம்அமு துண்பவரு மடைகின்றார் அழிவில்தமி ழருந்தி வாழ்ந்தேன்
செந்தமிழ்போல் தேவருணத் திதிப்பதுகொல்? தெரிவென்-எனச் செலவு
கொண்டான்

சந்ததமும் தமிழேபோற் றழைபுகழான் இராகவன்நற் சங்கத் தார்தம்
முந்தியிருந் தவைதோறும் பொருளுரைகள் முழங்குவதை முனியா னன்றே.

அண்ணாமலைபல்கலைக்கழகத்துத் தமிழாசிரியர்
ஸ்ரீ. இ. சே. வரதராஜையர் B.A. அவர்கள் இயற்றியவை.

சொல்லழகோபொருளழகோதொடையழகோபேரவையிற்சொற்போர்செய்து
வெல்லழகோ நூனயங்கள் மிகவிரித்துப் பதசாரம் மிளிரத் தீட்டிச்
செல்லழகோ மதிவளர்க்குஞ் செயலழகோ இராகவனின் செம்மை சான்ற
பல்லழகி லெவ்வழகைப் பகருவன்யான் பலரறப் பார்நீத் தாயே.

கோதுபதி யாதபுவிக் கொற்றவர்கள் அறம்வளர்க்கும் குறிக்கோள் கொண்ட
சேதுபதி மன்னரவைச் செம்புலவ னெனத்திகழ்ந்த செல்வா செம்பூ
மாதுபதி யடிமறவா மதிவலவ இராகவநின் வழிக்கொண் டாய்நீ
யாதுபதி வைகுந்த நன்னகரோ பொன்னகரோ இசைக்கிற் பாயே.

கற்றோருட் கற்றவர்கள் பேரவையோர் கருத்திலுறக் கரைவோர் என்னச்
சொற்றூரிங்கதற்கிலக்காச்சொன்மாரிபொழிந்தெதிர்ந்தோர்தொடைநடுக்கம்
உற்றாராய்த் தளர்ந்தொழிய வுயர்புலமைக் கொருவனென ஒளிர்ந்தா யுன்னைப்
பெற்றாரே பெற்றவர்கள் இராகவநீ எமைப்பிரிந்த பெற்றி யென்னே.

அத்தாணி தனிலுற்றோர் அசனிமுழக் கெனஅயிர்த்தார் அணுகி நோக்கி
வித்தார மண்டபத்தில் இராகவன்சொற் பொழிவுகண்டு வியந்து நின்றார்
எத்தாலும் வெலற்கரியா னிவன்புலமைக் குவமையிலை யென்னத் தேர்ந்தார்
அத்தாவுன் சொல்லாற்றல் அவனியுளோ ரினிக்கேட்ட லமையா தந்தோ.

தண்டமிழ்வா ணரைப்புரக்கும் தகவினராஞ் சேதுபதி ஸமஸ்தானத்தில்
வண்டமிழ்தேர் தருபுலவ! வணிகர்குல மணியண்ணா மலையென் றோதும்
கொண்டல்தரு கலைக்கோயிற் குள்ளிருந்து பணியாற்றிக் கோதில் பன்னூல்
கண்டருளிச் செய்தனைநீ காசிபன்கால் வழிவந்த கவிஞ ரேறே.

உற்றறியு முல்லைதனக் குருள்சகட மளித்தவள்ள லுயர்வார் காதை
நற்றமிழில் முதற்பாவில் நல்கியநீ யுயர்காளி தாசன் செய்த
கற்றவர்கள் புகழ்ந்தேத்துஞ் சகுந்தலைதன் கதைதமிழிற் கவினச்செய்தாய்
மற்றுமுறை நடைபலவும் வகுத்துயர் இராகவநீ மறைந்ததென்னே.

கஞ்சத்தான் செய்யுடம்பு கவினழிந்து நிலைகுலைதல் கருத்து வைத்தே
நெஞ்சத்தாற் பனுவல்பல இயற்றியிசை யுடல்நிறுவி நீள்வான் சென்றாய்
வஞ்சத்தானிராகவநின்றன்னுயிரைத்தென்றிசைக்கோன்வலிதிற்கொண்டான்
விஞ்சத்தா னொருவரிலா விழுப்புலமை மிக்குயர்ந்த விபுதர் கோவே.

ஆராயும் வன்மைக்கு நின்வஞ்சி மாநக ராங்கமையும்
சீரார் குறுந்தொகைப் பேருரை செப்புநின் திண்புலத்தைப்
பாராண்ட பல்லவர் மெய்த்தோற்ற மாய்ந்த பரிசெவரும்
நேராக ஆயும் முறைகாட்டும் ராகவ நின்மலனே.

அந்தணன் செந்தமிழ்ப் பாவலன் காசிப னூர்மரபில்
வந்தவன் சேது பதிமன்னர் பேரவை வண்புலவன்
செந்திரு மாலடிக் கன்பன் பலநூல் செழுந்தமிழிற்
றந்த இராகவன் ஆசா னடிமலர் சார்ந்தனனே.

---

மதுரையிலுள்ள இராமேசுவரதேவஸ்தானபாடசாலைத் தமிழ்ப்பேராசிரியர்
ஸ்ரீ. T. N. அப்பனையங்காரவர்கள் இயற்றியவை.

இன்று தமிழணங்கின் இன்சேய் தணந்திடுநாள்
இன்று புலவர் இரங்கிடுநாள்—இன்றே
புவிவாழ் விகந்து புகழ் ராகவமால்
திவிவாழ் வுகந்த தினம்.

உண்மையாற் கல்வியால் உய்த்துணர்வாற் கேள்வியால்
திண்மையாற் பேசுந் திறமையால்—வண்மையால்
பண்தேர் கவிநலத்தாற் பாருலகில் யாரொருவர்
உண்டே இராகவனுக் கொப்பு

இல்லா வுலகத்தில் எங்கும் இராகவன்றான்
கல்லாக் கலையென்னக் கற்றுயர்ந்தான்—சொல்லாலே
மூவுலகும் வெல்வான் முதுநீர் விரிபாரின்
ஆவி பிரிந்தகன்று ளல்.

செந்தமிழாங் கன்னியினைச் சீர்மதுரைச் சங்கத்து
மூந்து வளர்த்த முதற்றாய்மன்—சந்ததமும்
தென்னாட் டணியாத் திகழ் ராகவகவிஞன்
பொன்னு டலங்கரித்தான் போந்து.

சேது பதிவளர்க்குந் தீந்தமிழைத் தேவரிறை
ஓது கெனக்கேட் டுவப்பானோ—பூதலத்துச்
சங்கத் தமிழ்நிதியாச் சாரும் இராகவனை
இங்கு வருகென் றிரந்து.

ஆனாத தெய்வ அமுதூட்டித் தாமவன்வாய்த்
தேனார் தமிழுண்டு தேக்கிடுவார்—வானாடர்
இன்பத்துக் குண்டோ இணை ராகவற்பிரிந்தார்
துன்பத்துக் குண்டோ துணை.

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச்செந்தமிழுதவிப் பத்திராசிரியர்
T. K. இராமாநுஜையங்கார் இயற்றியவை.

நயித்துருவ காசிபகோத் திரம்விளங்க வுதித்தபெரு நாவல் லோனே!
வயிர்த்துவரு பகைவர்களும் மதித்தொழுகும் நட்பினரும் மகிழ்ந்து போற்ற
உயிர்த்தொகுதிக் குறுதிபுகல் நூல்பலவும் ஓர்ந்தினிதா உரைக்கும் நம்பி!
உயிர்த்தயாளமைப்பிரிந்தனைக்கழகேசோ ராகவப்பேர் ஒளியான்மிக்கோய்!

தென்முக்வை நகராமுங்கச் செந்தமிழ்த்தாய் தனியேங்கச் சேது நாட்டுத்
தன்மதுரை சண்முகரா ஜேசனுள முருகவுயர் தமிழ்நாட் டுள்ள
நன்மதுர கவிவாணர் நனியிரங்கத் திருநாடு நண்ணும் நின்போல்
வன்மனது படைத்தவரும் உளர்கொல்லோ ! ராகவப்பேர்மறையோரேறே !

நேயமிகும் மாதுலரோ டுரையாட நினைந்தனையோ நிகரிலாத
சேயனைய ராஜரா ஜேச்சுரனைக் காணுதற்குச் சிந்தித் தாயோ
ஆயபுகழ்ப் பாற்கரனுர் உறைசூழல் கண்டடையச் சூழ்ந்தாய் கொல்லோ
சேயதிரு நாட்டிடைநீ செல்லவிழை காரணமென் செப்பு வாயே.

ஆருயிர்கட் கெல்லாம் அபயந்தந் தின்பளிக்கும்
சீருடைய நாடு திகழ்சேது நாடென்பர்
ஏருடைய அந்நா டிரங்கப் பிறநாட்டுப்
பேருமிது பெருமை யாமோ ? பெரியோனே !

எல்லாப் படியாலும் ஏற்றமுள தர்ச்சையென
நல்லோர் நவில்வாது நன்கறிந்து நாளும்
புல்லாணிப் புண்ணியன்செம் பொன்னடிகள் போற்றியநீ
சொல்லாய் பரலோகஞ் செல்லத் துணிந்ததுவே.

கானிருக்கும் பசுந்துழாய்க் கரியமுகில் உவந்துறையும்
வானிருக்க உனைவிட்ட வைபகத்தார் மதியென்னே
தேனிருக்கும் நறுஞ்சுவைசால் சீர்க்கம்பன் செய்கவிகட்கு
ஊனுருக்கி உயிருருக்கும் உரையினியார் உரைப்பாரே.

சங்கத் தொகைநூலிற் சாலப் புதைபொருள்கள்
எங்கட் கிதயத் திருளகல ஈந்தனைநீ
சங்கத் தமரர்பிரான் தாளே தொழும்புலவோர்
தங்கட்கும் நல்கத் தனிவிசும்பு சார்ந்தனையோ.

நந்தா வுரைவழங்கு நாவீறன் வந்தானென்
றந்தாமத் தார்புலவ ரானோர் மகிழ்ந்தனரோ
சிந்தா மணிவழங்கு தேவனெதிர் கொண்டனனோ
எந்தாய் ! நீ விண்ணேற எண்ணியது நன்க.

கால இருளிற் கரந்தபொருள் பற்பலவும்
காலும் மதியொளியாற் காட்டிக் கடல்புடைசூழ்
ஞாலமிசை ஆராய்ச்சி யாளர்பலர் நண்ணுதற்கு
மூலமாய் நின்ற முதல்வா ! மறைந்தனையோ.

நெடுந்தொகையாக் குறுந்தொகையும் நிலவவுரை விரித்தோனே !
கடும்புடனே புலவர்சூழாம் களிக்கிதம் வழங்குகொடை

மடம்படுசீர்ப் பாற்கரவேள் மகிழ்புலவ! கலைத்தெய்வம்
நடம்பயிலும் நாவுடையாய்! ராகவனே! நண்ணுயோ.

வேத முதலாய் விளங்குதிருப் புல்லாணி
மாதவன்பால் என்றும் வழுவாத பத்திபுரி
சேது பதிகள் திருக்குலத்தோர் கொண்டாடும்
மூதறிஞ! நின்வாய் மொழியென்று கேட்போமே.

பத்திவெள்ள மென்றே பகரும் இராமகதை
முத்திநெறி யொன்றே மொழிகீதை பாரிகதை
நத்துபுவி யேழுபத்து நன்கியல் சாகுந்தலமும்
நித்தமுரை செய்யஇன்னும் நீநிலத்து வாராயோ.

தென்னர் மதுரை திகழும் தமிழ்ச்சங்கம்
மன்னுபொழிற் சென்னை வளர்பல் கலைக்கழகம்
கன்னனெனும் அண்ணு மலைபல் கலைக்கழகம்
என்னுமிவற் றுன்போல் இயற்பணியார் செய்வாரே.

செந்தமிழ்ப்பத்திரிகைதரும்முதற்றுயாய்ச்சீர்த்தசொல்லின்செல்வனுகி
வந்தபெரும் புகழ்ப்பாஷா கவிசேக ராரியநீ வான்புக் காலும்
இந்தநிலத் தென்ஞான்றும் இயலிசைநாடகமெனவே இயம்ப நின்ற
முந்துதமிழ்ப் பயிரொடுநின் குலப்பயிரும் தழைய அருள் முகிலாய் வாழி.

---

மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர்

ஸ்ரீ. வித்வான் R. வீரராகவையங்காரவர்கள் இயற்றியவை.

சீராரும் நயித்துருவ குலம் விளங்கச் செந்தமிழோ டாரியமும் வாழ வந்த
பேராதபுகழ்மேயஇராகவப்பேர்ப்பெருங்கவிஞன்றிருநாடுபெட்பச்சென்றுன்
ஆராத பேரன்ப ரவன்சுற் றத்தா ரனைவோரும் அலமந்து நொந்தார் அந்தோ
வாரிநின்சொற்புலவீரண்ணுசெய்வாமின்றமிழுன்னையின்றுயரமியம்பலாமோ.

தெருள்தரு மொளிர்சொற் கொண்டு திண்ணிதாய் அகத்திற் றூங்கும்
இருளற எறிந்து நின்ற இராகவ இரவி எஞ்ச
மருளுபுன் மாலைத் தாகி மாண்பொருட் காட்சி யின்றி
இருளிடை இனிவை கிற்றே இன்றமி ழுலக மம்மா.

செந்தமிழேகுலதனமாக்கருதுசீலச்சேதுபதிபாற்கரப்பேர்ச்செங்கைவள்ளல்
சிந்தைமகிழ் செகராச ராசன் நல்கு திருமேவு ஷண்முகரா ஜேசன் போற்ற
முந்துபெருங் கலைபரக்கிற் றலைவனுகி முதுமறைநேரிராமகதை முன்னுகீதை
சந்தமிகு புகழ்ப்பாரி காதையோடு தக்கபுவி யெழுபஃதும் தந்த வள்ளால்!

சிந்தைக் கினிய செவிக்கினிய செஞ்சொல்லெம்
புந்திக்குள் இன்பம் புகட்டிப் பொருந்திடநீ
எந்தம் செவிக்கமுதை ஈந்தே இனிதுவந்தாய்
அந்தோ நடந்தனையோ அந்தாமம் ஆதரித்தே.

அருமறை யிசைப ராவி யணிவிசும் பமரர் சூழும்
திருமணி மண்ட பத்திற் றிருமகள் தேவன் நின்வாய்
தருதமிழ் இயல்கள் பற்பல் செவிகளாற் சால மாந்திப்
பெருமகி ழுவகை பூப்பப் பேணிநீ பெட்டாய் போலும்.

பம்பும் குறுந்தொகையிற் பல்பொருளும் தோன்றல்சால்
கம்பன் கவியிற் கருதும் கவின்பலவும்
சங்கத் தமிழ்மணந்த நின்வாயாற் சாற்றிடநீ
இங்கண் அடையாயோ இன்சொலமு தீயாயோ.

---

மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர்
சு. நல்லசிவன்பிள்ளையவர்கள் இயற்றியவை.

மாராம நாதபுர சமத்தான வித்வசிகா மணியாய் வாழ்ந்த
சீராம னடிபரவும் இராகவப்பேர் புனைந்தகலைச் செல்வ மேமெய்
சோராமல்வார்த்தையொன் றுஞ்சொல்லாமலுறவினர்க்குத் துன்பமொன் றுந்
தாராம லுவர்ப்பெவர்க்குஞ் சாராமற் சகவாழ்வைத் தணந்தா யந்தோ.

பாற்கரப்பேர் வேந்தினுடன் இராஜரா ஜேச்சுரப்பேர் படைத்த வேந்தும்
வேற்கரவேள் பெயர்மேவு நாகநா தேந்திரனும் வேந்தும் நின்னை
மாற்கடவு ளெனப்போற்றச் சமத்தான மழகுசெய்த மறைவல் லோனே
காற்கடல்சூழ் புவிவாழ்வைத் துறந்தனையோ காண்பதெந்த நாளோ நின்னை.

நன்னூலா ருரைத்தநல்லா சிரியரிலக் கணமனைத்தும் நாட்டில் வாய்ந்து
பன்னூலு மெல்லைகண்டு பாவலர் சிகாமணியாய்ப் பாரில் வாழ்ந்த
முன்னூலின் மணிமார்பா இராகவப்பேர்ச் சொன்முகிலே முகவை வாழ்வே
யென்னூலா சிரியநினை யிழந்துலக முறுதுயருக் கெல்லை யுண்டோ.

இந்நாட்டுப் புலவர்செவிக் குணவளித்தல் சாலுமென்றே விமையா நாட்டப்
பொன்னாட்டுப்புலவர்செவிக்குணவளிக்கப்புகுந்தனைநின்போல்வார்தம்மை
யெந்நாட்டுப் பெறுவம்நினை யிழந்துய ராற்றுவமோ இகத்தோர் போற்றுந்
தென்னாட்டுக் கவியரசே! தாயிழந்த சேய்போன்று திகைக்கின் றேமே.

செந்தமிழ்க்கட்டுரைவரைதல்சொற்பொழிவாற்றுதல்சிறந்தசெய்யுள்யாத்தல்
அந்தமிழ்நூ லாராய்தல் ஆசிரியப் பெருந்தகையா யமர்ந்து கற்கும்
மைந்துளமா ணவர்தெளிய நூல்பயிற்ற லின்னபல வன்மை யாவும்
முந்தவொருங்கமைந்தகல்விக்கடலேயென் றுன்னமிழ்தமொழிகேட்போமே.

மாதாவை முனமிழந்துன் றுணைகொண்டு மகிழ்ந்தவுன்றன் மைந்த னுன
வேதாவின் குலவிளக்காய் விளங்கும் இராமானுஜப்பேர் வித்வ ரத்நம்
சேதாவின் கன்றென்ன நினையிழந்து புலம்புநிலை செப்பற் பாற்றே
போதாருங் குழலாருன் புத்திரிய ருறுதுயரம் புகல லாமோ.

நின்னருமை யம்மான்சேய் நின்பெயர்சேர் கவியரசு நிருபர் போற்றும்
அன்னகலைக் கடலளித்த சேஷாத்ரி யெனும்பெயர்சே ரண்ண லாம்நின்
றன்னுரிமை மருகனிவர் நினைநினைந்து நினைந்துருகித் தங்கண் ணீராற்
பொன்னனைய வுடனனைக்கும் புலம்புகண்டிங் குருகாதார் புவியில் யாரே.

இறப்புலகி லியல்பெனினு மின்புலமைத் திறத்தினுறு மேற்றந் தன்னைப்
பிறப்பிலரி தாயவுன்றன் பிறப்பினைப் பேசுந்திறனைப் பெருநீர் ஞாலம்
மறப்புறுமோ பெறற்கரிய மாமணியைக் கடலுகுத்த வண்ணம் போலாம்
அறப்பெரிய துயர்க்கடலி லாழ்ந்தேம்நின் பிரிவையெங்ங னாற்றுவேமோ.

ஒப்பரிய புகழறிவுச் சுடர்மறைந்த தெனக்கடல்சூ ழுலக மோத
இப்புவிவிட் டகன்றனையே யெப்பிறப்பி லுனைக்காண்பே மெந்தா யெந்தாய்
மைப்புயனீர் மழைபொழிதன் மானமொழி மழைபொழியும் வானே மாழ்கி
ஐப்புகுது மீயேபோன் மயங்குமெமக் கோர்மாற்ற மறைந்திடாயோ.

ஆங்குவரும் பொழுதெல்லா மருகிருந்தெற் களிக்கு மரசே யுன்றன்
பூங்கமலைவாழ்மனைக்குப்போந்துணவுகொளும்போழ்துபுரிவோ டின்றென்
பாங்கிருக்கக் காண்கிலனே பகன்மலரும் பங்கயத்தைப் பழித்தெப் போதும்
ஈங்குமலர் நின்வதன மினிக்காணு நாளுமுண்டோ வினையிலாதாய்.

வியவருடம் ஆனிமதி யிருபானே ழெனுந்திகதி வியாழன் பூர்வத்
தியல்திதிபத் துடனுருமூன் றிந்திரநா ளிந்நாளோ வேந்தா லிங்கு
வயமருவு கேசரிபோற் றலைநிமிர்ந்து பிரசங்க மாரி பெய்யும்
செயன்மிகுந்த நினையிழந்து தேயமெலாந் துயருழக்கச் செய்த நாளே.

அந்தோநின் றனையிழந்த சுதனையெழிற் புதல்வியரை யன்னோ ரீன்ற
சந்தாரும் பவுத்திரரை யுறவினரைத் தமிழுலகைத் தாய்போற் றாங்கி
முந்தார்வத் துடனிலவணி புரந்ததுபோற் றெய்வீக முறையிற் காத்தங்
கந்தாமத் திருத்துளவோ னருட்பதத்திற் சாந்திநிலை யடைந்து வாழி.

மதுரைத்தமிழ்ச்சங்கக் கலாசாலையாசிரியர்
திரு. K. சிவஞானம்பிள்ளையவர்கள் பாடியவை.

சீராருஞ் சேதுபதி ஸமஸ்தான மகாகவியாய்ச் சிறப்புப் பெற்றுப்
பாராரும் புகழ்ந்தேத்தும் இராகவப்பேர்ச் சீமானே பாரின் நீங்கி
ஏராரும் புல்லணையி லிருக்குமிறை யடிசேர்ந்தா யென்று கேட்டு
காராசந் தனைக்காய்ச்சி நடுச்செவியில் நுழைத்தாற்போல் நடுக்குற்றேமே.

மன்னுகும் பாற்கரவேள் முகவைதனிற் றமிழ்ச்சங்கம் வைத்த ஞான்று
நன்னுவீ றுளநின்னை யாசானு கெனச்சிறப்பு நல்கி வைத்தான்
அன்னுளி லடியனையும் மாணவனு வுவந்தேற்றங் கறிவு நூல்கள்
சின்னுள்கள் பயிற்றுவித்தாய் அன்னதனுற் புலவனெனச் சிறந்து ளேனே.

மன்னர்மன்னர் போற்றுதிருச் சேதுபதி மணிவாசல் மாவித் வானுய்ச்
சொன்னயமும் பொருணயமுந் துலங்குறவே கவிசொல்லுந் தூயோ னுகிப்
பன்னயங்கொள் பிரசங்கம் பாரிலுளோர் கொண்டாடப் பண்பாய்ச் செய்யும்
நன்னயங்கொள் இராகவப்பேர் நாவலனே! எங்குற்றுய் நவிலு வாயே.

தூயவர்கள் போற்றிசெயும் அரங்கத்திற் கண்வளருந் துளவோ னுன
மாயவன்சீர் மறவாத மாண்புமிகும் இராகவப்பேர் மதிவல் லோனே
பேயுடனே பழகுறினும் பிரிவதரி தென்றுலகோர் பேசா நிற்பர்
தாயினுஞ்சீர் தகவுடையாய் நின்பிரிவெம் மன்னவரால் சகிக்கற் பாற்றே.

சண்முகரா ஜேச்சுவர சேதுபதி சபையினிலே சார்ந்து நீதான்
ஒண்மைபெறுகவிகள்சொலிப்பொருள்கூறிப்புலவரெலாமுவப்பச்செய்வாய்
வெண்மையுள கவிசொலுவார் திறங்கண்டு மவர்கவிக்கு மேன்மை யாகத்
திண்மையுளபொருளுரைப்பாய்இராகவனேநின்பெருமைசெப்பற்பாற்றே.

மன்பாண்டித் துரைமகிபன் மதுரையிலே தமிழ்ச்சங்கம் வைத்த ஞான்று
தென்பாண்டி நாட்டில்வளர் தீந்தமிழை யுலகிலுளோர் தேர்ந்தே யுய்தற்
கன்பாலே செந்தமிழ்ப்பத் திரிகைதனை நிறுவ அதன் பூசா னுகி
இன்பாலேய் கட்டுரைக ளெழுதியுய்த்தாய் உலகிரங்க ஏக லாமோ.

ஏடாரும் அலங்கலணி சேதுபதி வேந்தரெலாம் இணையி லாத
தோடாக்கள் நினக்களித்தும் சொல்லரிய பரிசீந்தும் துலங்கச் செய்தார்
கோடாத செங்கோலான் சண்முகரா ஜேச்சுரனீ குறித்த வெல்லாம்
வாடாத படிதந்தான் என்னகுறை வானேக வமுந்து வாயே.

மன்னவரில் நீதியுள சண்முகரா ஜேசனுளன் மாண்பு வாய்ந்த
நன்னயங்கொள் நாட்டிலருங் கல்விசெல்வம் நினக்குண்டு நன்மை மிக்குச்
சொன்னபடி கேட்கின்ற மகார்மருகர் தாமுண்டு தூயோய் நிற்கிங்
கென்னகுறை இராகவநீ இம்பர்விடுத் தும்பருற இயம்பு வாயே.

பாற்கடலிற் பள்ளிகொளும் பரமனடி மறவாத பண்பா வள்ளற்
பாற்கரனு மிராஜரா ஜேச்சுரனும் தினகரனும் பரிவாய்ச் சொர்க்கம்
வீற்றிருப்பா ரென்றதனைப் பார்ப்பதற்கோ அன்னவர்கள் விரும்பு நூல்கள்
சாற்றுதற்கோ சென்றிட்டாய் ராகவப்பேர் மதிவல்லோய் சாற்று வாயே.

சக்கரத்தான் திருவடியே தாரகமாய்ப் போற்றிவருஞ் சதுர ரான
தக்கவர்கள் புகழ்ந்தேத்தும் இராகவப்பேர்ச் சீமானே தரணி தன்னில்
ஒக்கலழ மக்களழ வுலகினர்தா மழுதிடநின் உடலை நீத்தாய்
எக்கலையும் பெற்றனைநீ நிறையாயுள் பெறாத தென்னே இயம்பு வாயே.

தெய்வமறை சைவமறை திருமுறைகள் முதலியவை தேர்ந்தே யார்க்கும்
ஐயமறப் பொருளுரைப்பாய் பரனடியார் குருபூஜை அன்பாய்ச் செய்வாய்
உய்யுநெறி யிதுவெனவே ஆவினுக்கும் ஆதுலர்க்கும் உணவீவாய்நன்
மெய்ம்மறையோர் குலக்குரிசில் இராகவநீ யெங்குற்றாய் விள்ளு வாயே.

மனத்தாலும் வாக்காலும் மரபாலும் நினைப்பிரியா மாண்பு வாய்ந்தோன்
தனத்தாலும் கல்விநலம் சாந்தகுணம் இவற்றாலுந் தாழ்வி லாதோன்
இனத்தாலுஞ் சிறந்தவுன்றன் மாதுலன்சேய் நின்பிரிவால் எங்கு கின்றான்
கனத்தான்மிக் காயவன்றான் தேறவொரு நன்மாற்றங் கழறாய் அந்தோ.

ஆரியமுஞ் செந்தமிழும் ஆங்கிலமும் தேர்ந்துணர்ந்தோய் அறிஞர் தம்முட்
கூரியசீர் மதியுடையாய் இராகவப்பேர்க் குரிசிலுன்றன் குறிப்பை யோர்ந்து
சீரியநன் மார்க்கமதிற் செல்லுமிரா மாநுஜப்பேர்ச் செம்ம லென்றும்
பாரியொடும் மக்களொடும் பல்லூழி வாழவருள் பாலிப் பாயே.

முன்னு வியவருடம் ஆனிமதி மூவொன்பான்
துன்னு குருவாரஞ் சுக்லபக்கம்—மன்னும்
திரயோ தசியே செயராக வன்றான்
திருநாடு சேர்ந்த தினம்.

இராமநாதபுரம் இராஜாஸ் ஹைஸ்கூல் தமிழாசிரியர்
ஸ்ரீ. ஜெ. நாராயணசுந்தரம் ஐயங்காரவர்கள் இயற்றியவை.

நாரார் தருபாற் கரன்ராச ராசே சன்சண் முகராசன்
பாரா தரிக்க வருசேது பதிமா மரபின் இம்மூவர்
பேரா ரவைநா யகமணியே பேணும் பெரிய ராவகப்பேர்ச்
சீரா ளாவம் புவிநீத்தாய் செயலொன் றுண்டோ செப்பாயே.

முன்னோர் நூலுக் குரைகண்டாய் மூவாச் செய்யுள் நூல்வகுத்தாய்
பின்னோர் செவிக்கின் னமுதளித்தாய் பேரா ராய்ச்சித் துறைவளர்த்தாய்
இன்னோ ரன்ன செயலெல்லாம் என்னோ கைவிட் டேகினையால்
அன்னோ வரரா கவமாலே யாரே பொறுப்பார் நின்பிரிவே.

சாகுந் தலநூல் தந்தாய்க்குச் சாகுந் தலமும் புவியாமோ
வேகுந் தலநின் னுடலைக விட்டுச் சென்று யிராகவநீ
ஏகுந் தலமிக் குயர்வாமா லென்றே கொளினு முலகெல்லாம்
நோகுந் தலமா நின்னலனே நோக்கத் தகுமோ நுவலாயே.

ஈறெய் திலதா மிசையெய்தி யிராக வப்பே ரிவண்வைத்தாய்
வேறெய் தியபன் மொழியாரும் வியக்கும் படிமே டையிலேறி
மாறெய் துரிங் கில்லாதே வள்ளற் றமிழ்ச்சொல் மழைபொழியும்
வீறெய் தியநின் வளநாவை வெந்தீச் சுவைக்க விட்டாயே.

சேதுக் கதிபன் சண்முகரா சேசன் சபையிற் சிறந்துதமிழ்
மாதுக் கணியாம் நின்பாடல் வளங்கூ றுரைகாண் வருநாவாற்
காதுக் கினிதா யென்பாடற் கவினுங் காட்டிக் களிசெய்வாய்
ஏதுக் குலகை நீத்தாயால் இராக வப்பே ரேந்தாலோ.

வியநா மத்தாண் டானிமதி வெந்தீக் கேட்டை யம்புவிநின்
வியநீங் கத்துன் புறுமானி மிகுமிக் கேட்டை விளைத்தனவோ
நயமார் பொன்னுன் பெரும்புலமை நாடித் தன்று ளழைத்தேற்க
அயல்மே வினையோ இராகவப்பே ரண்ணு லென்னோ வகன்றாயே.

தண்டமிழு மாரியமும் சற்சமய சாத்திரமும்
மொண்டமிழ்தம் பெய்யு முகில்நீர்மை—கொண்டு
புலந்தழைக்க விங்குப் புரிராக வன்மேற்
கலந்தழைக்கச் சென்றான் களித்து.

*மாஜி பாலபாடசாலைப் பரிசோதகர்*

**ஸ்ரீ. வே. முத்துஸாமி ஐயாவர்கள் M.A., L.T. இயற்றியவை.**

*தென்னவன்பாண் டியநாட்டிற் செந்தமிழ்மா தென்றுமுள செவ்விக்கேற்பத்*
*தென்னவரா யன்புதுவைத் திருப்பதியில் வைணவச்சீர் சிறந்து வீறும்*
*தென்கலையி ராமாநு ஜையங்கார் தவமகவாத் திகழத் தோன்றித்*
*தென்முகவை வேத்தவைவித் துவமாமன் பாற்கலைகள் தெளிந்தாய் அந்நாள்.*

*தென்மொழியின் இனியஇலக் கியஇலக்க ணக்கடலுள் திளைத்தே யாடி*
*நன்மொழியாம் வடமொழியின் நயங்கண்டு மேன்மொழியா ஞாலம் போற்றும்*
*மன்மொழியிற் றேர்ச்சிதக வாய்ந்தறிவின் மலையேபோல் வளர்ந்தாய் கீழோர்*
*புன்மொழியே பயின்றிலைபேர்ப் புலவர்நா டேன்புகுந்தாய் புகலு வாயே.*

*மதிநுட்பம் நூலோடு மருவியநீ வளர்த்தபுது மதுரைச் சங்கத்*
*ததிநுட்ப ஆராய்ச்சி வளங்காட்டிச் செந்தமிழின் ஆசா னாகி*
*இதிநுட்ப மெனப்பலகட் டுரையுங்கல் வெட்டுரையும் எழுதி யீந்தாய்*
*கதிநுட்பம் காண்டற்குத் திருநாடு சென்றனையோ கலைஞர் ஏறே.*

*அணியணியா அணியழகும் ஆர்ந்தபொரு ளழகுஞ்சொல் லழகுஞ் சேர*
*மணிமணியாக் கவிபாடும் மணிநாவெங் கே? நலரா மாய ணத்தில்*
*திணிதிணியாப் பொருள்வளங்கள் செகம்திக்கமி கவிரிக்கும் திருவாக்கெங்கே?*
*பிணிபிணியாற் றமிழுலகம் பேதுறநீ பிரிதலென்னே பேசு வாயே.*

*கன்னனையே நேராம்பாற் கரனுமிரா சேசனுநா கநாத சேது*
*மன்னவனும் மூன்றுதலை முறைமூன்று தலைப்புலமை வகித்து நின்றாய்*
*பொன்னிவளச் சோணாட்டுப் புகலூவேந் தவைக்களத்துப் பொருவில் சீர்த்தி*
*மன்னியவொண் கூத்தனென மதித்தனம்வன் கூற்றுவனால் மறைந்தாய் அந்தோ.*

*உன்பெருமை யுணருகிலாய் எளியனையுன் மாளிகைக்கே யுவப்பொ டேற்றே*
*இன்புறுதா ழிசைக்கீதை பாரிவெண்பா புவியெழுப திராச ராச*
*மன்பெறுசீர்க்கோவைசெவிக்கிசைத்தென்னோடென்கவியவ்வள்ளற்கோமான்*
*தன்புறஞ்சேர் தகைநினைந்தென் என்புருக என்பிரிந்தாய்? சாற்று வாயே.*

*மாயவன்பொன் னடித்தொண்டு மகிழுமிரா கவப்பெரியோய் மகாமகோபாத்*
*யாயவனுன் நேயவன்நெஞ் சேயவன்முன் போயவனை யெண்ணி யேயோ*
*யாயபுகழ் ராஜேச பாற்கரரைப் பார்ப்பதற்கோ பரிந்து விண்ணிற்*
*போயவனும் தமிழ்ச்சுவையைப் புகட்டுதற்கோ எமைநீத்தாய் புவியைநீத்தே.*

*பகர்த்தா னரிதாம்பா ஷாகவிசே கரப்பட்டம் பரிந்து சென்னை*
*நகரத்தார் சகுந்தலமா தியவியந்தார் நயந்தளித்தார் நாட்டுக் கோட்டை*
*நகரத்தார் பெருஞ்சவையில் மகாவித்து வான்பட்டம் நல்கினார்முன்*
*அகரத்தார் எழுத்தமுத லாய்தலைமை புலவருளே அமைந்த ஐயா!*

தென்னால வாய்ச்சங்கம் திகழ்தருநக் கீரனெனச் சேது நாட்டு
மன்னும் மதுரைச்சங் கத்தாய்ந்த தமிழ்மாண்பும் செட்டி நாட்டு
மன்னுமண் ணாமலைபல் கலைக்கழகத் தமிழ்த்துறைச்சீர் வளர்த்த மாண்பும்
பண்ணாளிற் பன்னூலிற் பகர்வரிதே பழுத்தமுது பாவ லோனே.

பருமுத்தங் கொழிசேது பதியாசி னவைக்களத்துப் பாவாணா நீ
*ஒருமுத்தென் றெனைக்குருமுன்குறித்தவுடன்சாமியுமென் றுரைத்தசொல்லும்
†"பெருமுத்துச் சாமியம்" என் றென்பாவின் பாராட்டுப் பேசியுய்த்த
அருமைத்தாம்திருமுகமும்முன்னிற்கத்திருமுகம்சொல்அடைந்ததெங்கே.

பணக்கானம் விரவரையர் தசராவிற் கொற்றவைசீர் பரவு மன்பர்
கணக்கானம் சான்றவர்பல் குணக்கானம் அருள்பொழியும் கணக்கில்தெய்வ
மணக்கானம் கண்டருள்நீ மகளிரின்று வயிறலைத்து வாய்விட் டந்தோ
பிணக்கானம்பாடவைத்தாய்பெரும்புகழா லுயர்மலைமேற்பிறக்கம்போல்வாய்

சிலைகொண்ட சரவளத்தாற் சீராக வக்கோன்சீர் செகமுற் றென்னத்
தலைகொண்ட வுரைவளத்தாற்சகமுற்றும்தகவளித்தாய்தணந்தாய்இந்நாள்
நிலைகொண்ட அன்பொடுமுன் ஆசான்சேய் அம்மான்சேய் நெடுநாள் நோயக்
கலைகொண்ட ராவ்ஸாகிப் இராகவமால் முதலோர்கண் கலுழு மாறே.

நன்பாட்டுப் புலவ! உரை நாயகமே! பிரசங்க நாவ லாய்! யாம்
இன்பாட்டீ வருகவென இமையவர்முன் எதிர்ந்தனரோ இனிய மைந்தா!
அன்பாட்ட வருகவரு கெனவாணி வாரியெடுத் தணைத்திட் டாளோ
உன்பாட்டுக் கேட்பதினி உம்பரிலோ தமிழ்நாட்டின் ஊழ்தான் என்னே.

பாட்டில் உரையிற் பகரொணா உன்பாற் பலகலைச்சீர்
ஏட்டில் வரையில் எழுதொணா வாழி இரும்புகழின்
நாட்டினை நெஞ்சகம் புத்தகம் சித்திரம் நாட்டுவம் மேல்
நாட்டினின் றுசிநின் காற்கும் எமக்கும் நயந்தருளே.

---

* 1917-ஆம் ஆண்டில் கனம் ஸர் P.S. சிவஸ்வாமிஐயரவர்கள் தலைமையிற்கூடிய மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் 16-ஆம் ஆண்டுவிழாக்கூட்டத்தில் 'தமிழர்வீரம்' என்னும் பொருள்பற்றி யான் செய்த உபந்யாஸத்தை ஒட்டி என் ஆசிரியர் மஹாமஹோபாத்யாயஐயரவர்கள் 'முத்து' என்று என்னைப் பாராட்ட, அடுத்திருந்த ஐயங்காரவர்கள் 'சாமியும்' (சாமி—தங்கம்) என்று உடனே திருவாய்மலர்ந்தருளினார்கள்.

† என்[illegible] துதிக்கவி நூல்களைப் பாராட்டியருளிய சாற்றுக்கவிகளில் ஐயங்காரவர்கள், 'திருமுத்துச் சாமி செழுங்கவிக்குத் தூய - பெருமுத்துச் சாமியம் என்பேம்' என்று குறித்துள்ளனர்.

ஸ்ரீ:

# மதிப்புரை

பெரும்பாணாற்றுப்படையாராய்ச்சியும் உரையும்:—அண்ணாமலைபல்கலைக்கழகவெளியீடு. எழுதியவர்: பாஷாகவிசேகரர் மஹாவித்வான் ரா. இராகவையங்காரவர்கள். கிடைக்கும் இடம்: அண்ணாமலைபல்கலைக்கழகம்.

பெரும்பாணாற்றுப்படையென்பது தொண்டைமான் இளந்திரையனைப் பாட்டுடைத்தலைவனாகக்கொண்டு கடியலூர் உருத்திரங்கண்ணன் என்னும் புலவர்பெருமானால் இயற்றப்பட்டது. சங்கமருவியதொகைநூலாகிய பத்துப்பாட்டுள் ஒன்று; பரிசில்பெற விரும்பிய பாணன் ஒருவனை அது பெற்றானொருவன் தொண்டைமான் இளந்திரையனிடத்தே ஆற்றுப்படுத்தியதாகப் புனைந்துரைப்பது. அடியளவாற் பெரியதாதலின் இதனைப் பெரும்பாணாற்றுப்படையென்பர் ஒருசாரார்; பெரும்பாணச்சாதியான் ஒருவனை ஆற்றுப்படுத்தியதாதலிற் பெரும்பாணாற்றுப்படையாயிற்றென்பர் இவ்வாராய்ச்சியாளர். இவ்வாராய்ச்சி பல அரியவரலாற்றுச்செய்திகளைத் தெளியவிளக்குவது; இவ்வுரை பலப்பல அடிகளுக்குச் சீரியபொருளும் பதசாரமும் கருத்தும் விரித்துச்செல்வது.

இவற்றுள் மகாவித்வான் ஐயங்காரவர்கள் தொண்டையர் பல்லவர் திரையர் என்ற பெயர்வரலாறுபற்றி இதுவரை புலவர்கள் கூறிவரும் கூற்றும் பெரும்பாணாற்றுப்படையுட் சில அடிகளுக்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் வரைந்தபொருளும் முதலியவற்றை வரைந்து அவற்றொடு மாறுபட்ட தம் கூற்றையும் தாம் கூறும் பொருளையும் ஆதாரத்துடன் விரித்துள்ளார்கள். முன்னையோர் கூற்றொடு மாறுபட்டது; ஆசிரியர் நச்சினார்க்கினியருரையொடு வேறுபட்டது என்றுமட்டும்கொண்டு இவ்வாராய்ச்சியையும் உரையையும் கைவிடாது, ஐயங்காரவர்கள் கூறும் கூற்றும் உரையும் ஆகியவற்றின் இயைபும் பண்டைவரலாறுகளை ஐயங்காரவர்கள் ஆராயும் முறையாலும் அவர்கள்கூறும் புத்துரையாலும் கிடைக்கும் நயமும் ஆகியவைகொண்டு தமிழகம் இதனை ஏற்று இனிது நோக்குக.

சேரவேந்தர் செய்யுட்கோவை:— இதன் முதற்றொகுதி: திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகத்தின் முதல் வெளியீடு. இரண்டாந்தொகுதி: அப்பல்கலைக் கழகத்தின் நான்காம்வெளியீடு. இக்கோவையைத் தொகுத்துதவியர்: திரு. ராவ்ஸாஹிப். மு. இராகவையங்காரவர்கள். முதற்றொகுதியின் விலை. ரூபா. 4—8—0. இரண்டாந்தொகுதியின் விலை ரூ. 4—8—0. கிடைக்கும் இடம்: திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகம்.

பழந்தமிழரசருள்ளே சேரர் மிகமிகத் தொன்மைவாய்ந்தவர். அவரை அறியாத தமிழர் இல்லை. அவ்வரசரில் தன்னேரிலாத தமிழ்ப்புலவராய்க் கவியரங்கேறினாரும், 'செவ்விய மதுரஞ்சேர்ந்த நற்பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல்வவ்விய கவி'களால் பாராட்டப் பட்டோரும் பலர். அவர் பாடிய பாடல்களும், அவர் பெற்ற பாடல் களும் அவர் வரலாறுகளும், அவர் நாடு நகர்மலை முதலியவற்றைப் பற்றிய செய்திகளும் தமிழ்நூல்களுள் ஆங்காங்குச் சிதறிக்காணப் படுகின்றன. அவற்றையெல்லாம் காலமுறைப்படி சங்ககாலப் பகுதி இடைக்காலப்பகுதி பிற்காலப்பகுதி என மூன்று தலைப்பின் கீழ்த்தொகுத்துச் சங்ககாலப்பகுதியைத் தன் முதற்றொகுதியா லும் இடைக்கால பிற்காலப்பகுதிகளைத் தன் இரண்டாந்தொகுதி யாலும் வெளியிடுவது இச்சேரவேந்தர்செய்யுட்கோவையென்பது.

இதன் முதற்றொகுதியுள் அகநானூறு முதலிய பதின்மூன்று பழந்தமிழ்நூல்களிலிருந்து 341 பாடல்கள் எடுத்துத் தொடுக்கப் பட்டுள்ளன. அவற்றுள் சேரவேந்தரைப் பிறர் பாடிய பாடல்கள் 135. சேரவேந்தர் இயற்றியபாடல்கள் 76. சேரருடைய நாடு நகர் மலை முதலியவற்றைப்பற்றியபாடல்கள் 47. சேரர்கிளையினரைப் பாடிய பாடல்கள் 50. சேரநாட்டுப்பகுதிகளை ஆண்ட வேற்றரசரைப் பாடிய பாடல்கள் 33. பாடல்பெற்ற சேரவேந்தர் பத்தொன்பதின் மர். பாடிய சேரவரசர் எண்மர்.

இரண்டாந்தொகுதியுள் சேரவரசர் இயற்றியனவாக 251 செய்யுட்களும் சேரவேந்தர்மீது பாடப்பட்டனவாக 60 பாடல்க ளும் அவருடைய நாடு நகர் தலங்களைப்பற்றியெழுந்தனவாக 180 பாசுரங்களும் அவர் வரலாறுநுவலும் 370 பாக்களும் அநுபந்த மாகச் சேர்க்கப்பட்ட சிலகவிகளும் காணப்படுகின்றன.

இவ் விரண்டுதொகுதியும் அவற்றுள் பயின்ற பாடல்களுக்கு விளக்கமான குறிப்புரையும் இன்றியமையாத பொருட்குறிப்பகராதி முதலிய துணையுறுப்புக்களும் உடையவாக நல்லகாகிதத்தில் செவ்விய எழுத்தில் திருத்தமும் அழகும் அமைய அச்சிடப்பட்டு

பல ஆண்டுகள் பல நூல்களைப்படித்து ஆராய்ந்து தெரிந்துகொள்ளவேண்டியவற்றையெல்லாம் சுருங்கிய கால எல்லையுள் எளிதில் அறிந்துகொள்ளும்படி உதவும் இத்தொகைநூல் தமிழரனைவர்க்கும் சிறப்பாகச் சேரநாட்டாருக்கும் பெரிதும் பயன்படுவது.

இவ்வரிய பெரிய செய்யுட்கோவையைத் தொகுத்து வகைப்படுத்துக் குறிப்புரை முதலியவற்றுடன் நல்கிய பெருந்தமிழ்ப் புலவரும் சரித்திர ஆராய்ச்சியில் வல்லுநரும் திருவிதாங்கூர்ப்பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியரும் ஆன திருவாளர் ராவ்ஸாஹிப் மு. இராகவையங்காரவர்களுக்கும், நன்கு அச்சிட்டு வெளியிட்ட திருவிதாங்கூர்ப்பல்கலைக்கழகத்தார்க்கும் தமிழ்மக்கள் என்றும் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையர்.

திருவாங்கூர்ப்பல்கலைக்கழகம் சில ஆண்டுகளில் பல அரிய பெரிய தமிழ்நூல்களைத் தக்கோரால் ஆராய்ந்து அச்சியற்றி வெளியிடுவித்துச் சிறந்ததமிழ்ப்பணியாற்றியுள்ளது. அது, மேலும் அப்பணிபுரிந்து நெடிதுவாழத் தமிழ்த்தெய்வம் அருள்புரிக.

---

கோசர்:-இது ஒரு சிற்றாராய்ச்சி; அண்ணாமலைபல்கலைக்கழகத்தமிழ்ப்பதிப்புத்தொடருள் ஒன்று. இதனை எழுதியவர்: பாஷாகவிசேகரர் மகாவித்வான் ரா.இராகவையங்காரவர்கள். கிடைக்குமிடம்: அண்ணாமலைபல்கலைக்கழகம்.

கோசர் என்பார் ஒருவீரர்குழுவினர். இவரைப்பற்றிப் பண்டைத்தண்டமிழ்நூல்களில் ஆங்காங்குப் பல செய்திகள் காணப்படுகின்றன. அவற்றையெல்லாம் தொகுத்துத் தாம் ஆராய்ந்து கண்டவற்றையெல்லாம் மகாவித்வான் ஐயங்காரவர்கள் இப்புத்தகத்து விரித்துள்ளார்கள். இதனுட் காணப்படும் முடிவுகளுட் சில இன்னும் ஆராய்ந்து தெளிவுபெறவேண்டியவாயிருப்பினும் இப்புத்தகம் கோசரைப்பற்றி ஆராயப்புகுவார்க்குப் பெரிதும்பயன்படும்.

கம்பர் கவிதைக் கோவை (முதற்பாகம்):—பதிப்பாசிரியர்.—சுன்னாகம் இராமநாதன்கல்லூரித் தமிழாசிரியர் திரு. அ. சே. சுந்தரராஜன் B.A. அவர்கள். விலை.—ரூபா 4. பதிப்பாசிரியரிடம் பெறலாம்.

புலத்துறைமுற்றிய சான்றோருள் கம்பர் முன் எண்ணத்தக்கவர். அவர் இயற்றிய இராமாவதாரமோ இலக்கியநயமனைத்தும் ஒருங்கமைந்த பாரகாவியமாகும். அஃது இயற்றமிழ்நூலாக மட்டும் இல்லை. தன்கட்பயின்ற பல்வேறுவகையான சந்தவிருத்தங்களால் இசைத்தமிழ்நூலாகவும், கதாபாத்திரங்களின் உரையாடலால் நாடகத்தமிழ்நூலாகவும் விளங்குகிறது. அன்றியும் நாடு, நகர், அரசு, அமைச்சு, போர், ஒழுக்கம், உலகநடை, உயர்ந்தோரியல், மாதர் ஆடவர் தருமம் முதலியவற்றைப் பேசுமாற்றால் இலக்கணநூலுமாகும். இதன் கவிச்சுவையில் ஈடுபடாத தமிழ்மக்கள் இல்லை. கன்னற்கட்டியுள் ஒவ்வொருதுண்டும் ஒத்த சுவையுடையவாயினும், அவற்றைச் சுவைப்போருடைய உடற்கூறும் நாவியல்பும் முதலியவற்றால் அவற்றுள் சுவைவேறுபாடு காணப்படல்போல இந்நூலுள் எல்லாப்பாடல்களும் ஒரு நிகரான சுவையுடையவாயினும் அவற்றைப்பயில்வாரும் ஆராய்வாருமாகிய மக்களின் உள்ளம் அறிவு முதலியவற்றுக்கேற்ப அவற்றுள் சுவை வேறுபாடு காணப்படுவதும் இயல்பு. அச்சுவையுணர்வுடையோர் இராமாவதாரநூலுள் தாந்தாம் மிக்கசுவையுடையனவாகக் கண்ட கவிகளைத் தொகுத்து விளக்கவுரைகளுடன் அச்சிட்டு வெளியிடுவாராயினர். இம்முறைதழுவியவற்றுள் நம் செந்தமிழில் வெளிவந்து முற்றிய கம்பராமாயண இன்கவித்திரட்டும் இக் கம்பர்கவிதைக் கோவையும் சிறந்தனவாகும்.

இக்கவிதைக்கோவையின் முதற்பாகத்தைக் கம்பர் இயற்றிய இராமாவதாரநூலுள் பால—அயோத்தியா—ஆரணிய—காண்டங்களில் ஆசிரியர் சுந்தரராஜன் அவர்கள் தாம் இனியவாகக் கண்ட கவிகளைப் பலதலைப்பின்கீழ்ப் பலபாடங்களாகத் தொகுத்து அவற்றை மாணவர்கள் எளிதிற்படித்துச் சுவையுணர்ச்சியான் மகிழும்வண்ணம் ஒவ்வொருபாடத்துக்கும் முன்னுரையும் ஒவ்வொருபாடலுக்கும் குறிப்புரையும் வரைந்து அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள்.

கம்பர்கவிப்பகுதிகளையிடையெடுத்தெழுதப்பட்ட முன்னுரையுள் பாலகாண்டப் பாடங்களுக்குரியவை தனிச்சிறப்புடையன. மூலத்துள் ஆசிரியர்கொண்ட சிலபாடங்களும் குறிப்புரையுள் ஆங்காங்கு ஒருசிலபகுதிகளும் ஆராய்ந்து திருத்தத்தக்கன. எனினும் இது மாணவர்க்கும் பிறர்க்கும் பெரிதும் பயன்விளைக்குமென்பதில் ஐயமில்லை. இதனைத் தொகுத்து உரைகளுடன் அச்சிட்டு வெளியிட்ட ஆசிரியர் பாராட்டற்குரியர். அவர் இரண்டாம்பாகத்தையும் சீரிய முறையில் வெளியிடற்கு இறைவன் அருள்புரிக. இக்கோவை தமிழ்மக்களால் பெரிதும் ஆதரிக்கப்படும் என்று நம்புகிறோம்.

---

தித்தன்:—அண்ணாமலைபல்கலைக்கழகவெளியீடு. எழுதியவர்: பாஷாகவிசேகரர் மஹாவித்வான் ரா. இராகவையங்காரவர்கள். கிடைக்கும் இடம்: அண்ணாமலைபல்கலைக்கழகம்.

தித்தன் என்பான் ஒருவீரன். இவன்செய்தி புறநானூறு முதலிய பழந்தமிழ்நூல்களிற் காணப்படுகிறது. "அகநானூற்றுள்ளும் (6, 122, 226) புறநானூற்றுள்ளும் (395) முறையே 'தித்தன் உறந்தை', 'தித்தன் வெளியன் உறந்தை', 'தித்தன் செல்லாநல்லிசையுறந்தை' எனப் பயின்ற வழக்குக்கொண்டு இவனைச் சோழர்குடிப் பிறந்தானென்பர் ஒருசாரார். அது பொருந்தாது; இவன் வேளிர் குடியினனே" என்று சங்கநூற்சான்றுகொண்டுகாட்டுவது இவ்வுரைநடையான் அமைந்த சிறுநூல. இந்நூலையெழுதியுதவியவர் தமிழுலகறிந்த புலமைசான்ற பெரியார்; சரித ஆராய்ச்சியிலும் சொற்பொழிவாற்றலிலும் புலவர்போற்றப் புதுநூலாக்கியளித்தலிலும் பிறதுறைகளிலும் முன்னின்றவர். இவர் தித்தனை வேளிர் குடியினனே என்று பழந்தமிழ்நூலாதாரவுகொண்டுகாட்டும் இக்கட்டுரைநூலுள் வேறுபலசெய்திகளும் அறியக்கிடக்கின்றன. இவ்வாராய்ச்சி மகாவித்வான் ரா. இராகவையங்காரவர்கள் அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் தமிழாராய்ச்சியாளராய் இருந்த காலத்து எழுதி முடிக்கப்பட்டது. ஐயங்காரவர்கள் எழுதிய பிற கட்டுரைகளையும் தமிழாராய்ச்சியாளர்க்குப் பயன்படும்படி அண்ணாமலைபல்கலைக்கழகம் வெளியிட்டுதவுமென்று நம்புகிறோம்.

---

சங்கரவிலாசம்:—திருவேங்கடேசுவரர் கீழ்த்திசைக்கலைக்கழகத்தின் இருபதாம் வெளியீடு. இயற்றியவர். சிதம்பரநாதகவி. பதிப்பாசிரியர்: வித்வான் திரு. T. P. பழநியப்பபிள்ளை (B.O.L) அவர்கள். விலை:—ரூபா. 3—4—0. கிடைக்குமிடம்:— திருவேங்கடேசுவரர் கீழ்த்திசைக்கலைக்கழகம், திருப்பதி, சித்தூர்ஜில்லா.

சங்கரவிலாசம் என்பது சிவபெருமான் திருவிளையாடல் என்று பொருள்படும். இங்கே விலாசம் (திருவிளையாடல்) என்பது அதனையுணர்த்தும் நூலைச் சுட்டிநின்றது. இந்நூல, கடவுள் வாழ்த்துமுதல் கோதாவிரிமகிமையுரைத்த அத்தியாயம் இறுதியாக உள்ள இருபத்தைந்து தலைப்பில் 1435 விருத்தப்பாடல்களை உடையது; தென்பாண்டிநாட்டுள் சீராசை என்று வழங்கும் சங்கரநயினார்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனருளால் இயற்றப்பட்டது; புராணநெறிதழுவியது; சிவபுராணங்களிற்கண்ட சிறந்த கதைகளின் தொகுப்பாய் அமைந்தது; சிறப்புவாய்பாட்டால் ஏதேனும் ஒரு தல தீர்த்த மூர்த்தி மகிமைகூறாது, பொதுவாய்பாட்டாற் சிவபெருமான்பெருமைகளையும், சிவநாமம் பஞ்சாக்ஷரம் விபூதி உருத்திராக்கம் என்பவற்றின் மாண்பினையும் சிவபிரான் எழுந்தருளியுள்ள சிதம்பரம் ஆரூர் காளத்தி காஞ்சி ஸ்ரீசைலம் உருத்திரகோடி என்னும் தலங்களின் மாண்மியத்தினையும், கோதாவிரிதீர்த்தச்சிறப்பினையும் விரிப்பது; இனிய செய்யுணடையுடையது. இதனையியற்றிய, திருநெல்வேலிஜில்லாவிலுள்ள விஜயநாராயணம் என்ற ஊரில் வாழ்ந்த சிதம்பரநாதபூபதி என்பவர் கி. பி. 16-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இருந்தவர். இவையெல்லாம் இந்நூற் கடவுள்வாழ்த்துள்ளும் பதிகத்துள்ளும் பயின்ற பாடல்களால் அறியப்படுவன.

[இந்நூல், யாழ்ப்பாணத்துக் கொக்குவில் இரகுநாதையர் சோதிடபரிபாலனமடத்துத் தலைவர் திரு. சி. இரத்தினசபாபதி ஐயரவர்களால் சகம் 1860 ஈசுவரஹு கார்த்திகைமீ (கி. பி. 1937-ஆம் ஆண்டு) முதன்முறை அச்சிட்டு வெளியிடப்பட்டது. அப்பதிப்புப்பற்றி 1938-ஆம் ஆண்டு நவம்பர்மீ 27உ வெளிவந்த சென்னை ஆங்கிலதினசரியாகிய ஹிந்துவில் ஆங்கிலத்தில் விரிந்த மதிப்புரையொன்று திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்களால் வரையப்பட்டுளது.]

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழ்அரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழுந்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்
கிரண்டுருவும் ஒன்றா யிசைந்து"

என்ற ஆன்றோர் அருளிச்செயற்கியைபத் திருமால்பத்திமுதலிய பெரும்பேறுகளையுதவும் திருவேங்கடத்தலபுராணத்தை முன்னே வெளியிட்டு அடுத்துச் சிவபத்திமுதலிய அரும்பெறற்பயன்விளைக்கும் இச்சங்கரவிலாசநூலினையும் செவ்விய முறையில் இப்பொழுது பதித்துத்தந்த ஆசிரியர் திரு. T. P. பழநியப்பபிள்ளையவர்களும், திரு வேங்கடேசுவரர் கீழ்த்திசைக்கலைக்கழகத்தாரும் போற்றற்குரியர்.

---

பிற்காலச்சோழர்சரித்திரம்:—இது அண்ணாமலைபல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பதிப்புவரிசையுள் ஒன்று. இதனை எழுதியவர்: அப்பல்கலைக்கழகத்துத் தமிழ்விரிவுரையாளரான திரு. T. V. சதாசிவ பண்டாரத்தாரவர்கள். இது கிடைக்குமிடம்: அண்ணாமலைபல்கலைக்கழகம்.

சோழர் படைப்புக்காலந்தொட்டுவந்த தமிழகத்து மும்மன்னருள் ஒருபிரிவினர். இவர் பெருமை அளத்தற்கரிது. அதனைச் சங்கத்தொகைநூல்கள் சிலப்பதிகாரம் முதலியவற்றுள் காணலாம். எனினும், இவர் சரிதம் வரன்முறையாகக் காண்டல் அரிது. அதனைக் காலமுறைப்படி தொகுத்தெழுத முற்பட்டார் பலர். அவரால் எழுதப்பட்ட நூல்களும் பல. அவற்றுள் இச்செந்தமிழ்ப்பிரசுரமாக T. A. கோபிநாதராயரவர்களால் வெளியிடப்பட்ட சோழவமிச சரித்திரம் என்பதும் ஒன்று. அதுவேயன்றி நம் செந்தமிழில் வெளிவந்த ஆராய்ச்சிக்கட்டுரைகளும் பல. இவற்றையும் அரசாங்கத்தார் வெளியிட்டுவந்த கல்வெட்டுக்களையும் அறிக்கைகளையும் தாம் ஆராய்ந்துகண்ட பிறவற்றையும் துணைக்கொண்டு அண்ணாமலைபல்கலைக்கழகத்துத்தமிழ்விரிவுரையாளரும் சிறந்த ஆராய்ச்சியாளருமான திரு. T. V. சதாசிவபண்டாரத்தாரவர்கள் பிற்காலச்சோழர் சரித்திரம் என்னும் இவ்வுரைநடைநூலை எழுதியுதவியுள்ளார்கள்.

இந்நூலுள் கி. பி. 846க்கும் கி. பி. 1279க்கும் இடைப்பட்ட காலத்தே வாழ்ந்த (சோழன் விஜயாலயன் முதல் அதிராசேந்திரன் இறுதியாகவுள்ள) பதின்மூன்று சோழர்களுடைய சரித்திரம் தெளிவாகத் தக்க ஆதாரங்களுடன் எழுதப்பட்டுள்ளது. மேலும் இச்சரிதம் படிப்பார்க்குப் பயன்படும்படி சோழர் மெய்க்கீர்த்திகளும் பாடல்களும் மரபுவிளக்கமும் பொருட்குறிப்பகராதியும் ஆசிரியரால் நன்கு எழுதிச்சேர்க்கப்பட்டுள்ளன.

தமிழ்நாடு பரந்துபட்டது; அதனை ஆண்ட அரசரும் பலர். அவர் சரிதமும் நாட்டுச்சரித்திரமும் முன்னோர்களால் முறையாக எழுதப்படாதநிலையில் காலங்கடந்த வரலாறுகளை இருட்டறையில் பொருள்களைத் தடவியறிவார்போலத் தேடித்தேடி ஆராய்ந்து ஆராய்ந்து ஒருதொடைப்படக்கோப்பதென்பது எளிதிற் செய்யத்தக்கதன்று. அவ்வாறு ஆய்ந்துதொடுப்பனவற்றுள் சில தவறுபடவுங்கூடும். ஆயினும் ஆசிரியர் பண்டாரத்தாரவர்கள் தக்க ஏதுக்களாலும் மேற்கோள்களாலும் படிப்போர் மேலும் மேலும் விரும்பிப்படிக்கும்வண்ணம் இச்சரித்திரத்தை முறைப்பட வகுத்து விரித்து எழுதிச்சென்றிருப்பது பாராட்டத்தக்கது.

பன்மொழிப்புலவர் உயர்திரு. தெ. பொ. மீநாட்சிசுந்தரனார் M.A., B.L., M.O.L. Dep. EC., M.R.A.S. அவர்கள் எழுதியுதவிய ஆங்கில முன்னுரை இதற்கு அணிகலமாகத் திகழ்கிறது. அதனுட்பொருள்களைத் தமிழொன்றேயறிந்தவர்களும் தெரிந்துகொள்ளும்படி அதற்குச் செவ்விய தமிழுரைநடையில் ஒரு மொழிபெயர்ப்பு வரைந்து அச்சிட்டுச்சேர்ப்பது இன்றியமையாததாகும்.

இதனை அரசாங்கத்தார் கல்லூரிமாணவர்க்கும் வித்வான் பரீக்ஷைக்குப் பயில்வோர்க்கும் பாடபுத்தகமாக்கி ஆசிரியர் மேலும் தமிழ்நாட்டுவரலாறுகளை நன்கெழுதி வெளியிட ஊக்கமூட்டுவார்களாக.

உ

# பேராசிரியர் ராவ்பகதூர் சுந்தரம்பிள்ளையவர்கள் நினைவுக்குறிப்பு

திருவாளர் ராவ்ஸாஹிப். வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G.B.V.C.

## பிள்ளையவர்களுக்கும் எனக்கும் ஏற்பட்ட தொடர்பு.

இவர்களுடைய நினைவுக்குறிப்பை யெழுதத்தொடங்குமுன் இவர்களுடன் எனக்குத் தொடர்பு உண்டானதன் காரணத்தைக் கூறுவது தகுதியாயிருக்கின்றது. அது வருமாறு:—

## சுவர்க்கநீக்க முதற்காண்ட மொழிபெயர்ப்புப்பதிப்பு.

நான் பலவருடங்கள் முயன்று விருத்தப்பாவில் மொழிபெயர்த்திருந்த 'சுவர்க்கநீக்க முதற்காண்டத்தை' (Milton's paradise Lost Book I.) சென்னையிலிருந்து பதிப்பித்துக் கொண்டிருந்தகாலத்தில் இடையே, பம்பாய் (Bombay) மிருக வைத்தியக்கல்லூரியில் ஓராண்டு பயிற்சிபெறும்படி சென்னை மாகாணத் துரைத்தனத்தாரால் அனுப்பப்பட்டேன். அப்போது என் நண்பரும் 'பத்மாவதி' முதலிய நூல்களின் ஆசிரியருமான பெருங்குளம் A. மாதவையரவர்கள் என் வேண்டுகோளின்படி அந்நூலின் குறைப்பதிப்பையும் பதிப்பித்து நிறைவேறச்செய்தார்கள். *

---

* அக்காலத்தில் நான் மாதவையரவர்களுக்கு எழுதிய செய்யுட்கடிதம் வருமாறு.

இன்சுவர்க்க நீக்கத்துக் கியான்பெற்ற தாயாக
மன்செவிலித் தாயானுய் மாதவா! முன்சொலந்நூற்
கியான்கொண்ட அன்புக் கிரட்டிபூண் டாதரிப்பாய்
மீன்கொண்ட நீர்ப்புவியின் மேல்.

[நீர்ப்புவி—கடல் (சூழ்ந்த) பூமி.]

எல்லாவிதப் புத்தகாலயங்களும் ஒன்றுக்கொன்று உதவித் தொடர்புகொண்டிருக்குமாறு ஒரு திட்டம் வகுக்கவேண்டும். உதாரணமாக, ஒரு வாசகனுக்குவேண்டிய புத்தகம் ஒன்று அவன் பிரதேச புத்தகாலயத்தில் இல்லை என்று வைத்துக்கொள்வோம். இராஜதானிப் புத்தகசாலையிலிருந்தோ அல்லது மத்திய புத்தகசாலையிலிருந்தோ அல்லது இதர புத்தகசாலைகளிலிருந்தோ அப்புத்தகத்தை வருவித்துக்கொடுக்க வசதிகள்வேண்டும். மேல் நாடுகளில் அமைந்திருக்கும் புத்தகாலயத்திட்டம் இவ்வசதிகளை அளிக்கிறது.

இதற்கு என்னசெலவு ஆகும் என்பதையும் சிறிதுயோசிப் போம். நாம் வகுக்கும் திட்டத்தைப்பொறுத்திருக்கிறது செலவு. உதாரணமாக, நம் இராஜதானியை எடுத்துக்கொள்வோம். அதன் ஜனத்தொகை சுமார் 5 கோடி. இதில் 10 வயதிற்குட்பட்ட ஒன்றரைக்கோடிமக்களை நீக்கிவிடுவோம். மற்றவர்களுக்குத் தலைக்கு எட்டு அணு செலவுசெய்தாற்போதும். ஒரு நல்ல புத்தகாலயத் திட்டம் ஏற்படுத்தலாம். இந்த விகிதத்தின்படி நூற்றெண்பது லக்ஷரூபாய்கள்வேண்டும். ஒரு பாதியை மாகாணசர்க்காரும் மற்றொரு பாதியை ஸ்தலஸ்தாபனங்களும் பொறுத்துக்கொள்ள வேண்டும். இந்தப் பணம் செலவுசெய்தால் சராசரி தலைக்கு ஒரு புத்தகமாவது கிடைத்துக்கொண்டேயிருக்கும்படி புத்தகசாலைகளில் வேண்டிய புத்தகங்களை வைக்கலாம்.

கல்விக்காக ஏராளமான செலவுசெய்கிறோம். அது வீணுகப் போகாதிருப்பதற்காக இத்திட்டத்தை வகுப்பது அவசியம். இத் திட்டத்தையொட்டித் தயாரித்த சட்டம் ஒன்று சீக்கிரம் அமுலுக்குவந்து கிராமந்தோறும் புத்தகாலயங்கள் அமைந்து, நமது அறியாமையை நீக்கி, நம்மைச் சிறந்த ஜனநாயக மக்களாக ஆக்கி விடும் என்று நம்புகிறேன்.

---

## அந்தநூலுக்கு முகவுரைபெறச் செய்த முயற்சி. (1)

அச்சிட்டுமுடிந்த அந்த நூலைத் தக்காரொருவருடைய முகவுரையுடன் வெளியிடக்கருதி, அக்காலத்திற் பல்கலைக்கழகப்பட்டதாரிகளுக்கு அரசு (Prince of graduates) எனப் பேர்பெற்றிருந்த பூண்டி அரங்கநாதமுதலியாரவர்களிடம் சுவர்க்கநீக்க அச்சுப்பிரதியொன்றைக் கொடுத்து அதற்கு முகவுரையளிக்கும்படி வேண்டிக்கொண்டேன். அவர்கள் அந்நூலின் ஆங்கிலமூலத்திற் சில பகுதிகளைக் குறிப்பித்து அப்பகுதிகளுக்குரிய மொழிபெயர்ப்புப்பகுதிகளை வாசித்துக்காட்டச்சொல்லியபடி செய்தேன். அதன்மேல், அவர்கள் முகவுரையெழுதியனுப்புவதாக வாக்களித்து என் முகவரியை (Address)க் கேட்டுத் தங்கள் குறிப்புப்புத்தகத்திற் பதிந்துகொண்டார்கள்.

சிலமாதங்கள் சென்றும் அவர்கள் முகவுரைவாராததனால், அவர்களுடைய உயர்குணங்களை விவரிக்கும் சில பாட்டுக்கள் அடங்கிய நினைப்பூட்டுக்கடிதம் அனுப்பினேன். *

அவர்கள் முகவுரையளிக்காமலே இறைவன்திருவடிநீழலெய்தினார்கள்.

---

* அப்பாட்டுக்களின் கடைசிப்பாட்டு நினைவிலிருக்கிறது. அது வருமாறு:—

நான்முகமன் சேடன்பல் நாவினும்சொல் லரியபல நலமுற் றோய்க்கு
யான்முகமன் இயம்புவதென்? எனக்குவாக் களித்தபடி இம்மண் அன்றி
வான்முகம தினுமதிக்கும் படிசுவர்க்க நீக்கப்பேர் மருவு நூற்கு
நூன்முகம தாஎழுதி உனதபிப்பி ராயம் உய்ப்ப நுதலு வாயே.

[நான்முக மன் - பிரமன். சேடன் - ஆதிசேடன்: முகமன் - துதிமொழி. இயம்புதல் - சொல்லுதல். வான் முகமதின் - தேவலோகத்தில். நூன்முகம் - முகவுரை. உய்ப்ப - அனுப்ப. நுதலுதல் - கருதுதல்.]

## முகவுரைபெறும் முயற்சி. (2)

இந்தவிவரங்களை நண்பர் அ. மாதவையரவர்களிடம் சொல்லி இனிப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களிடம் முகவுரை பெற, விரும்புகின்றேன். அதற்காகத் திருவநந்தபுரத்துக்குப்போய் அவர்களைப் பார்ப்பதற்கு 'விடுமுறை' (Leave) பெறவேண்டியிருக்கிறதென்று சொன்னேன். அவர்கள் 'விடுமுறைபெற வேண்டியதில்லை. பிள்ளையவர்களுக்கும் எனக்கும் மிகுந்த பழக்கமுண்டு. சுவர்க்கநீக்க முதற்காண்ட அச்சுப்பிரதியொன்றை அவர்களுக்கனுப்பி அவர்கள் முகவுரையை வாங்கித்தருவேன். நீங்கள் யாதொருமுயற்சியும் செய்யவேண்டியதில்லை' என்று சொல்லிக் கடிதத்துடன் ௸ நூல் அச்சுப்பிரதியொன்றையும் பிள்ளையவர்களுக்கு அனுப்பினார்கள். சில மாதங்கள் சென்றபின் ஐயரவர்களை நான் சந்தித்தபோது, 'பிள்ளையவர்கள், "நூல்களுக்கு முகவுரையளிப்பவர்கள், நூல்களின் தகுதியன்றி நூலாசிரியர்பாலுள்ள தாட்சிணியம் காரணமாகவும் முகவுரை அளிப்பதுண்டு. இந்த நூல் (சுவர்க்கநீக்க முதற்காண்டம்) தகுதிமட்டும்காரணமாகவே முகவுரைபெறுதற்குரியது. ஆதலால் இதற்கு முகவுரை எழுதுவதைக்காட்டிலும் ஒரு பிரபலமான பத்திரிகையில் மதிப்புரை (Review) எழுதி வெளியிடுவதே சிறந்தது. அதை நான் அவகாசம் வாய்த்தவுடன் செய்வேன்" என்ற கருத்துப்பட எழுதியிருக்கிறார்கள்' என்று சொன்னார்கள்.

## குற்றாலச்சந்திப்பு.

இதன்பின் ஒருசமயம் நான் குற்றாலத்துக்குப்போனபோது, பிள்ளையவர்கள் சாரற்காலவாசமாக அங்கே வசிக்கிறார்களென்று கேள்வியுற்றேன். அவர்களைத்தெரிந்த ஒரு நண்பரிடம் அவர்களை நான் காணவேண்டியிருக்கிறதென்று சொன்னபோது, நண்பர் 'அவர்கள் அருவிக்குமேலேயுள்ள செண்பகாடவிக்குப் போயிருக்கிறார்கள். அங்கே போய்ப் பார்க்கலாம்' என்று சொல்லி என்னைக்

கூட்டிக்கொண்டுபோனார். அவர்கள் இருக்குமிடத்தை நெருங்கிய போது, ஒரு கூட்டமத்தியிலிருந்த அவர்களைச் சுட்டிக்காட்டி, அவர்களே சுந்தரம்பிள்ளையவர்களென்று தெரியச்செய்தார். அவர்களை அணுகி நான் வணக்கஞ்செய்தபோது, என்பேரைச்சொல்லி 'வாருங்கள்' என்று வரவேற்றார்கள். அப்போது, முன் என்னைப் பார்த்திராத இவர்களுக்கு என்பேர் எப்படித்தெரிந்ததென்றெண்ணிச் சற்றுநேரம் திகைத்தபின், என்னைத் தூரத்தே கண்டபோது நான் யாரென்று பக்கத்திலிருந்தவர்களைக்கேட்டுத் தெரிந்திருப்பார்களென்று ஊகித்துணர்ந்து திகைப்புத் தீர்ந்தேன்.

## நெல்லைச்சிலேடைவெண்பாப் பொருள்கூறியது.

பல இடங்களிலுமிருந்து சாரற்காலவாசிகளாக வந்திருந்த உயர்ந்த உத்தியோகஸ்தர்கள் பெரிய வக்கீல்கள் பிரபுக்கள் முதலியோர் பலர், அவர்கள் எதிரில், அவர்கள்முகநோக்கி அவர்களுடைய அறிவும் இனிமையும் நிறைந்த பொருள்பொதிந்த மொழிகளைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள். பிள்ளையவர்கள் அங்கிருந்தவர்களுக்கு என்னை அறிமுகஞ்செய்விப்பாராய், 'இவர்கள் ஆங்கிலமும் தமிழும் பயின்றவர்கள். ஆங்கிலம் படித்தோருள்ளே பெரும்பாலார், தமிழை நுனிப்புல்மேய்ந்தாற்போல இலேசாகப் படித்துவிட்டுத் தக்க தமிழ்ப்புலமையுடையாராக நடிப்பார்கள். இவர்கள் அவர்களுள் ஒருவரல்லர். சிரத்தையுடன் சிரமப்பட்டுத் தமிழில் இலக்கண இலக்கிய நூல்களை நன்றாகக் கற்றவர்கள். இவர்கள் இருபதுவயசுக்குமுன் இயற்றி, இவர்களுக்குப் பல உயர்ந்த இலக்கியங்களில் உள்ள ஆராய்ச்சிவன்மையைக்காட்டும் குறிப்புரையுடன் வெளியிட்டிருக்கிற நெல்லைச்சிலேடைவெண்பா என்ற நூலினால், இவர்கள் பாவலர்வரிசைகளிலும் பண்டிதர்வரிசைகளிலும் முதல் வரிசையில் வைத்தெண்ணத்தக்கவர்களென்பது விளங்கும்' என்று கூறி, என்னை நோக்கி இவர்களுக்கு 'நெல்லைச்சிலேடைவெண்பாவில் ஒருபாட்டைப் படித்துப் பொருள்கூறுங்கள்' என்றார்கள். அவர்கள் கூறியது எனக்கு ஒரு சோதனையாயிருந்தது. ஏனெனில்,

நெல்லைச்சிலேடைவெண்பா, தேர்ந்த புலமையுடையார்க்கும் அவர்களை ஆசிரியராகக்கொண்டு உயர்ந்தவகுப்பில் படிப்பவர்களுக்கும்* பயன்படவேண்டுமென்று கருதிப் பண்டிதரஞ்சகமாக இயற்றப் பெற்றது. அதைச் சாதாரணமான கல்விப்பயிற்சியுடையவர்கள் ரசிக்கச்செய்வது எளிதானகாரியமன்று. ஆயினும், பிள்ளையவர்கள் ஆணையை இயன்றவரை திருப்திகரமாக நிறைவேற்றுதற்கு உபாயம் மேற்குறித்தநூலில் ஒரு விநோதமானபாட்டைத் தெரிந்தெடுத்து விளக்கிக்கூறுதலேயென்று துணிந்தேன். அப்படித் தேர்ந்தெடுத்துப் படித்துக்காட்டிப் பொருள்கூறிய பாட்டு,—

"'தினந்தோறும் ஒருகலைதேய்ந் தொழிந்துபோவாயாக' என்று தக்கப் பிரசாபதியாற் சபிக்கப்பட்டுப் பதினாறுகலைகளையுடைய சந்திரன் பதினைந்துகலைகள் தொலைந்து ஒருகலைமட்டும் எஞ்சியிருந்தபோது, சிவபிரானிடம்சென்று 'இந்த ஒருகலையையும் இழந்தால் இறந்திடுவேன் என்னைக் காப்பாயாக' என்று அபயமிட்டுக் காலில்விழுந்து வணங்கினான். 'இனி இந்தக்கலையை இழப்பாயல்லை. அம்மட்டோ, தினந்தோறும் ஒருகலை வளரப்பெறுவாய்' என்று வரம் அளித்தருளித் தம் காலில்விழுந்தவனைத் தூக்கியெடுத்துத் தம் தலைமேல்வைத்துக்கொண்ட பித்தனாரும் காந்திமதியம்பிகையைத் தம் தேகத்தில் இடப்பாகத்திற் கொண்டவரும் நெல்லையப்பரென்னும் திருநாமமுடையவருமான சிவபெருமான் வாழும் தலம் யாதெனில், மனைவி முன்னிலையில் (எதிரில்) உள்ள கணவனை நோக்கி 'நீலவண்ணனை (த் திருமாலை) ஒத்திருக்கின்றாய்' என்று (காதல்மொழி) கூறுவதும், (விருந்தினருடன் போசனம் செய்தற்கு அமர்ந்த) கணவன் மனைவியை நோக்கி '(இந்தப் பந்தியிலுள்ள) இலைகளில் (படைக்கவேண்டிய பதார்த்தங்களில்) முதலாவதாக

---

* தாம் உயர்தரக்கல்விபயிலுங்காலத்தில் நெல்லைச்சிலேடைவெண்பாவை ஒரு பாடபுத்தகமாகப் படித்தவருள்ளே, பல கலாசாலைகளில் தமிழ்ப் பண்டிதராக அமர்ந்திருந்து ஓய்வுபெற்றிருக்கும் கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையவர்கள் ஒருவராவர்.

உப்பைப் படைப்பாயாக'* என்று கூறுவதும் நிகழுகின்ற நெல்லைத் தலமே" என்ற பொருளுடைய பாட்டாம். அது வருமாறு:—

கோலஇல்லாள் கொண்டோனைக் கொண்கன் இல்லை முன்னிலையில்
நீலவண னேர்வையெனும் நெல்லையே—சாலச்சோ
காந்திமதி யாகன் கழல்விழச்சென் னிக்கண்வைத்த
காந்திமதி யாகன் களன்.

[கொண்டோன் - கொண்கன் - கணவன். முன்னிலையி னீலவணநேர்வை (1) முன்னிலையில் (எதிரில்) நீலவ(ண்)ணன் (-திருமாலை)நேர்வை - ஒப்பாய்; (2) முன் (முதலாவதாக) இலையில் நீ லவணம் (-உப்பை) நேர் (ஆக) வை(ப்பாயாக). சால - மிகவும். சோகாந்து - துன்பம் அடைந்து. இமம் - பனி. தியாகன் - தருபவன். இமதியாகன் - சந்திரன். கழல் - பாதம். சென்னிக்கண் - தலையில். ஆகன் - ஆகத்தில் (-தேகத்தில்) உள்ளவன். களன் - களம் - இடம்.]

கூட்டம் கலைந்து அவரவர்கள் விடுதிக்குப் புறப்படத்தொடங்கியபோது பிள்ளையவர்கள் என்னை நோக்கி 'நாளை மாலையிலும் நீங்கள் இங்கேவந்து சுவர்க்கநீக்கத்திற் சில பகுதிகளை வாசித்துக்காட்டிப் பொருள்கூறவேண்டும்' என்றார்கள். உடனே (என் மனம் இது முந்தியசோதனையினும் பெரியசோதனையென்று திடுக்குற்றதாயினும், அவர்கள் ஆணையை மறுக்கமாட்டாமல்) 'அப்படியே செய்வேன்' என்றுகூறி விடைபெற்று என்விடுதிக்குச் செல்லும்போது என் மனத்துள்ளே சுவர்க்கநீக்கமும் நெல்லைச்சிலேடைவெண்பாப் போலவே உயர்ந்த தமிழ்ப்புலமையுடையார்பொருட்டே இயற்றப்பெற்றது. இந்தக்கூட்டத்திலுள்ளார் பெரும்பாலார் உயர்ந்த ஆங்கிலப்பயிற்சியுடையாரேயன்றி அத்துணைத் தமிழ்ப்பயிற்சியுடையாரல்லர். இவர்களை எப்படிச் சுவர்க்கநீக்கத்தை ரசிக்கச் செய்வதென்று சிந்தித்து ஒரு முடிவுசெய்தேன்.

---

*சைவர் இலையில் உப்பை முதலாவதாகப் படைப்பது தொன்றுதொட்டுள்ள வழக்கம்.

### சுவர்க்க நீக்க அரங்கேற்றம்.

சாரல்வாசத்திற்காகக் குற்றாலத்திற்கு வந்திருந்த மாணவர்களிடம் மறுநாட்காலையிலே சென்று, சில ஆங்கிலச் சுவர்க்கநீக்கப் (Paradise Lost) புத்தகங்களை இரவலாக வாங்கிக்கொண்டு மாலையிலே குறித்தநேரத்தில் முந்தினதினத்தில் எல்லாரும் கூடியிருந்த இடம் போய்ச்சேர்ந்தேன். அங்கே கூடியிருந்தவர்களில் முக்கியமானவர்களிடம் சுவர்க்கநீக்க ஆங்கிலப்பிரதிகளைக் கொடுத்து, நூலின் ஆரம்பப்பகுதியைப் படிக்கும்படி வேண்டிக்கொண்டேன். அவர்கள் படித்தபின், என்னிடமிருந்த சுவர்க்கநீக்கப்பிரதியில் அந்தப்பகுதிக்குரிய மொழிபெயர்ப்புப்பகுதியைப் படித்துக் காட்டினேன். அவர்கள், 'மூலநூற்கருத்துக்கள் கூடுதல் குறைதல் மாறுதலின்றி மொழிபெயர்ப்பில் விளக்கமாகக் கூறப்பட்டிருப்பதைத் தெரிந்து மகிழ்வுற்றோம்' என்று கூறினார்கள். அவர்களெல்லாருக்கும் என் நன்றியைத் தெரிவித்தேனென்பது கூறவேண்டியதில்லை.

### சென்னைச் சந்திப்பு.

பிள்ளையவர்களைக் குற்றாலத்திலே சந்தித்ததற்குப் பின்பு வந்த கிறிஸ்த்மஸ் விடுமுறைக்காலத்தில், ஒருநாள், அவர்களைச் சென்னையிற் சந்திக்கும்படி வாய்த்தது. அப்போது அவர்கள் வெளியிட்ட கருத்துக்களைத் தழுவி நான் எழுதியதே 'இராமாயண உள்ளுறை பொருளும், தென்னிந்திய சாதிவரலாறும்' என்ற ஆராய்ச்சிநூல். *

சுவர்க்கநீக்கநூலுக்கு முகவுரை (Introduction) அளிப்பதாக வாக்களித்திருந்தபடிசெய்யாமல் இவ்வுலகவாழ்வை நீத்த முதலியாரவர்களைப்போலவே, பிள்ளையவர்களும், அந்த நூலுக்கு

* இதன் முதற்பதிப்பு, தமிழ்த்தொன்மையாராய்ச்சிக்கழகத்தாராலும் இரண்டாம்பதிப்பு தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்தாராலும் வெளியிடப்பட்டிருக்கின்றன.

விமரிசனம் (Review) எழுதி வெளியிடுவதாக வாக்களித்திருந்த படிசெய்யுமுன் இவ்வாய்ச்சியமடைந்துவிட்டார்கள்.

அச்சிட்டுமுடிந்ததற்குப்பின்னும் வெளியிடப்பட்டதற்கு முன்னுமாக, முகவுரைக்காகப் பலவருடங்காத்திருந்த சுவர்க்க நீக்க முதற்காண்டம், அரங்கநாதமுதலியாரவர்கள் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் ஆகிய இருபெரியாருள் ஒருவருடைய முக வுரையும் பெறும்பாக்கியமில்லாததாலும், சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் அளித்த சிறப்புப்பாயிரக்கவியையே முகவுரை யாகக்கொண்டு வெளியிடப்பட்ட பின்பு, தனித்தமிழ்ப்பண்டிதர் தலைவர் மகாமகோபாத்தியாய சாமிநாதையரவர்கள், ஆங்கிலத் தமிழறிஞர்தலைவர் டாக்டர். ஜி. யு. போப்பையரவர்கள் ஆகிய இருபெரியார்முதலியோருடைய உயர்தரமதிப்புரைகள் பெற்ற பெரும்பாக்கியமுடையதாயிற்று.

பிள்ளையவர்களுடைய கவிவன்மை, பொதுவாக மனோன் மணீயம் என்ற நூலினாலும், சிறப்பாக அந்த நூலின் ஒரு பகுதி யாகிய சிவகாமிசரிதையாலும் விளங்கும். அவர்கள் இயற்றி வெளி யிட்ட திருஞானசம்பந்தர்காலநிர்ணயம், நூற்றொகைவிளக்கம் என்ப வைகளாலும், அவர்கள் மறைந்தபின் அவர்களுடைய கருத்துக் களைத் தொகுத்து நான் வெளியிட்ட இராமாயண உள்ளுறைபொரு ளும் தென்னிந்திய சாதிவரலாறும் என்ற நூலினாலும் அவர்களுடைய அறிவுப்பேராற்றலின் அளவையும் மிகவும் உயர்வான ஆராய்ச்சித் திறமையின் அளவையும் தெரியலாம்.

பிள்ளையவர்கள், சுவர்க்கநீக்கநூலின் தற்சிறப்புப்பாயிரத்தி லுள்ள அவையடக்கக்கவிகளில் ஒரு குறித்த கருத்துடைய பாட் டைக் கூறச்சொல்லியபடி நான் கூறியபோது அதன் நயத்தை விதந் தெடுத்துக்கூறிப் பாராட்டி எனக்கு உவகையும் ஊக்கமும் ஊட்டி னார்கள். அந்தப் பாட்டை இதன்கீழே தந்து இந்த நினைவுக் குறிப்பை முடிக்கின்றேன்.

இந்நூலில் (சுவர்க்கநீக்கத்தில்) உள்ள கருத்துக்களெல்லாம் ஒரு மகாகவி (மிலிட்டன் Militon) கருத்துக்கள். அந்தக் கருத்துக்களைப் புலப்படுத்துவனவாக இந்நூலிலுள்ள சொற்களெல்லாம் ஒரு முனி (அகத்தியமுனி)யின் சொற்கள். (எந்த நூலிலும் கருத்துக்களும் சொற்களும் தவிர உள்ளது பூச்சியமே) அந்நியர்கருத்துக்களும் சொற்களுமேயுள்ள இந்த(ச் சுவர்க்கநீக்க) நூலில் எனக்குச் சொந்தமானது உண்டென்றும் அதிலுற்ற குற்றங்களைப் பொறுக்கவேண்டுமென்றும் கூறுவது (மலடி குழந்தையின் அந்தக் கேட்டைக் கவனிக்கவேண்டாமென்று கூறுவதுபோல) அறியாமைப்பாலதாம் என்ற பொருளுடைய அந்தக் கவிவருமாறு:—

கருத்தெ லாம்ஒரு வான்கவி கருத்துக்கள், கருத்தை
விரித்த சொல்லெலாம் ஒருமுனி வியன்சொற்கள் ஆக
உரித்தின் எற்கிதிற் கொளத்தக்க துளதென்றும் உதனில்
தரித்த கோதுகள் பொறுக்கென்றும் சாற்றல் பேதைமையே.

[வான் - பெருமை(யுடைய). கவி - கவிஞன். வியன் - சிறப்பு. (உடைய). உரித்தின் - உரிமையாக. எற்கு - எனக்கு. உதனில் இங்கே உரிமையாகக் கொண்டதில் என்ற பொருள்படநின்றது. தரித்தல் - தங்குதல். கோது - குற்றம். பொறுக்கென்று - பொறுக்க (—பொறுத்துக் கொள்க) என்று]

(தமிழ்மொழியை அகத்தியன்மொழியென்பது மரபு. தமிழ்மொழி, 'அகத்தியன் பயந்த செஞ்சொல்'— என வில்லிபாரதத்திலும், அகத்தியன், 'தென்தமிழ் உரைத்தோன்', 'என்றுமுள தென்தமிழ் இயம்பியிசை கொண்டான்' எனக் கம்பராமாயணத்திலும் கூறப்பட்டிருப்பது காண்க.)

உ

# பேராசிரியர் சுந்தரம்பிள்ளை.*

திரு. S. வையாபுரிப்பிள்ளையவர்கள் B.A., B.L.,
*திருவிதாங்கூர்ப் பல்கலைக்கழகத்துத் தமிழ்ப்பேராசிரியர், திருவனந்தபுரம்*

பேராசிரியர் சுந்தரம்பிள்ளையைப்பற்றி அறியாத தமிழ்மக்கள் யாரும் இருக்கமாட்டார்கள். பிள்ளையவர்கள் எத்தனையோ கல்வித்துறைகளிற் பெரும்புலமைவாய்ந்தவர். 'தத்துவஞானம் விஞ்ஞானங்களின் பேராசி' என்று ஓர் ஆங்கிலப்பழமொழி கூறும். அத்தகுதிவாய்ந்த தத்துவத்துறையின் பேராசிரியராக, திருவனந்தபுரம் மகாராஜா-கல்லூரியில் இவர் பல்லாண்டுகள் விளங்கியவர்; தென்னிந்தியசரித்திரத்தில் நிபுணர்; கல்வெட்டு ஆராய்ச்சியில் தலைசிறந்தவர்; நமது புராண இதிகாசங்களிலும் நன்குபயின்றவர்; வேதாந்தசாத்திரங்களை ஆழ்ந்து கற்றவர்; பத்தி சிரத்தையுடையவர்; இவற்றோடு இனிய மக்கட்பண்புமுடையவர். நாட்டுப்பற்றும் தாய்மொழிப்பற்றும் இவரைப் பெரிதும் ஆட்கொண்டன.

இவையெல்லாம் ஒருபுறமிருக்க, இவர் ஒரு கவிஞரும் ஆவர். கவிஞர் என்ற நிலையிலேதான், அதிலும் நாடகக்கவிஞர் என்ற நிலையிலேதான் இவரைப்பற்றி இப்பொழுது பேசப்போகிறேன்.

சென்ற நூற்றாண்டின் இடைக்காலத்தில் நாடகநூல் சிலவே தமிழில் இருந்தன. அவற்றில் வழுக்கள் பலவாக இருந்தன. இவ்வழுக்கள் ஒழியும்படியாகவும், புதுச்சுவைகள் பலவும் நாடகங்களிற் பொருந்தும்படியாகவும், நாடகங்களை நன்மக்களும் நுகர்ந்து இன்புறும்படியாகவும் செய்தவராவர் நம் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை.

இவர் பிறந்தது 1855-ல்; அரிய மனோன்மணீய நாடகத்தை இயற்றி வெளியிட்டது 1891 மார்ச்சுமாதத்தில்; இவர் மறைந்தது 1897ல்.

நாடகமியற்றல் எளியதொருகாரியமன்று. அதனை இயற்றுதற்கு அரியமேதை, மிக்க உலகாநுபவம், தாய்மொழியில் ஆழ்ந்த உணர்ச்சி, பண்டைக்காலத்து இலக்கியங்களிலே சிறந்த பயிற்சி,

---

* இது திருவனந்தபுரம் வானொலிநிலையத்திலிருந்து 4—3—52ல் ஒலி பரப்பியது. திருத்தங்களுடன் அனுமதிபெற்று வெளியிடப்பட்டது.

அதனால் ஏற்படும் மனப்பண்பு முதலிய அனைத்தும் வேண்டும். இத்துறைகளிலெல்லாம் பெருந்தகுதிவாய்ந்தவர் நம் சுந்தரம்பிள்ளை. இவர் இப் புதுத்துறையிலே புத்தம்புதியமுறையில் நூலியற்ற வேண்டுமென்று துணிந்தது முற்றும் ஏற்புடையதே.

நாடகத்தில்வரும் கதையின் உட்பொருள் முற்படக் கவனித்தற்குரியது. இதனை ஆழ்ந்து ஆராய்ச்சிசெய்து தேர்ந்தெடுத்தற்கு மில்டன் என்ற மகாகவியை எடுத்துக் காட்டுவது வழக்கம். கதை நிகழ்ச்சி மிக ஆழ்ந்த ஓர் உண்மையை அடிநாதமாகக் கொண்டு அமைதல்வேண்டும். ஆனால் ஓரிடத்தும் அது வலிந்துதோன்றுதல்கூடாது. இவ்வுட்பொருளின் ஓர் இயற்கைவிகாசமே கதையின் பொருளாக இருத்தல்வேண்டும். கதையினின்று இவ்வுட்பொருள் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமேயன்றி, உட்பொருளிலிருந்து கதைப்பொருளை வடித்தெடுக்கலாகாது. நாடகம் (Drama) என்பதற்கும் தத்துவநாடகம் (Metaphysical drama) என்பதற்கும் உள்ள வேறுபாட்டை நாம் நன்றாகத் தெளிந்துகொள்ளுதல்வேண்டும். நாடகத்தின் கதை, சிறியதொரு வித்தினின்று அழகிய புஷ்பம் ஒன்று மலர்ந்து காட்சியளித்தல்போல உள்ளதாகும்.

சுந்தரம்பிள்ளையும் தாம் மனோன்மணீயம் இயற்றுங்காலத்துப் பல உட்பொருள்களைப்பற்றியும் சில ஆண்டுகளேனும் சிந்தித்திருத்தல்வேண்டும். மனிதரது சொற் செயலுக்கு அப்பாற்பட்டதாய், அவர்களுடைய நினைவிற்கும் எட்டாததாய் உள்ள பரம்பொருளின் நியதி உலகத்தோரை ஆட்டுகின்றது. இதுதான் சுந்தரம்பிள்ளை கருதிக்கொண்ட உட்பொருள். ஜீவகனை ஜீவாத்மாவாகவும், அவனை வசப்படுத்தி ஆட்டுவித்துவந்த குடிலனை மாயாசக்தியாகவும், மனோன்மணியை முத்திக்குரிய அறிவுதெளிந்த ஆன்மாவாகவும், புருஷோத்தமனை அருட்சக்தியாகவும் இங்ஙனமெல்லாம் ஆசிரியர் உருவகித்து எழுதியபோதிலும், இவற்றின் தெளிந்த உட்பொருள் முற்கூறியதேயாகும்.

அடுத்து நோக்கவேண்டுவது கதையின் அமைப்பு (Plot). இது தெளிவானதாய் எளிதாய் யாவருக்கும் சுவையை உண்டுபண்ணுவதாய், பாத்திரங்களின் இயல்புக்குத் தக்கதாய் இருத்தல்வேண்டும்.

மனோன்மணீயத்தின் கதை Lytron பிரபு எழுதிய 'The Secret Way' என்ற கவிதையைப் பின்பற்றியது. ஆனால் கதையை நமது நாட்டிற்குத் தகுந்தபடி மாற்றி, அழகுற அமைத்தவர் சுந்தரம் பிள்ளையேயாவர்.

மூன்றாவதாகக்கவனித்தற்குரியது கதைக்குரியபாத்திரங்கள் :- இவைகள் இயற்கையொடு பொருந்துவனவாய், அமானுஷ்யமான பாத்திரங்கள்வரும்பொழுது அவற்றின் இயல்போடும்பொருந்துவனவாய், சிருஷ்டிக்கப்படுதல்வேண்டும். இவ்வாறாகத்தோன்றும் பாத்திரங்கள் தம் தனியியல்புகளில் எவ்வகைக்குறைவுமில்லாமல், நாடகமாகப்பரிணமித்து ஒன்றோடொன்று கதைநிகழ்ச்சியில் ஊடாடும்பொழுது தம் தனியியல்புகளுக்கு ஒத்திருத்தலோடு, அவ்வியல்புகள் சிறந்துவிளங்கும்படியாகவும் அமைதல்வேண்டும். குறைவு இல்லாமல் என்று கூறியது பாத்திரங்களாய்வரும் ஒவ்வொருவரும் எவ்வகைக்குறைபாடும் இல்லாமல், அனைவரும் மக்களிற் சிறந்தவர்களாயிருத்தல்வேண்டுமென்பது கருத்தல்ல. ஆசிரியர் என்ன இயல்புடையராக அவர்கள் இருத்தல்வேண்டுமென்று கருதிக்கொண்டாரோ, அந்த இயல்புக்கு மாறான இயல்பும சொல்லும் செயலும் காணப்படாமையே இங்குக கருதியது. இம்முறையிலே நல்ல செவ்வியுடைய பாத்திரசிருஷ்டியிலேதான் கவித்துவத்தின் பெருமைமுழுதும் அமைந்துள்ளது என்பர்.

மேற்கூறிய அரிய இயல்புகளோடு அமைக்கப்பட்டதே நம் ஆசிரியர் இயற்றிய மனோன்மணீய நாடகம். இது நாடகநூலினை வாசித்தோர் அனைவருக்கும் வெளிப்படையாய் விளங்கும்.

இனி, நூலிலுள்ள சிறப்புக்கள் சிலவற்றை நோக்குவோம்.

முதலாவது நூலின் யாப்பு:—ஆசிரியர் அகவற்பாவால் தெளிந்த நடையில் தமது நூலை யியற்றியுள்ளார் இவர்தாமே ஏறக்குறைய வாசகநடைக்குச் சமமான அகவற்பாவால் தாம் நாடகத்தை இயற்றுவதாகக் கூறியுள்ளார். இந்தப் பாவும் நடையும் பலவகையிற் பயன்பட்டு நூலின் அழகைப் பெரிதும் எடுத்துக்காட்டுகின்றன. சம்பாஷணையிலும் இவை பெரிதும் உதவுகின்றன. வேறு எவ்வகைப்பாவும் அகவலைப்போல் நாடகத்துக்கு உதவமாட்டாது.

இத்தகைய அகவலில் ஆண்டுள்ள சொற்கள் அதன் நடையை நெகிழ்த்துவதற்குப் பெரும்பாலும் அநுகூலமாயுள்ளன. அகவலை எளிதாகச் செய்யும்பொருட்டுப் பலவேறு உபாயங்களையும் ஆசிரியர் இனிது கையாண்டுள்ளார். பல பழமொழிகளை இடையிடையே பெய்துசெல்லுதலாலும், அங்கங்கே நகைச்சுவைபொருந்த வாசகங்களை அமைத்துச்செல்வதாலும், புராணக்கதைகளைப் புராணம் முதலியவற்றில் அமைந்த சொற்களைக்கொண்டே சுருக்கியெழுதுதலாலும் நூல் எளிமையெய்தியுள்ளது. இந்நூலைக் கவிஞர்களும் தமிழறிவிற் சிறந்தவர்களும் மாத்திரம் கற்பது ஆசிரியரது நோக்கமன்று. தமிழ்வாசிக்கவல்ல அனைவரும் — சிறப்பாக மாணவரனைவரும் — கற்றுணர்வதே நோக்கமாகக்கொண்டிருந்தனர். சிற்சில இடங்களில், ஆங்கிலமொழிபெயர்ப்புக்களும் பிற்கூறிய நோக்கத்தை நிறைவேற்றுகின்றன.

நன்மையே யாவும் நன்மையாய்முடியின்

என்பது All is well that ends well என்றதன் மொழிபெயர்ப்பு. இம் மொழிபெயர்ப்பு எவ்வளவு அழகாயமைந்துள்ளதென்பதை நீங்களே உணர்ந்துகொள்ளலாம்.

அடுத்தது நூலின் நடையினிமை. இது தனிப்படப்போற்றத் தக்கது. உதாரணமாக,

நூலியால் தம்முடல் நீவிடிற் சிரிக்கும்
சிறுமியர் என்ன அச் செழுநில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனங் கூசி
உடல்குழைந் தெங்கும் உலப்பறு செல்வப்
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் தருவள்

என்ற அடிகளைக் காட்டலாம்.

மேற்குறித்த நூலியல்புகள் ஒருபுறமிருப்ப, அழகாகச்செதுக்கிப் பட்டம்செய்த மணிபோன்று விளங்கும் வரிகள் அங்கங்கே ஒளிர்ந்து மிளிர்கின்றன.

இச்சை யற்றவர் இச்சகத்து யாரே?
முடிதன் அடிவிழில் யாரெடுத் தணியார்?

என்பன உதாரணங்கள். ஒருசில இடங்களில் நமது சங்கச்செய்யுட்களின் அழகும் கௌரவமும் பிரதிபலிக்கின்றன.

அமுத மூற்றிருக்கும் குமுதவாய் விண்டு
நயவுரை பலவும் குயிலின் மிழற்றி
மலய மாருதம் வந்துவந் துந்த
நிலவொளி நீந்திநம் நெடுநகர் முற்றத்துப்
பந்துவந் தாடிமேல் மந்திரம் அடைந்தே
இணைபுணர் அன்னத் தூவி யணையிசைக்
கண்படு மெல்லை

இவற்றில் 5-ம் அடிதவிர ஏனையடிகள் சங்கச்செய்யுளின் அடிகளையொத்து அழகொடு சுவைமிகுந்து காணப்படுகின்றன.

இனி, பலவகை வருணனைகளும் இங்கே நோக்கத்தக்கன. முன்னோர் வகுத்த மரபினை அனுசரித்து இயற்றிய வருணனை ஒரு வகை. இதற்கு நாடு நகர வர்ணனைகள் உதாரணங்களாம். பிறி தொருவகை மக்களைப்பற்றியது. இதற்கு ஓர் உதாரணம் சுந்தர முனிவரைப்பற்றிய வருணனை (I, 2, 89-94). இது மிகச்சிறந்த தாகும். இரவில், மனோன்மணியைக் கனவுகாணும்போது அவளைப் புருஷோத்தமன் வருணிக்கும் பகுதி (II, 3) மற்றொரு சிறந்த உதாரணமாம்.

சம்பாஷணைகளை நிகழ்த்தும்முறை நாம் கவனிக்கவேண்டும் அதிமுக்கியவிஷயங்களில ஒன்றாகும். சம்பாஷணையிலேதான் நாடகத்தின் உயிர்நாடி துடித்துக்கொண்டிருக்கும். இவ்வகைச் சம்பாஷணைகள் இந்நூலிலே பல இடங்களில் நிகழ்வதை நாம் தெரிந்து அனுபவிக்கலாம். இருவர் உரையாடிக்கொண்டிருக்கும் பொழுது, ஒருவரோடொருவர் நிகழ்த்தும் எதிர்மாற்றங்களின் விரைவும் பொருத்தமும் நம்மை வியப்பில் ஆழ்த்திவிடுகின்றன.

சொல்லாட்சி, வாசகநடை முதலியன இவ்வாறிருப்ப, இந் நூலிலே காணும் சிந்தனைச் சிறப்புக்கள் பலவாகத்தோன்றி நம்மை மகிழ்விக்கின்றன. முற்காலக் கருத்துக்களை அங்கங்கே எடுத் தாளுதல் முன்னே கூறத்தக்கது. இவைகள் மனோன்மணீயத் தில் நிரம்பக் காணப்படுகின்றன. ஒருசில கருத்துக்களைச் சுந்தரம் பிள்ளை அழகிலும் சுவையிலும் மிகும்படி பேசியுள்ளார். ஒரு திருக்குறளை வள்ளுவரும் மெச்சும்படியான அழகுச்சுவையோடு

"கெட்டார்க்கு உலகில் நட்டார் இல்லை" (4—4—188)

என எடுத்தாள்கிறார். இடையிடையே கற்பனைவிசேஷங்களும் நமக்கு இன்பத்தையூட்டுகின்றன. தற்காலத்து விஞ்ஞான சாஸ்திரங்களிலும் நமது பண்டைநூல்களிலும் காணப்படும் கருத்துக்கள் யாரும் வியக்கத்தக்கவண்ணம் அருமையாக ஆளப்பட்டுள்ளன.

இவ்வாறாக நூலின் அடிநாதமாகவுள்ள உண்மை, கதையின் அமைப்பு, கதாபாத்திரசிருஷ்டி, சொல்நடை முதலியவற்றின் அழகு, செய்யுளின் சிறப்பு, கருத்தின்வளம், பண்டைநூலாட்சி முதலிய பலவும் நம்மைப் பெரிதும் வசீகரிக்கின்றன. இடையே காணப்படும் சிவகாமிசரித்திரம் இவ்வழகிய நாடகமாகிய பருமணிப் பதக்கத்தின் நடுநாயகமணியென்றே சொல்லலாம். இச்சரித்திரமும் ஓர் ஆங்கிலச் சிறுநூலின் மொழிபெயர்ப்பே.

பேராசிரியர் சுந்தரம்பிள்ளையியற்றிய இந்நூல் சேரநாட்டில் பிறந்தது. இவ்வாறே தோன்றிய மற்றோர் இயலிசைநாடகநூல் சிலப்பதிகாரமாகும். இந்த இரண்டும் தமிழ்மக்களின் அழியாப் பெருஞ்செல்வங்களாம். இவற்றின் ஆசிரியர்களின் பெரும்புகழ் என்றும் குன்றாது பொலிந்து ஓங்குக!

வேத சிகையும் விரிகலையும மெய்யன்பர்
போதமும் போய்த்தீண்டாப் பூரணமே—பேதமற
வந்தெனைநீ கூடுங்கால வாழ்த்துவர்யார் வாராக்கால்
சிந்தனையான் செய்ம்முறையென் செப்பு.

என்றது இந்நூலின் அழகிய காப்புச்செய்யுள்.

இக்காப்புச்செய்யுளின்பின், தமிழ்த்தெய்வவணக்கமொன்று அருமையாகவும் அழகாகவும் சுந்தரம்பிள்ளை இயற்றியுள்ளார். கண்ணகியை வணங்குவித்த இளங்கோவடிகளைப்போலத் தமிழ் மொழியைத் தெய்வமாக்கி அத்தெய்வவணக்கத்தை முதன்மையாகத் தொடங்குவித்தவர் இப்பேராசிரியரேயாவர்.

இப்பெரியார்க்குத் தமிழ்மக்கள் அனைவருடைய வணக்கமும் உரித்தாகுக.

---

# பெருங்கவிஞர் பிரிவு

தமிழ்ப்பெருங்கவியும் முதுபெரும்புலவருமான வெள்ளகால் ராவ் சாஹிப். வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G B.V.C., நிகழும் விய ஆண்டு புரட்டாசிமீ 26 (12—10—46)உ சனிக்கிழமை இறைவனடி சேர்ந்தமைதெரிந்து வருந்துகிறோம்.

இவர், திருக்குற்றாலத்தையடுத்துள்ள வெள்ளகால்நகரத்துத் தொண்டை மண்டலவேளாளருள் அரசர்க்கு முடிசூட்டும்பெருமைவாய்ந்த கொண்டை கட்டிகள்மரபினரான திருத்தகுசெல்வர் பழநியப்பமுதலியார்தவப்புதல்வ ராய்க் கி. பி. 1857ஆம் ஆண்டு ஆகஸ்டுமீ 14உ ஆழ்வார்குறிச்சியிற் பிறந்தவர். இவர் பாட்டனார் சுப்பிரமணியமுதலியார் மதுரையையடுத்துள்ள சோழவந்தானிலிருந்து வெள்ளகாலிற் குடிபுகுந்து, அக்காலத்துத் திருநெல் வேலியில் நவாபுஅரசர்களுக்குப் பிரதிநிதிகளாய் நாடாட்சிபுரிந்த ஆழ்வார் குறிச்சி ஆறை அழகப்பமுதலியார், திருநெல்வேலி மேடைதளவாய் திரு மலையப்பமுதலியார் குடும்பங்களுடன் தொடர்புபூண்டு மகட்கொடுத்தும் மகட்கொடைநேர்ந்தும் பிரபலம் அடைந்தவர். இவருடைய தந்தை பழநி யப்பமுதலியார், நல்ல செல்வாக்கும் ஊக்கமும் உலகியலறிவும் எளியவர்பால் இரக்கமும் வாய்ந்தவர்; தம் காலத்து அரசினர் மேற்பார்வையிலிருந்த தளவாய் எஸ்டேட்டுக்கு மானேஜராயிருந்து அது பலவகையிலும் மேனிலை யடையச்செய்ததுடன், தாம் வசிக்கும் வெள்ளகால்நகரில் அந்நகரமக்கள் வழிபட்டுய்யுமாறு குற்றாலவிநாயகர்கோயிலும் அதனையடுத்து நகரமக் களுக்குப் பயன்படும்படி நன்னீர்க்கிணறும் நல்லசாலையும் அமைப்பித்துதவி யவர். இவர்கள் வழிவந்த நம் பெருங்கவிஞர், கருவிலேயமைந்த திருவுடைய ராய் இளமையில் திருநெல்வேலித் தெற்குப்புதுத்தெருவிற் கணபதிவாத்தி யார் திண்ணைப்பள்ளிக்கூடத்திற் றமிழ்க்கல்வி பயிலத்தொடங்கினார்; பின் திருநெல்வேலி இந்துகலாசாலையிலும் சென்னைக் கிறிஸ்தவகலாசாலையிலும் ஆங்கிலக்கல்வியின்று சிறந்தார்; ஆங்கிலமொழிபயிலுங்கால் இவரோடு ஒரு சாலைமாணவராயிருந்தவர் மாஜிமந்திரி T. N. சிவஞானம்பிள்ளையவர்க ளாவர்.

திருநெல்வேலித் தெற்குப்புதுத்தெருத் திண்ணைப்பள்ளிக்கூடத்திற் றொடங்கிய இவர்தமிழ்க்கல்வி, திருநெல்வேலிக் கவிராஜ நெல்லையப்பபிள்ளை யவர்கள் வீட்டுத்தோட்டத்தில் அமைந்த சவுக்கையில் ராஜவல்லிபுரம்

முத்துச்சாமிப்பிள்ளை, அழகியசொக்கநாதபிள்ளை, மு.ரா.அருணசலக்கவிராயர், சென்னிகுளம் அண்ணாமலைரெட்டியார் முதலியவர்களோடு பயிற்சியால் நிறைவெய்தியது. இவரது திருந்திய தமிழ்ப்புலமைக்கும் கவித்துவத்துக்கும் அப்புலவர்குழுவே மூலமெனின் அது மிகையாகாது.

இவ்வாறு ஆங்கிலமொழியோடு ஒங்குசெந்தமிழும் வரன்முறைபயின்று கவியியற்றுமாற்றலும் கட்டுரைவரையும் வன்மையும் மொழிபெயர்க்குந்திறமும் உடையராகிய இவர், பின்னர் விவசாயகலாசாலையிலும் கால்நடைமருத்துவக் கல்லூரியிலும் பயின்று அத்துறைகளிலும் சிறந்த தேர்ச்சியுடையராயினர்; தம் தேர்ச்சிகண்டு, அரசாங்கத்தார் கால்நடைமருத்துவஇலாகாவில் உத்தியோகந்தரப்பெற்றுத் தம் திறமையால் அவ்விலாகாவில் மேலும் மேலும் உயர்பதவியடைந்து, தம் உழைப்பாலும் அவ்விலாகாவிலிருந்து தம் அனுபவத்தாலறிந்தவற்றையும் பிறமொழிநூல்களால் அறிந்தவற்றையும் முறைப்படத்தொகுத்து எளியதமிழ்நடையில் யாவரும் உணரவிரித்தெழுதியுதவிய இந்துதேசத்துக் கால்நடைக்காரர்புத்தகம் முதலிய நூற்பதிப்பாலும் திறம்பட வுயிர்த்தொண்டாற்றி மேலதிகாரிகளால் நன்குமதிக்கப்பெற்றதன்மேலும், சொற்பொருளணிகளோடு பற்பல கற்பனைகளும் விரவிய சுவர்க்கநீக்கமுதற்காண்டம் அகலிகைவெண்பா முதலிய காவியங்களையும், நெல்லைச்சிலேடைவெண்பா அம்பலவாணதேசிகமாலை முதலிய பிரபந்தங்களையும், சருவஜனஜபம் கோம்பிவிருத்தம் முதலிய சிறுநூல்களையும், பலநூறு தனிக்கவிகளையும், கல்விவிளக்கம் முதற்பாகம் ஜான்மில்டனர் சரித்திரம் முதலிய இனியவசனநூல்களையும் இயற்றியுதவி மொழித்தொண்டுபுரிந்தும், திருநெல்வேலித் தாலூகாபோர்டு ஜில்லாபோர்டு முதலியவற்றில் அங்கத்தினராயும் தலைவராயும் இருந்து சிறந்த நாட்டுத்தொண்டுபுரிந்தும் தமிழ்நாடுமுழுவதிலும் உள்ள மடாதிபதிகளும் புரவலரும் புலவரும்பொருளாளரும் பொதுமக்களும் பாராட்டும் பேறுபெற்றனர்.

இவரியற்றிய நூல்களுள் கோம்பிவிருத்தம் முதலியவற்றால் கற்பனசக்தியும், சுவர்க்கநீக்கம் கல்விவிளக்கம் முதலியவற்றால் மொழிபெயர்க்குமாற்றலும், சருவஜனஜபம் முதலியவற்றால் பிறமதத்துவேஷமற்ற சமரசமனப்பான்மையும், அம்பலவாணதேசிகமாலையால் குருபத்திமையும், தனிக்கவித்திரட்டால் மடக்கு யமகம் திரிபுமுதலிய தொடையங்களோடு அரி

தாகிய பொருளையும் இனிதாக விளக்கிச்செல்லும் கவித்துவமும் இவர்பால் எத்துணைச் சிறப்பினவாக அமைந்திருந்தன என்பது நன்குவிளங்கும்.

இவருடைய கவித்துவமும் மொழிபெயர்க்குந்திறமும், பூண்டி அரங்கநாதமுதலியார் புரொபஸர் சுந்தரம்பிள்ளை, சி. வை. தாமோதரம்பிள்ளை, ஜீ. யூ. போப்பையர், மஹாமஹோபாத்யாய சாமிநாதையர், மஹாமஹோபாத்தியாய பண்டிதமணி கதிரேசச்செட்டியார், மஹாவித்வான். ரா. இராகவையங்கார் முதலான பேரறிஞர்களாற் பாராட்டப்பெற்றவை.

தமிழர்கலைச்செல்வமாகிய கம்பராமாயண ஆராய்ச்சியிலே தம் வாழ்நாள்முழுவதையும் செலவிட்டு, இவர் இச்செந்தமிழ்ப்பத்திரிகையில் வெளியிட்டு முற்றுவித்த கம்பராமாயணசாரம், இவருதவிய நூல்களுள் தனிச் சிறப்புடையது. அதன் முதல் ஐந்துகாண்டங்கள் திருப்பனந்தாள் ஆதீன கர்த்தர் பொருளுதவிகொண்டு தென்னிந்திய சைவசித்தாந்தநூற்பதிப்புக் கழகத்தாரால் உயர்ந்தமுறையில் தனிப்புத்தகங்களாக அச்சிட்டுவெளியிடப் பட்டுள்ளன. எஞ்சிய இரண்டுகாண்டங்களும் தனிப்புத்தகங்களாக அக் கழகத்தாரால் வெளிவருவதன்முன் இவர்கள் மறைந்தது வருந்தத்தக்கது.

ஆங்கிலமொழியறிவோடு தமிழறிவும் உடையராய் உயர்ந்த அரசாங்க உத்தியோகத்தமர்ந்த தமிழ்ப்பெருஞ்செல்வர் ஒருசிலருள், நடுநிலை திறம்பா நன்னெறிநின்று தமிழ்ப்புலவரொடு நெருங்கிப்பழகி அவர்தம் தகுதியறிந்து பாராட்டிப் புரந்தும் தமிழ்த்தொண்டு புரிந்தும் புகழ்மிக்க இவர் முன்னெண்ணத்தக்கவராவர்.

இவருடைய தொடர்பும் உதவியும் பெறாத புலவர்களும் பொது நிலையங்களும் சங்கங்களும் கழகங்களும் பத்திரிகைகளும் தமிழ்நாட்டில் இல்லையென்றே சொல்லலாம்.

இவர், பல ஆண்டுகள், சென்னைப் பல்கலைக்கழகத்தும் அண்ணாமலை பல்கலைக்கழகத்தும் பரீக்ஷகராயிருந்தும், தம் வாழ்நாள் முழுதும் மதுரைத் தமிழ்ச்சங்கத்துப் பரீக்ஷகராகவும் வித்யா விஷய ஆலோசனைஸபையங்கத்தினராகவும் இருந்தும் தாம் மேற்கொண்டபணியினை நன்குபுரிந்திருக்கிறார். இவர் தம் ஆன்மா உடலினின்றுபிரியும்வரை இச்செந்தமிழ்ப்பத்திரிகைக்குச் சீரிய கட்டுரைகளுதவிவந்துள்ளார்; இதனை, இவ்வறுதாபக்குறிப்பு வெளிவரும் இச்செந்தமிழ்ப்பகுதியிலும் இவருடைய கட்டுரை இரண்டு வெளிவருவதுகொண்டு அறியலாம்.

இவருடைய தகுதியினைநன்கறிந்த அரசாங்கத்தார் இவருக்கு ராவ் ஸாஹிப் என்ற விருதளித்துக் கௌரவித்தனர்; சென்னைமாகாணத் தமிழ்ச் சங்கத்தார் அச்சங்கத்தின் எழாவதாண்டுவிழாவில் இவருக்குத் தமிழ்ப் பெருங்கவி முதுபெரும்புலவர் என்னும் பட்டங்களைச் செப்புப்பட்டயங்களு டன் வழங்கிப் பெருமைப்படுத்தினார்கள்; இவருடைய எண்பதாம் ஆண்டு நிறைவு, திருநெல்வேலியில் 1937-ஆம் ஆண்டு ஆகஸ்டும௴ 1உ மஹாமஹோ பாத்தியாய சாமிநாதையரவர்கள் தலைமையிற் பெருங்குழுவினராகத்தொக்க தமிழ்ப்பெருமக்களால் திருவிழாவாகக்கொண்டாடப்பட்டது. அக்காலத்து நிகழ்ந்த பாராட்டுரைகள், தமிழ்நாட்டினர் இவரை எவ்வளவு உயர்வாக மதித்தனர் என்பதை நன்குவிளக்கும்.

இவருக்கு, திருமலையப்பமுதலியார் என்று ஒரு சகோதரரும் மூவர் பெண்மக்களும் பழனியப்பமுதலியார் தீத்தாரப்பமுதலியார் என இருவர் ஆண்மக்களும் உண்டு. இவருடைய மூதற்புதல்வர் V S பழனியப்பமுதலியா ரவர்கள் ஆங்கிலமொழியில் ஓங்கியபுலமையோடு நற்குணங்களும் தம் குடும்ப நிலை மேன்மேலும் சிறக்கமுயலும் நன்முயற்சியும் உடையராய் விளங்குகிறார்.

நிறைந்தகல்வியும் நீங்காதசெல்வமும் அமைந்தஒழுக்கமும் உடைய ராய்த் தொண்ணூறாண்டுவாழ்ந்த இப்பெருங்கவிஞர்வரலாறெல்லாம், இவ ரியற்றிய நூல்களாலும், இவரது எண்பதாமாண்டுநிறைவிழாநினைவுமலரா லும், திருவாளர் பாஸ்கரத்தொண்டைமான் (B. A.) அவர்கள் எழுதிஅச் சிட்டு வெளியிட்ட இவர் சரித்திரத்தாலும் நன்கறியலாகும்.

புகழொடுதோன்றி உயர்ந்த தமிழறிஞர், தமிழ்ப்பெருங்கவி, ரசிகர், வசனகர்த்தர், உரையாசிரியர், மொழிபெயர்ப்பாளர், கொடையாளர் என்று உலகுபுகழ வாழ்ந்து, புகழ்நிறுவிமறைந்த இவர் பிரிவு பொதுவாகத் தமிழகத்துக்கும் சிறப்பாக மதுரைத்தமிழ்ச்சங்கத்துக்கும் பல துறையிலும் பெருநஷ்டமாகும். இவரைப் பிரிந்து வருந்தும் மக்கட்கும் சுற்றத்தார்க்கும் நண்பர்க்கும் நம்முடைய ஆழ்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள் கிறேம்.

இவரது ஆன்மா இறைவனடியிணைநீழலில் எல்லையில்பேரின்பமெய்துக.

பத்திராசிரியர்.

உ

*பழையகோட்டைப்பட்டக்காரர்*

### ராவ்பஹதூர் *நல்லதம்பிச்சர்க்கரைமன்ருடியார்* M. L. A.

# *நினைவுக்குறிப்பு*

ஸ்ரீ. ராவ்சாஹிப். V. P. சுப்பிரமணியமுதலியாரவர்கள், G B.V.C.,
(Retired Veterinary Dy. Superintendent.)

## குடும்பப்பெருமையும் தேசசேவையும்

*"கோவைக்கோமான், திராவிடத்திலகம், பழையகோட்டைப்பட்டக்காரர், நல்லதம்பிச்சர்க்கரைமன்ருடியார்.........27—8—45 இரவு 9-30 மணிக்கு.........மாரடைப்புநோயால் மன்பதையைவிட்டு மறைந்தார்....... செல்விருந்தோம்பி வருவிருந்தை எதிர்நோக்கிநிற்கும் பண்டைத்தமிழரின் பண்புக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியவர்........சமுதாயத்துறையிலும், அரசியல்துறையிலும் போதியபங்கெடுத்துப் பணிபல புரிந்தவர். சென்னை அரசியல்உறுப்பினராகவும் (M.L.A.) ஜில்லாபோர்டு தலைவராகவும், நிலஅடமானபாங்கின் தலைவராகவும் இன்னும் பல ஸ்தாபனங்களுக்கு நிர்வாகியாகவும் பல ஆண்டுகளிருந்து பொதுநலப்பணியில் ஈடுபட்டுப் புகழ்பெற்றவர்."* [*திராவிடநாடு* (2—9—45) 6-*ஆம் பக்கம்*]

## "குல*விச்சை கல்லாமற் பாகம்படும்"

*இவர், கோர்ட்டவார்ட்சாரால் நியமிக்கப்பெற்ற உபாத்தியாயரிடம் பாலப்பருவப்படிப்புப் பயின்றுகொண்டிருந்தகாலமுதல் இவரை நான் அறிந்துள்ளேன்.† தாம் கற்றுக்கொடுக்கும் சிரமத்துக்குத்தக்கவாறு இவர் கல்வி*

---

** விச்சை - வித்தை.*

*† திருநெல்வேலித் திரவியம் தாயுமானவர் ஹிந்துகலாசாலையிலும் சென்னைக் கிறிஸ்தியன்கல்லூரியிலும் பலவருடம் என்னுடன் ஒருசாலைமாணக்கராகப்படித்த ஸர். T. N. சிவஞானம்பிள்ளை Kt. மந்திரியாயிருந்தகாலத்தில் அவரைப் பார்க்க நான் சென்னைக்குச் சென்றிருந்தபோது, அவரிடம் வந்திருந்த இவரைப் பார்க்கும்படி வாய்த்ததுதான், இவரை நான் கடைசியாகச் சந்தித்தகாலம்.*

விருத்தியடையவில்லையென்று அந்த உபாத்தியாயர் என்னிடம் சொன்னது நினைவுக்குவருகின்றது. ஆயினும், நான் மிருகவைத்திய இலாகாவில் உத்தியோகத்தனுகப் பழையகோட்டைக்குப் பலமுறைபோய் இவருடைய மாடுகள் குதிரைகளைப் பார்வையிட்டு அவைகளை இவர் பராமரிக்கும் முறைகளைக் கவனித்தபோது, மிருகவைத்தியகலாசாலைப்படிப்பில்லாமலே, அக் கலாசாலையிற் படித்துத் தேர்ந்து பட்டம்பெற்றவர்களெல்லாரினும் திறமையாக இவர் தந்தொழிலை நடத்திவந்ததைத் தெரியலானேன். தெரிந்து, "குலவிச்சை கல்லாமற்பாகம்படும்" என்பதற்கு இவர் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கியதையறிந்து மகிழ்ந்தேன். கால்நடை அபிவிருத்திசெய்தலில் அனுபவமுதிர்ச்சியும் அக்கறையுமுடைய ராசப்பிரதிநிதி லார்டு லின்லித்கோவும் இந்தியாவில் உள்ள மிருகவயித்திய இலாகாத் தலைமையதிகாரிகளும் இவர் தொழிற்றிறமைச்சிறப்பை நன்குமதித்து மனமாரப் புகழ்ந்திருப்பது பத்திரிகைகளில் வெளியாயிருப்பதைப் பலர் பார்த்திருப்பார்கள்.

## பண்ணையார்களுக்குச் சிறந்த முன்மாதிரி.

மத்தியானகாலத்தில் நான் பழையகோட்டைக்குப்போகும்படி நேர்ந்த பலசமயங்களில் இவரைக் காணமுயன்றபோது, இவர் பண்ணைநிலங்களில் வேலைநடப்பதை மேற்பார்ப்பதற்குப் போயிருக்கிறாரென்றும் மத்தியான போசனம் வேலைத்தலத்துக்கு அனுப்பப்பட்டிருக்கிறதென்றும் வேலை முடிந்தபின்னரே திரும்பிவருவாரென்றும் தெரிவிக்கப்பெற்றிருக்கிறேன். எத்தனையோ பல பண்ணைமேற்பார்வையாளர் தம்கீழிருந்தாலும், பண்ணை வேலைகளைத் தாமும் மேற்பார்வையிடுவது தம் கடமையெனக்கொண்டு இவர் அதனைச் செவ்வையாகச் சிரத்தையுடன் செய்துவந்தது பெருநிலக்கிழவர்களான பண்ணையார்களுக்குச் சிறந்த முன்மாதிரியாகும்.

## கால்நடைப் பராமரிப்பு நுணுக்கம்.

கோயமுத்தூர்ஜில்லாத் திருப்பூரில் ஒரு வருஷாந்தர மாட்டுச் சந்தைக்கு வந்திருந்த மாட்டுக்கூட்டங்களை இவரும், நானும் பார்த்துக் கொண்டுசென்றபோது, உயர்தரமாடுகளடங்கிய கூட்டங்களைக் கண்டபோது, "இந்தக்கூட்டம் தங்களுடையதோ? இந்தக்கூட்டம் தங்களுடையதோ?" என்று நான் கேட்டபோதெல்லாம் "இல்லை" "இல்லை" என்று

சொல்லிவந்தவர், தம் மாட்டுக்கூட்டத்தண்டை வந்தபோது, "இது என் மாட்டுக்கூட்டம்" என்று கூறி, "இந்தக்கூட்டத்துக்கும் மற்றக்கூட்டத்துக்கும் என்ன வித்தியாசங்கண்டீர்கள்" என்று கேட்டார். நான் "இந்தக் கூட்டம் மற்றெல்லாக் கூட்டங்களினும் மிக உயர்ந்ததரமான மாடுகளடங்கியிருக்கிறதுதான் நான் கண்ட வித்தியாசம்" என்று என் மனத்துப்பட்ட உண்மையைக் கூறினேன். "உயர்தரமிருக்கட்டும். வேறு குறிப்பிட்ட வித்தியாசம் ஏதாயினும் கண்டீர்களா?" என்றார். "இல்லை, நீங்கள் சொல்லுங்கள்" என்றேன். "மற்றெந்தக்கூட்டத்திலும் விலாப்பக்க முதலிய இடங்களில் சாணக்கறைபட்டிராத மாட்டைக் காண்பது அரிது. இந்தக் கூட்டத்தில் ஒரு மாடாவது எங்காவது அந்தக் கறை பட்டிருப்பதைக் காண முடியாது" என்றார். "அது எதனால்?" என்றேன். வரிசைவரிசையாகக் கட்டப்பட்டிருந்த தம் மாட்டுக்கூட்டத்தைச்சுற்றி உலாவிக்கொண்டிருந்த ஒரு வேலைக்காரனைச்சுட்டிக்காட்டி, "மனிதன் உண்டுகளிப்பான், மாடு கண்டு களிக்கும்" என்ற பழமொழிப்படி மொத்தமாகத் தீவனத்தை முன் போட்டால் மாடுகள் வயிறாரத்தின்னாமல் குறையாகத் தின்பதையும் மிஞ்சிய தீவனத்தைக் காலால் மிதித்தழிப்பதையும் தடுப்பதற்காகத் தின்னத்தின்னச் சிறிதுசிறிதாகத் தீவனம் போட்டுவரவும், கட்டுக்கயிற்றில் மாட்டுக்கால்கள் சிக்கிக்கொள்வதை விடுவிக்கவும், எந்த மாடு சாணம்போட்டாலும் உடனே அதனிடம் சென்று அதற்கு எட்டாததூரத்தில் சாணத்தைக் காலால் தள்ளிவிடவும் இந்த வேலைக்காரன் நியமிக்கப்பட்டிருக்கிறான்" என்றார். இதனால் இவருடைய கால்நடைப்பராமரிப்பு நுணுக்கத்தை அறிந்து வியப்புற்றேன்.

## "செயற்கரிய செய்வார் பெரியர்"

மேலே, இவர் மிருகவயித்திய கலாசாலையிற் பயிலவில்லையென்றாலும், அப்பயிற்சிபெற்றவரெவரினும் சிறப்பாகக் கால்நடைகளைப் பராமரித்தவரென்று கூறியிருக்கிறேன். அந்த உண்மையை ஆச்சரியகரமாகவும் மறுக்க முடியாதவாறாகவும் மெய்ப்பித்து விளக்கிக்காட்டும் நிகழ்ச்சிகளடங்கியது பின்வரும் வரலாறு.

நான் மிருகவயித்திய இலாகா டிப்டி சூப்பிரின்டென்றாக இருந்த காலத்தில் (1911–15) சிவகிரிஜமீன் தலைமைத்தானமான சிவகிரியிலிருந்து

மிருகவயித்தியசாலையை மேற்பார்க்கப் போயிருந்தபோது, ஜமீன்தார் ஆஸ்திரேலியகண்டத்துப் பசு ஒன்று வாங்கியிருப்பதைக்கேள்வியுற்று அது கட்டப்பட்டிருந்த இடத்துக்குப்போய், அது இந்தத் தேசத்து உட்டணம் தாங்கமாட்டாமல் மிகவும் கஷ்டப்பட்டுக்கொண்டு இரங்கத்தக்க நிலையிலிருந்ததைக் கண்டேன். ஜமீன்தார் அதைக் கோடைக்காலத்தில் மிகுந்த பணச்செலவுசெய்து நீலகிரியில் சௌகரியமாகத் தங்கச்செய்திருந்தாரென்று தெரியலானேன். இதன்பின் பழையகோட்டைக்குப் போனபோது, இவரோடு, இவர் மாடுகளில் ஒருபகுதி மேய்ந்துகொண்டிருந்த மேய்ச்சற்காட்டைப்பார்க்கச்சென்றேன். அங்கே உக்கிரமான வெயில் வேளையில் எட்டு ஆஸ்திரேலியமாடுகள் மற்ற மாடுகள்போலவே சௌகரியமாக மேய்ந்துகொண்டிருப்பதைப் பார்த்துப் பிரமித்து, இவரைநோக்கிச் சிவகிரியிலுள்ள ஆஸ்திரேலியமாட்டின் பரிதாபநிலைமையை விவரித்துக்கூறி, "இவைகளை இந்த வெயிலில் கஷ்டமின்றி மேயும்படி என்ன செய்தீர்கள்" என்று கேட்டேன். "இந்த மாடுகள் இங்கே வந்தபோது காலைவெயிலைக் கூடத் தாங்கமாட்டாமல் கேத்துப்பூத்தென்று பெருமூச்சுவிடுவதைப் பார்த்தேன். உடனே அகலமும் நீளமும் உயரமும் மிக அதிகமாகவுள்ள ஒரு பெரிய கொட்டகைநடுவிற் கொண்டுபோய்க் கட்டும்படிசெய்தேன்; பின்பு, இராத்திரிமுழுதும் வானவெளியிற் கட்டவும் பகலில் காலையிற் சிறிதுநேரமும் மாலையிற் சிறிதுநேரமுமாக வரவர வெயிலில் நிற்கும் நேரத்தை அதிகப்படுத்திக் கடைசியாகப் பகற்காலமுழுதும் வெயிலில்நிற்கப் பழகிவிட்டபிறகு மற்ற மாடுகளோடு சேர்ந்து மேயும்படி செய்துவிட்டேன்." என்றார். மேற்குறித்த ஜமீன்தார் (சென்னை மிருகவயித்தியகலாசாலையில் மூன்றுவருடம் படித்துத் தேர்ந்தவராயிருந்தவர்) செய்யமாட்டாத அருஞ்செயலைப் பூரணதிருப்திகரமாக முற்றுப்பெறச்செய்து சித்தியடைந்த இவர் போன்றாரை மனத்துட்கொண்டே, திருவள்ளுவர், "செயற்கரிய செய்வார் பெரியர்" எனச் செப்பியிருக்கவேண்டுமென்று சிந்தித்து மகிழ்ச்சியடைந்தேன்.

இவர்பிரிவாற்றாமையால் வருந்தும் இவருடைய குடும்பத்தார் உறவினர் நண்பர் முதலியோர்களுக்கு என் மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். அவர்களெல்லாரும் ஆறுதல் அடைவார்களாக.

---

# அநுதாபக்குறிப்பு.

நிகழும் வெகுதானியஹு மாசிமீ 1உ ஞாயிற்றுக்கிழமை பகல் 2 மணிக்கு இம்மதுரைத்தமிழ்ச்சங்கவித்துவானும் சேற்றூர்ச் சமஸ்தான வித்துவானும் ஆன மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள் பரகதியடைந்தது குறித்து அநுதாபமடைகிறோம். இவர் பிரசித்திவாய்ந்த தமிழ்ப்புலவர்குலத்தில் உதித்தவர்; இக்காலத் தமிழ்ப்புலவர்களுள் மூத்தவராயிருந்தவர்; பலவகை நலனும் அமையப் பலபல புதிய வசனநூல்களையும் செய்யுணூல்களையும் இயற்றி அச்சிட்டளித்தவர்; பழைய நூல்கள் பலவற்றை ஆராய்ந்து உரையெழுதிப் பதிப்பித்துதவியவர்; தமிழ்வேதமாகிய திருக்குறளை யாவரும் எளிதிற் படித்துணர்ந்து உய்யுமாறு இனிய வசனநூலாக்கியுபகரித்தவர்; இம்மதுரைத்தமிழ்ச்சங்கந்தோன்றிகாலத்தில் இதில் நூற்பரிசோதகராயிருந்தும் பரீக்ஷகராயிருந்தும் தமிழ்ப்பணி புரிந்தவர்; யாவராலும் நன்குமதிக்கப்பெற்றவர். இவரைப் பிரிந்து வருந்தும் சுற்றத்தார்க்கெல்லாம் நமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். இவரைப்பற்றி அறியவேண்டுவனவெல்லாம், இவருடன் நெருங்கிப்பழகியவரான வெள்ளகால் திருவாளர் ராவ்ஸாஹிப். வெ. ப. சுப்பிரமணியமுதலியாரவர்களால் எழுதப்பெற்று அடுத்துச் சேர்க்கப்பட்டுள்ள இவர் சரிதக் குறிப்புக்களால் நன்குவிளங்கும்.

---

நிகழும் வெகுதானியஹு மாசிமீ 27உ வெள்ளிக்கிழமை யிரவு 7 மணிக்கு மதுரைநகர்த் தனிகரும் உதாரசீலருமான திரவியம்பிள்ளையவர்கள் காலஞ்சென்றது குறித்து நமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம். இவர் திருநெல்வேலி இந்து கலாசாலைக்கு ஒரு லக்ஷரூபா நன்கொடையளித்ததுமன்றி, மேலும் பலவகையுதவிகளாலும் அது நெடிதுநிலவச் செய்தவர்; மதுரையில் 50,000 ரூபா செலவுசெய்து ஒரு பிரசவவைத்தியசாலையை நிறுவி, அது பிறநோயாளிகளுக்கும் வைத்தியவுதவியளிக்கும்படி போற்றி வந்தவர். மேலும் பத்திரிகைகளும் புத்தகங்களும் இலவசமாகப் பெற்றுப் படிக்கவிரும்புவார்க்கு உபயோகமாகும்படி ஆறாயிரம் ரூபாயில் நல்ல கட்டடமும் அருமையான புத்தகங்களும் அமைய, செல்லையா வாசகசாலையை அமைத்தும் அதற்கு ஐயாயிரரூபா மூலதனம்வைத்தும் அது என்றென்றும் நன்று நடைபெறவுதவியவர். இவ்வாறு மக்கள் அறிவுநலனும் உடல்நலனும் ஒருங்குபெற உபகரித்த இவருடைய ஆன்மா சாந்தியடைக.

சேற்றூர்ச்சமஸ்தானவித்துவானும் மதுரைத்தமிழ்ச்சங்கவித்துவானு மான

# மு. ரா. அருணாசலக்கவிராயரவர்கள்

சிவபதமடைந்தது குறித்து

மதுரைத்தமிழ்ச்சங்கக்கலாசாலையாசிரியர்

ஸ்ரீ. சு. நல்லசிவன்பிள்ளையவர்கள் இயற்றிய

# இரங்கற்பாக்கள்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

*ஓரேழு புலவர்சத்த விருடியர்போ லொருகுடியி லொருகா லத்திற்
காரேழுபொழிமழைபோற்கவியின்மழைபொழிபவராய்க்கலந்துவாழ்ந்தோர்
ஈரேழு புவியினிலுங் கண்டிலோ மெனப்புலவோ ரிசைக்கும் வண்ணம்
நீரேழு சூழுலகிற் கவிராஜ பரம்பரையி னிலவி வாழ்ந்தோய்.

சேற்றூரின் சமத்தானப் பெரும்புலவ னெனத்திகழ்ந்துஞ் செம்பொற் கூடல்
நூற்றேருந் தமிழ்ச்சங்கத் திருந்து பல தமிழ்நூல்கள் நுணுகியாய்ந்தும்
மாற்றேறு செம்பொனென மதிப்பேறப்பெறும் அருணாசலப்பாவல்லோய்
காற்றேறு மூர்தியனைக் கனன்றநுதற் கண்ணுன்றாள் கலந்திட் டாயோ.

வள்ளுவர்நூற்றெளிபொருளின்விளக்கமுங்கத்தியமுமிவண்வரைந்துதந்தும்
தெள்ளுதமிழ்ப் பரங்கிரியின் பிரபந்தத் திரட்டுடனே சிவகா சிப்பேர்
விள்ளுதலப் புராணமும்யாத் தினிதளித்து முயர்பன்னூல்விழைந்துகற்போர்
உள்ளுதொறு முளங்கனியப் பொருளுரைத்து மிவணுறைந்த வொப்பி லானே.

பழம்புலவர் தங்களுளும் பழம்புலவ னெனநூற்றிற் பத்தி யாண்டு
முழங்குதிரைக் கடலுலகிற் குறைவயது மிகமுதிர்ந்து மூத்தியாக்கை
விழும்பருவத் தினுமுயற்சி வீழாம லுளத்தளர்ச்சி மேவுறாமற்
செழுங்கனிநேர் யமகமுடன் சிலேடையியற் றியும்பலநூல் செப்பஞ் செய்தும்.

* ஓரேழுபுலவர்—1. கந்தசாமிக்கவிராயர், 2. இராமசாமிக்கவிராயர், 3. பழனிக்குமாருத்தம்பிரான், 4. மீனாக்ஷிசுந்தரக்கவிராயர், 5. மு. ரா. அருணாசலக்கவிராயர், 6. மு. ரா. சுப்பிரமணியக்கவிராயர், 7. மு ரா. கந்தசாமிக்கவிராயர் என்போர்.

குறிப்புரைகள் பன்னூற்கு வரைந்தெழுதா வெழுத்திலிட்டுங் கோதின் மக்கட்
பிறப்படைந்தார் பெறும்பயன்பெற் றனையருணு சலக்கவிஞ! பெரியாய்! முத்தி
யுறப்பெறுநா ளீதெனினும் நின்பிரிவிங் கெமைவருத்து முலகில் யாவும்
இறப்பெறுதல் சரதமென வெண்ணிமனந் தேறலன்றி யியற்ற லென்னே.

மண்ணாட்டுப் புலவர்குழாத் தினிதுறைந்தா யிதுகாறு மண்ணோர் போற்றும்
விண்ணாட்டுப் புலவர்குழாத் தினியுறவோ வெம்மைவிட்டு விலகிச் சென்றாய்
பண்ணாட்டு பாவரசே யெமைப் பிரிந்தாய் நீயெனினும் பாரி னின்சீர்
உண்ணாட்டிப் பலபகலு முனைப்பிரியா வுளத்துடன்யா முறைகின் றோமே.

மின்னேரு மிவ்வுலக வாழ்க்கையினைத் துறந்துபெரு வீட்டை யெய்தித்
தன்னேரி லாப்பரமன் றாளடைந்த பெருந்தகையே! தமிழ்ப்பா வாணர்
எந்நேர நினைப்பாவும் பூதவுட லினைநீத்திங் கிறவா தென்றும்
நன்னேயப் புகழுடல நிறுவியநின் கடவுணிலை நாளும் வாழி

நேரிசைவெண்பா.

வெகுதா னியவருடம் மேவுகும்ப மாதம்
தகுதேதி யொன்றிரவி தன்னாள்—நகுமதிதேய்
பக்கநவ மித்திதியிற் பார்புகழ்வீ டுற்றனன்சீர்
மிக்கவரு ணாசலப்பா வேந்து.

சேற்றூர்ச் சமஸ்தான வித்துவானும் மதுரைத்தமிழ்ச்சங்க வித்துவானும் ஆன

# மு. ரா. அருணாசலக்கவிராயர்

## 1852 — 1939

[ராவ்ஸாஹிப் வெ. ப. சுப்பிரமணியமுதலியார், G.B.V.C.]

இவர் 1939 பிப்பிரவரி 12-ம் தேதி பரமபதமடைந்தார்; இக்காலத்துத் தமிழ்வித்துவான்கள் எல்லாரினும் முதியவராயிருந்தவர். இவர் காலஞ்சென்றபோது, இவர்க்கு வயது 87.

### பூர்வ வாசத்தலமும் முன்னோரும்.

இவர் குடும்பம், முன் திருநெல்வேலி ஜில்லாவிலிருந்து இப்போது இராமநாதபுரம் ஜில்லாவிலிருக்கிற சேற்றூர் ஜமீன் தலைமையூரான சேற்றூருக்கு அருகேயுள்ள முகவூரில் வாழ்ந்துவந்தது. இவர் தந்தை இராமசாமிக்கவிராயரும் பெரிய தந்தை கந்தசாமிக்கவிராயரும் சேற்றூர்ஜமீன் சமஸ்தான வித்துவான்களாயிருந்தனர்.

### இவர் குடும்பத்தார்.

இவர் பெரியதந்தை கந்தசாமிக்கவிராயருக்குப் பழனிக்குமாரத்தம்பிரான் (திருவாவடுதுறையாதீனத்தைச் சேர்ந்தவர்), மீனாட்சிசுந்தரக்கவிராயர் (எட்டயபுரம் சமஸ்தான வித்துவானாயிருந்தவர்) என்ற இரண்டு குமாரர்கள் இருந்தார்கள். இவர் தந்தை இராமசாமிக்கவிராயர்குமாரர், இவரும், மு. ரா. சுப்பிரமணியக்கவிராயரும், மு. ரா. கந்தசாமிக்கவிராயருமாவர். இம்மூவரும் சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான்களாயிருந்ததோடு மதுரைத்தமிழ்ச்சங்கத்து வித்துவான்களாகவும் விளங்கியவர்கள். இவர்களோடு இவர் குடும்பத்தைச்சேர்ந்த மேலேகுறித்த நால்வரும் பெயர்மாத்திரமாகவன்றி உண்மையாகவும் கவிராயர்களாய்க் கவிவன்மையால் பேரும் பிரசித்தியும் பெற்றவர்கள்.

## ஒரு குடும்பத்தில் ஒரேகாலத்தில் ஒருங்கு விளங்கிய ஏழுகவிஞர்கள்.

இவ்வாறாக, இவருள்பட ஏழுகவிஞர்கள் ஒரு குடும்பத்தில் ஒரேகாலத்தில் ஒற்றுமையுடன் இனிதுவாழ்ந்ததைக் கண்டு உலகத்தார் உவப்பும் வியப்பும் ஒருங்குற்றதை, யான்கூறிய பின் வரும் சிறப்புப்பாயிரக்கவிகள் விளக்குவனவாம்.

மைந்தரொடு மாதர்புனை செழுங்களபச் செஞ்சேறும் வனைபூமாலை
சிந்துமது நீர்த்திரை விலாழிநீர் கரிமதநீர் செல்வர் தம்பால்
வந்தஇர வலர்க்குதவு பொருளொடுவார்த் திடுநீரால் வாய்ந்த சேறும்
எந்தவயி னுஞ்செறிந்து சேற்றூரென் றிசைக்கும்இசை யிசைந்த தோரூர்.*

அவ்வூரான் கோற்றவர்கள் பற்பலரும் அவ்வூருக் கருகர் மேவி
எவ்வூரா யினுநிகராப் பெருவனப்பால் முகவூரென் றியைந்த நாமச்
செவ்வூரா நன்னிலத்தில் வரிசையொரு வீட்டுநிதிச் செய்ய தோயங்
துவ்வூராப் பாய்வித்து வளர்த்தவொரு பெரியகவி தலதா னுப்பால்†

கந்தசா மிப்பெயரும் இராமசா மிப்பெயருங் கவினப் பூண்டு
வந்த இருபணை முனதிற் கிளைத்தகிளை, பழனிக்கு மாரசாமி
நந்துமீ னாட்சிசுந்த ரம்பிளாதிற் கிளைத்தகிளை, நலமி குந்த
சந்தவரு ணாசலஞ்சுப் பிரமணிய னொடுகந்த சாமி யாலோ.§

இருவிண்ணினே ரிடைச்சத்த விருடிகண மீனிலங்க லென்ன மண்ணிற்
பெருதபுக ழேழுபுலவ ரொருகுடியி லொருங்குதிக்கப் பிறங்கி னூரால்.‡

### கல்விப்பயிற்சி.

இவர் திருவாவடுதுறையாதீனத்தில் சின்னப்பட்டம் வகித்திருந்த ஸ்ரீலஸ்ரீ நமச்சிவாய தேசிகமூர்த்திகளின் மாணாக்கராய் இலக்கிய இலக்கண நூல்கள் பலவும் பயின்று சிறந்த வித்துவானவர். 'குலவித்தை கல்லாது பாகம்படும்' என்றவாறு கல்வி பயிலுங்காலத்திலேயே கவிகளியற்றும் வல்லமைபெற்றிருந்தார்.

* புனைகளபம் - (புதுக்கலவைச் சாந்து அணிதற்காக, வழித்தெறிந்த, முன்) அணிந்திருந்த கலவைச் சாந்து. வயின் - இடம். இசை - கீர்த்தி.

† தோயம் கு ஊராப் பாய்வித்து - நீரைப் பூமியில் ஊர்ந்து பாயச் செய்து.

§ சேறைத் தவம்பெற்றநாயகிபிள்ளைத்தமிழ்ச் சிறப்புப்பாயிரம்.

‡ பரங்கிரிப் பிரபந்தத்திரட்டுச் சிறப்புப்பாயிரம்.

### வாழ்ந்த தலங்கள்.

இவர் பாலப்பருவத்தில் முகவூரிலும், உயர்தரக்கல்விப் பயிற்சிக்காலத்தில் திருவாவடுதுறையிலும், யௌவனகாலத்தில் சிவகாசியிலும், வயோதிககாலத்தின் முற்பகுதியில் இவர் தம்பி மு. ரா. கந்தசாமிக்கவிராயர்சம்ரட்சணையில் மதுரையிலும், நடுப் பகுதியில் தனியே திருப்பரங்குன்றத்திலும் தள்ளாமை மிகுந்த இறுதிப்பகுதியில் தம் தௌகித்திரர் திரு. S. அருணாசலம்பிள்ளை (Mail-sorter, R. M. S.) ஆதரவில் மதுரையிலும் வாழ்ந்திருந் தார்.

### பழகிய வித்துவான்கள்.

இவர் நெருங்கிப் பழகிய வித்துவான்கள், இவர் தந்தைமுறை யிலும் சகோதரமுறையிலும் இருந்த ஆறுகவிஞர்களுமல்லாமல், திருநெல்வேலிக் கவிராய நெல்லையப்பபிள்ளை, அழகியசொக்கநாத பிள்ளை ஆகிய இருவரும், சென்னிகுளம் அண்ணாமலைரெட்டியார், குன்னூர்க் குமாரசாமிமுதலியார், சோழவந்தான் அரசஞ்சண் முகனார் முதலியோருமாவர்.

### இவர் இயற்றிய செய்யுள் நூல்கள்.

| பதிப்புவருடம். | நூற்பெயர். | பாட்டெண். |
|---|---|---|
| விஷு | சிவகாசித்தலபுராணம். | 1039 |
| 1891 | சிவகாசிப் பதிற்றுப்பத்தந்தாதி | 100 |
| 1898 | யாழ்ப்பாணத்துநல்லூர் ஆறுமுகநாவலர்சரித்திரம். | 361 |
| 1902 | சிவகாசிக் கலிவிருத்த அந்தாதி | .100 |
| 1902 | சிவகாசி வெண்பா வந்தாதி மூலமும் உரையும் | 100 |
| 1906 | சேது பர்வதவர்த்தனியம்மை பிள்ளைத்தமிழ் | 100 |
| 1907 | சேறை (சேற்றூர்)த் தவம்பெற்றநாயகி பிள்ளைத்தமிழ் | 100 |
| | திருப்பரங்கிரிப்பிள்ளைத்தமிழ் | 100 |
| 1927 | பரங்கிரிப்பிரபந்தத்திரட்டு குறிப்புரையுடன் | |

| | | | |
|---|---|---|---|
| | பரங்கிரிப்பாமாலை | 102 | 1208 |
| | ,, கலித்துறையந்தாதி | 101 | |
| | ,, பதிற்றுப்பத்தந்தாதி | 101 | |
| | ,, வெண்பாவந்தாதி | 101 | |
| | ,, அலங்காரம் | 201 | |
| | ,, மும்மணிக்கோவை | 31 | |
| | ,, அநுபூதி | 52 | |
| | ,, கோவை | 519 | |
| 1927 | ஒற்றைக்கடை விநாயகரந்தாதி | | 100 |
| | ,, ,, இரட்டைமணிமாலை | | 20 |
| | ,, ,, மும்மணிக்கோவை | | 30 |
| | பாட்டுமொத்தம் | | 3358 |

தனிப்பாட்டுக்கள் எண்ணிறந்தவை.

## இவர் இயற்றிய வசன நூல்கள்.

| | | பக்கம் |
|---|---|---|
| 1913 | திருக்குறள்வசனம் | 264 |
| விகாரி | திருப்பரங்கிரிப்புராணவசனம் | 90 |
| விகாரி | திருச்செந்தூர்த்தலபுராணவசனம் | 142 |
| 1924 | திருக்குறள்திரட்டும் தெளிபொருள்வசனமும் | 328 |
| 1930 | திருக்குறள்மூலமும் தெளிபொருள்வசனமும் | 437 |

## இவர் பதிப்பித்த நூல்கள்.

| | |
|---|---|
| 1914 | வேணுவனத்தலபுராணம் குறிப்புரையுடன் |
| ,, | காந்திமதியம்மை பிள்ளைத்தமிழ் குறிப்புரையுடன் |
| ,, | நெல்லைவருக்கக்கோவை |
| | திருச்செந்தூர்ப்பிரபந்தத்திரட்டு குறிப்புரையுடன் |
| சாதாரண | திருக்குற்றாலத் தலபுராணம் (2-ம்பதிப்பு) குறிப்புரையுடன் |
| 1912 | திருக்குற்றாலக்குறவஞ்சி குறிப்புரையுடன் — முதற் பதிப்பு |
| 1927 | 2-ஆம் பதிப்பு |

இவர் உரைகளும் வசனநூல்களும் எளிதும் தெளிவு மானவை.

இவர் இயற்றியனவும் பதிப்பித்தவையுமான நூல்கள், நிறைந்த கல்விமான்களுக்கன்றிக் குறைந்த படிப்பாளிகளுக்கும் பயன்படவேண்டுமென்றெண்ணி, மிக எளிய தெளிவான வசனப்பகுதிகள் சேர்க்கப்பெற்றனவாய்த் 'தாமின்புறுவ துலகின் புறக்கண்டு, காமுறுவர் கற்றறிந் தார்' என்றவாறும், 'யான்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்றவாறும் இவர் உலகத்துக்குச் செய்த நல்லுபகாரமாயுள்ளனவாம்.

தமிழ்மொழியில் (என்பானேன், உலகமொழிகளெல்லா வற்றிலுமே) முதன்மையான நூலாகிய திருக்குறள்மூலமன்றி, அந் நூலின் உரைகளுட் சிறந்த பரிமேலழகருரையும், ஆசிரியருதவி யின்றி மாணக்கர் கற்கமுடியாதவை. அந்த நூலை ஆசிரியர் துணை வேண்டாமல குறைந்த கல்வியுடையாரும் எளிதாகக் கற்றுக் கொள்ளும்படி திருக்குறள் மூலமும் தெளிபொருள் வசனமும் என்ற பெயருடன் இவர் வெளியிட்டிருப்பது மேற்கூறிய நல்லுபகாரத் துக்குச் சிறந்த உதாரணமாம். இவர் பதிப்பித்த நூல்களிற் பெரும் பான்மையானவைகளை யாரும் எளிதாகக் கற்கும்படியாக இவர் வசனமெழுதிச் சேர்த்துப் பதிப்பித்திருக்கும் உபகாரம், மேலே யுள்ள இவர் பதிப்பித்த நூல்கள் என்ற தலைப்பின்கீழ் உள்ள நூல் களால் விளங்கும்.

## குணநலன்.

இவர், அழுத்தமான தன்மதிப்புடையவர்: பாட்டுப்பாடி வறுமையினால் பரிசுபெறலை மேற்கொண்டாராயினும், தம்மைச் சகோதரர்போலப் பாவியாத எந்தக் கொடையாளரிடமும் அணுகா திருந்தார். இவர் சிறிதுகாலமே மதுரைத்தமிழ்ச்சங்கக் காரி யாலயத்தில் அச் சங்கவித்துவான்களுள் ஒருவராய் வேலைபார்த் ததேயன்றி வேறெங்கும் மாதச்சம்பளம்பெறும் வேலையில் அமர வில்லை. யாதாயினும் ஒரு கலாசாலையில் தமிழ்ப்பண்டிதராவதற்கு முயலலாமென்று நான் இவரிடம் சொல்லியபோது, உத்தியோகங் களுக்குரிய நிர்ப்பந்தங்களுக்குள்ளாவதற்குத் தம்மனம் ஒப்ப வில்லை யென்று சொல்லிவிட்டார். இவர் திருப்பரங்குன்றத்தி லிருந்தபோது நான் இவரைப் பார்க்கப்போயிருந்த ஒரு சமயத்தில் திருவாவடுதுறை ஆதீனவித்துவானாய் அங்கே கல்விபயிலும்

மாணவருக்குக் கற்பிக்கவேண்டுமென்றும் தனித்த ஜாகை, தனித்த சமையல் முதலிய சௌகர்யங்களுக்கு வேண்டும் ஏற்பாடுகள் செய்யப்படுவதோடு தக்க மாதச்சம்பளமும் தரப்படுமென்றும் காலநிபந்தனை முதலிய எவ்வகை நிபந்தனைகளுமில்லாமல் பாடஞ் சொல்லிவைக்கலாமென்றும், அந்தப் போதகவேலை இவர் தம்பியார் சுப்பிரமணியக்கவிராயர் பார்த்த வேலையென்பதை ஞாபகப் படுத்தியும் பண்டாரசன்னிதி அனுப்பிய திருமுகம் வந்திருப்பதாக என்னிடம் சொன்னார். நான் அந்த வேலை நிர்ப்பந்தமானதன்றென்றும் ஏற்றுக்கொள்ளலாமென்றும் சொன்னேன். நிர்ப்பந்தம் சிறிதேனுமில்லாத சேவகமேயில்லை யென்று என்னிடம் சொல்லி அந்த வேலையை ஏற்றுக்கொள்ள இயலவில்லையென்று மேற்குறித்த திருமுகத்துக்கு விடையனுப்பிவிட்டார்.

## பழகியகாலமும் சில நிகழ்ச்சிகளும்.

இவருடன் இரண்டுதலைமுறைக்காலத்துக்குமேலாகப் பழகியிருக்கிறேன். எனக்கு உண்மையன்புள்ளாருட் சிறந்த ஒருவராயிருந்தார். யான் முதன்முதலியற்றிய நூலான நெல்லைச்சிலேடை வெண்பாவைச் சிரத்தையொடு பார்வையிட்டுத் திருத்தங்கள் செய்தார். எனது பிந்திய நூல்களுட் பல, இவரால் திருத்தப்பெற்றவை. இவர் தம்முடைய நூல்களுட் பெரும்பான்மையானவைகளை எனக்குப் படித்துக்காட்டியும் தபால்வாயிலாக அனுப்பியும் எனக்குத்தோன்றிய குறிப்புக்களை யேற்றிருந்தார்.

கம்பராமாயணசாரம் முதலைந்து காண்டங்களிலுள்ள இனிய கவிகளை ஆராய்ந்துதேர்ந்தெடுத்தற்கு, அவ்வைந்து காண்டங்களையும் என்னுடன் இருந்து படித்து உதவிசெய்தார். தேர்ந்தெடுத்துத் திரட்டிய கவிகளடங்கிய, இவர் கைப்பட எழுதிய பிரதி என்னிடமிருக்கிறது. இவர் இடையிடையே என் ஊர்க்குவந்து சில மாதங்கள் என்னுடனிருந்து நூல்களைப் படித்து உவப்புறுதலும், நான் இவர் இருந்த திருப்பரங்குன்றத்துக்குச் சென்று சில தினங்கள் இவருடனிருந்து அவ்வாறு செய்தலும் வழக்கம். வருடாந்தர மாட்டுச்சந்தைகள் கூடுமிடங்களில் யான் உத்தியோகமுறையில் சிலவாரங்கள் தங்கும்படி நேர்ந்தசமயங்களில் இவர் வந்து என்னுடனிருந்து வித்தியாகாலட்சேபஞ்செய்வதும் வழக்கம்.

பின்வரும் என்பாட்டில் இவர் என் சீமந்த அழைப்புப் பத்திரிகையைப் பெற்றபோது, சிவகாசியிலிருந்து எனக்கெழுதியதும் அதற்கு நான் திருநெல்வேலியிலிருந்து பதில் எழுதியதும் தெரியலாம்.

"சீமந்த முனக்கெனக்கண் டுவகைமிக எமைமறந்த செயலி னலே
நாமந்த முகூர்த்தம்வா விலை"யென்றய் கற்பனையே நாலதி கோட்டம்
போமென்றுய்த் தவனிருப்ப,நீயுறின்,மீண் டுங்கோடும் புவியென் றுன்னி,
மாமன்று ளாடிதடுத் தமையின்வா வில்லை. இது வாய்மை யாமால்.

இவர் தம் குமாரனுக்குக் கல்யாணம் செய்விக்கும்படி சொல்லியவர்களிடம், அதைச் செய்யாமைக்கு இவை காரணங்களென இவர் கூறியது, கல்யாணம் முடிந்தபோது நான் இவருக்கெழுதி விடுத்த அடியிற்குறித்த பாட்டினால் அறியத்தக்கது.

'தன்புத்தி வந்துசம் பாதனஞ் செய்திடும் சத்திவந்து
பின்புத்தி யோகமும் வந்தபின் செய்விப்பன் பெட்குமணம்
என்புத்தி ரற்கென் றவைவந்த பின்மணஞ் சியற்றுவித்தாய்
அன்புத்தி ரத்தி லருணு சலநின் னறிவுநன்றே.

இவர் வயித்தியச்செலவுக்காக நான் அனுப்பிய இருபத்தைந்துரூபாய் மணியார்டரைப்பெற்றபோது எழுதியதும் என்னைக்குறித்து இவர் இறுதியாக இயற்றியது(ம் இவரது கடைசிக் கவியென்று கருதக்கூடியது)மான வெண்பாவை இதனடியில் தந்து இவ்வரலாற்றுக்குறிப்பை முடிக்கின்றேன்.

தனக்குரிய பத்துத் திருநாமங்களுள் 'வீபற்சு' என்பதை ஒரு நாமமாககொண்ட அருச்சுனனுக்குத் தமையனான வீமனுக்குத் தமையனான தருமனுக்குத் தமயனும், ஒவ்வொருநாளும் உதயந்தொட்டு நண்பகல்மட்டுமுள்ள காலநாளைத் தான் கொடைகொடுக்குங் காலவரையறையாகக் கொண்டவனுமான கர்ணனுக்கு, 'நீ எனக்குக் கால் நூறு கொடுத்ததனால், ஒப்பாவாய்' என்ற குறிப்புப்பொருளைக்கொண்ட அந்த வெண்பா வருமாறு:

நானூறு நீங்குமா நாடிநீ நன்களித்த
கானூறும் பெற்றுக் களிப்புற்றேன்—தேனூறு
சொற்சுப் பிரமணிய துங்கா துதிமிகும்வீ
பற்சுமுன்முன் முன்போல் பவா.

---

உ

# இரங்கற்பாக்கள்.

[மதுரைத் தமிழ்ச்சங்கக் கலாசாலையாசிரியர்
**ஸ்ரீமத். சு. நல்லசிவன்பிள்ளையவர்கள் இயற்றியவை.**]

தேசமெலாந் தினம்புகழுந் தனந்திகழும் இங்கிலாந் தென்னுந் தேசம்
பேசுமெலா நலமுமிகு லண்டன்மா நகரினிற்பேர் பெற்ற மேலோர்
நேசமெலாம் பெற்றுயர்ந்த இந்தியா நனிதழைய நிதிய மோங்கப்
பாசமெலாம் வைத்தாண்ட **விக்டோரியா மகாராணி** பால னாகி. (க)

இந்தியா அரசாண்ட ஏழாம்எட் வர்டேனுஞ்சக் கரவர்த் திக்குப்
புந்தியா லுயரிரண்டாம் புதல்வனென வனுதினமும் புரிந்து போற்றி
வந்தியா வருமுவந்து வந்தியா நிற்பநலம் வாய்ந் தியாரும்
சிந்தியா நிற்குமீ ரொன்பானூற் றறுபத்தைந் தென்னச் செப்பும். (உ)

நல்வருடத் தினிற்றோன்றி ஐந்தாம்ஜார்ஜ் என்னுமெழில் நாமம் பூண்டு
பல்வருட மிந்தியாச் சக்கரவர்த் திப்பதவி படைத்துப் பாரைச்
சொல்*வருடம் போற்காத்து **வெள்ளிவிழாக் கண்டவெழிற் றுரையே** யிந்த
வல்வருட நினையிழந்து மழையிழந்த பைம்பயிர்போல் வாடினோமே. (ங)

பட்டமெய்து முன்புகடற் படையின்மிகப் பயின்றுபுகழ் படைத்தாய் பின்பு
துட்டரைநிக் கிரகித்துச் சிட்டரைப்பா லித்துலகத் துயர்தீர்த் தாளுஞ்
சட்டபரி பாலனஞ்செய் மகாமண்ட லேச்வரனுஞ் சக்ரவர்த்திப்
பட்டமும்பெற் றிந்தியா மிகவிளங்கப் புரந்தநின்சீர் பகரப் போமோ.(ச)

அணிதிகழும் நாற்பத்தைந் தாம்வயதி லிந்தியா வாட்சி யோங்க
மணிதிகழு முடிபுனைந்தா யிந்தியா வினில்டில்லி வந்தே நின்போற்
பணிதிகழும் பாரரசர் யாரேயிந் தியாவில்வந்து பட்டம் பெற்றார்
துணிதிகழும் ஐந்தாம்ஜார்ஜ்சக்ரவர்த்தித் துரையேயெந் துயர்காண் பாயே.

அயர்லாந்து முதலாய பலபலதே சத்தினர்கட் கருண்மீக் கூர்ந்து
சுயராச ரீகமளித் தனையதன்றித் தொழிலாளர் துயரா லுள்ளம்
அயராதன் னவர்ப்பரிந்த அண்ணலே யெழுபானுண் டவனி வாழ்ந்த
ஜயராஜ மகாயுத்த சமாதானம் புரிந்தநின்சீர் சாற்றற் பாற்றோ. (சு)

---

* வருடம் - மழை.

பத்தொன்பா னூற்றெருடுமுப் பத்தாறும் வருடமதிற் பார்துன் பெய்துஞ்
சத்தொன்றுச் சனவரியிற் றிகதியிரு பான்றிங்கள் சாரு நாளோ
முத்தொன்றூர் கலிப்புவியி னிளைப்பிரிந்து துயர்க்கடலில் மூழ்கு நாணின்
சித்தொன்றே ருயிரனைய மேரிமகா ராணியார் செங்கோல் வேந்தே. (எ)

சகமதனில் யாவருக்குந் தாழாது புவியாண்ட சார்வ பௌமன்
றகவுமிகும் ஐந்தாம்ஜார்ஜ் மன்னர்பிரான் பிரிவதனுற் சகிக்கொ ணுத
பகரரிய துயர்க்கடலி லழுந்துமனு தாபமதைப் பார்க்குத் தாயாம்
புகலரிய புகழ்மேரி மகாராணி யார்க்கியாம் புகல்கின் றேமே. (அ)

ஆதவனத் தமியாத வரசாட்சிப் பெருஞ் சிறப்பார் ஐந்தாம் ஜார்ஜு
மேதகுமண் டலேச்சுவரன் பத்தொன்பானூற்றிறெடுமிகுநா லொன்பான்
ஓதுறுவற் சரத்துமுதன் மதியிருபா னிரவுமணி யொருபத் தொன்றும்
பூதவுடம் பினைநீத்துப் பூரணமா நிலையடைந்த புனித நாளே. (௯)

வற்சரம் - வருடம். முதன்மதி - முதல்மாதம், ஜனவரி. இருபான் - இருபது. 1936ம் ஞு ஜனவரிமீ 20உ இராத்திரி மணி 11.

பொன்னின்மணி முடிதாங்கி யிந்தியாச் சக்ரவர்த்திப் பூப னுகி
யின்னரசு தனையேற்றிங் கிந்தநா ளுலகாளு மிராச ராச
னென்னவரும் இனன்எட்டாம் எட்வர்ட்டுச் சக்ரவர்த்தி யினிது வாழத்
தன்னுயர்வொப் பில்லாதான் சரணசரோ ருகமெமது தலைக்கொள்வாமே.

(2) சங்கத்தின் பொருணிலைமை முதலியவற்றைப்பற்றிக் கௌரவ காரியதரிசிகள் எழுதிய ரிப்போர்ட்டு அடுத்தமீட்டிங்குக்குத் தள்ளிவைக்கலாயிற்று.

(3) மாட்சிமைதங்கிய கனம் அக்கிராசனாதிபதியவர்களைக் கலந்து அவர்கள் உத்தரவின்பேரில் சங்கத்தின் வருஷோத்ஸவம் நடத்துவதற்குக் கௌரவகாரியதரிசிகள் ஏற்பாடுசெய்யவேண்டுமென்று தீர்மானிக்கலாயிற்று.

T. C. ஸ்ரீநிவாஸையங்கார்,
உப-அக்கிராசனாதிபதி.
மதுரைத்தமிழ்ச்சங்கம், 8—7—'38.

---

# அநுதாபக்குறிப்பு.

திருவநந்தபுரம் ஹைக்கோர்ட்டுஜட்ஜாயிருந்த கே. ஜி. சேஷையரவர்கள் நிகழும் வெகுதானியஞு ஆனிமீ 12உ (26-6-38) ஞாயிற்றுக்கிழமை காலஞ்சென்றது தெரிந்து மிகவும் வருந்துகிறோம்.

இவர் ஆங்கில அறிவாற்சிறந்துவிளங்கியதேயன்றித் தமிழிலும் சிறந்த அறிவும் ஆர்வமும் உடையராய்த் திகழ்ந்தவர். இம் மதுரைத்தமிழ்ச்சங்கத்தினிடத்துப் பேரன்புடையவர். செந்தமிழ்க்குப் பல பொருளுதவிகளை உதவியவர். மதுரைத்தமிழ்ச் சங்கத்தின் 17-ஆம் ஆண்டுவிழாவின் அவைத் தலைவராயிருந்து அதைச் சிறப்புறச்செய்ததுடன் பல ஆண்டு சங்கப்பரீக்ஷகராகவுமிருந்து உதவியவர். சரித்திர ஆராய்ச்சியிலும் வல்லுநர். இவருடைய சரித்திர ஆராய்ச்சித்திறமை இவர் எழுதிய 'சேர அரசர்கள்' என்னும் புத்தக முதலியவற்றால் விளங்கும். அருங்கலைவிநோதராகிய இவரைப் பிரிந்து வருந்தும் சுற்றத்தார்க்கும் நண்பினர்க்கும் நமது அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

பத்திராசிரியர்.

திருவநந்தபுரம் ஹைக்கோர்ட்டு ஜட்ஜாயிருந்த கே. ஜீ. சேஷையரவர்கள்

71-வது வயதில் (26-6-38ல்) காலஞ்சென்றது குறித்து

ஸ்ரீவானமாமலைமடம் ஆஸ்தானவித்வான் அபிநவகாளமேகம்

தென்திருப்பேரை

ஸ்ரீஅனந்த கிருஷ்ணையங்காரவர்கள் இயற்றிய

# இரங்கற்பா.

---

ஆசிரிய விருத்தம்.

அந்தணர் குலப்பரவை யிந்துவென வேயுதித்
தளவில்கலை மன்னுகுணவான்
ஆரண முழக்கமுறு கோளத் திறபல
ஆண்டாண்ட மூலநிருபன்

சிந்தைமகி ழுயர்தான நீதிபதி யானவன்
சேடனெனு நாமதேயன்
செகதலத் தெங்கணும் பெரியசங் கங்களிற்
சீர்த்தலைமை பூண்டதிறலோன்

சந்தமிகு யான்செய்பிர பந்தங்க ளாராய்ந்து
தகுமதிப் புரையளித்தோன்
சாமிநா தப்பெயர்கொள் கும்பமுனி யாதியோர்
சாற்றிடும் சகலபாக்யன்

விந்தைபெறு வெகுதான்ய மிதுனரவி நிலவின்றி
மேவுதிதி பதினைன்கிரா
மெய்விடான் மெய்விட்ட செய்தியுண ரறிஞரும்
விசனமே னடையாரரோ.

சென்னை விவசாய வித்தியாசாலை ஆசிரியர்

# கிருஷ்ணன் மீனன்

## நினைவுக்குறிப்பு

[ராவ்ஸாஹிப். வெ. ப. சுப்பிரமணியமுதலியார் G.B.V.C.]

### முன்னுரை

இவர் சென்னை (சைதாப்பேட்டை) விவசாய வித்தியாசாலையில் 1881—1884 வருஷங்களில் என்னுடன் படித்தவர்; பின்பு அதே விவசாயவித்தியாசாலையில் விவசாய ஆசிரியராயிருந்தார். நான் மிருகவைத்திய இலாகா இன்ஸ்பெக்டராக இருந்தபோது, சென்னைநகரிலேனும் செங்கற்பட்டுச்சில்லாவிலேனும் வேலைபார்க்க நேர்ந்தகாலங்களில், இவரை அடிக்கடி கண்டு சல்லாபித்து அளவளாவி இனிது பொழுதுபோக்கும் சமயங்கள் நிரம்ப வாய்த்திருந்தன. அச்சமயங்களில், எங்களுடன் கூடவிருந்து குதூகலமடைந்தவர், சென்னையிற் சிலகாலமும் நெல்லையில் நெடுங்காலமும் பிரபல வைத்தியராயிருந்த டாக்டர். A. Y. நாராயணையர் L M & S. மீனனுக்கு எங்களிருவரினும் நெருங்கிய நெடுங்காலநேயர் யாரும் மலையாளிகளலலாதாருள் இருந்ததில்லை. இதிற் கூறப்படும் நிகழ்ச்சிகள் சில யான் நேரில் அறிந்தவையும், பல நாராயணையர் சொல்லக் கேட்டவையுமாம்.

### விவசாய வித்தியாசாலை

விவசாயவித்தியாசாலையிற் சேருதற்குமுன் பல்கலைக்கழகச் சார்புடைய கலாசாலை (Arts Colleges) களில் மீனனும் யானும் சில வருஷங்கள் படித்திருந்தோம். ஆதலால், அந்தக் கலாசாலைகளுக்கும் விவசாயவித்தியாசாலைக்கும் உள்ள வித்தியாசங்களைப்பற்றி உணரவும் கலந்துபேசவும் அடிக்கடி நேர்ந்தது. நாங்கள் பேசிக்கொண்டதன்சாரம் பின்வருவது:—

கலாசாலை (Arts College) களில் உள்ளப்பயிற்சியன்றி உடற்பயிற்சி ஒருசிறிதும் இருந்ததில்லை. விவசாய வித்தியாசாலையிலோ, இருவகைப்பயிற்சிகளையும் ஒருங்குபெறுகின்றோம். அங்கே, உடற்பயிற்சிவித்தைப்போதகரோ (Gymnastic teacher), உடற்பயிற்சியோ, சிலம்பப்பயிற்சியோ, பாட்மின்டன் (Badminton) டென்னிஸ் (Tennis) கிரிக்கெட்டு (Cricket) என்ற விளையாட்டுக்களோ, அந்த

விளையாட்டு நிகழும் அரங்குகளோ கிடையா. இங்கே, அவை யெல்லாமிருப்பதல்லாமல் தோணியும் தோணிகடாவுதற்பயிற்சியும் (Boat rowing) உண்டு.*

நாள்தோறும் கலப்பைபிடித்துழுதல் முதலிய உடலுக்கு உழைப்பான விவசாயவேலைகளைச் செய்பவர்களாயுள்ள மாண வர்க்கே மேற்கூறிய சிலம்பப்பயிற்சி முதலியவை அவசியமென்று நம்முடைய பிரின்சிபால் (Mr. W. R. Robertson) அவைகளுக்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் நிறம்படச் செய்திருக்கிறார். அப்படியிருக்க,மற்றக் கலாசாலைப் பிரின்சிபால்கள், முழுஉழைப்பும் மூளைஉழைப்பாயுள்ள மாணவர்களுக்குத் தேகப்பயிற்சிக்குரிய யாதொன்றும் செய்யாதிருப்பதேனோ? அங்கே, மாணவர்கள் வசிப் பதற்குக் கலாசாலையைச்சேர்ந்த கட்டடங்கள் கிடையா. இங்கே, அவைகள் சிறப்பாக உள்ளன. அங்கே, ஒவ்வொருவகுப்பிலும் நூற்றுக்கு அதிகமான மாணவர்கள் இருக்கிறார்கள். இங்கே, இருபதுக்கதிகமாக எந்தவகுப்பிலும் இல்லை. அங்கே, மிகமிகப் பலர் பரீக்ஷையில் தேறுவோமோ தவறுவோமோ என்று சதா கவலை குடிகொண்ட நெஞ்சினராயிருக்கிறார்கள். இங்கே, அத்தகையோர் மிகமிகச் சிலரே. அங்கே சனசாரச் சீர்திருத்தங்களைப் (Social reforms) பற்றித் தீவிரமாகப் பேசுவார்கள்; கலாசாலையைச்சார்ந்த சிற்றுண்டியரங்கில் (Tiffin rooms) ஒருவரையொருவர் பாராது நவக்கிரகங்கள் வக்கிரித்தாற்போலிருந்து சாப்பிடுவார்கள். இங்கே, சமபந்திபோசனம் (Casmopolitan mess) சர்வசாதாரணம்.

### உருவின்சிறுமையும் அறிவின்பெருமையும்

விவசாயவித்தியாசாலையில் மூன்றுவகுப்புக்கள் இருந்தன. அவைகளில் படித்த மொத்தமாணவர் ஐம்பதுக்கு மேற்பட்டவரெல் லாரினும் இவர் உருவிற் சிறியவராயிருந்தார். இவர் தேகநிறை தொண்ணூற்றெட்டுராத்தலாயிருந்ததாக ஞாபகமிருக்கிறது.

* விவசாயவித்தியாசாலைக்கு அருகேயுள்ள அடையாற்றின்கரையில் மாணாக்கருக்கு ஒரு தோணி இருந்தது. அதில் அவர்கள் அந்த ஆற்றில் படகோட்டுவது நிகழ்ந்துவந்தது. அந்தத் தோணிஓட்டுவதுசம்பந்தமாக நிகழ்ந்த விசேடசம்பவங்கள் இந்த நினைவுக்குறிப்பிற் பின்பு விவரிக்கப்படும்.

ஒருமாணவர் இருநூற்றெட்டுராத்தல்நிறையுடையராயிருந்ததும் நினைவுக்குவருகிறது. இவர் உருவில் எல்லாரினும் சிறியரா யிருந்ததற்கெதிராக, அறிவில் எல்லாரினும் பெரியராயிருந்தார்.

## சுயமரியாதை

விவசாயவித்தியாசாலை ஆசிரியருள் ஐரோப்பிய ஆசிரியர் ஒருவர், கோவிலிலுள்ள விக்கிரகங்கள் கும்பிடுவார்க்கு எதிர் கும்பிடலாவது தலையசைத்தலாவது செய்யாததுபோல, சலாம் செய்யும்மாணவர்க்குத் திரும்பச்சலாஞ்செய்தல்கிடக்க, தலையசைத் தல்கூடச் செய்யாதிருந்தார். அவர், ஒருநாள் காலையில் வித்தியா சாலைக்கு வந்தார். அப்போது, அவரவர்வகுப்புக்குப் போக வந்த பலவகுப்புமாணவர்கள், வித்தியாசாலையின் தாழ்வாரத்தில் நின்று கொண்டிருந்தனர். அவர்களெல்லாரும் மேற்கூறிய ஆசிரியரைக் கண்டு வந்தனஞ்செய்தனர். இவர்மட்டும் சும்மாநின்றார். ஆசிரியர், 'நீயேன் சலாஞ்செய்யவில்லை?' என்றவுடனே, இவர், 'முன் நான் சலாஞ்செய்தகாலங்களில் நீங்கள் திரும்பச் சலாஞ்செய்யவில்லை. தலையசைக்கக்கூடவில்லை.* ஆதலால் உங்களுக்கு நான் சலாஞ் செய்வதை நிறுத்திவிட்டேன்' என்றார். அதன்பின் அந்த ஆசிரியர், திரும்பச் சலாம்செய்யும் மரியாதையை அநுசரிப்பா ரானார்.

## இங்கிலாந்துவாசம்

இவர், சென்னை விவசாயவித்தியாசாலைப் படிப்புமுடிந்தபின் இங்கிலாந்துக்குச்சென்று, அங்கேயுள்ள விவசாயவித்தியாசாலை யொன்றிற் படித்துத் தேறினால், சென்னைமாகாண விவசாய இலாகா வில் உயர்தர உத்தியோகம் பெறலாமென்று இங்கிலாந்துக்குப்

---

* இது, இடைக்காடர் தம்மை அசட்டைசெய்த பாண்டியனைப்பற்றி மதுரைக்கோயிலிற் சொக்கநாதசுவாமிமுன்பு முறையிட்டதாகக்கூறும் திருவிளையாடற்புராணப்பாட்டை நினைவுறுத்துகிறது. அப்பாட்டு வருமாறு:—

'பரிவாயின் மொழிதொடுத்து வருணித்தோர்க் ககமகிழ்ந்தோர் பயனு நல்கா
விரிவாய தடங்கடலே நெடுங்கழியே யடுங்கான விலங்கே புள்ளே
பொரிவாய பாரைமர நிரையேவான் றெடுகுடுமிப் பொருப்பே வெம்பும்
எரிவாயகொடுஞ்சுரமேயெனவிவற்றோடொ்றினையொத்திருந்தான்மன்னோ.'

போகவிரும்பினார். அதற்கு வேண்டியபொருள் தம்மிடமில்லாமை யால், தம் உறவினருள்ளும் நண்பினருள்ளும் செல்வராயிருந்தவர் பாற் பொருளுதவிபெற்று இங்கிலாந்துக்குப் போனார். அங்கே, ஒரு விவசாயவித்தியாசாலைப் பிரதமாசிரியரைக்கண்டு தாம் அந்த வித்தியாசாலையிற் படிக்கவிரும்புவதாகவும், தாம் சென்னை விவசாய வித்தியாசாலையில் மூன்றுவருடம்படித்துத் தேறியிருப்பதனால், ஒருவருடமட்டும் படித்து, அவ்வித்தியாசாலை முடிவுப்பரீக்ஷையில் தம்மைச்சோதித்துத் தாம் சித்திபெற்றால் அவ்வித்தியாசாலைப் பட்டதாரியாக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். அந்த வித்தியாசாலைப் பிரதமாசிரியர், ஏற்பட்ட வருஷங்களில் ஒருவரு டங்கூடக் குறைக்கமுடியாதென்றுகூறிவிட்டார். இவர், அவ்வளவு காலம்படிக்கப் பணமேயன்றி மனமுமில்லாமையால் இங்கிலாந் தில் விவசாயப்படிப்பெண்ணத்தை விட்டுவிட்டார். செலவானது போக மிஞ்சியபணம் இந்தியாவுக்குத் திரும்புவதற்குப் போதாததா யிருந்தது. இந்தநிலைமையில், பத்திரிகைகளுக்கு விஷயங்க ளெழுதியனுப்பிப் பணம்சம்பாதிக்கலாமென்ற எண்ணந்தோன்ற, "இந்தியவிவசாயம்" என்ற தலைப்பின்கீழ்ப் பலகட்டுரைகள் எழுதிப் பத்திரிகைகளுக்கு அனுப்பலானார். இவர், எதிர்பார்த்ததற்கு மிகவும் அதிகமாகப் பத்திராதிபர்கள் பிரதிபலனளிப்பாராய் ஏராள மான பணமனுப்பினார்கள். இவரைப் பலவருடங்கள் படிக்கவேண்டு மென்ற பள்ளிக்கூடத்தாசிரியரே, இவர் கட்டுரைகளைக்கண்டு மிகவும் நன்குமதித்து, இவரைத் தம்பள்ளிக்கூடத்துக்கு அழைத் துத் தம் மாணவர்க்குப் பிரசங்கங்கள்செய்ய வேண்டிக்கொண்டார்.

### எத்தரை எத்தல்

இவர், ஒருநாள் லண்டன்நகரில் ஒரு நாவிதர்சாலைக்குப்போய்ச் சவரஞ்செய்வித்துக்கொண்டபின், நாவிதன் வேலைத்தொடக்கத்திற் கேட்ட சவரக்கூலியை மேசைமேல் வைத்துவிட்டுத் தம் கைத் தடியை எடுத்துக்கொண்டு புறப்படலானார். சவரஞ்செய்தவன், இவரைத் தடுத்துச் 'சவரக்கூலி ஒரு கிரௌன் (அஞ்சுஷில்லிங்), ஒரு ஷில்லிங்கல்ல' என்றான். அதற்குள் அந்தச்சாலையிலிருந்த மற்றவர்களும் வந்து இவரை வளைந்து மறித்தனர். இவர், அவர் கள் எத்திப்பறிப்போர் (Swindlers) என்று தெரிந்து ஒருகண மும் தாமதியாமல், அவர்கள் இவர் என்னசெய்வாரென்று

நினைப்பதற்குமுன் அவர்களைத் தம் கைத்தடிகொண்டு மாறிமாறி நையப்புடைத்துக் 'குய்யோ முறையோ! கூவே கூ!! கொள்ளை கொள்ளை!!! என்ற பொருள்பட (ஆங்கில)க் கூக்குரலிட்டனர். உடனே தெருவில்நின்ற போலீசுச்சேவகர்வந்து விசாரித்து அந்தச் சவாரச்சாலைக்காரர்மேற் குற்றஞ்சுமத்தி மாஜிஸ்டிரேட்டு முன் கொண்டுபோய்விட்டார்கள். போலீசார் முன்னமே நெடுங் காலமாக அந்தச் சாலைக்காரர் எத்திப்பறிப்போரென்று தெரிந் திருந்தார்கள். பறிகொடுத்த யாரொருவரும் தம்மிடம் ஆவலாதி சொல்லாமையால், அச்சாலைக்காரரைத் தண்டனைக்குக்கொண்டு வரக்கூடாதிருந்தனர். ஆயினும், யாரேனும் குறைகூறினால், பிராது நடத்தக்கருதி அதற்கு உதவியாமென்று முன் எத்திப்பறிக்கப் பட்டவர்கள் பெயர்களையும் விலாசங்களையும் குறித்துவைத்திருந் தனர். ஏமாறிப் பறிகொடுத்தவர்களுள்ளே சிலர், அற்பத்தொகைக் காகக் கலகஞ்செய்வது அகௌரவமென்று சாலைக்காரர் கேட்டதைக் கொடுத்துவிட்டுப்போன அந்தஸ்துடைய பெரியமனிதரா யிருந்தனர். போலீசார் இவரோடு அவர்களையும் மாஜிஸ்டிரேட்டு விசாரிக்கும்படிசெய்தனர். மாஜிஸ்ட்ரேட்டு, அந்தப் பெரியமனிதரை நோக்கி 'இந்தச் சிறிய இந்தியருடைய தீரமும் குற்றவாளிகளைத் தெண்டனைக்குள்ளாக்கும் கடமையைச்செய்யும் மனவுறுதியும் ஐரோப்பியராகிய உங்களுக்கு இல்லாமற்போனது, ஒருபுறம் விசனத்தையும் ஒருபுறம் நகைப்பையும் உண்டாக்குகிறது' என்று கூறி, இவரை எத்திப்பறிக்கமுயன்ற சவாரச்சாலைக்காரருக்குத் தக்க தண்டம் விதித்தார். இயல்பாகச் சிற்றுருவினரான இவரை மிகவும் சிறுத்துக் குறுகிய வாமனர்போலவும் பேருருவமுடைய சவாரச்சாலைக்காரரை மிக்க பெருங்காத்திரமுடைய ராட்சசர்போல வும் இவர் கைத்தடியைப் பனைபோலவும் இவர் அவர்களைப் பனை கொண்டு தாக்குவதுபோலவும் காட்டும் சித்திரப்படத்துடன் இந்தப் புதுமையான செய்தியை நகைச்சுவைகொழிக்க எழுதிப் பத்திரிகைகள் பரப்புவனவாயின.

## சென்னைக்குத்திரும்பியதும் விவசாய ஆசிரியரானதும்

இச்செய்தி பரவியபின், இவர் மிகப் பிரபலரானார். இவர் எழு தூங்கட்டுரைகளுக்கு முன்னினும் அதிகமான மதிப்பும் வெகுமான மும் கிடைக்கலாயின. அப்படித் திரண்டபணத்திற் செலவானது

போக, இந்தியாவுக்குத் திரும்புதற்குப் போதியபணம் மிஞ்சிய போது, இவர் இந்தியாவுக்குத் திரும்பிவந்து தாம் மாணவராயிருந்த சென்னை (சைதாப்பேட்டை) விவசாய வித்தியாசாலையில் விவசாய ஆசிரியராக நியமிக்கப்பெற்றார்.

## அடையாற்றுச் சம்பவங்கள்

சைதாப்பேட்டைக் கவர்ன்மென்றுபாரம் (Form-விவசாயப் பண்ணைத்தலம்) அடையாற்றங்கரையிலிருந்தது. அந்தப்பாரத்தில் விவசாயமாணவர் வசிக்கும் குடிசைகள் (Cottages) பல இருந்தன. அவைகளில் வசித்த மாணவர்களும் பாரத்துக்கு வெளியே வசித்த மாணவர்களும் அடையாற்றில் போக்குவரத்துச்செய்ய, ஒரு தோணி இருந்தது. அந்தத் தோணியிற் சில மாணவர்கள் செல்லும்போது, அவர்களுக்கும் எதிரேவந்த அடையாற்றுக் கிளப்பைச் (Adaiyar club) சேர்ந்த தோணியிலிருந்த ஐரோப்பியர்களுக்கும் ஏதோ சில ஏதுவால் மனத்தாபம் நேர்ந்தது. சொற்பத் தொகையினராயிருந்த மாணவரைப் பெருந்தொகையினராயிருந்த ஐரோப்பியர் அடித்துத் துன்பப்படுத்திவிட்டார்கள். இந்த விசனகரமான சம்பவத்தைப்பற்றி மாணவர்கள்கூடி ஆலோசித்தார்கள். அந்த ஆலோசனையில் முடிவுசெய்தபடி, தங்கள் 'பிரின்ஸிபா'லிடம் நடந்ததைத் தெரிவித்து அவர் அநுமதிபெற்றுத் துன்புறுத்திய ராப்பியர்மீது கிரிமினல் நடவடிக்கை நடத்தத் தீர்மானித்தார்கள். இந்த விவரங்கள் தமக்குத் தெரியவந்தபோது, நம் மீனன் மாணவர்களை அழைத்து 'நீங்கள் தீர்மானித்தபடி செய்யாதீர்கள். ஐரோப்பியரான பிரின்ஸிபால் ஐரோப்பியரைப் பாதிக்கும்படியான அநுமதியை அளியார். அளித்து நீங்கள் வழக்குத்தொடர்ந்தாலும், செயமடைவது சந்தேகம். இப்பொழுது பொறுத்துக் கொண்டிருங்கள். முன் துன்பப்படுத்திய ஐரோப்பியர் திரும்பத் தோணியில் எப்போதாவது வரும் சமயத்தை எதிர்பார்த்திருந்து, நீங்கள் பெருங்கூட்டமாகச்சென்று அவர்கள் செய்ததற்குப் பதில் செய்துவிடுங்கள்' என்றார். மாணவர்கள் அவ்வாறு செய்திட்டார்கள். பெரிய உத்தியோகஸ்தர்களும் பெருத்த வியாபாரிகளுமான அந்த ஐரோப்பியர் சிறிய இந்தியமாணவர்களால் தாங்கள் அடைந்த அவமானத்தைப்பற்றிப் பிராதுசெய்து பகிரங்கப்படுத்தமாட்டார்களென்று கருதியே மீனன் மாணவர்களுக்கு மேற்கூறியவாறு புத்திமதி கூறினார். அவர் கருதியபடியே பிராது செய்யப்படவில்லை.

## மூன்றும்வகுப்புவண்டியின் உட்புறம் பார்த்தறியேன்

ஒவ்வொருவருடத்திலும் சிலகாலம் இவர் தம்முடைய மாணவர்களைக் கூட்டிக்கொண்டு வெளியிடங்களுக்குச்சென்று அங்கங்கேயுள்ள பயிர்வகைகளையும் பயிரிடும்முறைகளையும்பற்றி அறிவூட்டுவதுண்டு. அப்படி வெளியேசென்று திரும்பிய ஒருசமயத்தில், பிரின்ஸிபாலானவர், சில உத்தியோகஸ்தர்கள் ரயிலில் தாழ்ந்த வகுப்புவண்டியில் பிரயாணஞ்செய்து உயர்ந்தவகுப்புப்படி வாங்குவதை மனத்துள்வைத்துக்கொண்டு, இவரைநோக்கி 'நீர் மூன்றும் வகுப்பிற்சென்று இரண்டாம்வகுப்புப்படிவாங்கி, இப்போது போய் வந்த பயணத்தில் மிக்க லாபம் அடைந்திருப்பீரே' என்று வேடிக்கையாகக் கேட்டார். இவர் "நான் ஆசிரியன் ஆனபின் மூன்றும் வகுப்பு வண்டியின் உட்புறம் பார்த்தறியேன்" என விடையளித்தார்.

## வைத்தியசோதனையினின்று வைத்தியமுறையினால் தப்பியது

நான் மிருகவைத்திய இலாகா உத்தியோகத்தனாயிருந்தபோது ஒருநாள், கோயமுத்தூருக்குப்போவதற்காகத் திருப்பூர் ஸ்டேஷனில் ஓர் இரண்டாம்வகுப்புவண்டியில் ஏறப்போனேன், அப்போது. அதில் திரளான வாலிபர்கள் இருந்தார்கள். அவர்கள் 'இவ்வண்டி "ரிசர்வ்" செய்யப்பட்டிருக்கிறது. வேறுவண்டிக்குப் போங்கள்' என்றார்கள். நான் வேறுவண்டிக்குப் போகப் புறப்பட்டபோது, அம்மாணவர்களைக் கோயமுத்தூர்ஜில்லாவில்வழங்கும் விவசாயமுறைகளைக் காட்டக் கூட்டிககொண்டுபோகும் ஆசிரியர் கிருஷ்ணன்மேனன் என்னைககண்டு, எழுந்துவந்து 'முதலியாருக்கு "ரிசர்வ்" இலலை' என்று சொலலி, என் கையைப்பிடித்துக்கொண்டு போய்த் தம்பக்கத்தில இருக்கச்செய்தார். சில ரயில்நிலையங்கள் (Ry. Stations.) கழிந்தபோது, என்னைத் தன்கையைப் பிடித்துப் பார்க்கச்சொன்னார். அவ்வாறுசெய்து, "சூடு அதிகமாயிருக்கிறதே, போத்தனூர் ரயில்நிலையத்தில் பிளேக்குவைத்தியர்கள் உம்மைத் தடைப்படுத்திவிடுவார்களே, இத்தனை மாணவர்களோடு நீர் வந்த காரியம் நிறைவேறாதே' என்றேன். 'நான் பிளேக்கில்லாத இடத்திலிருந்துவருகிறேன். இந்தச்சூடு பிளேக்குக்காய்ச்சலின் சூடல்ல. சில வேளைகளில் பலவீனத்தினால் எனக்குக் காய்ச்சல்வருவதுண்டு. அது இது' என்றார். 'எந்தக்காரணத்தால் ஏற்பட்ட சூடானாலும் உம்மைக் 'குவாரன்டை'னில் (Quarantine) வைத்துவிடுவார்கள்' என்றேன்.

இதற்குள், போத்தனூர் ரயில்நிலயத்துக்கு வந்துசேர்ந்துவிட்டோம். பிளேக்குவைத்தியத்தலைவர், நாங்களிருந்த வண்டிக்குள் வந்து, ஒவ்வொருவரையும் கையைப்பிடித்துப்பார்த்து மீனனை மட்டும் கூட்டிக்கொண்டுபோனார். நாங்கள் எல்லோரும் அவர்கள் பின் சென்றோம். வைத்தியத்தலைவர் மீனனை ஒரு நாற்காலியில் இருக்கச்செய்து, தம் உதவிவைத்தியரைக்கொண்டு சோதிக்கச் சொல்லிவிட்டுப்போனார். உதவிவைத்தியர் சூடறிகருவியை இவர் கக்கத்தில்வைக்கப்போனபோது, இவர் 'நானே வைத்துக்கொள்கிறே'னென்று வைத்துக்கொண்டார். அவ்வுதவிவைத்தியர் வேறு பிரயாணிகளைச் சோதிக்கச்சென்றார். சிறிதுநேரஞ்சென்றபின் வந்து, இவர் கக்கத்தில் வைத்திருந்த சூடறிகருவியையெடுத்துப் பார்த்து அக்கருவி சரியாய் வைக்கப்படவில்லையென்றார். அப்போது, வைத்தியத்தலைவர் வந்தார். நடந்ததை உதவிவைத்தியர் சொல்லக்கேட்டபின், அவர் தாமே சூடறிகருவியை இவர் கக்கத்தில்வைத்துப் போதியநேரஞ்சென்றபின் எடுத்துப்பார்த்துக் 'காய்ச்சல் இல்லை. இஷ்டமான இடத்துக்குப் போகலாம்' என்று சொல்லிப் போய்விட்டார். நான் இவர்காய்ச்சல் எப்படி நீங்கியதென்று விசாரித்தபோது, இவர் சூடறிகருவியைத் தம் கக்கத்தில்வைத்த போது, தம் உடம்புச்சூடு அதிலே ஏறாதவிதமாக வைத்துக் கொண்டாரென்றும் உதவிவைத்தியர் சூடறிகருவியைக் கொடுத்ததற்கும் பெரியவைத்தியர் திரும்பிவந்துபார்த்ததற்கும் இடையில் காய்ச்சல்வந்தவேளைகளில் உபயோகித்தற்காகத் தம் கைவசம் வைத்திருந்த காய்ச்சன்மாந்திரையை உட்கொண்ட தந்திரத்தினாலே தேகச்சூட்டைத் தணித்துக்கொண்டாரென்றும் தெரிந்தேன்.

கோயமுத்தூர்ஜில்லாவில் பலநாள் தங்கித் தம்முடன் கூட்டிவந்த திரளான மாணவர்களுக்குக் காட்டவேண்டிய விவசாயக் காட்சிகளைக் காட்டவும் அவர்கள் கண்டவைகளைப்பற்றிக் கற்க வேண்டியவைகளை அவர்களுக்குக் கற்பிக்கவும் செய்த நற்காரியம், மேற்கூறிய தந்திரஞ்செய்யாதிருந்தால் முடிந்திராது.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—ருஅ.] விக்கிரமஹ மார்கழிமீ [பகுதி—உ.

Vol. 38. December 1940—January 41. No. 2.

## வண்ணமும் வடிவும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

முன்னாளிலே, யவனபுரத்திலிருந்த சிற்பாசாரிகள் வெள்ளிய சலவைக்கல்லினைச் செதுக்கி, அழகிய உருவங்களை வகுத்தார்கள். அவ்வுருவங்களிற் சில மேனாட்டிலுள்ள காட்சிச்சாலைகளிலே, இன்றும் பார்ப்போர்கண்ணுக்கு உவகையளித்துநிற்கின்றன.

மிகப் பழையகாலத்திலே தமிழ்நாட்டிலிருந்த சிற்பநூல் வல்லார் வகுத்த உருவங்கள் நமக்குக் கிடைப்பதில்லை. அவ்வுருவங்கள் "மண்ணீடு" எனப்பட்டன; மண்ணி (சுதையி)னாலும் மரத்தினாலும் இயற்றப்பட்டனவாதலின், இப்பெயர் பெற்றன. இவைதம்மை இயற்றிய சிற்பிகள் மண்ணீட்டாளர் எனப்பட்டார். இவரை ஓவியர் என்பதும், இவர்க்குரிய நூலினை ஓவியச்செந்நூல் என்பதும் பழைய வழக்கு.

இடைக்காலத்திலே நமதுநாட்டிலே கருங்கல்லினாலே உருவங்களை அமைத்துக்கொள்ளும் வழக்கம் ஏற்பட்டது. மதுரையிலும் தென்காசியிலும் பேரூரிலும் மற்றுமிடங்களிலும் கோயில் மண்டபங்களிலே அமைக்கப்பட்டிருக்கிற உருவங்கள் தமிழரது சிற்பவல்லமையைச் சிறப்புறக் காட்டுகின்றன.

> "எவ்வகை யுயிர்களும் உவமங் காட்டி
> வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய
> கண்கவர் ஓவியம்" (மணிமேகலை. காதை 3. அடி 129-131)

எனவும்,

"எவ்வகைச் செய்தியும் உவமங் காட்டி
நுண்ணிதின் உணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞர்" (மதுரைக்காஞ்சி. அடி 516-518.)

எனவும் கூறினமையின், பார்ப்போர்கண்களைக் கவருந்தன்மைய வாகிய ஓவியங்களை அமைப்போர் நுண்ணுணர்வும் நுழைந்த நோக்கும் உடையராதல்வேண்டுமென அறிகின்றாம்.

வெண்சுதையில் தீட்டிய உருவத்தினது இயற்கைவண்ணம் வெளிப்படுமாறு வர்ணந்தீட்டுவோரும், வட்டிகைப்பலகையிலே துகிலிகைக்கோலினாலே பலவித வர்ணங்களை எழுதி அழகிய சித்திரங்களை அமைப்போரும் கண்ணுள்வினைஞர் எனப்பட்டார். 'கண்ணுள்வினைஞர் - சித்திரகாரிகள்' என அடியார்க்குநல்லாருரை கூறும்.

"வட்டிகை மணிப்பலகை வண்ண நுண் டுகிலிகை"

என்னும் சிந்தாமணிச்செய்யுளடியினுள்ளே கண்ணுள்வினைஞர்க்கு வேண்டிய கருவி மூன்றும் கூறப்பட்டன.

"துவாரவட்டிகை" என அடியார்க்குநல்லார் கூறுதலின், இக் காலத்து மேனாட்டுச் சித்திரகாரிகள் வழங்கும் (Palette என்னும்) பலகையினையொத்த வட்டிகைப்பலகைகளை பண்டைநாளினும் இருந்தன என எண்ண இடமுண்டு.

தென்னாட்டுச் சித்திரவன்மையைக் காட்டும் பழைய சித்திரங்கள், சித்தண்ணவாசலினும் தஞ்சைப் பெரியகோயிலினும் ஈழநாட்டுச் சிகிரியாக் குகையினும் வடநாட்டு அஜந்தாகுகையினும் உள்ளன. இவற்றைக் கூர்ந்து ஆராயின், பழந்தமிழ்நாட்டு அணிகலன் உடை கூந்தலமைப்பு என்று இன்னவும் ஆடவரும் மகளிரும் அறங்கூறவையத்தும் விளையாட்டிடங்களினும் வாழ்மனையினும் வேற்றிடத்தும் எவ்வெச்செய்திகளை மேற்கொண்டிருந்தார்களென்பதும் தெளிவாகும்.

மண்ணீட்டாளர், கண்ணுள்வினைஞர் - ஆகிய இருபாலாரையும் ஓவியர் என்பதும் வண்ணம் வடிவம் என நுணுகி வேறுபடுத்தாது அனைத்தினையும் ஓவியம் என்பதும் ஒருதலை.

ஓவியனானவன் படாத்தில் வர்ணம் தீட்டியோ, சுவர்மீது சுதையினாற் புனைந்தோ, வெண்சலவைக்கல்லைச் செதுக்கியோ, கருங்

கல்லினைப் பொளிந்தோ வெளிப்படுத்திய உருவத்தை அறிவுடையோன் நோக்கும்போது ஓவியனது கைவன்மையை வியப்பதோடமையாது, "ஓவியனுள்ளத்து உள்ளியது" இதுவெனக் கண்டு வியத்தல்வேண்டும். ஓவியனது உள்ளக்கருத்தே ஓவியத்திற்கு உயிர்போன்றது.

நவிலுந்தோறும் இனிமைபயக்கும் நூல்நயம்போலவும், பயிலுந்தோறும் இனிமைபயக்கும் பண்புடையாளர் தொடர்பு போலவும் பார்க்குந்தோறும் அறிவுடையோனுக்கு உவகையளிக்கும் ஓவியமே அழகிய ஓவியமாகும்.

"ஐயமும் அழகும்" என்னும் வியாசத்திலே காட்சியினும் ஐயம் மிக்கதெனவும் ஐயத்தினின்று வியப்புச்சுவை தோன்றுமெனவும் காட்டினும். இயற்கைப்பொருளை இயற்கையிற் றோன்றுமாறுபோலத் தீட்டிய வுருவம் காட்சியோடு அமைவதாகும்.

"பஞ்சரத்திலுள்ள கிளிப்பிள்ளை பொன்வட்டிலிற் பாலடிசில் உண்ணுவதை - இவ்வோவியம் காட்டுகின்றது" எனக் காட்சி மாத்திரத்திலே அளந்து தீர்ப்பிடுதற்குரிய ஓவியம் அறிஞர்க்கு உவகைபயப்பதில்லை. "இப்பொழிலகத்தே நிற்கும் மாமரத்தின் கனியினை இக்கிளிப்பிள்ளை உண்கின்றது" எனற்குரிய ஓவியமும் முன்னையதைப்போல்வதே. ஆனால் ஓர் ஓவியன் இவ்விரண்டினையும் ஒரு படத்திலே சித்திரித்துத் தருகின்றான்: என வைத்துக் கொள்வோம். பொழில்நடுவில் அழகிய மாளிகை; மாளிகைமேன் மாடத்தில் ஒரு மடவரல் பஞ்சரத்திற் கிளிக்குப் பாலடிசிலூட்டுகின்றாள். பக்கத்திலுள்ள மாமரக்கிளையிலிருக்கும் கிளி தன்னிச்சையாக மாங்கனியினை உண்கின்றது.

இப்படத்தினைப் பார்த்தவுடனே நமதுசிந்தையிலே பலவேறு எண்ணங்கள் உதிக்கின்றன. இப்படம் சுதந்திரவாழ்க்கையையும் அடிமைவாழ்க்கையையும் குறிப்பிடுகின்றதா? அன்றேல், மனைவாழ்க்கையையும் துறவுவாழ்க்கையையும் காட்டுகின்றதா? பட்டினவாழ்க்கையையும் பட்டிக்காட்டுவாழ்க்கையையும் காட்டுகின்றதா? என இவ்வாறெல்லாம் சிந்திக்கிறோம். கண்ணினைக் கவர்ந்தபடம் மனத்தினையும் கவர்ந்துவிட்டது.

"மாத்திரை முதலா அடிநிலை காறும்
நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே"
(தொல். பொருள். செய்யு. 104)

எனத் தொல்லாசிரியர் செய்யுளுக்குக் கூறிய "நோக்கு" என்னும் இலக்கணம் ஓவியத்திற்கும் அமையவேண்டும். "கவியிதயம்" எதுவென நாம் ஆராய்ந்துகண்டு மகிழ்வுறுவதுபோல ஓவியனுள்ளத்தினையும் நாம் ஆராய்ந்து கண்டு மகிழ்வுறுமாறு ஓவியம் அமையவேண்டும்.

இளையோரும் அறிவிற்சிறியோரும் "பொரிமாவைமெச்சினன் பொக்கைவாயன்" என்றபடி, வெள்ளைப்பாடல்களையும் இயற்கைத் தோற்றத்தை அப்படியே அமைத்துக்காட்டும் ஓவியங்களையும் பாராட்டுவர். உண்மை அழகு இதுவென உணரும் ஆற்றலுடைய அறிஞர், உண்மைக்கவிகள் எழுதிய செய்யுள்நலனையும் உண்மையோவியன் அமைத்த சித்திரநலனையும் ஆராய்ந்துணர்ந்து மகிழ்வுறுவர்.

கவிதையானது ஐம்புலன்களையும் மனத்தினையும் கவரும் ஆற்றல்வாய்ந்தது. மண்ணீட்டாளரும் கண்ணுள்வினைஞரும் கண்ணினையும் மனத்தினையும் கவர்வார். இசைவல்லோர் கண்டத்தினாலும் கருவியினாலும் உளத்தைக் கவர்ந்து, செவிக்கு அமுதளிப்பார்.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள" (திருக்குறள். 1101)

என விழைவுவயப்பட்ட தலைமகன்கூறுவதுபோலக் கவிச்சுவை தேர்வோன்,

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்கவி கண்ணே யுள"

எனக்கூறி விண்ணவரின்பத்தினும் மிக்க கவியின்பத்தை நுகர்வான்.

செவியின்பம், நாவின்பம், மூக்கின்பம், ஊற்றின்பமாகிய நான்கும் எடுத்துக்கொண்ட ஆராய்ச்சிக்குப் புறம்பானவையாதலின், அவைதம்மையொழித்து, வண்ணமும் வடிவமும் காட்டும் செய்யுளானது, வல்லான் வகுத்த ஓவியம்போன்று அகக்கண்ணுக்கு உவகையளிக்கும் மாண்பினை ஆன்றோர்செய்யுட்கள் சிலவற்றை எடுத்துக்காட்டி நிறுவுதல்மேற்கொள்வாம்.

"வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே
வகைபெற வந்த வுவமத் தோற்றம்"

என்னும் தொல்காப்பிய உவமவியற்சூத்திரத்தினுள்ளே மெய் யென்பது வடிவம் (வட்டம், சதுரம், கோணம் முதலாயின); உருவென்பது நிறம், வண்ணம் (வெண்மை, பொன்மை முதலி யன): எனக் கூறப்பட்டது.

சொற்களாலே கவிவல்லான் புனையும் ஓவியமானது, கண்ணுள் வினைஞரும் மண்ணீட்டாளரும் புனையும் ஓவியத்தினும் சிறந்த இயங்கும் ஓவியமாகும். அஃதன்றியும் கவிதையோவியம், உவமம் தழுவிநின்று ஆராயுந்தோறும் ஆராயுந்தோறும் புதியபுதிய நலத் தினைக் காட்டவல்லது.

"வீங்குநீ ருருவி வேங்கட மென்னும்
ஓங்குயர் மலையத் துச்சி மீமிசை
விரிகதிர் ஞாயிறும் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய இடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையி னேந்தி
நலங்கிள ராரம் மார்பிற் பூண்டு
பொலம்பூ வாடையிற் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்
என்கண் காட்டென் றென்னுளம் கவற்ற
வந்தேன்" (சிலப்பதிகாரம். காதை. 11. அடி 41–53.)

என மாங்காட்டு அந்தணன் வாய்மொழியாக இளங்கோவடிகள் ஓவியக்கவிதை புனைகின்றார். உவமானம் ஒருதனியோவியம், உவ மேயம் மற்றோரோவியம். ஈரோவியமும் அகக்கண்முன் தோன்றி இரண்டற்ற (அத்துவித) நீர்மையாய் நிற்கின்றன. நாம் கண்டு பரவசமடைகின்றோம்.

முதலிலே உவமானத்தைத் தனித்துநோக்குவாம். ஒவ்வொரு மொழியினாலும் குறிக்கப்படுகிற வண்ணத்தினையும் வடிவினையும் அகக்கண்ணினாலே நோக்குதல்வேண்டும்.

வாளா "வேங்கடம்" என்னாது "வீங்குநீர் அருவி வேங்கடம்" என்றார், மலைக்கு அணிகலன்போன்று அழகினை நல்குவது நீரருவியாதலின்.

"ஓங்குயர்மலையம்" என்புழி மெல்லொற்றுத்தொடர்ந்த நெட்டெழுத்துத் தனக்குரிய மாத்திரையினும் நீண்டொலித்துக் கூற வரும் மருளும் தெய்வக்குன்றின் உயர்வினையுணர்த்தி வியப்பினை அளிக்கின்றது.

"விரிகதிர்ஞாயிறு" என்னும் தொடர், பரிதிவட்டத்தினையும் அதனைச் சூழ்ந்து எத்திசையினும் பரவும் ஆயிரங்கதிர்களையும் கண்முன் கொண்டுவருகிறது. நிறைமதிக்கு அடுத்தநாளிலே குணதிசையில் ஞாயிறு உதிக்கக் குடபாலிலே வானவட்டத்தின் மேல் நிற்கும் திங்களை ஈண்டுத் "திங்கள்" என அடையின்றிக் குறிக்கப்பட்டது. அந்திமாலையிலே காவிரிப்பூம்பட்டினம் என்னும் பெண்ணணங்கு தோற்றிய தன்மையினை உரைக்கப்புகுந்த கூல வாணிகன்சாத்தனார்,

"குணதிசை மருங்கின் நாண்முதிர் மதியமும்
குடதிசை மருங்கிற் சென்றுவீழ் கதிரும்
வெள்ளிவெண் டோட்டொடு பொற்றோ டாக
எள்ளறு திருமுகம் பொலியப் பெய்தலும்,"
(மணிமேகலை. காதை. 5. அடி. 119—122)

என்றாரெனின், அவர்கூறியது "வீழ்கதிர்," இவருரைத்தது "விரிகதிர்" என்க.

"நன்னிறமேகம்" நல்ல நீலநிறத்தையுடைய மேகம் என உரையாசிரியர் கூறுவார்.

வானவில்லானது வட்டாகாரமாய் இந்திரநீலம் பூநீலம் நீலம் பச்சை மஞ்சள் பொன்மை செம்மை: என்னும் ஏழுநிறங்களும் பொருந்தி ஒளியொடும் திகழ்வது.

"உருவு கொண்ட மின்னே போலத்
திருவி லிட்டுத் திகழ்தரு மேனியள்"
(மணிமேகலை. காதை. 6. அடி. 9, 10.)

எனவும்,

"மின்னுக் கொடியொன்று மீவிசும்பிற் றோன்றுமால்"
(சிலப். 29. செங்குட்டுவன்கூற்று. அடி. 4.)

எனவும் வருதலின், வானவில்லும் மின்னற்கொடியும் தெய்வவொளி வீசுந்தகைய என அறிகின்றோம்.

"மிக்க அருவிநீரையுடைய வேங்கடமென்று பெயர்கூறப் படும் மலையினுச்சிமீதே ஞாயிறும் திங்களும் இருமருங்கும் ஓங்கி விளங்கிய இடைப்பட்ட இடத்தே நல்ல நீலநிறத்தையுடைய மேகம், தன் மின்னாகிய புதுப்புடைவையையுடுத்துத் தன்வில்லாகிய பணியைப்பூண்டு நின்றது" என உவமான ஓவியம் காட்டப்பட்டது.

நீனிறமேகம் நெடியோனுக்கும், விரிகதிர்ஞாயிறு பகை யணங்கு ஆழிக்கும், திங்கள் பால்வெண்சங்கிற்கும், மின்னல் பொற் பூவாடைக்கும், வானிடுவில் அணிகிளராரத்திற்கும் ஒப்பாயின.

மேல்வரும் எடுத்துக்காட்டுச்செய்யுட்களையும் விரித்துரைத் துக்கொள்க.

"கோல நெடுங்கண் மகளிர் கூந்தல் பரப்பி யிருப்பப்
பீலி மஞ்ஞை நோக்கிப் பேடை மயிலென் றெண்ணி
ஆலிச் சென்று புல்லி யன்மை கண்டு நாணிச்
சோலை நோக்கி நடக்கும் தோகை வண்ணங் காண்மின்"

(சீவகசிந்தாமணி. 919)

"தீம்பாற் பசியி னிருந்த செவ்வாய்ச் சிறுபைங் கிளிதன்
ஓம்பு தாய்நீர் குடைய ஒழிக்கும் வண்ணம் நாடிப்
பாம்பா லென்ன வெருவிப் பைம்பொற் றோடு கழலக்
காம்பேர் தோளி நடுங்கிக் கரைசேர் பவளைக் காண்மின்"

(சீ—சி. 924)

"தாய்தன் கையின் மெல்லத் தண்ணென் குறங்கி னெறிய
ஆய்பொன் னமளித் துஞ்சும் அணியார் குழவி போலத்
தோயுந் திரைக ளலைப்பத் தோடார் கமலப் பள்ளி
மேய வகையிற் றுஞ்சும் வெள்ளை யன்னங் காண்மின்"

(சீ—சி. 930)

"திண்கதிர் மதாணி யொண்குறு மாக்களை
யோம்பினர் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்
தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்
தாமு மவரு மோராங்கு விளங்கக்
காமர் கவினிய பேரிளம் பெண்டிர்"

(மதுரைக்காஞ்சி. 461–465)

சிறுவிரல்கள் தடவிப்பரிமாறச்
செங்கண்கோடச் செவ்வாய்கொப்பளிப்பக்
குறுவெயர்ப்புருவங் கூடலிழைப்பக்
கோவிந்தன் குழல்கொடு ஊதினபோது
பறவையின்கணங்கள் கூடுதுறந்து
வந்துசூழ்ந்து படுகாடுகிடப்பக்
கறவையின்கணங்கள் கால்பரப்பிட்டுக்
கவிழ்ந்திறங்கிச் செவியாட்டகில்லாவே.

(பெரியாழ்வார்திருமொழி. 3–6–8)

திரண்டெழுதழை மழைமுகில்வண்ணன்
செங்கமலமலர்சூழ் வண்டினம்போலே
சுருண்டிருண்டகுழல் தாழ்ந்தமுகத்தான்
ஊதுகின்ற குழலோசைவழியே
மருண்டுமான்கணங்கள் மேய்கைமறந்து
மேய்ந்தபுல்லுங் கடைவாய்வழிசோர
இரண்டுபாடுந் துலுங்காப் புடைபெயரா
எழுதுசித்திரங்கள்போல நின்றனவே.

(பெரியாழ்வார்திருமொழி. 3–6–9.)

மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாருந் திருவடிவும் மதுர வாக்கில்
சேர்வாகுந் திருவாயில் தீந்தமிழின் மாலைகளும் செம்பொற் றூளே
சார்வான திருமனமும் உழவாரத் தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்து பணிந்தேத்திப் பரவிச் செல்வார்.

(திருநாவுக்கரசுசுவாமிகள்புராணம். 225.)

ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தைத்
தேனக்க மலர்க்கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்கும்
கானத்தின் எழுபிறப்பைக் கண்களிப்பக் கண்டார்கள்.

(திருஞானசம்பந்தசுவாமிகள்புராணம். 728.)

ஙு

# ஐயமும் அழகும்.

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

காட்சிக்கும் துணிவுக்கும் இடையே ஐயம் நிகழும். காட்சி ஐம்புலவாயிலாக எய்தும் உணர்வு. துணிவு, 'யாதொருபொருள் யாதோரியல்பிற்றாய்த் தோன்றினும், அத்தோன்றியவாற்றைக் கண்டொழியாது அப்பொருளின்கண் நின்று மெய்யாகிய பொருளைக் காணும் மெய்யுணர்வு;' ஆதலின், ஐயத்தினீங்கித் தெளிந்தாரான் எய்துதற்குரியது. அளவினால் எல்லைப்பட்ட பொருளினைக் கண்ணுற்றோன், ஒரு நோக்கோடு அமைவான்; நோக்குந்தோறும் நோக்குந்தோறும் புதிய புதிய அழகினைத் தோற்றுவிக்கும் ஒரு பொருள் கண்ணெதிர்ப்படுமாயின், அதனைக் கண்டோன், 'நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி' அப்பொருளின் காட்சிநலனைத் துய்த்தற்கு முயல்வான்; இம்முயற்சியே ஐயவுணர்வினுக்கு அடிப்படையாயிற்று. ஆதலினாலே, ஈண்டு நாம் ஆராயும் காட்சி ஐயம் என்னும் இரண்டினுள்ளும், காட்சியினும் ஐயம் சிறப்புடையதென்று அறிதல்வேண்டும்.

ஐயமானது வியப்பு எனவும் மருட்கையெனவும் தமிழ்நூலார் வகுத்துக்கூறிய அற்புதரசத்தினைச் சார்ந்துவருவது.

> "ஒருபாற் கிளவி யெனைப்பாற் கண்ணும்
> வருவகை தானே வழக்கென மொழிப"

என ஆசிரியர் தொல்காப்பியனாரும்,

> "ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குரித்தே"

எனப் பிற்காலத்தாரும் கூறிய விதி சொல்லிலக்கணத்திற்குப் போலவே பொருளிலக்கணத்திற்கும் பொருந்துவது. அங்ஙனமாதலின் கைக்கிளைத்திணை, ஐந்திணை, பெருந்திணையென ஆன்றோர் வகுத்துக்கூறிய அகத்திணையொழுக்கமானது, ஆடவன்

ஒருவனுக்கும் மடவரல் ஒருத்திக்கும் இடையே நிகழ்ந்த காமக் கூட்டத்தின்வழிப் பிறந்த அன்பு ஒன்றினையே சிறப்பித்துக் கூறுவது என்பதனேடமையாது, ஆங்கு அஃது இன்பப்பகுதியவாய அன்புநெறியனைத்தினுக்கும் பொதுவிலக்கணமாமெனக் கொள்வது பொருத்தமாகும்.

"அன்பினைந்திணை" என ஆலவாயில் அவிர்சடைக்கடவுளும்,

"இன்பமும் பொருளும் அறனு மென்றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை"

என ஆசிரியர் தொல்காப்பியனாரும் கூறினமையின், இன்பப்பகுதி அன்பினெடு ஒன்றி நிற்பது, என அறிந்துகொண்டாம்.

"எல்லா வுயிர்க்கும் இன்ப மென்பது
தானமர்ந்து வரூஉ மேவற் றாகும்"

என்றமையின், அறமும் பொருளும் மக்கட்கே சிறப்பாகவுரிய என்பதும், இன்பமோவெனின் மக்களும், தேவரும், நரகரும், மாவும், புள்ளும், மரனுமாகிய அனைத்துயிர்க்கும் பொதுவாக அமைந்ததென்பதும் தெளிவாகிறது. ஆதலினாலே, இவ்வுயிரனைத்தும் அன்புசெய்தற்கும் உரியவென அறிதல்வேண்டும்.

நல்லிசைப்புலவர் யாத்தமைத்த கவியிலே ஈடுபட்டு நெஞ்சமுருகி இன்புறுவோன் அக்கவிதையின்பால் அன்புசெலுத்துகிறான். கவிதையை யாத்த புலவன், படிப்போருக்கு இன்பம் பயப்பதுகருதியே யாத்தான். ஆதலின், படிப்போனுக்கும் படிக்கப் படும் கவிதைக்கும் இடையே அமைந்த தொடர்பு பெருந்திணையன்று, கைக்கிளைத்திணையாமென்பது வெளிப்படை.

மலையும், கடலும், கானலும், கழியும், யாறும், பொழிலும், ஊரும், வயலும், செஞ்சுடர்ப் பரிதியும், தண்கதிர் மதியமும், நீலவிசும்பும், விசும்பிலொளிரும் விண்மீனும், மழலைக்குழவியும், இளநகைமாதரும், அருந்திறல் மறவரும், பெருங்கொடை வீரரும் எனநின்ற கவிதைப்பொருள்வயின் இயைந்துநின்று நெஞ்சமுருகும் செஞ்சொற்புலவன், அப்பொருள்வயின் அன்பு செலுத்துகிறான்; அப்பொருட்பகுதியனைத்தும் அழகுடையவாதலின்.

இயற்கை என்னும் பெண்ணணங்கு தலைவியாக, அத்தலைவியினது பேரழகிலே ஈடுபட்ட கவிஞன் காதலனாகின்றான். இயற்கையணங்கும் புனைவன புனைந்தும், பூண்பன பூண்டும் அழகுவிளங்க நிற்பது, தனது காதலனாகிய கவிஞனைக்கருதியேயென அறிதல் வேண்டும். கவியுணர்ச்சியில்லா ஏனையமாந்தர் இயற்கையணங்கின் அழகைக் காண்பதுமில்லை; காதலிப்பதுமில்லை. இங்ஙனம் நோக்குமிடத்து, இயற்கைக்கும் புலவனுக்கும் இடையேயுள்ள தொடர்பு கைக்கிளைத்திணையின்பாற்படுவதென அறிகின்றோம்.

இவ்வாறு பொதுவாய்நிற்கும் இன்பம்பற்றிய அன்பினை நூன் முறையாக வகுத்துக்கூறப்புகுந்த ஆசிரியர் மிக்கதின்மேல் வைத்துக் கூறினாரெனினும்,

"குழவி மருங்கினும் கிழவ தாகும்"

"ஊரொடு தோற்றமும் உரித்தென மொழிப"

எனக் கைக்கிளைப்புறனாகிய பாடாண்பகுதியினுள்ளே பிறவற்றிற்கும் ஏற்றிக்கூறினார்.

ஐம்புலவுணர்வினைக்கூறும் பொருளியல்நூல்களுக்கு (Sciences) காட்சி கருவியாகும். "நோக்கிய கண் இமையாமல் நோக்கி நோக்கி" இன்புறுதற்குரிய ஓவியநூல், வட்டிகைச்செய்தி: என்றித் தொடக்கத்தவாகிய அழகுநூல்களுக்கு (Fine-Arts) ஐயம் கருவியாகும். துணிவு, தத்துவஞானம் என வடநூலார்கூறும் மெய்யுணர்வுநூல்களுக்கு (Philosophy) கருவியானது.

ஐயத்தின்வழி அழகுபிறப்பதனை உணர்த்துவதற்கு ஆன்றோர் செய்தளித்த அழகிய செய்யுட்கள் சிலவற்றை எடுத்துக்காட்டுவாம். பொழில்விளையாட்டுவிருப்பினாலே ஆயமகளிர் நீங்கத் தமியளாய்நின்றாள் ஒரு தலைமகள். அங்ஙனம், நின்றாளை வேட்டவிருப்பான் இளையார் நீங்கத் தமியனாகிய தலைமகன் ஒருவன் வந்து கண்ணுறுகின்றான். கண்ணுற்றகாலைத் தலைமகளது பெருவனப்புத் தலைமகனது உள்ளத்தைக் கொள்ளைகொள்ளுகின்றது.

"அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு"

என ஐயுறுகின்றான். அவளது கண்களின் நோக்கம் இன்பமும் துன்பமும் ஒருங்குநல்கி அளவிடப்படா நீர்மையதாதலின், அது "கூற்றமோ, கண்ணோ, பிணையோ" என மீட்டும் ஐயுறுகிறான்.

"பைங்கண் மணிமகர குண்டலமும் பைந்தோடும்
திங்கண் முகத்திலங்கச் செவ்வாய் எயிறிலங்கக்
கொங்குண் குழல்தாழக் கோட்டெருத்தஞ் செய்தநோக்கு
எங்கெங்கே நோக்கினும் அங்கங்கே தோன்றுமே"

விமலையாரதுநோக்குப் பார்த்த இடமெங்கும் தோன்றுகின்றது; ஆதலின் அளவிடற்கரியதெனை ஐயுற்ற சீவகநம்பி, இன்பிணையும் துன்பிணையும் ஒருங்களிக்கும் அந்நோக்குப் பலப்பல பொருளுரு வாக வெளிப்படல்கண்டு,

"வாளார் மதிமுகத்த வாளோ வடுப்பிளவோ
தாளார் கழுநீரோ நீலமோ தாமரையோ
நீள்வேலோ அம்போ கயலோ நெடுங்கண்ணோ
கோளார்ந்த கூற்றமோ கொல்வான் தொடங்கினவே"

என்கின்றான்.

"அருணோக்கஞ்செய்தலிற் கண்ணோ, கயலோ, வடுப்பிளவோ, கழுநீரோ, நீலமோ, தாமரையோ என்றற்குந் தக்கு, ஒருகாற் பொதுநோக்கமும் செய்து கொல்வான் தொடங்கினவாதலின், கூற்றமோ, வாளோ, வேலோ, அம்போவென்றற்கும் தக்கு இரு பகுதியும் உடையவாயிருந்தன வென்றான்.'

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள்ளே தான் கண்ட பேரழகுடையாளைப் பன்முறை நோக்கிய காமுகன், "ஈங்கே வருவாள் இவள் யார் கொல்; வல்லவன் தைஇய பாவை கொல்; நல்லார் உறுப்பெல்லாங்கொண்டியற்றியாள்கொல்; வெறுப்பினால் வேண்டுருவங்கொண்டதோர் கூற்றங்கொல்?" என ஐயுறுகின்றான்.

கங்கை மானிடமடந்தையாகி நிற்க, அவள் பேரெழிலில் ஈடுபட்ட சந்தனு,

"வையகமடந்தைகொல் வரைமடந்தைகொல்
செய்யபங்கயமலர்த்திருமடந்தைகொல்
துய்யவண்கலைவிதச்சொன்மடந்தைகொல்"

என ஐயுறுகின்றான்.

பதுமையைக் கண்ணுற்ற சீவகநம்பி,

"வரையின்மங்கைகொல் வாங்கிருந் தாங்குநீர்த்
திரையின்செல்விகொல் தேமலர்ப்பாவைகொல்
உரையின்சாயலியக்கிகொல் யார்கொலிவ்
விரைசெய் கோலத்து வெள்வளைத் தோளியே"

என ஐயுறுகின்றான்.

'பதுமை முன்பு கண்டவளாயினும் வேட்கைமிகுதியான் ஐயம் நிகழ்ந்தது' என உரையாசிரியர் கூறிச்செல்கின்றார்.

"மானிளம்பிணையோ, தெய்வவளரிளமுகையோ, வாசத்
தேனிளம்பதமோ, வேலைத்திரையிளம் பவளவல்லிக்
கானிளங்கொடியோ, திங்கட்கதிரிளங்கொழுந்தோ, காமன்
தான்இளம்பருவங்கற்கும் தனிஇளந்தனுவோ என்ன"

"நாடும் இன் பொற்பு வாய்ப்பு நாளுநாள் வளர்ந்து பொங்க"

என்னும் சேக்கிழார்சுவாமிகள் திருவாக்கினாலே, அழகு புதிதுபுதிதாக வளர்ந்து பொங்குவது என்னும் உண்மை புலப்படுகின்றது. தண் மதியம் என்றும் நிறைமதியாயிருக்குமாயின் ஞாயிற்றினும் குறைந்த ஒளியுடையதென இழித்தொதுக்கப்படும். பிறையாய்த்தோன்றி வளர்தலின் புதுமையின்பாலதாகிய மருட்கைச்சுவையைநல்கி அழகுடைப்பொருளாயிற்று.

"நவிறொறும் நூனயம்போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு"

என்னும் குறட்பாவினுள்ளே நாயனார் இன்பந்தரும் நூல்நயத்தினையும் இன்பந்தரும் பண்புடையாளர் தொடர்பினையும் ஒருங்கு வைத்து அழகானது அளத்தற்கரியதாய்த் துய்க்குந்தோறும் துய்க்குந்தோறும் வளர்ந்துதோன்றும் நீர்மையினைக் காட்டினார்.

கற்பியலினுள்ளே தலைவியினது ஊடலானது பின்னர் அவள் பாற் பெறநின்ற நலத்தினுக்குப் புதுமையளிப்பதாதலின், மதியத்தின் தேய்வுபோல அழகு விளங்குவதற்கு அடிப்படையாயிற்று.

பரவையாரின் பேரழகிலே ஈடுபட்ட தம்பிரான்றோழர்,

"கற்பகத்தின் பூங்கொம்போ காமன்றன் பெருவாழ்வோ
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ புயல்சுமந்து

விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக்கொடியோ
அற்புதமோ சிவனருளோ அறியேன்" என்று வியந்து, மேலும்,

"மூவியநான் முகனெழுத ஒண்ணுமை உள்ளத்தால்
மேவியதன் வருத்தமுற விதித்ததொரு மணிவிளக்கோ
மூவுலகின் பயனாகி முன்னின்றது" என்கின்றார்.

பரவையாரும், பதியிலார்குலத்துப் பிறந்தவராதலின், உள்ளத் தூதித்த வேட்கையானது நாண் மடம் அச்சம் பயிர்ப்பை வலித் தெழ,

"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்
தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
என்னேஎன் மனந்திரித்த இவன்யாரோ"

எனக் 'கண்கொள்ளாக் கவின் பொழிந்த திருமேனி'யழகில் ஈடு பட்டு மருட்கையெய்துகின்றார்.

அயோத்திநகரென்னும் அணங்கின் பேரழகில் ஈடுபட்ட கவிச் சக்கரவர்த்தி,

"நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ உயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ வானோர்
உலகின்மே லுலகோ ஊழியி னிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம்"

என மொழிகின்றார்.

ஆன்றோர் ஐயத்திணையின்பாலுரைத்த செய்யுட்களில் தன்மை, உவமை, உருவகம், தீவகம், பின்வருநிலை, வேற்றுப்பொருள் வைப்பு, ஒட்டு, அதிசயம், தற்குறிப்பேற்றம், நிரனிறை, ஆர்வ மொழி, சுவை, ஒப்புமைக்கூட்டம்: என்னும் செய்யுளணிகளியைந்து நிற்பதை ஆராய்ந்து காணலாம். ஈண்டு உரைப்பிற் பெருகும்.

---

௨

# நிலவும் பொழிலும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்]

"கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்
உணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியின்
நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"

என ஆசிரியர் தொல்காப்பியனார் மெய்ப்பாட்டியலுக்கு முடிவுரை கூறுகின்றார். உயிர்ப்பொருள் உயிரில்பொருள்களிற் காணப்படும் சத்துவவேறுபாடுகளைக் கண்ணுள்வினைஞரும் மண்ணீட்டாளரும் நுண்ணிதினோக்கி வண்ணத்தினாலும் வடிவினாலும் வெளிப்படுத்திக்காட்டுவார். இசைவல்லோர் செவி கருவியாக ஆராய்ந்து, சத்துவவிகற்பங்களை இசையுருவாகத் தருவார். கவிஞனோவெனிற் கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணர்ந்து இம்மூவர் செயலினையும் செவ்விதிற் புரிந்து தான் பெற்ற இன்பத்தினை வையகம்பெறுமாறு செய்வான்.

நிலவும் பொழிலும் தரும் இன்பத்தினை நுகர்ந்த புலவன் எவ்வெக்கருவிகளினாலே தான் நுகர்ந்த இன்பத்தை யாமும் நுகருமாறுசெய்கின்றான் என்பதை ஆராய்ந்துணர்வதே இப்பொருளுரையின் நோக்கமாகும்.

இன்பப்பொருளனைத்தும் அழகினோடு இயைந்துநிற்பன. அழகினை அளத்தற்கு மனிதர் கொள்ளும் அளவுகோல் இரண்டு உள.

"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள"

என்றமையின், மகளிர்பாற்பெறும் இன்பவிழைவின்வயப்பட்டோருக்குப் 'பனிமலர்க்குழற் பாவைநல்லா'ரே எல்லா அழகிற்கும் அவ்வழகின்வழியெய்தும் எல்லா இன்பங்களுக்கும் தனிசிறந்த எடுத்துக்காட்டாவரென்பது வெளிப்படை.

காமவிழைவினீங்கி அருணெறிநின்று வீடுபெறமுயல்வாருக்கு அவ்வீடுபேற்றினை நல்குந் தனிப்பெருந்தலைவன்றானே இனியவற்றுளெல்லாம் இனியனுவான். அழகுடைப்பொருளனைத்தினினும், தலைவனது ஒளிவிளக்கத்தைக் கண்டு பரவசப்படுவது அன்பராயினருக்கு இயல்பாகும்.

கவிஞன் கண்ணாடிபோன்று பிறர்நிகழ்ச்சியைத் தன்னிகழ்ச்சியாகக்காட்டும் ஆற்றல்வாய்ந்தவனுதலின், மேற்கூறிய அளவுகோல் இரண்டினாலும் அழகினை அளத்தல் அவற்கு இயல்பாகும்.

'பவளம் அழகிது, அன்புக்குரியாளது செவ்விதழினை யொத்தலின்; முத்து அழகிது, அவளது பல்வரிசையை யொத்தலின்; பொன் அழகிது, அவளது மார்பிற் படர்ந்த திதலைபோறலின்; தாமரை அழகிது, அவள் கையிலேந்திய இளங்குழவிக்கு ஒப்புடையதாதலின்; மேகம் அழகிது, அவளது கூந்தலை நிகர்த்தலின்; நீலம் அழகிது, அவளது கண்களுக்கு உவமை கூறுதற்கு இயைந்ததாதலின்; பிறை அழகிது, அவளது ஒண்ணுதலுக்கு ஒப்பாதலின்;' எனக் காமுகன் உவமான உவமேய ஒப்புமைகண்டு உளமகிழ்வுறுவான்.

"பவளமால்வரையில் நிலவெறிப்பதுபோற் பரந்த நீற்றழகு பச்சுடம்பில் திவள மாதுடனின்றாடிய பரமன்" எனப் பாடிய புலவனது கண்களுக்குப் பவளம் சிவபிரானது திருமேனியின்வண்ணமாகக் காணப்படுகிறது. "பொன்வண்ண மெவ்வண்ணம் அவ்வண்ணம் மேனி" எனப் பாடிய கவிஞர் அத்திருமேனியைச் செம்பொன்னின்வண்ணமாகக் காண்கின்றார். "கருமுகில் தாமரைக் காடுபூத்து" எனப் பாடிய பாவாணர் கருமுகிலினையும் தாமரையையும் காவற்கடவுளது திருமேனியாகவும் அவயவங்களாகவும் தரிசிக்கின்றார். "கறைமிடறணியலுமணிந்தன்று" என்றார், செம்மேனிக்கு அழகுசெய்யும் நீலக்கறையினை இறைவனுருவிற் பார்க்கின்றார். "பிறைநுதல்வண்ணமாகின்று, அப்பிறை பதினெண் கணனுமேத்தவும்படுமே" என்புழிப் பிறையினுயர்வுக்குக் காரணம் இறைவன் திருமுடிமேலிருத்தலென்பது குறிக்கப்பட்டது.

'இனியாரோடு தலைப்பெய்த இடங்கண்டாலும் அவ்வினியாரைக் கண்டாலே போலும்' என நக்கீரனார் கூறினாராதலின், அன்பிற்கினியாளோடு தலைப்பெய்த பொழிலும் அவள்போன்று இன்பந் தரும் நீர்மையதாயிற்று. 'ஏர்மன்னு கோதையைப்போ லினிதாயிற் றிவ் வீர்ம்பொழிலே' எனக் காதலனொருவன் கூறுகின்றான்.

இறைவனிடத்து அன்புசெலுத்தும் பெருந்தகையோனுக்கு இறைவனது திருக்கோயிலும் அவனது மெய்யடியாரது திருவுருவமும் அவனாகத் தோன்றி இன்பமளிப்பன.

"மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே"

என்னும் பெரியார்வாக்கினை நோக்குக.

உளத்தின் நீர்மைக்கேற்பப் புறத்தேதோன்றும்பொருள் உரு வேறுபட்டுத் தோன்றுமாதலின், புணர்ந்தார்க்கு இன்பமளித்து ஒண்ணுதலும் பிறவுமாகத் தோன்றிய பிறை, தணந்தார்க்கு அச்சச் சுவையொடுகூடிய கொடியவுருவாகத் தோன்றுதலுங்கூடும்.

"ஒன்றே யெயிற்ற தொருபெரும்பே யுலகம் விழுங்க வங்காந்து
நின்றாற் போல நிழலுமிழ்ந்து நெடுவெண் டிங்க ளெயிறிலங்க
இன்றே குருதி வானவா யங்காந் தென்னை விழுங்குவான்
அன்றே வந்த திம்மாலை அளியே னாவி யாதாங்கொல்"

எனப் புலம்பிய கனகமாலையார்கண்ணுக்கு அந்திமாலையானது ஓரெயிற்றினையுடைய கரிய பெரிய பேயாகத் தோன்றிற்று. அவ்வெயிறு பிறைத்திங்கள்.

"மிக்க தாருக வனத்தினை யொத்தது விசும்பிற்
றொக்க பேரிருள் மாதரொத் தனவுடுத் தோற்றஞ்
செக்க ரீசனை யொத்ததொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலமே தொத்தது கதிரிளம் பிறையே"

எனக்கூறிய அன்பர்கண்ணுக்குப் பிறையானது இறைவன்கைக் கபாலமாகக் காணப்பட்டது.

'பிறைக்கோட்டியானை,' 'பிறைவில்' என்றலின் வீரர்கண்ணுக்குப் பிறையானது யானைக்கோடாகவும் வில்லாகவும் தோன்றிற்று.

உலகளித்தலால் நிறைமதியமானது சோழனது கொற்றக் குடைபோன்றதென இளங்கோவடிகள் இயம்பினர்.

"ஒன்றிய திங்களைக் காட்டி ஒளிமணி வண்ணனே யென்னும்
நின்றகுன் றத்தினை நோக்கி நெடுமாலே வாவென்று கூவும்
நன்றுபெய் யும்மழை காணின் நாரணன் வந்தானென் றாலும்
என்றினை மையல்கள் செய்தார் என்னுடைக் கோமளத் தையே"

என அந்நீந் தமிழ்ச்செய்யுள் யாத்த ஆழ்வார்கண்களுக்குத் திங்களும் குன்றமும் மழையும் ஸ்ரீமந் நாராயணனது திருவுருவாகத் தோன்றிநின்றன.

"காழகச் சேற்றுட் பாம்பால் கதிர்மணிக் குடத்தி னேந்தி
வீழ்தரச் சொரிவ தேபோல் விளங்கொளித் திங்கட் புத்தேள்
சூழிருட் டொழுதி மூழ்கத் திங்கதிர் சொரிந்து நல்லார்
மாமைகொண் முகத்திற் றோன்றி வளைகடல் முளைத்த தன்றே"

என்றமையின், காப்பியக்கவிஞர்கண்ணுக்கு விளங்கொளித்திங்கட் புத்தேள் மகளிரது பசத்தல்கொண்டமுகமாகத் தோன்றிற்று.

மேற்போந்த அனைத்தும் வண்ணமும் வடிவும்பற்றி யெழுந்த வுவமங்கள். வினையும் பயனும்பற்றிய உவமங்களினாலும் அறிவுடையோர் திங்களின் அழகினை அளந்துகண்டார். இப்பரிசினை,—

"திங்க ளன்ன கல்வியும் திங்களொடு
ஞாயி றன்ன வாய்மையும்" எனவும்,

"தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரு முலகத்து"

எனவும் கூறியவற்றுட் காண்க.

அழகுடைப் பொருளனைத்தினிலும் தனிப்பெருந்தலைவனைக் காணும் சீர்மையை ஆழ்வார்செய்யுளுட்போலவே மேல்வரும் கடுவன் இளவெயினனார்செய்யுளுள்ளும் காணலாம். அது,

"நின், வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள
நின், தண்மையும் சாயலும் திங்களுள

நின், சுரத்தலும் வண்மையும் மாரியுள
நின், புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள
நின், நாற்றமும் வண்ணமும் பூவையுள
நின், தோற்றமும் அகலமும் நீரினுள
நின், உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின், வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள
அதனால், இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏம மார்ந்தநிற் பிரிந்தும்
ஏவல் சான்றன வெல்லாம்
சேவலோங் குயர்கொடி யோயே"

என வரும். திருமங்கைமன்னனளித்த,

"மின்னுருவாய் முன்னுருவில் வேதம் நான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்ப்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப் பில்லாப்
பிறப்பிலியாய் இறப்பதற்கே எண்ணா தெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூத மைந்தாய்ப்
புனலுருவாய் அனலுருவிற் றிகழுஞ் சோதி
தன்னுருவாய் என்னுருவில் நின்ற எந்தை
தளிர்புரையும் திருவடியென் தலைமேலவே"

என்னும் திருநெடுந்தாண்டகச்செய்யுளையும் நோக்குக.

இனி ஒளியும் இருளும், வெண்மையும் கருமையும், பொன்மையும் பசுமையும், வெம்மையும் தண்மையும்: என முரணுறத் தோன்றும் பண்புகள் சிவசத்திபேதம்போன்று அழகுடைப் பொருள்வயின் ஒன்றிநின்று அதனது அழகுக்குக் காரணமாவன.

சிவபிரானது செம்பவளமேனியின்பாங்கர் உமாதேவியாரது மரகதமணிபோன்ற திருவுருத் தோன்றி அழகினைத் தருகின்றது. "பச்சைமாமலைபோல் மேனிபடைத்த இராமபிரான்பக்கத்திலே 'பொன்னின்சோதி' விளங்கும் திருமேனியோடுகூடிய சீதாபிராட்டியார் தோன்ற அழகு பொலிவினையடைகின்றது. இப்பரிசே நீலமணிபோன்ற விசும்பிலே நித்திலம்போன்ற வெண்டிங்கள் தோன்ற அழகுவிளங்குகின்றது.

"காழகச்சேற்றுட் டீம்பால்" எனக் காட்டிய சிந்தாமணிச் செய்யுளினுள்ளே நிறைமதியம் பளிக்குக்குடத்திணுக்கும், நிலவு அக்குடத்தினின்று சொரியப்பட்ட பாலுக்கும், இருள் கருஞ் சேற்றுக்கும் ஒப்பாகக் கூறப்பட்டன.

"வெள்ளிவெண் குடத்துப் பால்சொரி வதுபோற்
கள்ளவிழ் பூம்பொழி லிடையிடைச் சொரிய"

எனவரும் மணிமேகலையடிகளினுள்ளே நிலவும் பொழிலும் கூறப் பட்டன. 'தண்மதியம் என்றும் நிறைமதியாயிருக்குமாயின் ஞாயிற் றினுங் குறைந்த ஒளியுடையதென இழித்தொதுக்கப்படும்; பிறை யாய்த்தோன்றி வளர்தலின் புதுமையின்பாலதாகிய மருட்கைச் சுவையை நல்கி அழகுடைப்பொருளாயிற்று' என ஐயமும் அழகும் என்னும் உரையினுட் கூறினும். பரிசனங்கள் புடைசூழ்ந்த மன்ன னைப்போன்றும், தோழியர்கூட்டத்தினடுவண் வைகும் தலைமகள் போன்றும், பதினாயிரம் வித்தியார்த்திகள் நடுவண் வைகும் குலபதி போன்றும், எண்ணற்ற வெள்ளாம்பல்மலர்கள் பரவிய நீனிற மணி நீர்ப்பொய்கைநடுவண் அரிதினலர்ந்த வெண்பதுமம்போன்றும், விண்மீன்களிடையே விளங்குவது, தண்மதியத்திற்குப் பேரழகி னைத் தருவதாகும். மூபரற்கரையும் மதியத்திற்கு அழகினைத் தருவது; மழலைக்குழவிமுதல் முதியோரீறாக அனைவரும் மதியத் தினை உற்றுநோக்குதற்குக் கறையே காரணமாகும்.

நிலவும் பொழிலும் ஒளியும் இருளுமாக இயைந்துநின்று அழகுபயப்பன.

"இருள்பரந் தன்ன மாநிழல் மருங்கின்
நிலவுகுவித் தன்ன வெண்மணை லொருசிறை"

என்பதனையும் நோக்குக.

"வெயில்நுழை பறியாக் குயில்நுழை பொதும்பர்"

என மணிமேகலையும் பெரும்பாணாற்றுப்படையும் மரமடர்ந்த சோலையின் இருளினைத் தெளிவுபடுத்துகின்றன.

மரமும் செடியும் கொடியும் யாங்கணும் விரவி அடர்ந்து வளர்ந்துநிற்பதுவே சோலைக்கும் பொழிலுக்கும் அழகாகும்.

அங்ஙனமாதலின், அவை தம்மை உருவப்படுத்தி நமது அகக்கண் முன்காட்டுவதற்குக் கவிஞர்,

"குரவமும் மரவமும் குருந்தும் கொன்றையும்
திலகமும் வகுளமும் செங்கால் வெட்சியும்
நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமும் தளவமும் முடமுட் டாழையும்
குடவமும் வெதிரமும் கொழுங்கா லசோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
எரிமல ரிலவமும் விரிமலர் பரப்பி
வித்தக ரியற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனம்"

என மரப்பெயர் பலவற்றை நிரைபெற அடுக்குவாராயினர்.

கபிலரும் பெருங்குறிஞ்சியுள்ளே 'ஒண்செங்காந்தள்' எனத் தொடங்கி நூற்றெட்டுப் பூப்பெயர்கூறியதும் பொழிலின்பொலிவினைச் சொல்லினால் அமைத்துக்காட்டுதற்கேயாம்.

'சந்தனமும் சண்பகமும் தேமாவும் தீம்பலவும் ஆசினியும் அசோகும் கோங்கும் வேங்கையும் குரவமும் விரிந்தும், நாகமும் திலகமும் நறவமும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும் பாவைஞாழலும் பைங்கொன்றையொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னாகமும் முருக்கொடு முகைசிறந்து, வண்டறைந்து, தேனார்ந்து, வரிக்குயில்கள் இசைபாடத் தண்டென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவு செய்யும் பொழில்' என்னும் களவியலுரையினுள்ளே நக்கீரனார் பெயரினொடு தொழிலினையும் விளக்கி அழகிய சொற்களை மோனையெதுகைத் தொடையியையவைத்துப் பூம்பொழில் ஒன்றினை ஆக்கித்தருகின்றார்.

திருத்தக்கதேவர் பொழிலானது மணமகளிரொப்பப் பொலிந்து தோன்றியதெனக் கூறி, அப்பொலிவினை விளக்குதற்கு மலர் மரங்களின் வண்ணத்தினையும் வடிவினையும் கண்ணுள்வினைஞர்போலச் சித்திரிக்கின்றார். அவர்செய்யுட்கள் வருமாறு:—

"பாசிப் பாசத்துப் பைம்பொனிரைத் தாலிபூத்த வேங்கை
மாசில் வெண்டுகிலை நீர்தோய்த்து மேற்போர்த்த வண்ணமேபோற்
காசில் மட்டொழுகப் பூத்தவழிஞ்சில் கண்ணார்கவின் கொண்டன
பேசிற் செந்தலைய வெண்கறைய புன்கம் பொரியணிந்தவே"

"கோடுதையாக் குழிசியோ டாரங் கொளக்குயிற்றிய
ஓடுதேர்க் கான்மலர்ந்தன்ன வகுள முயர்சண்பகம்
கூடுகோழிக் கொழுமுள் ளரும்பினவண் கோசிகம்
ஆடை பூத்தனபாதிரி வெண்கடம்புபக் தணிந்தவே"

"வெருகு வேட்பச் சிரிப்பனபோன் முகைத்த முல்லை வெய்யவாள்
அரவு பைத்தா வித்தன்ன அங்காந்த ளவிழ்ந்தலர்ந்தன
குரவங் கொண்ட குறும்பூழ்போற் கொழுங்கான் முகைசுமந்தன
குருதிக் கூரெயிறு கூத்தியர்கட் கொண்ட கொடித்தளவமே"

தில்லையம்பதியின் எல்லையினமைந்த நந்தவனத்தினை வருணிக்கும் சேக்கிழார்சுவாமிகளும் முன்னோர்மரபின்வழிநின்று மரப்பெயர்பலவற்றை அழகுபெற அடுக்கிச்செல்கின்றார். அவரளித்த செய்யுள் வருமாறு:—

"நாக சூதவகு ளஞ்சர ளஞ்சூழ் நாளி கேரமில வங்க நரந்தம்
பூக ஞாழல்குளிர் வாழை மதூகம் பொதுளும் வஞ்சிபல எங்கு நெருங்கி
மேக சாலமலி சோலைக ளாகி மீது கோகில மிடைந்து மிழற்றப்
போக பூமியினு மிக்கு விளங்கும் பூம்பு றம்பணை கடந்து புகுந்தார்"

"வன்னி கொன்றைவழை சண்பக மாரம் மலர்ப்ப லாசொடு செருந்தி மந்தாரம்
கன்னி காரங்குர வங்கமழ் புன்னை கற்பு பாடலங் கூவிள மோங்கித்
துன்னு சாதிமரு மாலதி மௌவல் துதைந்த நந்திகா வீர மிடைந்த
பன்மலர்ப்புனித நந்த வனங்கள் பணிந்து சென்றனன் மணங்கமழ் தாரான்"

வண்டினது ரீங்காரமும் குயிலின் இசையும் பொழிலுக்கு அழகு செய்வன. நக்கீரனார் இரண்டினையும் கூறினார்; சேக்கிழார்சுவாமிகள் கோகிலத்தைமாத்திரம் கூறுகின்றார்.

நிலவும் பொழிலும் தனித்துநின்று பயக்கும் அழகினிலும் பார்க்க ஒருங்கியைந்துநின்று தரும் அழகு சிறந்ததென்னும் உண்மையினையும் இப்பொருளுரையில் ஒருசிறிது காட்டினும்.

உ

# வங்கியம்



சுவாமி—விபுலாநந்தர்

விஷு௵ புரட்டாசிமாதச் 'செந்தமிழ்' வெளியீட்டிலே 'எண்ணலளவை' என்னும் பொருள்பற்றிய உரையினை யெழுதிய பொழுது அவ்வுரையிற் கண்ட முடிபுகள் இசையாராய்ச்சிக்குப் பயன்படுதலை 'இசைக்கிரம'த்துப் பிற்பகுதியிலே காட்டுவாம் எனக் குறிப்பிட்டாம். சென்ற சிலமாதங்களிலே இடமாற்றத்தினாலும் பிற காரணங்களினாலும் எழுதுதற்கு ஓய்வு கிடைத்திலது. எழுதத் தாமதித்தமையினால் ஏற்பட்ட குறையினைச் செந்தமிழன்பர்கள் மன்னிப்பார்களாக.

கணிதமுடிபுகள் நரம்புக்கருவிகளுக்குப் பயன்படுமாறு போலத் துளைக்கருவிகளுக்கும் பயன்படுவ. ஆதலினாலே, 'வங்கியம்' எனவும் வழங்கப்படும் குழற்கருவியினது துளையளவுகளைக் கொண்டு அக்கருவியிலே தோற்றுதற்குரிய இசைச்சுரங்களை அறிந்துகொள்ளலாம். அறிந்துகொள்ளும் வழியினை இவ்வுரையி னுட் கூறுவாம்.

முதலிலே சிலப்பதிகாரம் அரங்கேற்றுகாதையுரையினுள்ளே அடியார்க்குநல்லார்கூறும் துளையளவிலக்கணத்தினை எடுத்துக் கொள்வாம்.

'நீளம் இருபதுவிரல்; சுற்றளவு நாலரைவிரல். இது துளை யிடுமிடத்து நெல்லரிசியில் ஒருபாதி மாணிறுத்திக் கடைந்து வெண் கலத்தாலே அணைசுபண்ணி இடமுகத்தை யடைத்து வலமுகம் வெளியாக விடப்படும்.........இனித் துளையளவிலக்கணம்: அளவு இருபதுவிரல். இதிலே தூம்புமுகத்தின் இரண்டுநீக்கி முதல்வாய் விட்டு இம் முதல்வாய்க்கு ஏழங்குலம்விட்டு வளைவாயினும் இரண்டு நீக்கி நடுவினின்ற ஒன்பதுவிரலினும் எட்டுத்துளை யிடப்படும்.

இவற்றுள் ஒன்று முதற்றிரையென்று கழித்து நீக்கி நின்ற ஏழினும் ஏழுவிரல்வைத்து ஊதப்படும். துளைகளின் இடைப்பரப்பு ஒரு விரலகலம் கொள்ளப்படும்.'

ஓசையானது நம்மைச் சூழவிருக்கும் பவனத்தினைப் பற்றுக் கோடாகக்கொண்டு பரவுமிடத்து அலைவடிவாகப் பரவுமென்பது மேனாட்டு விஞ்ஞானநூலோர் ஆராய்ந்துகண்ட முடிபு. அலையின் முதல் நடு இறுதி பவனம் அமுக்கமுறும் இடங்கள். காற்கூறும் முக்காற்கூறும் பவனம் அகற்சியுற்று நிற்குமிடங்கள்.

அ ⟶ ஆ ⟶ இ ⟶ ஈ ⟶ உ

மேலே குறித்த ஐந்தெழுத்துக்களும் ஒத்த இடைவெளியின வாக அமைந்துநின்றன. அ இ உ என்னும் குற்றெழுத்துக்கள் பவனம் அமுக்கமுற்றஇடத்தில் நின்றன. ஆ ஈ என்னும் நெட்டெழுத்திரண்டும் பவனம் அகற்சியுற்றஇடத்தில் நின்றன.

இடப்புறத்து முகம் அடைக்கப்பட்டு வலப்புறத்து முகம் திறந்திருக்கும் வங்கியத்திலே திறந்த வலப்புறத்து முகத்திலே பவனம் அகற்சியுற்றுநிற்கும். அடைபட்ட இடப்புறத்து முகத்திலே பவனம் அமுக்கமுற்றுநிற்கும். அமுக்கத்தை 'அ' என்னும் எழுத்தினாலும் அகற்சியை 'ஆ' என்னும் எழுத்தினாலும் குறிப்பிடும்பொழுது 'அ' அடைபட்ட முகத்திலும் 'ஆ' நாதம்பிறக்கின்ற துளையிலும் நிற்கின்றன. இரண்டிற்குமிடையேயுள்ள இடைவெளியானது இசையலையின் காற்கூற்றின் நீளமாகும். குழலின் முழுநீளம் இருபதுவிரல். வளைவாயினின்று இருவிரல்கள் கழிந்தவிடத்திலே முத்திரைத்துளை நின்றது; அதற்கு ஒருவிரல் தாழ முதற்சுரந்தோன்றுந்துளை நின்றது. ஆதலினாலே அடைபட்ட இடப்புறமுகத்திற்கும் முதற்சுரந்தோன்றுந் துளைக்கும் இடைவெளி பதினேழுவிரல் என்பது பெறப்படுகின்றது. இது இசையலையின் காற்கூறு என மேலே குறிப்பிட்டாம். ஆதலினாலே இசையலையின் நீளம் (17×4=68) அறுபத்தெட்டுவிரல்களாகும். ஒரு

விரல் இக்காலத்து ஆங்கிலேய நீட்டலளவையில் முக்கால் இஞ்சு ஆகும். 68 விரல் 51 இஞ்சு ஆகும். ஒருசெக்கண்டு எனப்படும் காலவெல்லையினுள்ளே எத்தனை அலைகள் தோன்றுகின்றனவெனக் கண்டால், அந்த அலைகளைத் தோற்றுவிக்கும் இசைச்சுரம் இது வெனத் துணிதல்கூடும்.

ஓசையினுடைய வேகத்தினை விஞ்ஞானநூலோர் அளந்து அது ஒருசெக்கண்டுக்கு 1081 அடி எனக் கண்டிருக்கிறார்கள். வங்கியத்துளையிலே செக்கண்டு என்னும் காலவெல்லையின் தொடக்கத்திலே வெளிப்போந்த இசையலை 1081 அடிதூரஞ் செல்ல அக்காலவெல்லையின் இறுதியிலே தோன்றிய அலை துளைவாயிடத்திலே நிற்கும். இவ்வெல்லையினுள்ளே எத்தனையலைகள் உள வெனக் காண்பதற்கு 1081 அடியினை, அஃதாவது 12972 இஞ்சினை அலையின் நீளமாகிய 51 இஞ்சினாற் பிரிக்கவேண்டும். இப்படிப் பிரிக்கக் கிடைத்த பேறு 254 (மிச்சம் 18 இஞ்சு). ஆதலினாலே ஒருசெக்கண்டிலே அவ் விசைச்சுரத்திலே 254 அலைகள் தோன்றுகின்றன வென்பது முடிபாகிறது. சமன் தானத்திலே நிற்கிற ஷட்ஜத்தின் அசைவெண் 256 என மேனாட்டார் கூறுவர். இவ் வெண்ணுக்கும் நாம் கணித்துக்கண்ட எண்ணிற்கும் வேறுபாடு நூற்றுக்கு ஒருவீதத்திற்கும் குறைவாதலினாலே அவை ஒன்றி நின்றனவெனக் கொள்வோமாதலின் வங்கியத்திற்றோன்றும் முதற் சுரம் சமஷட்ஜம் எனப்பெறும்.

இனி ஏழாவது சுரத்தினைத்தருகிற துளையினை யெடுத்துக் கொள்வாம். தூம்புமுகத்திலிருந்து இருவிரலில் முதல்வாய்நிற்கும். இதிலிருந்து ஏழுவிரல்தூரத்திலே குறித்த ஏழாஞ்சுரத்தின் துளை நிற்கிறது. தூம்புமுகத்திலிருந்து இதன் தூரம் ஒன்பதுவிரல். இது அச்சுரத்தின் இசையலையிற் காற்கூறுதலின் அலையின் முழு நீளம் 36விரல், அஃதாவது 27 இஞ்சு. 12972ஐ 27 இனாற்பிரிக்கக் கிடைப்பது 480 (மிச்சம் 12இஞ்சு). இது சமன்தானத்திலுள்ள

நிஷாதசுரத்தின் அசைவெண். ஷட்ஜமும் நிஷாதமும் இக்காலத்து மேனாட்டு இசைமரபிலுள்ள எண்களைப் பெற்றுவருதலை நோக்குமிடத்து இருமரபிற்கும் அடிப்படையான தொடர்பு உளதென்பது முடிவாகின்றது.

இனி மேற்குறித்த வங்கியத்தினை அழுத்தமாக ஊதினால், துளையிடத்திலே பவனத்தின் அகற்சியும் அடைபட்டமுகத்திலே அமுக்கமும் அமைவதோடு இடையிலே மற்றோர் அகற்சியும் அமுக்கமும் அமைந்து தோன்றுகின்ற அலையானது அ—> ஆ—> இ—> ஈ என்றபடி அலையின் முக்காற்கூறாகிநிற்கிறது. முதற் சுரத்திலேதோன்றும் அலையின் முக்காற்கூற்றின் நீளம் 17விரல் ஆகின்றது. ஆதலின் முழு அலையின் நீளம் 22⅔விரல். அஃதாவது 17இஞ்சு. 12972ஐ 17ஆற் பிரிக்கக் கிடைப்பது763. இது முன்பு கிடைத்த அசைவெண்ணின் மும்மடங்கு. முன்புபெற்றதனை256 எனக் கொண்டமையினாலே இதனை 256×3=768 எனக் கொள்வாம். இது மேற்றானத்துப் பஞ்சமமாகும். இன்னும் அழுத்தமாக ஊதினால் அசைவெண் ஐம்மடங்காகி அந்தியுச்சகாந்தாரத்தினைத் தரும். ஆதலினாலே குழலோசையிலே ஷட்ஜம் பேசும்போது பஞ்சம காந்தாரங்களும் உடன்றோன்றி இசையினை இனிமைசெய் கின்றன என்னும் உண்மை கணிதத்தின்வாயிலாகப் பெறப்படு கின்றது.

---

௧

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி–௩௯.] விஷு ௵ மார்கழி ௴ [பகுதி – ௨.
Vol. 39. December 1941—January 1942. No. 2.

## இசைக்கிரமம்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

(38-ஆம் தொகுதியின் ௪௪0-ஆம் பக்கத் தொடர்ச்சி.)

மூன்றுகிரமங்களுக்கும் முன்னோர் எவ்வேழுபாலை வகுத்தனர். 'பாலை'யினை வடநூலார் மூர்ச்சனை யென்பர். மூன்றுகிரமத்திலும் தோன்றும் இருபத்தொருமூர்ச்சனைகளும் பழந்தமிழிசைமரபிற்குரிய பன்னிருபாலையினுள் அடங்குவ. பன்னிருபாலையும் இருபத்திரண்டு அலகுநிலை(சுருதி)களிலே ஏற்பனவற்றை மரபுதவறாது நிறுத்தலினாலே இயைந்துநிற்பன.

அலகுநிலைகள், கிளையலகுநிலைகள் நட்பலகுநிலைகள் என இருதிறப்படுவ. 13 அலகுகளின் பெருக்கமாகக் கிளையலகுநிலைகளும், 9 அலகுகளின் பெருக்கமாக நட்பலகுநிலைகளும் தோற்றுவவென முன்னர்க் காட்டினும். பெருக்கத்திற் பெற்ற எண் 22-ன் மேற்படுத்துமிடத்து 22ஐக் கழிக்கவேண்டுமெனவும் முன்னர்க் கூறினும். கிளையிருகோடு 26 ஆதலின் அது 4-க்குச் சமம். பிறவும் இப்படியே. கிளையினும் நட்பினும் பதினொருகோடுவரையும் உறழ்ந்து பெற்ற எண்களைக் கீழே தருகின்றாம்.

| | | நட்பு | கிளை |
|---|---|---|---|
| தொடக்கம் | | 22, 0 | 0, 22 |
| ஒரு | கோடு | 9 | 13 |
| இரு | ,, | 18 | 4 |
| முக் | ,, | 5 | 17 |
| நாற் | ,, | 14 | 8 |
| ஐங் | ,, | 1 | 21 |
| அறு | ,, | 10 | 12 |
| எழு | ,, | 19 | 3 |
| எண் | ,, | 6 | 16 |
| ஒன்பதின் | ,, | 15 | 7 |
| பதின் | ,, | 2 | 20 |
| பதினோராங் | ,, | 11 | 11 |

ஒவ்வொருகோட்டினும் நட்பெண்ணும் கிளையெண்ணும் சேர்ந்து 22 என்னுந் தொகையவாதல் காண்க. தொடங்குமிடமாகிய வெற்றிலக்கம் '0' நட்புக்கும் கிளைக்கும் பொது. பதினோராங்கோடாகிய '11' இருவேறு மதிப்புப்பெறும் என்பதைப் பின்னர்க் காட்டுவாம். ஆயினும் எண்ணளவில் அதுவும் பொதுவாய்நின்றது. இவற்றிடையே நட்புப் பத்தும் கிளை பத்தும் உள்ளன. ஆகவே அலகுநிலை (சுருதி) இருபத்திரண்டாயின.

கிளையலகுநிலையெண்களையெடுத்து நிரல்படவைக்கக் கிடைப்பது,

0 3 4 7 8 11 12 13 16 17 20 21

ஆகும். இது 'கன்னி'ப்பாலையாதலைப் பின்னர்க் காட்டுதும்.

நட்பலகுநிலையெண்களையெடுத்து நிரல்படவைக்கக் கிடைப்பது,

0 1 2 5 6 9 10 11 14 15 18 19

ஆகும். இது 'கும்ப'ப்பாலையாதலைப் பின்னர்க் காட்டுதும்.

| | | | |
|---|---|---|---|
| மீ<br>1 | மே<br>1 | இ<br>3 | மி<br>1 |
| கு<br>3 | | | கற்<br>3 |
| ம<br>1 | | | சி<br>1 |
| த<br>3 | வி<br>1 | து<br>3 | கன்<br>1 |

இராசிவீடு பன்னிரண்டினும் ஏழுநரம்பும் ஐந்து அந்தரக்கோலும் நிற்கும் அலகுநிலைகளைக் கணிதவாயிலாகக் கண்டதன்பயனாகயாம் பெற்ற அலகெண்கள் மேலே தரப்பட்டன. இடபம், கற்கடகம், துலாம், தனு, கும்பம்—மும்மூன்றலகு பெறுவ. ஏனைய ஒவ்வோரலகு பெறுவ.

யாழிலே நரம்புகளைத் தாரம்முதல், உழைமுதல், குரல்முதல், அன்றேல் இளிமுதற் கட்டுவது மரபு. சகோடயாழிலே ஈரேழ் நரம்புகளையும் ஈரைந்து அந்தரக்கோல்களையும் மேற்குறித்த நான்கினுள் ஒன்றுமுதலாகக் கட்டியபின் முதற்றானத்து ஒருநரம்பிலே தொடங்கி இரண்டாந்தானத்தில் அதேநரம்பு வரும்வரையும் இசைக்க ஒரு பாலை பிறக்கும். ஆகவே ஏழுநரம்பினும் ஏழுபாலையும் ஐந்து அந்தரத்தில் ஐந்துபாலையுமாக மொத்தம் பன்னிரண்டு பாலை பிறக்கும். நரம்புகள் எதுமுதலாகக் கட்டப்பட்டிருப்பினும், அனைத்தும் இசைக்கப்படுதலின், தோன்றும் பாலைகள் பன்னிரண்டேயாம். தொடங்கும் நரம்பு நின்ற இராசிவீடுகளின் பெயர்களை அவ்வப்பாலைக்குரிய பெயராகக் கொள்ளலாம்.

யாழிலே நரம்புகள் தாரம்முதல் விளரியீறாகக் கட்டப்பட்டிருக்கின்றனவென வைத்துக்கொள்வோம். முதலில் நின்ற தாரநரம்புமுதல் இரண்டாந்தானத்துத் தாரநரம்பீறாக இசைக்கப்பெறுவது சிங்கப்பாலையாகும். இதன் அலகுநிலையெண்களைக் கணித்தறிவாம். சிங்கத்திலேதொடங்கிச் சிங்கத்திலே முடிப்போமாதலின் வலமுறையிலே சிங்கத்தில் வெற்றிலக்கத்தை நிறுத்திக் கன்னி துலாம்

விருச்சிகம் என்று இத்தொடக்கத்த வீடுகளில் நின்ற எண்களை ஒவ்வொன்றாகக் கூட்டிச்சென்று சிங்கத்தில் முடிக்க மொத்தம் 22 ஆகும். சிங்கப்பாலையின் அலகெண்களையும், அவற்றைத் தொடர்ந்து கூட்டுதலினாலே பிறக்கும் அலகுநிலையெண்களையும் இப்பாலையிலே தாரக்கிரமத்தில் நரம்புகள் நிற்கும் இடங்களையும் அட்டவணைப்படுத்தித் தருவாம்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சிங்கம் | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 |
| | 1 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 | 14 | 17 | 18 | 21 | 22 |
| | ... | கு | ... | து | ... | கை | உ | ... | இ | ... | வி | தா |

சிங்கம் தொடங்குமிடம். அதனை யடுத்துநிற்பது கன்னிவீடு. இதன் அலகெண் 1, அலகுநிலையெண் 1, அந்தரம் நிற்குமிடமாதலின் வெறுமையாய்விடப்பட்டது. அடுத்தவீடு துலாம். இதன் அலகெண் 3, அலகுநிலையெண் 1+3=4, தாரக்கிரமத்திலே துலாத்தில் நிற்கும் நரம்பு குரல். அடுத்தவீடு விருச்சிகம். இதன் அலகெண் 1, அலகுநிலையெண் 4+1=5. இதுவும் அந்தரம் நிற்குமிடம். அடுத்தவீடு தனு. இதன் அலகெண் 3, அலகுநிலையெண் 5+3=8, நிற்கும்நரம்பு துத்தம். பிறவும் இப்படியேயென அறிக. இனிக் 'கன்னி'ப்பாலையினை யெடுத்துக்கொள்வோம்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | 3 | 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 1 |
| | 3 | 4 | 7 | 8 | 11 | 12 | 13 | 16 | 17 | 20 | 21 | 22 |
| | கு | ... | து | ... | கை | உ | ... | இ | ... | வி | தா | ... |

கன்னி தொடங்குமிடம். அதனையடுத்துநிற்பது துலாம். இதன் அலகெண் 3, அலகுநிலையெண் 3, நிற்கும் நரம்பு குரல். பிறவும் இப்படியே. இனிக் 'கும்ப'ப்பாலையினை எடுத்துக்கொள் வோம்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கும்பம் | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 |
| | 1 | 2 | 5 | 6 | 9 | 10 | 11 | 14 | 15 | 18 | 19 | 22 |
| | உ | ... | இ | ... | வி | தா | ... | கு | ... | து | ... | கை |

'பிழையா மரபி னீரேழ் கோவையை, உழைமுதற் கைக்கிளை யிறுவாய்க் கட்டி' என வேனிற்காதையுட் கூறியாங்கு யாழ்நரம்பு களை நிறுத்துமிடத்து முதலிற் பிறப்பது இக் கும்பப்பாலையே. மீனத்தில் உழையும், இடபத்தில் இளியும், கற்கடகத்தில் விளரி யும், சிங்கத்திற் றாரமும், துலாத்திற் குரலும், தனுவிற் றுத்த மும், கும்பத்திற் கைக்கிளையும் ஆன்றோர்கூறிய மரபின்வண்ணம் அமைந்துநிற்றல் காண்க. அலகெண் அலகுநிலையெண்களும் முன் காட்டியபடியே பெறப்பட்டன.

இவ்வாறு கட்டப்பட்ட நரம்புகளுக்கு இசைகூட்டுதல் யாங்ஙன மெனிற் கூறுதும்.

'தாரத்துட் டோன்று முழையுழை யுட்டோன்றும்
ஓருங் குரல்குரலி னுட்டோன்றிச் - சேருமிளி
யுட்டோன்றுந் துத்தத்துட் டோன்றும் விளரியுட்
கைக்கிளை தோன்றும் பிறப்பு'

எனக் கிளையிற் பிறக்குமுறை கூறப்பட்டது. இதனை வடநூலார் ஷட்ஜ—பஞ்சம முறையென்பர். இதற்கு எதிர்நிரனிறையாகவருவது நட்பிற்பிறக்குமுறை. இதனை வடநூலார் ஷட்ஜ—மத்திம முறை யென்பர். கிளைமுறையிலே 13 அலகைக் கூட்டிச்செல்வது. நட்பு முறையிலே மேற்றுனத்துத் தொடக்கத்தில் நின்ற 22-ஆம் அலகி னின்று தொடங்கி 13 அலகைக் கழித்துச்செல்வது. வேண்டிய விடத்து 22ஐக் கழித்தலும் கூட்டலும் செய்யலாமாதலின், 13 அல கைக் கழித்தலென்பது 9 அலகைக் கூட்டலாக முடியும். நட்பு முறையிலே (22) கைக்கிளையிலிருந்து (9) விளரியும், விளரியி லிருந்து (18) துத்தமும், துத்தத்திலிருந்து (5) இளியும், இளியி லிருந்து (14) குரலும், குரலிலிருந்து (1) உழையும், உழையி லிருந்து (10) தாரமும் பிறப்பன. மேலும், இம்முறையே பிறப் பிக்குமிடத்து (10) தாரத்திலிருந்து ஒன்றன்பின் ஒன்றாக 19-6-15-2-11 என்னும் ஐந்து அந்தரக்கோல்களும் பிறப்பன. ஆகவே கும்பப்பாலையில் நட்புநிலையலகுகளனைத்தும் நிற்றல் காண்க. '0' அலகுநிலை மேற்றுனத்தில் '22' ஆதலின் இவ்விரண்டும் ஒத்த பொருண்மைய.

கன்னிப்பாலையிலே 0-13-4-17-8 என அந்தரமைந்தும் கிளை முறையாகத்தோன்றியபின் (21) தாரத்திலிருந்து (12) உழை, (3) குரல், (16) இளி, (7) துத்தம், (20) விளரி, (11) கைக்கிளை கிளையிற்பிறப்பாக முறைப்படி தோன்றுவன.

கன்னிக்கு எட்டாம்வீடு மேடம். கன்னியிலிருந்து மேடம் எத்தனையாவது அலகிலே நின்றதென வினவின், தொடங்குமிடமாகிய கன்னியொழிந்த ஏழுவீடுகளிலும் நிற்கும் அலகெண்களைக் கூட்டித் தொகைசொல்வது. அவையாவன 3+1+3+1+3+1+1 மொத்தம் 13. மேடத்திற்கு எட்டாம்வீடு விருச்சிகம், அதற்கெட்டாம்வீடு மிதுனம், அதற்கெட்டாம்வீடு மகரம், அதற்கெட்டாம்வீடு சிங்கம், அதற்கெட்டாம்வீடு மீனம், அதற்கெட்டாம்வீடு துலாம், அதற்கெட்டாம்வீடு இடபம், அதற்கெட்டாம்வீடு தனு, அதற்கெட்டாம்வீடு கற்கடகம், அதற்கெட்டாம்வீடு கும்பம். இவை யாவும் பதின்மூன்றும் பதின்மூன்றும் அலகுநிலைகளிலே நிற்பதை அலகெண்களை மேற்குறித்தபடி கூட்டிக் கணக்கிட்டறிந்துகொள்க. கும்பத்திற்கு எட்டாமிடம் கன்னி; அங்ஙனமாயினும், கும்பத்திலிருந்து கன்னிக்கு அலகுநிலை 1+1+3+1+3+1+1=11 பதினொன்றுமாத்திரமேயாம். இதனாற் பெறப்படுவது யாது? எனின், மேலே கிளையிற் பிறப்புமுறைகூறிய உரைச்சூத்திரத்தின்படி தாரத்து உழையும், உழையுட் குரலும், குரலுள் இளியும், இளியுட் டுத்தமும், துத்தத்துள் விளரியும், விளரியுட் கைக்கிளையும் பிறப்பனவேயன்றி ஈற்றிலே தோன்றிய கைக்கிளையினின்றும் முதற்கண் தோன்றிய தாரம் பிறவாதென்பது. அடுத்துநிற்கும் இருபாலைகளுள்ளே தாரமும் கைக்கிளையும் அணையாதுநிற்பன. இவற்றை அணையச்செய்யும்முறையே 'தாரத்தாக்கம்' (தாரத்து ஆக்கம்) என முன்னோராற் கூறப்பட்டது. அதனை உரியஇடத்திற் காட்டுதும்.

இனி யாம் ஆராய்ந்துகண்ட கிளையிற்பிறப்புத் தொடர்ச்சியாகப் பன்னிருபாலைகளிலும் நரம்புகள் நிற்குமிடங்களை அட்டவணைப்படுத்தித் தருவாம். அந்தரம் நிற்குமிடங்கள் வெற்றிடங்களாகக் காட்டப்படுவ.

## தாரக்கிரமத்தில் வட்டப்பாலை நரம்புநிலை

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | கு | … | து | … | கை | உ | … | இ | … | வி | தா | … |
| மேடம் | இ | … | வி | தா | … | கு | … | து | … | கை | உ | … |
| விருச்சிகம் | து | … | கை | உ | … | இ | … | வி | தா | … | கு | … |
| மிதுனம் | வி | தா | … | கு | … | து | … | கை | உ | … | இ | … |
| மகரம் | கை | உ | … | இ | … | வி | தா | … | கு | … | து | … |
| சிங்கம் | … | கு | … | து | … | கை | உ | … | இ | … | வி | தா |
| மீனம் | … | இ | … | வி | தா | … | கு | … | து | … | கை | உ |
| துலாம் | … | து | .. | கை | உ | … | இ | … | வி | தா | … | கு |
| இடபம் | … | வி | தா | … | கு | … | து | … | கை | உ | … | இ |
| தனு | … | கை | உ | … | இ | … | வி | தா | … | கு | … | து |
| கற்கடகம் | தா | … | கு | … | து | … | கை | உ | … | இ | … | வி |
| கும்பம் | உ | … | இ | … | வி | தா | … | கு | … | து | … | கை |

அடுத்துவரும் இவ்விருபாலைகளிலே கைக்கிளையும் தாரமும் ஒன்றுதுநிற்க ஏனைய நரம்புகள் மேனின்று கீழ்நோக்கக் கிளையாகவும் கீழ்நின்று மேல்நோக்க நட்பாகவும் அணைந்துநிற்றல் காண்க. 'இறுதி யாதி யாக வாங்கவை, பெறுமுறை வந்த பெற்றி நீங்காது' என அரங்கேற்றுகாதையினுள்ளே இளங்கோவடிகள் கூறியபடி சிங்கம், மீனம், துலாம், இடபம், தனு, கற்கடகம், கும்பம் என்னும் பாலைகள் தத்தம் இறுதியினின்ற தாரம்முதற் கைக்கிளையீறுகிய நரம்புகள் முறையே முதலிற் பெய்யப்பட்டுப் பாடப்படுவவாகலின் அவை முறையே மேற்செம்பாலை, அரும்பாலை, செம்பாலை, கோடிப்பாலை, படுமலைப்பாலை, விளரிப்பாலை, செவ்வழிப்பாலை என நிற்றல்

காண்க. கோடி, விளரி, மேற்செம்பாலை என்னும் மூன்றும் முறையே படுமலை, செவ்வழி அரும்பாலை யென்பவற்றோடணைந்து நிற்றல் காண்க. கன்னி, மேடம், விருச்சிகம், மிதுனம், மகரத்தில் நிற்கும் ஐந்தும் அந்தரமாதலின் ஏழ்பெரும்பாலையின் வேறாயின. இராசிப்பெயரினால் அனைத்தினையும் குறியீடுசெய்வது எளிது.

இனி ஷட்ஜக்கிராமமாகிய இளிக்கிரமத்திலேயமைந்த பன்னிரு பாலையையும் ஆராயப்புகுவாம். ச-ரி-க-ம-ப-த-நி என்னும் ஏழும் முறையே மிதுனம்-கற்கடகம்-கன்னி-துலாம்-விருச்சிகம்-மகரம்-கும்பம் என்னும் வீடுகளிலே நின்றனவென முன்னர்க் காட்டினும். இவைதம்மை இம்முறையே பன்னிருபாலையினும் நிறுத்துவாம்.

இளிக்கிரமத்தில் வட்டப்பாலை

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | ... | ம | ... | ப | த | ... | நி | ... | ச | ரி | ... | க |
| மேடம் | ... | ச | ரி | ... | க | ... | ம | ... | ப | த | ... | நி |
| விருச்சிகம் | ... | ப | த | ... | நி | ... | ச | ரி | ... | க | ... | ம |
| மிதுனம் | ரி | ... | க | ... | ம | ... | ப | த | ... | நி | ... | ச |
| மகரம் | த | ... | நி | ... | ச | ரி | ... | க | ... | ம | ... | ப |
| சிங்கம் | க | ... | ம | ... | ப | த | ... | நி | ... | ச | ரி | ... |
| மீனம் | நி | ... | ச | ரி | ... | க | ... | ம | ... | ப | த | ... |
| துலாம் | ம | ... | ப | த | ... | நி | ... | ச | ரி | ... | க | ... |
| இடபம் | ச | ரி | ... | க | ... | ம | ... | ப | த | ... | நி | ... |
| தனு | ப | த | ... | நி | ... | ச | ரி | ... | க | ... | ம | ... |
| கற்கடகம் | ... | க | ... | ம | ... | ப | த | ... | நி | ... | ச | ரி |
| கும்பம் | ... | நி | ... | ச | ரி | ... | க | ... | ம | ... | ப | த |

பாலைகளிலே நரம்புகள் நிற்கும் இடங்களின் அலகுநிலையெண்களை நிச்சயிப்பதற்கு முதலிலே ஒவ்வொரு பாலையும் நிற்கும் வீட்டிலிருந்து எண்ணி அந்தரமுட்படப் பன்னிருநரம்புகளுக்குமுரிய அலகுநிலையெண்களை எழுதிக்கொள்ளவேண்டும். அவை வருமாறு:—

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | 3 | 4 | 7 | 8 | 11 | 12 | 13 | 16 | 17 | 20 | 21 | 22 |
| மேடம் | 3 | 4 | 7 | 8 | 9 | 12 | 13 | 16 | 17 | 20 | 21 | 22 |
| விருச்சிகம் | 3 | 4 | 7 | 8 | 9 | 12 | 13 | 16 | 17 | 18 | 21 | 22 |
| மிதுனம் | 3 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 | 16 | 17 | 18 | 21 | 22 |
| மகரம் | 3 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 | 14 | 17 | 18 | 21 | 22 |
| சிங்கம் | 1 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 | 14 | 17 | 18 | 21 | 22 |
| மீனம் | 1 | 4 | 5 | 8 | 9 | 10 | 13 | 14 | 17 | 18 | 21 | 22 |
| துலாம் | 1 | 4 | 5 | 8 | 9 | 10 | 13 | 14 | 17 | 18 | 19 | 22 |
| இடபம் | 1 | 4 | 5 | 6 | 9 | 10 | 13 | 14 | 17 | 18 | 19 | 22 |
| தனு | 1 | 4 | 5 | 6 | 9 | 10 | 13 | 14 | 15 | 18 | 19 | 22 |
| கற்கடகம் | 1 | 2 | 5 | 6 | 9 | 10 | 13 | 14 | 15 | 18 | 19 | 22 |
| கும்பம் | 1 | 2 | 5 | 6 | 9 | 10 | 11 | 14 | 15 | 18 | 19 | 22 |

கன்னிப்பாலையிலே கிளையலகுநிலைகளனைத்தும் நிற்பதையும் மேடம்முதற் கும்பமீறாகிய ஏனைய பதினொன்றினும் 9-18-5-14-1-10-19-6-15-2-11 என்னும் நட்பலகுநிலைகள் முறையே தோன்றி நிலைபெறுதலின் கும்பப்பாலையில் நட்பலகுநிலைகளனைத்தும் நிற்பதையும் நோக்குக.

இப்பன்னிரண்டினும் இளிக்கிரமத்துப் பன்னிருபாலை நரம்புகள் நின்ற அலகுநிலைகளைக் காண்பதற்கு அந்தரங்களை வெற்றிடமாக விட்டு ஏனைய எண்களை எழுதவேண்டும்.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | … | 4 | … | 8 | 11 | … | 13 | … | 17 | 20 | .... | 22 |
| மேடம் | … | 4 | 7 | … | 9 | … | 13 | … | 17 | 20 | .... | 22 |
| விருச்சிகம் | … | 4 | 7 | … | 9 | … | 13 | 16 | .... | 18 | .... | 22 |
| மிதுனம் | 3 | … | 5 | … | 9 | … | 13 | 16 | .... | 18 | .... | 22 |
| மகரம் | 3 | … | 5 | … | 9 | 12 | … | 14 | .... | 18 | .... | 22 |
| சிங்கம் | 1 | … | 5 | … | 9 | 12 | … | 14 | .... | 18 | 21 | .... |
| மீனம் | 1 | … | 5 | 8 | … | 10 | … | 14 | .... | 18 | 21 | .... |
| துலாம் | 1 | … | 5 | 8 | … | 10 | … | 14 | 17 | .... | 19 | .... |
| இடபம் | 1 | 4 | … | 6 | … | 10 | … | 14 | 17 | .... | 19 | .... |
| தனு | 1 | 4 | … | 6 | … | 10 | 13 | … | 15 | .... | 19 | .... |
| கற்கடகம் | … | 2 | … | 6 | … | 10 | 13 | … | 15 | .... | 19 | 22 |
| கும்பம் | … | 2 | … | 6 | 9 | … | 11 | .... | 15 | .... | 19 | 22 |

இவைதம்முள் '22' ஆம் அலகுநிலையில் நரம்பு நிற்பனவாகிய கன்னி, மேட, விருச்சிக, மிதுன, மகர, கற்கடக கும்பப் பாலைகள் ஏழ்பெரும்பாலையாகி முறையே மேற்செம்பாலை, அரும்பாலை, செம்பாலை, கோடிப்பாலை, படுமலைப்பாலை, விளரிப்பாலை, செவ்வழிப்பாலை எனப்படுவ. எஞ்சிய ஐந்தும் அந்தரப்பாலைகள்.

இங்ஙனம்நின்ற ஏழ்பெரும்பாலைகளுள் நரம்புகள் பெற்ற அலகெண்களைக் காண்பதற்கு நரம்பு நின்ற அலகுநிலையெண்ணினின்று அதற்கு முன்னின்ற அலகுநிலையெண்ணைக் கழிக்கவேண்டும் (அந்தரங்களின் அலகும் நரம்புகளில் அடங்குதலின் அவற்றின் அலகுநிலையைத் தனியாகக் கருதல்வேண்டா). இங்ஙனம் கணித்தறிந்த அலகெண்கள்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 | மேற்செம்பாலை |
| மேடம் | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | 2 | அரும்பாலை |
| விருச்சிகம் | 4 | 3 | 2 | 4 | 3 | 2 | 4 | செம்பாலை |
| மிதுனம் | 3 | 2 | 4 | 4 | 3 | 2 | 4 | கோடிப்பாலை |
| மகரம் | 3 | 2 | 4 | 3 | 2 | 4 | 4 | படுமலைப்பாலை |
| கற்கடகம் | 2 | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | விளரிப்பாலை |
| கும்பம் | 2 | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | செவ்வழிப்பாலை |

குரற்கிரமமாகிய மத்திமக்கிராமத்திலே தோன்றும் ஏழுபாலைகளின் அலகெண்கள் வருமாறு:

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 4 | 3 | 4 | 2 | 4 | 3 | 2 |
| 3 | 4 | 2 | 4 | 3 | 2 | 4 |
| 4 | 2 | 4 | 3 | 2 | 4 | 3 |
| 2 | 4 | 3 | 2 | 4 | 3 | 4 |
| 4 | 3 | 2 | 4 | 3 | 4 | 2 |
| 3 | 2 | 4 | 3 | 4 | 2 | 4 |
| 2 | 4 | 3 | 4 | 2 | 4 | 3 |

அலகெண்களை ஒன்றின்பின்னொன்றாகக் கூட்டிப் பெற்ற அலகுநிலையெண்களும் பன்னிருபாலையுள் இவ்வேழுபாலைகளும் எய்தும் இடங்களும் கீழே தரப்பட்டன. அந்தரங்கள் முன்போலவே வெற்றிடமாக விடப்பட்டன. கருவியிலே எண்ணிற்கும் நரம்புகளே இசைக்கப்படுவ.

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னி | ... | 4 | 7 | ... | 11 | ... | 13 | ... | 17 | 20 | ... | 22 |
| விருச்சிகம் | 3 | ... | 7 | ... | 9 | ... | 13 | 16 | ... | 18 | ... | 22 |
| தனு | ... | 4 | ... | 6 | ... | 10 | 13 | ... | 15 | ... | 19 | 22 |
| கும்பம் | ... | 2 | ... | 6 | 9 | ... | 11 | ... | 15 | 18 | ... | 22 |
| மேடம் | ... | 4 | 7 | ... | 9 | ... | 13 | 16 | ... | 20 | ... | 22 |
| மிதுனம் | 3 | ... | 5 | ... | 9 | 12 | ... | 16 | ... | 18 | ... | 22 |
| கற்கடகம் | ... | 2 | ... | 6 | 9 | ... | 13 | ... | 15 | ... | 19 | 22 |

இருபத்தொருமூர்ச்சனைகளும் பன்னிருபாலையுள் அடங்கி நிற்றல் காண்க.

[தொடரும்.]

# உலகபுராணம்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

பெருங்கதையென்னும்நூலிலே, நமக்குக் கிடைத்திருக்கும் பகுதியின் தொடக்கத்திலே, 'பொருள்புரிநூலும், அலகைசான்ற உலகபுராணமும்' என்னும் அடிகள் காணப்படுகின்றன. உலக புராணம்—உலகத்தின் பழையவரலாற்றினைக் கூறும் நூல். ஆசிரியர் தொல்காப்பியனார் 'தொன்மைதானே, உரையொடுபுணர்ந்த பழமை மேற்றே' என்றாராகலின், புராணத்தினைத் 'தொன்மை' என்றல் பழந்தமிழ்வழக்காமென அறிகின்றாம். 'புராணம் பஞ்சலக்ஷணம்'—அஃதாவது—சர்க்கம், பிரதிசர்க்கம், வம்சம், மந்வந்தரம், வம்சாநு சரிதம்: என ஐவகையிலக்கணத்தது புராணம் என்பது வடநூலார் கூற்று. சர்க்கம் என்பது உலகத்தின் தோற்றம்; பிரதிசர்க்கம் உயிர்த்தோற்றத்தையும் ஒடுக்கத்தையும் குறிக்கும்; வம்சம் மன்னர்பரம்பரையைக்கூறுவது; மந்வந்தரம் காலவரையறையினை யும் மநுக்களது ஆட்சிக்காலங்களையும் கூறுவது; வம்சாநுசரிதம் மன்னர்பரம்பரையோடு தொடர்புடைய கிளைக்கதைகளைக் கூறு வது. மத்ஸ்யபுராணம், அக்கினிபுராணம், பாகவதபுராணம் என் னும் புராணங்களுள்ளே பரதக்கண்டத்தின் பழையவரலாற்றுப் பகுதிகள் காணப்படுவ என அறிஞர் கூறுவர். தகடூர்யாத்திரை யென்னுந் தமிழ்த்தொன்மைநூல் நமக்குக் கிடைத்திலது.

தமிழரது பழையவரலாற்றினைப்பற்றிய சிலச்சில முடிபுகள் தொல்காப்பிய எழுத்ததிகார நச்சினார்க்கினியருரை, இறையனா ரகப்பொருள் நக்கீரனாருரை சிலப்பதிகாரம் அடியார்க்குநல்லா ருரை யென்னும் இவைதம்முள்ளே காணப்படுகின்றன. இம் முடிபுகள் வரலாற்றுநூலாசிரியர் (Historians) ஆராய்ந்துகண்ட சரித்திரமுடிபுகளோடு ஒருபுடை ஒத்திருக்கின்றனவாதலின், உரை நூன்முடிபுகள் வெறுங்கதைகளல்லவென்பது துணியப்படுகின் றது.

பாண்டியமன்னர் தமிழ்வளர்த்த முச்சங்கங்களின்வரலாறு இறையனாரகப்பொருளுரையினுள்ளே கூறப்பட்டது. 'சங்கம்' என்பது பிற்காலத்துச்சொல். 'கூடல்' என்னும் பழந்தமிழ்ச்சொல் இப்பொருளினது; இது மதுரைமாநகரின்பெயர்களுள் ஒன்று. தலைச்சங்கத்துப்பெரியோர் இருந்து தமிழாராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரையென்ப.

'வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி'

எனச் சிலப்பதிகாரம் கூறுதலின், குமரியாற்றினுக்குத்தெற்கே பஃறுளி எனப் பெயரிய ஆறு இருந்த உண்மை பெறப்படுகின்றது.

'முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே'

என்னும் புறப்பாட்டுக் கடல்கோளுக்குமுன்னிருந்த தலைச்சங்கத்துப் புலவரொருவராற் பாடப்பட்டது. கடல்கோள்வரலாற்றினை அடியார்க்குநல்லார் சிலப்பதிகார வேனிற்காதையுரையினுள்ளே விரிவாகக்கூறுகின்றார். இது எப்பொழுதுநிகழ்ந்தது என்பதை முதலிலே ஆராய்வாம்.

தலைச்சங்கம் நாலாயிரத்துநானூற்றுநாற்பது ஆண்டும், இடைச்சங்கம் மூவாயிரத்தெழுநூறு ஆண்டும், கடைச்சங்கம் ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டும் நிலைபெற்றிருந்தனவென்பது உரைநூன்முடிபு. தலைச்சங்கம் கடல்கோளினாலே அழிந்தது. கடல்கோளுக்குப் பன்னூறாண்டுகளுக்குப்பின் கபாடபுரத்திலே இடைச்சங்கம் தொடங்கப்பட்டிருத்தல்வேண்டும். தலைச்சங்கம் இரீஇய பாண்டியர்கள் காய்சினவழுதிமுதற் கடுங்கோன் ஈறாக எண்பத்தொன்பதின்மர். இடைச்சங்கம் இரீஇயினோர் வெண்டேர்ச்செழியன் முதல் முடத்திருமாறன் ஈறாக ஐம்பத்தொன்பதின்மர். கடுங்கோனுக்கும் வெண்டேர்ச்செழியனுக்கும் இடைப்பட்ட எத்தனைமன்னர் அரசுபுரிந்தனர் என யாம் அறியோம். இடைச்சங்கத்திறுதியிலும்

பாண்டியநாட்டைக் கடல்கொண்டது. கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் கடைச்சங்கத்தைத் தொடங்கினன். உக்கிரப்பெருவழுதிகாலத்திலே கடைச்சங்கம் ஒழிந்தது. இது கிறிஸ்துவின்பிறப்பிற்கு அணித்தானகாலத்திலே நிகழ்ந்ததென எண்ண இடமுண்டு. அங்ஙனமாதலின் தலைச்சங்கத்திறுதிக் கடல்கோள் கி. மு. 5550-ஆம் ஆண்டுக்கு முந்தியதாதல்வேண்டும்.

தமிழரது நாகரிகம் மிகமிகப் பழமைவாய்ந்தது. உலக சரித்திரத்திலே தமிழரே முதன்முதல் நாகரிகவாழ்க்கையெய்திய சாதியாரென்பதற்கும், கடல்கடந்துசென்று தமது நாகரிகத்தைப் பலப்பலநாடுகளிலும் பரப்பினர் என்பதற்கும், வாணிகத்துறையிலும் கணிதநூல் வானநூல் முதலிய நூற்றுறைகளிலும் வல்லுநராயிருந்தாரென்பதற்கும் பல சான்றுகள் கிடைத்திருக்கின்றன. இவைதம்மைச் சுருக்கமாக ஆராய்ந்து கூறுதலே 'உலகபுராணம்' என்னும் இப்பொருளுரையின் நோக்கமாகும்.

கத்தோலிக்க கிறிஸ்தவசமயகுரவரும், பம்பாய்நகர்ப் பல்கலைக் கழகத்துச் சரித்திர ஆராய்ச்சித்துறைத்தலைவரும் ஆகிய வணக்கத்துக்குரிய எச். ஹீராஸ்சுவாமியார் (Rev. Fr. H. Heras) பழந்தமிழரதுவரலாற்றினைப் பெருக ஆராய்ந்து நூல்கள்வாயிலாகவும், பத்திரிகைவாயிலாகவும் வெளியிட்டிருக்கின்றார். ஆரிய நாகரிக முதன்மையை எவ்வாற்றானும் நிலைநிறுத்தவேண்டுமென்னும் விருப்புடைய ஒருசாரார் இவர்க்கு இன்னல்விளைக்க முனைந்து நிற்பது இவரது கல்விநிறைவையும் நடுவுநிலைமையையும் தெளிவுறக் காட்டுகின்றது. இவர் ஸ்பெயின்தேசத்திற் பிறந்தவர்; துறவொழுக்கமுடையவர்; ஆதலினாலே ஆரியர்பக்கமோ திராவிடர் பக்கமோ சாராது நடுநின்று உண்மைகூறும் ஆற்றல்வாய்ந்தவர். சிந்துநதிதீரத்திலே முகிஞ்சதரோ என்னும் இடத்திலே பல்லாயிரம் ஆண்டுகளுக்குமுன்பு நிலைபெற்றிருந்த நாகரிகத்தைக் குறித்து இவர் கூறும் முடிபுகளில் ஒருசிலவற்றை முதலிலே தருவாம்.

இம்முடிபுகள் கல்கத்தாநகரினின்று வெளிவரும் இந்திய நாகரீகம் (Indian Culture) என்னும் ஆராய்ச்சிப்பத்திரிகையிலே 1937-ஆம் ஆண்டு ஏப்ரல்மாதத்தில் வெளிவந்தன. "முகிஞ்சதரோ

விளக்கமுற்றிருந்தகாலத்திலே சிந்துநாடு (இந்தியா) ஆனது மீனாடு, பறவைநாடு, மரங்கொத்திநாடு, ஏழ்நாடு எனும் நாற்பெரும் பிரிவினதாக இருந்தது. சிந்துநதியின் வலப்புறத்திலிருந்த மீனாட்டிலே வாழ்ந்தோரது கொடியிலே இணைமீன்கள் பொறிக்கப்பட்டிருந்தன. இந்நாட்டுத் தலைநகராகிய நண்டூர் என்பதே இப்பொழுது நிலத்தை யகழ்ந்து காணப்பட்ட மூகிஞ்சதரோ (இறந்தோர்தரை) என்னும் இடமாகும். உடையூர், ஊரினூர், எய்கையூர், மூணூர் (வடமொழியாளர்கூறும் திரிபுரம்) என்னும் நகர்களும் மீனாட்டிலிருந்தன.. மரங்கொத்திநாடு பனிபடர்ந்த மலைநாட்டி லிருந்தது. இங்கு வாழ்ந்தோர் சிவலிங்கத்தையும் மூவிலைவேலையும் வழிபட்ட வேலாளிர் ஆவர்.'' (பிற்காலத்திலே 'வேளிர்', எனவும் 'வேளாளர்' எனவும் வழங்கப்பட்டோர் இவரென எண்ண இடமுண்டு.)

மூகிஞ்சதரோவிலிருந்த பழையமக்கள் மிதுனராசியினை 'யாழ்' என்னும் பழந்தமிழ்ப்பெயரினாலே வழங்கினார்களென்றும், 'யாழ்' உருவத்தினாலே குறியிட்டார்களென்றும் ஹீராஸ்சுவாமியார் மற்றோரிடத்திலே குறிப்பிட்டிருக்கின்றார். இப்பழையமக்கள் இசைநூலிலும் வானநூலிலும் அறிவுபெற்றிருந்தமையை இது காட்டுகின்றது. மூகிஞ்சதரோ நாகரிகம் பழந்தமிழ்நாகரிகத்தோடும் யூபிரற்றஸ்-ரைகிறிஸ் நதிக்கரையிலே பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் விளங்கிய சுமேரியநாகரிகத்தோடும் தொடர்புடையது என்பது அறிஞர்கருத்து. சுமேரியர் தமிழர்வழிவந்தவர்களே என்பதற்குப் பலசான்றுகள் உள.

பிரித்தானியப் பழம்பொருட்காட்சிச்சாலையிலே (British Museum) எகிப்திய ஆசுரேயப் பகுதிக்கு உதவித்தலைவராகிய எச். ஆர். ஹால் (H. R. Hall) என்னும் பேரறிஞர் தாம் எழுதிய புராதனசரித்திரநூலிலே (The Ancient History of the Near East) பின்வருமாறு கூறுகிறார். "சுமேரியரது உருவச்சாயல் அவர்களது ஓவியங்களிலே தெளிவாகப் புலப்படுகிறது. அது அவர்கள்நாட்டிற்கு அணித்தாக வாழ்ந்த செமித்தியகுலத்தார் ஆரியகுலத்தாரின் உருவச்சாயலினின்றும் வேறுபட்டது. அவர்களது மொழியும் மேற்குறித்த இருசாராரின் மொழிகளினின்றும்

வேறுபட்டது. இக்காலத்து இந்தியனின் உருவச்சாயல் பல்லாயிரம் ஆண்டுகளின்முன்பு வாழ்ந்த திராவிடமுன்னோரின் உருவச்சாயலை நிகர்த்தது. இக்காலத்துக் கிரேக்கர் இத்தாலியரின் உருவச்சாயல் ஆரியர்வருகைக்குமுன் அந்நாடுகளில்வாழ்ந்த முன்னோரின் உருவச்சாயலை நிகர்த்திருப்பதுபோல இந்தியாவிலும் திராவிட உருவச்சாயலே நிலைபெற்றுநின்றது. ஆரியகுல உருவச்சாயல் மிகமுந்தியே அழிந்துபோயிற்று. பழைய சுமேரியர் திராவிடகுலத்தாரென்பது சுமேரிய உருவங்களைக் கூர்ந்துநோக்குவாருக்கு இனிது புலப்படும். திராவிடமொழிகளை இக்காலத்திலும் வழங்கும் தென்னிந்தியனின் உருவத்தோற்றமே பழைய சுமேரியனின் உருவத்தோற்றம். பழைய சுமேரியர் இந்தியாவிலிருந்து கரைவழியாகவும் பாரசீகக்கடல்வழியாகவும் சுமேருநாட்டிற் குடியேறினார்களென்று எண்ண இடமுண்டு. இவர்கள் குடியேறிய புதுநாட்டிற்குக் கொண்டுவந்த நாகரிகம் சிந்துநதிக்கரையிலே வளர்ச்சியெய்தியிருக்கலாம். சித்திரங்களை எழுத்தாகவழங்கியமுறையினின்று செப்பமெய்திய இவர்களது எழுத்துமுறை பின்னாளிலே பாபிலோனியத்திலே சதுரமுனை யெழுத்தாணிகளாலே பசுமண் வட்டிகைகளிலே எழுதப்பட்டு ('Cuneiform' என்னும்) ஆப்பு வடிவ எழுத்துக்களாக உருத்திரிந்தது. இவர்கள் சிந்துநதிக்கரையிலிருந்து சுமேருநாட்டிற்குவரும்வழியிலே ஏலம் (Elam) என்னும் நாட்டிலே தமது நாகரிகத்தைப் பரப்பினார்கள்."

சிந்துநதிக்கரையிலிருந்த மீனாட்டு நண்டூராகிய முகிஞ்சதரோவின் வரலாற்றையும் பழைய சுமேரியவரலாற்றினையும், 'குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள, வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு தென்றிசையாண்ட தென்னவன் வாழி' என்னும் சிலப்பதிகாரக்கூற்றையும் நாம் படிக்கும்போது தலைச்சங்கத்திறுதிக் கடல்கோளின்பின் பாண்டியனது ஆட்சியிலிருந்த தமிழ்மக்களுள் ஒருபகுதியார் கடல்கடந்து பாரசீகக்கடல்வழியாகச் சென்று யூபிருற்றஸ்-தைகிறிஸ்நதிக்கரையிலிருந்த நாட்டிற் குடியேறி அதற்குச் சுமேரியா என்னும் பெயரிட்டு வழங்கினார்களென்பதும், மற்றொரு பகுதியார் 'வடதிசைக்கங்கையும் இமயமுங் கொண்டு, சிந்துநதிக்கரையிலே தாம் குடியேறியநாட்டிற்கு மீனாடு எனப் பெயரிட்டு

இணைக்கயல்பொறித்த கொடியையுடையராய் வாழ்ந்தாரென்பதும் புலனாகின்றன. இங்கு உறைந்து சிலகாலத்தின்பின் கரைவழியாகவும் சுமேரியாவிற்குச் சென்றிருக்கலாம்.

சாலதேயநாட்டுச்சரிதம் (Story of Chaldea) முதலிய பல நூல்களையியற்றிய றகோசின் (Ragozin) என்னும் பேரறிஞர் தாம் இயற்றிய வேதகாலத்து இந்தியா (Vedic India) என்னும் நூலிலே பின்வருமாறு கூறுகிறார். "செமித்தியர்வருகையின்முன் பழைய பாபிலோனியத்தில் வாழ்ந்த சுமேரிய-அக்கதியருக்கும் இந்தியாவின் வடமேற்குப்பாகங்களிலே வாழ்ந்த திராவிடமக்களுக்குமிடையேயுள்ள தொடர்பு சிறப்புவகையானது. இருசாராரும் ஒரேகுலத்தினர். இக்குலத்தைத் தூரானியகுலம் என்னலாம். அக்கதியநாட்டுத் தேல்லோநகரத்திலே கண்டெடுக்கப்பட்டதும் கி. மு. நாலாயிரம் என்னும் ஆண்டிற்கு உரியதுமாகிய சிலைத்தலையானது தலைப்பாகையணிந்த திராவிட உருவத் தலையினது தோற்றமுடையது." "சாலதேயப் பழையநகராகிய ஊர் என்னுமிடத்திலே கி. மு. மூவாயிரம் ஆண்டுகளுக்குமுன்னிருந்த ஒரு மனையினுள்ளே தென்னிந்தியத் தேக்கமரத்துண்டொன்று கண்டெடுக்கப்பட்டது." தென்னிந்தியாவுக்கும் சாலதேயத்திற்கும் இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளின்முன்னே வாணிகத்தொடர்பிருந்ததென்பதற்கு இது சான்றாகும்.

இருக்குவேத இந்தியா (Rig-Vedic India) என்னும் நூலாசிரியராகிய அவிநாஸ்சந்திரதாஸ் (Abinash Chandra Das) 'சோழதேயம்' என்னும் மொழிச்சிதைவே 'சாலதேயம்' (Chaldea) என்றும், அந்நாட்டிற் சோழகுலத்தார் குடியேறியது இற்றைக்குப் பதினாயிரம் ஆண்டுகளின்முன்னாதல் வேண்டுமென்றும் பலகாரணங்காட்டி விளக்குகிறார். சாலதேயநாட்டுத் தலைநகர் ஊர் என்னும் பெயரினது. சாலதேயத்தார் வானநூலிலே மிகத் தேர்ச்சியுடையவராயிருந்தார். சீரியஸ்விண்மீன் (Sirius)* சூரியனோடு ஒருங்கு உதிப்பது ஆயிரத்துநானூற்றெண்பது ஆண்டுக்கு ஒருமுறையாகும்

* இவ்விண்மீனின் தமிழ்ப்பெயர் 'மிருகவியாதர்' ஆமெனத் திருக்கணிதசோதிடர் பிரமஸ்ரீ சி. சுப்பிரமணிய ஐயர் ஈழகேசரியிற் குறிப்பிடுகிறார்.

என அறிந்து அக்காலவெல்லையினை ஒரு சோதிவட்டம் (Sothic Cycle) என வழங்கினார். அவர்கொண்ட ஆண்டு முந்நூற்றறுபது நாட்களையுடையது. $365\frac{1}{4}$ நாள்கொண்டது ஓராண்டு எனக் கொள்ளுமிடத்துச் சோதிவட்டம் ஆயிரத்துநானூற்றறுபது ஆண்டாகும்.

சோதிவட்டத்தினாற் காலத்தைக் கணித்தறியும்முறையானது தமிழர் வேற்றுநாட்டிற் குடியேறுதற்குமுன்னே அவர்களால் அறியப்பட்டிருந்ததென்பதற்குச் சங்கமிருந்த காலவெல்லைகளே சான்றுபகருகின்றன. தலைச்சங்ககாலம் மூன்றுசோதிவட்டம் ($3\times1480=4440$), இடைச்சங்ககாலம் இரண்டரைச்சோதிவட்டம் ($2\frac{1}{2}\times1480=3700$), கடைச்சங்ககாலம் ஒன்றேகாற் சோதிவட்டம் ($1\frac{1}{4}\times1480=1850$). சீரியஸ்விண்மீன் சூரியனோடு ஒருங்கு உதித்த நாளிலே கடல்கோளினாலே தலைச்சங்கம் அழிந்ததெனக்கொள்ளின், அடுத்துச் சீரியஸ்விண்மீன் சூரியனோடு ஒருங்குதித்த நாளிலே கபாடபுரத்திலிருந்த பாண்டியமன்னர் இடைச்சங்கத்தைத் தொடங்கினார்களெனக்கொள்வது பொருத்தமுடைத்து. அவ்வாறு கொள்ளுமிடத்துக் கடுங்கோனுக்கும் வெண்டேர்ச் செழியனுக்கும் இடையிட்டகாலம் 1480 ஆண்டு ஆதல்வேண்டும். இதனுடன் 5550 கூட்ட 7030 ஆகும். ஆதலினாலே தலைச் சங்கத்திறுதிக்கடல்கோள் கி. மு. 7000 ஆண்டுவரையிலே நிகழ்ந்திருக்கவேண்டும் எனக் கொள்ளலாம்.

சதபதப்பிராம்மணம் என்னும் வடமொழிநூலிலே குறிக்கப்பட்ட மந்வந்தரச்சலப்பிரளயம் கி. மு. 7500க்குப் பிந்தியதாமென அவிநாஸ்சந்திரதாஸ் இருக்குவேதஇந்தியா என்னும்நூலிலே காட்டுகின்றார். ஆதலினாலே தலைச்சங்கத்திறுதிக்கடல்கோளும் மந்வந்தரச்சலப்பிரளயமும் ஒரேநிகழ்ச்சியேயாம் என்பது தெளிவாகின்றது. தெற்கே நிலம் கடலில் அமிழ்ந்தது; விந்தியத்திற்கு வடக்கேயிருந்த ராஜபுத்தானக்கடல் வற்றியது.

மத்ஸ்யபுராணத்திலே சலப்பிரளயவரலாறு பின்வருமாறு கூறப்படுகிறதென றகோசின் தமது நூலிலே காட்டுகிறார். "சத்தியவிரதன் என்னும் திராவிடமன்னன் மலயத்தில் (மலையாளத்தில்)

ஓடுகின்ற 'கிருதமர்லா' என்னும் நதிக்கரையிலே தன்முன்னோர்க்கு நீர்க்கடன்செய்யும்பொழுது அவன் கைத்தலத்திலே ஒரு சிறுமீன் அகப்பட்டது. மன்னன் காவற்கடவுளாகிய மாயோனை வழிபடுவோன். அக்கடவுளே சிறுமீன்வடிவாக அவன்கையைச் சேர்ந்தார். சலப்பெருக்கிலே உலகம் அழியப்போகிறதென்றும் நீதிமானாகிய அம்மன்னன் ஒரு நாவாயினை அமைத்து அதனுள்ளிருப்பின் தான் அவனைக் காப்பதாகவும் சிறுமீன் கூறிற்று. மன்னன் மீனைக் காத்துவர அது மிகப் பெரிதாகவளர்ந்து கடலினையடைந்தது. பின்பு சலப்பெருக்கு நேருதலும் மீன் தோன்றி மன்னனது நாவாயை இழுத்துச்சென்று இமயமலையிலே நௌபந்தனம் என்னும் சிகரத்தையடைந்தது. இச்சத்தியவிரதன் மறுபிறப்பிலே வைவச்சுதன் மகனான மநுவானான்." இது மத்ஸ்யபுராணத்துக்கூற்று.

மநுவரசன் சோழகுலத்துமன்னன் எனத் தமிழ்நூல்கள் கூறுகின்றன. சத்தியந்தவறுதநீர்மை இக்குலத்தாருக்கு இயல்பாக அமைந்ததென்பதைச் சிபி, மநுநீதிகண்டசோழன் என்றின்னோர் வரலாற்றினால் அறிகின்றோம். இக்குலத்துமன்னன் சத்தியவிரதன் என்னும் சிறப்புப்பெயரையும் மநு என்னும் இயற்பெயரையும் உடையவனாக இருக்கவேண்டும்; இவன் கடுங்கோன் என்னும் பாண்டியமன்னன்காலத்தவனாகவேண்டும்.

கடல்கோளாகிய சலப்பிரளயக் கதை தென்னாட்டிலிருந்து வடநாட்டிற்குச் சென்றது. அஃதன்றியும் சுமேரியநாட்டிற் குடியேறிய தமிழரோடு யூபிரூற்றஸ் - டைகிறிஸ் நதிக்கரைக்குச் சென்றது. அந்நாட்டிலே முன்னாளில்வாழ்ந்த பெரோசஸ் (Berossos) என்னும் ஆசிரியர் இச்செய்தியை விரிவாகக் கூறியிருக்கின்றார். நாம் முன்னே குறிப்பிட்ட எச். ஆர். ஹால் (H. R. Hall) என்னும் பேரறிஞர் தம்நூலிலே இதைக்குறித்துக் கூறியிருப்பதனை மொழிபெயர்த்துத்தருவாம். அதன்முன் தொல்காப்பியவுரையிலே ஆசிரியர் நச்சினார்க்கினியர் கூறிய குறிப்பொன்றினை உளங்கொள்ளுதல் இன்றியமையாததாகும். நிலந்தருதிருவின் நெடியோனாகிய 'பாண்டியன் மாகீர்த்தி இருபத்துநாலாயிரம்யாண்டு வீற்றிருந்தானாதலின், அவனும் அவன் அவையிலுள்ளோரும் அறிவுமிக்கிருத்த

வின் அவர்கள் கேட்டிருப்ப' என்றலின் தமிழ்மன்னனது அவைக் களத்தாரின் அறிவுமிகுதி தெளிவாகின்றது. கடல்கோளின்முன் னிருந்த இம்மன்னன் இருபத்துநாலாயிரம்யாண்டு வீற்றிருந்தா னென்பது நமக்கு வியப்பைத்தருகின்றது. சுமேரியசரித்திரத்தி லும் சலப்பிரளயத்திற்குமுன் இருந்த மன்னர் எண்மருள் ஒவ் வொருவரும் 18,600 முதல் 43,200 வரையுமுள்ள எல்லையின வாகிய ஆண்டுகள் வீற்றிருந்தார்கள் என்னும் செய்தி அகப்படு கின்றது. இரு வரலாற்றுக்கும் தொடர்புண்மை இதனாலும் புலப் படுகின்றது.

கிறிஸ்தவசமயநூலாகிய விவிலிய நூல் ஆதியாகமத்திலே மனிதவர்க்கத்தாரின் ஆதித்தந்தைதாயராகிய அத்தன் (Adam), அவ்வை (Eve) என்னும் இருவரையும் ஆண்டவன் படைத்த வர லாறும், இவரது சந்ததியாரது வரன்முறையும், அச்சந்ததியா ருள்ளே நீதிமானாகவிளங்கிய நோ (நூகு, நோவா, Noah) வின் வர லாறும், சலப்பிரளயவரலாறும், நோவும் அவன் புதல்வராகிய செம், ஹாம், ஜாபெத்து என்னும் மூவரும் குடும்பத்தாரும் சலப் பிரளயத்திலே மாண்டுபோகாது காக்கப்பட்ட வரலாறும் பிறவும் கூறப்பட்டன. பெரியோனாகிய நோ என்னும் பொருளினதாகிய மாநோ என்னும் பெயர் மநு என்பதை ஒத்திருத்தலை நோக்குக. சலப்பிரளயவரலாற்றினை எபிரேயர் பாபிலோனியரிடமிருந்து பெற் றார்களென்பது அறிஞர்கருத்து.

எச். ஆர். ஹால் கூறுவது வருமாறு:—"பழைய பாபிலோ னியத்திலே தெய்வமன்னர் பரம்பரையொன்று மிகமிக நீண்ட காலம் அரசியற்றிய மன்னர்களையுடையதாயிருந்ததெனப் பாபி லோனிய புராணக்கதைகள் கூறுகின்றன. இத்தகைய வரலாறு எகிப்துநாட்டிலும் உண்டு இம்மன்னர் பலரது பெயர்கள் பெரோசஸ் எழுதிய சரித்திரத்தில் நமக்குக் கிடைத்த பாகங்களிற் காணப்படு கின்றன. இப்பரம்பரையிலே முதலிற்றோன்றிய அலோரஸ் (Aloros) என்னும் மன்னன் 36,000 ஆண்டு அரசுபுரிந்ததாகக் கூறப்பட்டிருக் கிறது. இவன்வழித்தோன்றிய கிசுத்திரோஸ் (Xisuthros) என்பான் காலத்திலே சலப்பிரளயம் நிகழ்ந்தது. ஒருபாதி மனிதவடிவமும்

ஒருபாதி மீன்வடிவுமாகிய உவண்ணஸ் (Oannes) பாரசீகக் கடலினின்று புறப்பட்டு மனிதருக்கு எழுத்துமுறையையும் நாகரிகவாழ்க்கையையும் கற்பித்தார். கிசுத்திரோஸ் கசிசத்திரன் (Khasisadra) ஆக இருக்கலாம். இவன்காலத்திலே சித்நபிஸ்தீன் (Sit-Naphisthin) என்பான் பேழையுட்புகுந்து சலப்பிரளயத்தினின்று காக்கப்பட்டான். சலப்பிரளயத்தைக்குறித்துப் பேரோசஸ் சொல்லும் வரலாறு எபிரேயர்வழிவந்ததல்ல. அவர் தமது முன்னோர்வழிவந்த கர்ணபரம்பரைக்கதையையே எழுதுகிறார். எபிரேயர்வரலாறு இதனினின்றும் எடுக்கப்பட்டது.'' கிசுத்திரோஸ், கசிசத்திரன் என்பவற்றிற்கும் சத்தியவிரதனுக்குமுள்ள ஒலியொற்றுமையை நோக்குக.

கல்கத்தாவிலிருந்து வெளிவரும் நியூ ரிவியூ (New Review) 1941 ஸெப்டம்பர்ப்பகுதியிலே வண. ஹீராஸ் சுவாமியார் இந்தியாவிலும் ஸ்பெயின்தேசத்திலும் தாம்செய்த பரந்தஆராய்ச்சியின் முடிபாகக் கிடைத்த உண்மைகளைத் தெளிவுபெற எழுதுகின்றார். 'Oannes' என்னும் பெயரை 'Uvanna' எனத் தருகின்றார். இது காவற்கடவுளின்பெயராகிய 'உவணன்' ஆக இருக்கலாம். மற்றொரு தலைவன்பெயரினை 'Odakon' எனத் தருகிறார், இது தமிழ், 'ஓதக்கோன்' என்பதற்கு ஐயமில்லை. ஹீராஸ் சுவாமியார் கூறுவது: "எனது ஆராய்ச்சியிலே கண்டுற்றவற்றினைக் கூறுகிறேன். பழைய திராவிடமக்கள் இந்தியாவினின்றும் புறம்போந்து குருகூர்களிலே (அந்நியநாடுகளிலே) சிறப்பாகச் சுமேரியாநாட்டிலே குடியேறுகிறார்கள். பெரோசஸ் கூறியிருப்பதுபோல உவணனும், ஓதக்கோனும் தலைவர்களாக இம்மக்களை அழைத்துச்செல்கின்றனர். இந்தியாவிலே மொகிஞ்சதரோவிலும் பிறநகரங்களிலும் இவர்கள் செங்கல்லினாலே வீடுகள்கட்டியதுபோலச் சுமேரியாவிலும் கட்டுகிறார்கள். இச்செய்தி ஆதியாகமத்திலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அங்கிருந்து இவர்கள் சீரியாநாட்டிற்குச் சென்று ஹித்திய (Hittite) மன்னர்பரம்பரைக்கு அடிகோலுகிறார்கள். பின்பு மத்தித்தரைக் கடலோரத்திலே குடியேறிப் 'பாணிகள்' என்றும் பின்னுளிலே 'பினீசியர்' (Phoenicians) என்றும் வழங்கப்பட்ட குலத்தினராய்ப்

பழங்காலத்திலே பெருஞ்சிறப்போடுவிளங்கிய வாணிகத்தொழிலை நடத்துகிறார்கள். பின்பு கிரேக்க இத்தாலிய நாடுகளிலும் அணித்தான தீவுகளிலும் குடியேறி மீனவர் (Minoans), எத்துருஸ்கர் (Etruscans) என்னும் பெயரோடு வாழுகிறார்கள்."

"இங்ஙம் திவ்வாறாகத் திராவிடகுலத்தின் மற்றொருபகுதியார் அராபிநாட்டின் தென்திசையதாகிய யேமன் (Yemen) நாட்டிலே குடியேறி அந்நாட்டுக்குப் பண்டு எனப் பெயரிட்டுவாழ்ந்து அங்கிருந்து நீலநதிக்கரையிலுள்ள நாட்டினையடைந்து எகிப்தியர் என்னும்பெயரோடு சிறந்த நாகரிகத்தைத் தோற்றுவிக்கிறார்கள். பின்பு ஆபிரிக்காவின் வடபக்கத்திலே நுமிதியர் (Numidians), பேர்பேரியர் (Bereberians) என்னும் பெயரோடுவாழ்ந்து பின்னர் ஸ்பெயின் தேச ஐபீரிய குடாநாட்டையடைந்து வாழ்கின்றனர். உரோமர் இவர்களை இந்நாட்டிற் கண்டு ஐபீரியர் (Iberians) என்னும் பெயரினால் வழங்குகின்றனர். பின்பு பிரித்தானியத்தீவுகளையடைந்து (திராவிடச்சிதைவாகிய) துருயிதர் (Druids) என்னும் பெயரோடு வாழ்கின்றனர்." பேரறிஞராகிய ஹீராஸ் சுவாமியார் ஒவ்வொரு கூற்றுக்கும் தக்க ஆதாரம் காட்டுகின்றார். அவற்றையெல்லாம் குறித்த நியூ ரிவியூ வெளியீட்டிலே காணலாம்.

மேலே நாம் திராவிடர் என்று வழங்கிய குலத்தினைத் தமிழர் என்றே சொல்லலாம். கன்னடம், தெலுங்கு, மலையாள மொழிகளும் அவற்றை வழங்கும் மக்களும் தமிழிலும் தமிழரிலும் இருந்து தோன்றிய காரணத்தினாலே பண்டைச்சரித்திரத்திலே திராவிடமென்பது தமிழையேயாம். ஆரியர்வருமுன் இந்தியாமுழுவதிலும் பரவியிருந்தவர் தமிழரே. பலுச்சிஸ்தானத்தின் தெற்கே தமிழின் கிளைமொழியாகிய பிராகுவி (Brahui) இன்றும் நிலைத்திருக்கிறது. பாரசீகத்தின் தென்பாகம் மெசொப்பொட்டேமியா, அராபியா, சிரியா, எகிப்து, ஆபிரிக்காவின் வடபாகம், கிரேத்த (Crete) தீவு, கிரேக்கநாடு (யவனபுரம்), இத்தாலியநாடு (உரோமாபுரம்), ஸ்பெயின்நாடு, பிரித்தானியா என்று இன்னனவாகிய நாடுகளிலெல்லாம் பழந்தமிழர் குடியேறி நாகரிகத்தைப் பரப்பினார்கள். காடுகெடுத்து நாடாக்கலும், குளந்தொட்டு வளம்பெருக்கலும்

தொன்றுதொட்டுத் தமிழருக்கு இயல்பாகியசெயல்கள். செங்கற் கட்டிடங்களை முதலிலே தமிழரே கட்டினார்கள், கடலோடும் கப்பல் களை முதலிலே யமைத்தார்கள். கணிதநூல், வானநூல், இசை நூல் என்னு மிவற்றிலே விசேஷத்திறமை படைத்திருந்தார்கள். (தமிழரது கணிதவன்மையினை எடுத்துக்காட்டும் 'எண்ணலளவை' என்னும் பொருளுரை 'செந்தமிழ்'ப்பத்திரிகையிலே அண்மையில் வெளிவந்தது.)

தமிழர்வழிவந்த எகிப்தியர்களும் ஆயிரத்துநானூற்றெண்பது ஆண்டுகொண்ட சோதிவட்டஅளவினாலே காலவரையறை செய்தார்கள். இற்றைக்கு ஐந்து சோதிவட்டத்திற்குமுன்னே உலகமிருந்தநிலையை நோக்குவமாயின், நாம் மேலேகுறித்த இடங் களிலெல்லாம் தமிழ்க்குடிகள் வாழக் காண்போம். சீனத்திலே மஞ்சள்நிற மங்கோலியமக்கள் வாழக் காண்போம். ஆபிரிக்காவின் நடுப்பாகத்திலும் தென்பாகத்திலும் இந்தியாவிற் சில இடங்களிலும் கிழக்கிந்தியத்தீவுகளிலும் பழைய லெமூரியாவிலிருந்து பரந்த கருமைநிற நீகிரோவர் வாழக் காண்போம். அமெரிக்காவிலே செந் நிறமக்கள் வாழக் காண்போம். பாலஸ்தீனத்திலும் அடுத்தநாடுக ளிலும் செமித்தியகுலமக்கள் வாழக் காண்போம். பாரசீகத்தி லும் மத்தியஆசியாவிலும் மத்திய ஐரோப்பாவிலும் வடதுருவத் துக்கு அணித்தான நாடுகளிலும் வெள்ளைநிறமும் நீலக்கண்ணும் செம்பட்டைமயிருமுடைய ஆரியமக்கள் வாழக் காண்போம்.

ஆரியகுலத்தவராகிய யவனர் கிரேக்கநாட்டைக் கைப்பற்று முன் அங்கு வாழ்ந்த திராவிடகுல மீனவர் (Minoans) கிரேத்தத் தீவிலே (Crete) அமைத்த கட்டிடங்களும் சிலைகளும் மிகச் சிறந்தவை. இவையெல்லாம் அண்மையிலே நிலத்தினையகழ்ந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. எகிப்துநாட்டிலும் மெசொப்பொட்டே மியாவிலும் முகிஞ்சதரோவிலும் அகழ்ந்துகண்ட பழம்பொருள்க ளின் ஆராய்ச்சிகளைக்குறித்துச் சிறந்த வரலாற்றுநூல்கள் ஆங்கில மொழியிலே வெளிவந்திருக்கின்றன. முகிஞ்சதரோவினைக் குறித்து அண்மையிலே ஒரு தமிழ்நூல் வெளிவந்திருப்பதை யறிந்து பெருமகிழ்வடைகின்றேன். இன்னும் பல வரலாற்று

நூல்கள் தமிழ்மொழியிலே தோன்றவேண்டும். தமிழ்மக்கள் அவைதம்மைச் சிந்தனையோடு படிக்கவேண்டும்.

பிரித்தானியசங்கம் (British Association) என்னும் ஆராய்ச்சிக்கழகத்தலைவராகிய ஸர் ஜான் எவன்ஸ் (Sir John Evans) என்னும் பெரியார் தமது தலைமையுரையிலே பின்வருமாறு கூறுகிறார். "மனிதசாதியாரின் தொட்டில் தென்னிந்தியாவாக இருக்கலாம். வடதிசைமக்களின் முன்னோரும் மத்தித்தரைக் கடற்கரையிலுள்ள நாடுகளில் வாழ்ந்த மக்களின் முன்னோரும் முதலிலே இருந்து சென்றஇடம் தென்னிந்தியாவாக இருக்கலாமென்று ஆராய்ச்சித்துறைகள் காட்டுகின்றன." இள மாணவர்க்குக் கல்விபயிற்றும் போதகாசிரியர்கள் தமிழ்க்குலத்தாரின் பழமையையும் செழுமையையும் ஆராய்ந்துணர்ந்து மாணவர்க்கு அறிவுறுத்துவார்களாக.

## சோதிவட்டத்தைப்பற்றிய குறிப்பு

பழைய எகிப்தியர் முப்பதுநாட்கொண்ட பன்னிரண்டுமாதங்களை ஓர் ஆண்டாகக்கொண்டனர். பின்பு ஐந்துநாட்களை ஒரு மாதத்திலுஞ் சேராத மேலதிகநாட்களாகக் கூட்டிக்கொண்டனர். $365\frac{1}{4}$ நாள் ஓர் ஆண்டாமாதலின், ஆண்டுத்தொடக்கத்திலே சூரியோதயத்தின்முன்னே கீழ்த்திசையிலேதோன்றிய ஒளிபொருந்திய விண்மீனொன்று நான்கு ஆண்டுகளின்பின் ஒருநாள் பிந்தித் தோன்றியது. இவ் விண்மீனை எகிப்தியர் 'சோதி'யென்றனர். மேனாட்டார் 'சீரியஸ்' என்றனர். இந்தியவானநூலில் இது 'மிருகவியாதர்' என வழங்கப்பட்டதென அறிகின்றோம். இவ்விண்மீன் ஒவ்வொரு நான்காண்டிற்கும் ஒருநாள் தள்ளித் தோன்றும். 1460 ஆண்டுகள் கழிந்தபின் மீண்டும் ஆண்டுப்பிறப்பிலே தோன்றும். இக்காலவெல்லையினைப் பழைய எகிப்தியர் ஒரு சோதிவட்டமெனக் கொண்டனர். $1460 \times 365\frac{1}{4} = 1461 \times 365$ ஆதலின் 1460 ஆண்டில்

ஓராண்டு அதிகப்படலாயிற்று. கி. பி. 139-ல் ஒரு சோதிவட்டந் தொடங்கியது. ஆதலால் முன்னுள்ள சோதிவட்டங்களின் தொடக்கம் கி. மு. 1321, 2781, 4241, 5701 ஆவன. கி. மு. ஐயாயிரத் தெழுநூற்றொன்றிலாவது, நாலாயிரத்திருநூற்றுநாற்பத்தொன்றிலாவது எகிப்தியர் இந்தக் கணக்கைத் தொடங்கியிருக்கவேண்டும்.

1460×5=20×365 ஆதலின் பழந்தமிழர் ஆண்டு 360 நாளாகவைத்து 20 ஆண்டினைச்சேர்த்துச் சோதிவட்டத்தை 1480 ஆண்டாக்கினர். 20 ஆண்டில் எஞ்சிநின்ற 100 நாட்களையும் முன்பு மீந்துநின்ற ஓராண்டினையும் எண்ணவில்லை. 1480 ஆண்டுகொண்ட காலவெல்லையினைக் கருவியாகக்கொண்டு மூன்றுசங்கங்களுமிருந்த காலம் நிச்சயிக்கப்பட்டது. பழைய எகிப்திய சரித்திரத்திலும் சோதிவட்டம் கருவியாகவே காலவெல்லை கணிக்கப்பட்டது.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—௩௮.] விஷு ௵ ஆடி மீ [பகுதி—௯.

Vol. 38. July — August 1941. No. 9.

## இசைக்கிரமம்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

அலகு, மாத்திரை எனப் பழந்தமிழிசைநூல் குறித்ததனை இக்காலத்தார் சுருதி என்பர். மெலிவுத்தானம், சமன்தானம், வலிவுத்தானம் என்பன மந்தரஸ்தாயி, மத்திமஸ்தாயி, தாரஸ்தாயி என இக்காலத்தில் வழங்கப்படுவ. இசைநரம்பு என்பது தமிழ் வழக்கு; ஸ்வரம் என்பது வடமொழிவழக்கு.

ஒவ்வொரு தானத்திலும் ஏழு இசைநரம்புகள் உள. இளிக் கிரமத்திலே (ஷட்ஜக்கிராமத்திலே) குரல் (ம), துத்தம் (ப), இளி (ச) நன்னான்கு அலகு பெறுவ. கைக்கிளை (த), விளரி (ரி) மும்மூன்று அலகு பெறுவ. தாரம் (க), உழை (நி) இவ்விரண்டு அலகு பெறுவ. ஏழு இசைநரம்பிற்கும் மொத்த அலகு இருபத்திரண்டு.

பழந்தமிழிசைமரபிலே முதலிற்றோன்றியது தாரக்கிரமம் (காந்தாரக்கிராமம்). இக்கிரமத்திலே தாரமும் உழையும் ஒவ்வோர் அலகுபெறுவ. எஞ்சிநின்ற ஐந்தும் தனித்தனி நான்கு அலகு பெறுவ. மொத்த அலகு இருபத்திரண்டு. இதனினின்று மேற் குறித்த இளிக்கிரமம் (ஷட்ஜக்கிராமம்) தோன்றிய முறையினைக் கணிதவாயிலாக ஆராயப்புகுவாம்.

தாரத்து உழை பிறக்கும்; உழையுட் குரல் பிறக்கும்; குரலுள் இளி பிறக்கும்; இளியுள் துத்தம் பிறக்கும்; துத்தத்துள் விளரி பிறக்கும்; விளரியுட் கைக்கிளை பிறக்கும் எனப் பிறப்புமுறை கூறப்பட்டது. இக்காலவழக்குப்பெயர்களாற்கூறின் காந்தாரத்து

நிஷாதம் பிறக்கும்; நிஷாதத்து மத்திமம் பிறக்கும்; மத்திமத்து ஷட்ஜம் பிறக்கும்; ஷட்ஜத்துப் பஞ்சமம் பிறக்கும்; பஞ்சமத்து ரிஷபம்பிறக்கும்; ரிஷபத்துத் தைவதம்பிறக்கும்: என அறிகின்றும். ஸ்வரங்களுக்குரிய குறியீட்டெழுத்துக்களினுலே காட்டுமிடத்து,

க > நி > ம > ச > ப > ரி > த

எனவாகும். ஐந்தாம்நரம்பினைக் கிளைநரம்பு என்பது பழந்தமிழ் வழக்கு; பஞ்சமம் என்பது இக்காலத்து வழக்கு.

காந்தாரத்திற்குப் பஞ்சமம் நிஷாதம்
நிஷாதத்திற்குப் பஞ்சமம் மத்திமம்
மத்திமத்திற்குப் பஞ்சமம் ஷட்ஜம்
ஷட்ஜத்திற்குப் பஞ்சமம் பஞ்சமம்
பஞ்சமத்திற்குப் பஞ்சமம் ரிஷபம்
ரிஷபத்தூக்குப் பஞ்சமம் தைவதம்.

ஆதலினுலே பழந்தமிழர்கள் ஏழிசைகளையும் கிளைமரபாக (ஒன்றினுக்கொன்று பஞ்சமமாக)ப் பிறப்பித்தார்களென அறிகின்றும். நின்றநரம்பிற்குப் பதின்மூன்றும் அலகிலே (சுருதியிலே) கிளைநரம்பு ஒலிக்கும்.

கிளைக்குக்கிளை இருபத்தாறும் அலகிலே ஒலிக்கும். அலகுத் தொகை இருபத்திரண்டின் மேற்படுமிடத்து இருபத்திரண்டைக் கழித்துக்கொள்ளல்வேண்டும். மேலே இருபத்தாறில் இருபத்திரண்டைக் கழிக்கக் கிடைப்பது நான்கு. ஆதலினுலே கிளைக்குக் கிளை நான்காம் அலகிலே ஒலிக்குமெனக் கண்டாம். கிளைக்குக் கிளைக்குக் கிளை (அஃதாவது கிளைமுக்கோடு) நான்கினெடு பதின்மூன்று சேர்க்க வரும் பதினேழாம் அலகிலே ஒலிக்கும். கிளை நாற்கோடு பதினேழுடன் பதின்மூன்றினைச் சேர்த்து இருபத்திரண்டைக் கழிக்க வரும் எட்டாம் அலகிலே ஒலிக்கும். கிளை ஐங்கோடு எட்டுடன் பதின்மூன்றினைச் சேர்க்கவரும் இருபத்தோராம் அலகிலே ஒலிக்கும். கிளை அறுகோடு இருபத்தொன்றுடன் பதின்மூன்றினைச் சேர்த்து இருபத்திரண்டைக் கழிக்கவரும் பன்னிரண்டாம் அலகிலே ஒலிக்கும்.

இவ்வாறுபெற்ற முடிபுகளைப் பிறப்புமுறையாக வைக்கக் கிடைப்பது,

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| க > | நி > | ம > | ச > | ப > | ரி > | த |
| 0 | 13 | 4 | 17 | 8 | 21 | 12 |

ஒரு தானத்திற்கு 22 அலகு ஆதலின் மெலிவுத்தானத்திலே 'க' நின்ற இடம் '0' ஆயின் சமன்தானத்திலே 'க' நின்ற இடம் '22' ஆகும்.

'க' முதல் 'க' ஈறுகிய எட்டுநரம்புகளையும் நிரலாகவைத்து அவை நின்ற இடங்களையுங் குறிக்கக் கிடைப்பது:

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| க | ம | ப | த | நி | ச | ரி | க |
| 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 | 22 |

நரம்புநின்ற எண்ணிலிருந்து அதற்கு முன்னுள்ள எண்ணைக் கழிக்கக் கிடைப்பது நரம்பின் அலகு.

| | | |
|---|---|---|
| ம (குரல்) | 4— 0=4 | அலகு |
| ப (துத்தம்) | 8— 4=4 | அலகு |
| த (கைக்கிளை) | 12— 8=4 | அலகு |
| நி (உழை) | 13—12=1 | அலகு |
| ச (இளி) | 17—13=4 | அலகு |
| ரி (விளரி) | 21—17=4 | அலகு |
| க (தாரம்) | 22—21=1 | அலகு |

அங்ஙனமாதலின் பழந்தமிழ்த்தாரக்கிரமத்திலே தாரமும் உழையும் ஒவ்வோர் அலகுபெற எஞ்சிநின்ற ஐந்தும் தனித்தனி நான்கு அலகு பெறுவனவெனக் கண்டாம்.

நின்றநரம்பினுள்ளே கிளைநரம்பு பிறக்குமென்பதைச் செவி கருவியாகவும் நரம்பின் நீளத்தைக்குறிக்கும் எண்கருவியாகவும் ஆராயலாம்.

சிலப்பதிகாரம் கானல்வரியிலே பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு எனக் கூறிய எட்டனுள்ளே ஆராய்தலுக்கு அரும்பதவுரையாசிரியர் கூறிய இலக்கணம் வருமாறு:—

'ஆராய்த லென்பதனமைவரக் கிளப்பிற்
குரன்முத லாக இணைவழி கேட்டும்

இணை யிலாவழிப் பயனொடு கேட்டும்
தாரமும் உழையும் தம்மிற் கேட்டும்
குரலும் விளரியும் தம்மிற் கேட்டும்
துத்தமும் விளரியும் துன்னறக் கேட்டும்
விளரி கைக்கிளை விதியுளிக் கேட்டும்
தளரா தாகிய தன்மைத் தாகும்'

இடத்தால் இணைவு, ஓசையால் இணைவு எனும் இரண்டுபொருளிலும் பழைய இசைநூலாசிரியர்கள் 'இணை' யென்னும் சொல்லினை வழங்கினார்கள்.

கமபதநிசரிக என்னும் எட்டுநரம்புகளிலும் 'ம' என்னும் இரண்டாம்நரம்பும், 'ரி' என்னும் ஏழாம்நரம்பும் நின்றநரம்பாகிய 'க'வுக்கு இடத்தால் இணைந்துநின்றன. ஐந்தாம் நரம்பாகிய 'நி' நின்ற நரம்பிற்குக் கிளைநரம்பாகவும், நான்காம் நரம்பாகிய 'த' நின்றநரம்பிற்கு நட்புநரம்பாகவும் ஓசையால் இணைந்துநின்றன. இவையொழிந்த மூன்றும் ஆறும் நரம்புகள் இணையாநரம்பாய்ப் பகைநரம்பாயின. இங்ஙனம் ஆராயுமிடத்து ஓசைநோக்கி, இணையும் நரம்பு இணையாநரம்பு என இருபடியாக்கி, அவை தம்முள் இணையும் நரம்பினை இணை, கிளை, நட்பு என மூன்றாக்கினாரென அறிதல் வேண்டும்.

மேற்காட்டிய ஆராய்தல் இலக்கணச்சூத்திரத்திலே 'குரன் முதலாக இணைவழிகேட்டும்' என்னுமிடத்து இணையென்றது ஓசையிணைவனவாகிய இணை, கிளை, நட்பு என்னும் மூன்றிணையுமாம். இவை தம்முள்ளே கிளைநரம்பு இணைவு இன்றியமையாது வேண்டப்படுவவாதலின், தாரமும் உழையும், குரலும் இளியும், துத்தமும் விளரியும், விளரியும் கைக்கிளையும் என நான்குபடி ஆராய்க என்றார். மேலே பிறப்புமுறை ஆராய்ச்சியிலிருந்து உழையும் குரலும் என ஒருபடியும், இளியும் துத்தமும் என ஒருபடியும் உளவென அறிகின்றாம். இக்காலத்தார் இளியும் துத்தமும் 'ச-ப' இணைந்துநிற்பதனைச் செவிகருவியாகக் கேட்டு உணர்வர். இவ்விணையிலே பிறக்கும் இனிய ஓசையே 'ப-ரி' 'ரி-த' 'க-நி' 'நி-ம' 'ம-ச' என்னும் ஐந்தினும் கேட்கப்படும். 'த-க' இணையாமைக்குக் காரணமும், 'இணையிலாவழிப் பயனொடுகேட்கும் மரபினையும்' பாலைத்திரிபு உரைக்கும்வழிக் காட்டுவாம்.

பாணன் யாழ்நரம்பிற்கு இசைகூட்டுமிடத்து முதல்நரம்பாகிய தாரத்தைச் செவிகருவியாக அமைத்துக்கொள்ளுவான். 'தாரமும் உழையுந் தம்மிற்கேட்டு' உழைநரம்பினை இசைகூட்டுவான். உழையும் குரலும் ஒருங்குகேட்டுக் குரல்நரம்பினை இசைகூட்டுவான். 'குரல்வாய் இளிவாய்க்கேட்டு'க் குரல்நரம்பிற்கு இசைகூட்டுவான். இளியையுந் துத்தத்தையும் ஒருங்கிசைத்துத் துத்தநரம்பிற்கு இசைகூட்டுவான். 'துத்தமும் விளரியுந் துன்னறக்கேட்டு' விளரி நரம்பிற்கு இசைகூட்டுவான். 'விளரி கைக்கிளை விதியுளிக்கேட்டு'க் கைக்கிளைநரம்பிற்கு இசைகூட்டுவான். இக்காலத்துக் குறியீட்டெழுத்துக்களாற் சொல்லுமிடத்து 'ச - ப' முறையாகக் 'க - நி' 'நி - ம' 'ம - ச' 'ச - ப' 'ப - ரி' 'ரி - த' என நரம்புகளைத் தெறித்து ஏழுநரம்பிற்கும் இசைகூட்டுவான். எண்முறையாக நரம்புநீளங்களை அறிவது விரிந்தபொருளாதலின் அதனைப் பின்னொருபொருளுரையிலே தனியாக ஆராய்வாம்.

இவ்வாறு பழைய பாணன் முதலிலே பெற்ற ஏழுஸ்வரங்களும் இக்காலத்தார்வழங்கும் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களிலே எந்த ஸ்வரஸ்தானங்களிலே நின்றனவென்பதை இனி ஆராய்தல்வேண்டும். இப்பொருள், விரிவாகப் 'பாலைத்திரிபு' என்னும் தலைப்பெயர்க் கீழ் ஆராயப்படும். இங்குச் சுருக்கமாகக்குறிப்பிடுவாம்.

சிலப்பதிகாரம் வேனிற்காதை ௩௫-ஆம் அடி 'குரல்வாய் இளிவாய்க் கேட்டனள்' என்பதற்கு அடியார்க்குநல்லார் உரைகூறுமிடத்து, 'அந்தரம் ஐந்தும் நீக்கி உறழ்ந்து கண்டுகொள்க' என்றாராதலின், ஏழு இசைநரம்புகளின் வேறாக ஐந்து அந்தரக்கோல்கள் உளவெனப்பெற்றாம். ஏழும் ஐந்தும் பன்னிரண்டு. இவையே 'ஆய்ச்சியர்குரவை'யினுள்ளே பன்னிரண்டு இராசிவீடுகளாகக் காட்டப்பட்டன. இவை நேரிசைமண்டிலம் எனவும் குறிக்கப்பட்டன.

'துலைநிலைக் குரலும் தனுநிலைத் துத்தமும்
நிலைபெறு கும்பத்து நேர்கைக் கிளையும்
மீனத் துழையும் விடைநிலத் திளியும்
மானக் கடகத்து மன்னிய விளரியும்
அரியுடைத் தாரமும் அணைவுறக் கொளலே'

‘இளியிடபங் கற்கடக மாம்விளரி சிங்கம்
தளராத தார மதுவாம்—தளராக்
குரல்கோற் றனுத்துத்தம் கும்பங் கிளையாம்
வரலா றுழைமீன மாம்’

‘குரறுலை விற்றுத்தம் கைக்கிளையே கும்பம்
பரிய வுழைமீனம் பாவாய்—அரிதாரம்
கொல்லே றிளிவிளரி கற்கடகங் கோப்பமைந்த
தொல்லே ழிசைநரம்பிற் காம்’

என்னும் உரைச்சூத்திரங்களிற் கூறியவாறு ஏழு நரம்புகளையும் நிறுத்தி அவைநின்ற அலகு எண்களையும் குறிப்பாம்.

| இராசி | நரம்பு | அலகெண் |
|---|---|---|
| மேடம் | | |
| இடபம் | இளி—ச | 17 |
| மிதுனம் | | |
| கற்கடகம் | விளரி—ரி | 21 |
| சிங்கம் | தாரம்—க | 22 |
| கன்னி | | |
| துலாம் | குரல்—ம | 4 |
| விருச்சிகம் | | |
| தனு | துத்தம்—ப | 8 |
| மகரம் | | |
| கும்பம் | கைக்கிளை—த | 12 |
| மீனம் | உழை—நி | 13 |

மேடம், மிதுனம், கன்னி, விருச்சிகம், மகரம் என்னும் ஐந்துவீடுமே ஐந்து அந்தரக்கோல்களின் இடமாகும். இவ்வந் தரக்கோல்கள் நட்புமரபாக அமைந்துநிற்பன.

நின்ற நரம்பிற்கு ஒன்பதாம் அலகிலே நட்புநரம்பு ஒலிக்கும். நட்புக்குநட்பு பதினெட்டாம் அலகில் நின்றது. நட்புக்குநட்புக்கு நட்பு (நட்பு முக்கோடு) பதினெட்டினோடு ஒன்பது சேர்த்து இருபத்திரண்டினைக் கழிக்கப்பெற்ற ஐந்தாம் அலகிலே நின்றது. நட்பு நாற்கோடு ஐந்தினோடு ஒன்பது சேர்க்கவரும் பதினான்காம் அலகிலே ஒலிக்கும். நட்பு ஐங்கோடு பதினான்கினோடு ஒன்பது சேர்த்து இருபத்திரண்டினைக் கழிக்கவரும் முதலாம் அலகிலே ஒலிக்கும். ஆகவே, அந்தரக்கோல்கள் ஐந்தும் நிற்கும் அலகெண்கள் 9, 18, 5, 14, 1 ஆம். இவற்றை மேற்கண்ட நரம்புநிலை அலகெண்களிடையே நிரலுறவைக்குமிடத்துப் பெறப்படுவன. கன்னி 1, விருச்சிகம் 5, மகரம் 9, மேடம் 14, மிதுனம் 18 ஆகும். பன்னிரண்டு இராசிவீடுகளையும் நிரையாகவைத்து மேலேபெற்ற பன்னிரண்டு அலகெண்களையும் எழுதிக்கொள்க.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 14 | 17 | 18 | 21 | 22 | 1 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 |

ஓர் இராசிவீட்டின் அலகு அளவினைக் காண்பதற்கு அதன் கீழுள்ள எண்ணிலிருந்து முன்னுள்ள எண்ணினைக் கழித்துக் காண்க. இங்ஙனம் கழித்துக்கண்ட எண்களை இராசிகளின்கீழ் எழுதி ஏழுநரம்புகளையும் அவைதமக்குரிய வீடுகளில் நிறுத்துக.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| | இளி | | விளரி | தாரம் | | குரல் | | துத்தம் | | கைக்கிளை | உழை |

இளிநரம்பு மேடம் இடபம் இரண்டினுக்குமுரிய 4 அலகு பெறுகின்றது. விளரி மிதுன கற்கடகங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. தாரம் சிங்கத்திற்குரிய ஓரலகு பெறுகின்றது. குரல் கன்னி துலாத்திற்குரிய 4 அலகு பெறுகின்றது. துத்தம் விருச்சிக தனுவினுக்குரிய 4 அலகு பெறுகின்றது. கைக்கிளை மகர கும்பத்திற்குரிய 4 அலகு பெறுகின்றது. உழை மீனத்திற்குரிய ஓரலகு பெறுகின்றது. இது தாரக்கிரமம்.

விளரி கைக்கிளை இடம்வேறுபடாதுநிற்க, ஏனைய ஐந்தும் ஒரு வீடு தள்ளிநிற்பது இளிக்கிரமம். இதுவே ஷட்ஜக்கிராமம். இக்காலத்துக் குறியீட்டெழுத்துக்களாற் காட்டுவாம்.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| நி | | ச | ரி | | க | | ம | | ப | த | |

ஷட்ஜம் இடப மிதுனங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. ரிஷபம் கற்கடகத்திற்குரிய 3 அலகு பெறுகின்றது. காந்தாரம் சிங்கம் கன்னிக்குரிய 2 அலகு பெறுகின்றது. மத்திமம் துலாம் விருச்சிகங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. பஞ்சமம் தனுமகரங்களுக்குரிய 4 அலகு பெறுகின்றது. தைவதம் கும்பத்திற்குரிய 3 அலகு பெறுகின்றது. நிஷாதம் மீனமேடங்களுக்குரிய 2 அலகு பெறுகின்றது. இவையனைத்தும் சுத்தஸ்வரங்கள். வெற்றிடங்கள் ஐந்தில் நிற்பன: சிங்கத்தில் சதுஸ்ருதிரிஷபம், துலாத்தில் அந்தரகாந்தாரம், தனுவில் பிரதிமத்திமம், மீனத்தில் சதுஸ்ருதி தைவதம், இடபத்தில் காகலிநிஷாதம். ஷட்ஜத்தை மேருவாக(தொடங்குமிடமாக)வைத்துப் பன்னிரண்டு ஸ்வரஸ்தானங்களுக்குமுரிய சுருதிநிலையங்களை (அலகுநின்றவிடங்களை)க் கணக்கிடுவாம். ஸ்வரஸ்தானத்துச் சுருதித்தொகையோடு முன்னுள்ள சுருதித்தொகைகளைக் கூட்டியெழுதுக.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| கைசிகி - நி | காகலி - நி | ஷட்ஜம் | சுத்த - ரி | சதுஸ்ருதி - ரி | சாதாரண - கா | அந்தர - கா | சுத்த - ம | பிரதி - ம | பஞ்சமம் | சுத்த - தை | சதுஸ்ருதி - தை |
| 18 | 21 | ௦ 22 | 3 | 4 | 5 | 8 | 9 | 12 | 13 | 16 | 17 |

பழைய இசைமரபுமுடிபுகளோடு இக்காலத்து இசைமரபினை ஒப்பவைத்து நோக்குதற்குச் சுருதியெண்களைக் கருவியாகக் கொள்ளலாம். ஷட்ஜத்தைத் தொடங்குமிடமாகக்கொண்ட இருபத்திரண்டு சுருதிஸ்தானங்களிலே 3-ஆம் சுருதிஸ்தானம் சுத்தரிஷபம், 4 சதுஸ்ருதிரிஷபம், 5 சாதாரணகாந்தாரம், 8 அந்தரகாந்தாரம், 9 சுத்தமத்திமம், 12 பிரதிமத்திமம், 13 பஞ்சமம், 16 சுத்ததைவதம், 17 சதுஸ்ருதிதைவதம், 18 கைசிகிநிஷாதம், 21 காகலிநிஷாதம், 22 ஷட்ஜம் என அறிக. சுருதி எண்களைக் கொண்டு கணக்கிடும்போது இராசிவீட்டைக் கருதவேண்டியதில்லை.

பாணன் காந்தாரத்திலே தொடங்கி ஒன்றினுக்கொன்று பஞ்சமமாக முதலிலே பிறப்பித்துக்கொண்ட ஏழிசைநரம்புகளும் 4-8-12-13-17-21-22-ஆம் சுருதிஸ்தானங்களிலே நின்றன என முன்னர்க் காட்டினும். ஷட்ஜக்கிராமத்திலே இவை சதுஸ்ருதிரிஷபம், அந்தரகாந்தாரம், பிரதிமத்திமம், பஞ்சமம், சதுஸ்ருதிதைவதம், காகலிநிஷாதம், ஷட்ஜம் என நின்றனவென்பது மேலே கணித்துக்காட்டிய சுருதியெண்களால் அறியக்கிடக்கின்றது. வேங்கடமகிவகுத்த மேளகர்த்தாராகங்களிலே இது 65-ஆம் மேளமாகிய மேசகல்யாணி ஆகும். பாணனதுயாழிலே மேசகல்யாணி முதற்பிறந்ததாயினும், பண்டையோர் இதனைப் பெரும்பண்வரிசையில் வைக்கவில்லை; ஏழ் பெரும்பாலையினுள் ஒன்றாக்கினர்.

மத்திமக்கிராமத்தினை இனி ஆராய்வாம். விளரி (ரி), கைக்கிளை (க) இடம்வேறுபடாது நிற்க, ஏனைய ஐந்தும் ஒருவீடு தள்ளிநிற்பது ஷட்ஜக்கிராமம் என மேலே காட்டினும். ரி-த-ப மூன்றும் இடம் வேறுபடாது நிற்க எஞ்சிய நான்கும் ஒருவீடு தள்ளிநிற்பது மத்திமக் கிராமமாம். பழையபடி இராசிவீடுகளிலே இவற்றை நிறுத்தக் கிடைப்பது.

| மே | இ | மி | கற் | சி | கன் | து | வி | த | ம | கு | மீ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 3 | 1 | 3 | 1 | 1 | 3 | 1 | 3 | 1 | 3 | 1 |
| நி | | ச | ரி | | க | | ம | ப | | த | |

இந்தக்கிராமத்திலே ம-ப-த-நி-ச-ரி-க-என்னும் ஏழும் 4-3-4-2-4-3-2 என அலகுபெற்றுநின்றன என்பது மேற்காட்டிய இராசிநிலைகளினின்று தெரியக்கிடக்கின்றது.

[தொடரும்]

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—௩௮.] விஷு௵ புரட்டாசி௴ [பகுதி—௧௧.

Vol. 38. September — October 1941. No. 11.

## எண்ணலளவை

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

'கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடா காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே' (திருமந்திரம்.)

'எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு' (திருவள்ளுவப்பயன்.)

'எண்ணென்பது கணிதம்; அது கருவியும் செய்கையும் என இருவகைப்படும்; அவை ஏரம்பமுதலிய நூல்களுட் காண்க,' எனத் திருவள்ளுவப்பயனுக்கு நல்லுரைகண்ட பேரறிஞராகிய பரிமேலழகர் கூறினர். ஏரம்பமுதலிய நூல்கள் வழக்கற்று வீழ்ந்தன. அங்ஙனமாதலின், இசையாராய்ச்சிக்கு வேண்டப்படுவனவாகிய கணிதமுடிபுகளைப் பிறமொழிவாயிலாகப் பெறுதல் இன்றியமையாததாயிற்று. 'இசைக்கிரமம்' என்னும் பொருளுரையின் பிற்பகுதியினை எழுதுதற்குமுன் 'எண்ணலளவை' என்னும் இத் தலைப்பெயர்க்கீழ்க் கணிதமுடிபுகள்சிலவற்றைத் தொகுத்துக் கூறுவாம். இவை இசையொழிந்த பிற ஆராய்ச்சிக்கும் ஒருதலை பயன்படும் நீர்மைய.

வழக்கிலுள்ள எண்ணளவை பப்பத்து மடங்காகப் பெருகிச் செல்லுமியல்பினதாதலின் அதனைப் பதின்மரபு (Decimal Notation) எனல் பொருந்தும். ஒன்றுமுதற் பத்துவரையுமுள்ள எண்கள் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9, 10 என எழுதப்படுவ. இவ்விலக்கங்களை அராபிய இலக்கம் என்ப. தமிழிலக்கம் உளவாயினும், எழுதல் அச்சிடுதல் கணக்கியற்றல் என்னும் இவற்றிற்கு எளிதாம்நீர்மை நோக்கிப் பொதுவழக்கிலுள்ள அராபிய இலக்கங்களையே யாமும் வழங்குவாம்.

முதலில் நின்ற ஒன்பது எண்களை முதலெண் என்ப. முதலெண் ஒன்பதினையும் பதின்மடங்கு கொள்ளக்கிடைப்பன: பத்து, இருபது, முப்பது, நாற்பது, ஐம்பது, அறுபது, எழுபது, எண்பது, தொண்ணூறு (10, 20, 30, 40, 50, 60, 70, 80, 90) ஆம். இவை தம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன நூறு, இருநூறு, முந்நூறு, நானூறு, ஐந்நூறு, அறுநூறு, எழுநூறு, எண்ணூறு, தொளாயிரம் (100, 200, 300, 400, 500, 600, 700, 800, 900) ஆம். இவைதம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஓராயிரம் (1000) முதல் ஒன்பதினாயிரம் (9000) வரை யென்பதும், இவை தம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஒருபதினாயிரம் (10000) முதல் தொண்ணூறாயிரம்வரை (90000)வரை யென்பதும், இவைதம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஒருநூறாயிரம் (100000) முதல் ஒன்பதுநூறாயிரம் (900000) வரை யென்பதும், இவைதம்மைப் பதின்மடங்குகொள்ளக்கிடைப்பன ஒருபதுநூறாயிரம் (1000000) முதல் தொண்ணூறுநூறாயிரம் (9000000) வரை யென்பதும் அறிதற்பால.

நூறுநூறாயிரம் கோடியெனப்படும். நூறாயிரத்தினை இலட்சம் என்பது வடநூல்வழக்கு. தமிழ்வழக்கின்படி 72465318 எழுகோடியே இருபத்துநான்குநூறாயிரத்து அறுபத்தையாயிரத்து முந்நூற்றுப்பதினெட்டு ஆகும். வடமொழிவழக்கினைப் பின்பற்றி

'நூறாயிரத்து' என்பதை நீக்கி 'இலட்சத்து' என்பதைப் பெய்து கொள்ளின், மேற்காட்டிய எண் ஏழுகோடியே இருபத்துநான்கு இலட்சத்து அறுபத்தையாயிரத்து முந்நூற்றுப்பதினெட்டு என வாசிக்கப்படும். 'கோடி' எட்டாந்தானத்தது. இதனைநோக்கிப் போலும் 'ஏகமெண் மடங்கு கொண்டது கோடி' எனப் பிங்கல நிகண்டுகூறும். ஏகம் முதற்றானம்; பத்து இரண்டாந்தானம்; பத்தினை இருபடிவைத்துப் பெருக்கிப்பெற்றநூறு மூன்றாந்தானம்; பத்தினை முப்படிவைத்துப் பெருக்கிப்பெற்ற ஆயிரம் நான்காந் தானம்; பத்தினை நாற்படிவைத்துப் பெருக்கிப்பெற்ற பதினாயிரம் ஐந்தாந்தானம்; பத்தினை ஐம்படிவைத்துப் பெருக்கிப்பெற்ற இலட்சம் ஆறாந்தானம்; பத்தினை அறுபடிவைத்துப் பெருக்கிப் பெற்ற பத்திலட்சம் ஏழாந்தானம்; பத்தினை எழுபடிவைத்துப் பெருக்கிப்பெற்ற கோடி எட்டாந்தானம் என அறிக. இத்தனை படியென்பதைக் குறிக்கும் எண்ணை வலப்புறத்தில் மிதத்தி எழுது தல் மரபு. = என்பது சமன்குறி, சமன் என வாசிக்கப்படும்.

$$10^1 = 10$$
$$10^2 = 100$$
$$10^3 = 1000$$
$$10^4 = 10000$$
$$10^5 = 100000$$
$$10^6 = 1000000$$
$$10^7 = 10000000$$

பத்து ஒருபடி சமன்பத்து; பத்து இருப்டி சமன்நூறு; பத்து முப்படி சமன் ஆயிரம்; பிறவும் இப்படியே. வலப்புறத்தில் மிதத்தியெழுதிய எண்ணினைப் 'படியெண்' என்பாம்.

கோடிகோடி சங்கம் எனப்படும். கோடி, பத்துக்கோடி, நூறு கோடி, ஆயிரகோடி, பதினாயிரகோடி, இலட்சகோடி, பத்திலட்ச கோடி, சங்கம். முதல் கடை யிரண்டும் உள்பட எட்டுப்பெயர்கள் உள. இதனை நோக்கிப்போலும் 'கோடி யெண்மடங்கு கொண்டது சங்கம்' எனப் பிங்கலநிகண்டுகூறும். கோடி $10^7$ ஆதலின், கோடி கோடியாகிய சங்கம் $10^{14}$ ஆகும். இவ்வெண் பதினைந்துதானத்தது.

'சங்கமெண் மடங்கு கொண்டது விந்தம்'

'விந்தமெண் மடங்கு கொண்டது குமுதம்'

'குமுதமெண் மடங்கு கொண்டது பதுமம்'

'பதுமமெண் மடங்கு கொண்டது நாடு'

'நாடெண்மடங்கு கொண்டது சமுத்திரம்'

'சமுத்திர மெண்மடங்கு கொண்டது வெள்ளம்'

என்னும் சூத்திரங்களுக்கும் இவ்வாறே பொருள்காண்புழிக் கோடி சங்கம் விந்தம் எனவும், கோடிவிந்தம் குமுதம் எனவும், கோடி குமுதம் பதுமமெனவும், கோடிபதுமம் நாடு எனவும், கோடிநாடு சமுத்திரம் எனவும், கோடிசமுத்திரம் வெள்ளமெனவும் வெளியாகின்றன.

'நெய்தலுங் குவளையும் ஆம்பலும் சங்கமும்
மையில் கமலமும் வெள்ளமும் நுதலிய
செய்குறி யீட்டங் கழிப்பிய வழிமுறை
கேழல் திகழ்வரக் கோலமொடு வழிமுறை
யூழி யொருவினை யுணர்த்தலின் முதுமைக்கு
மூழி யாவரு முணரா
ஆழி முதல்வநிற் பேணுதுந் தொழுது'

எனப் பரிபாடலுட் கீரந்தையார் கூறியவற்றுள்ளே, ஆம்பல் குமுதமெனவும், கமலம் பதுமமெனவும் அறிகின்றாம். நெய்தல் நிலவுரிமைபற்றிச் சமுத்திரமாதல் சாலும்; குவளையினை நாடு எனல் பொருந்தாட.

'×' பெருக்கற்குறி, இதனைப் 'பெருக்கு' என வாசிப்பாம்.

கோடி×கோடி=சங்கம். இது 15 தானத்தது.

கோடி×கோடி×கோடி=விந்தம். இது 22 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி=குமுதம் (ஆம்பல்). இது 29 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி=பதுமம் (கமலம்). இது 36 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி=நாடு (குவளை). இது 43 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி= சமுத்திரம் (நெய்தல்). இது 50 தானத்தது.

கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி×கோடி× கோடி=வெள்ளம். இது 57 தானத்தது.

சங்கினது உருவம் இருகோடி (கோணம்). விந்தத்தின் (மலையின்) உருவம் முக்கோடி(கோணம்). ஆம்பலின் உருவம் நாற்கோடி (நாலிதழ்). தாமரையினுருவம் ஐங்கோடி (ஐயிதழ்)–பதுமபந்தம் ஐயிதழாக வரையப்படும். நாட்டினுருவமும், குவளையினுருவமும் அறுகோடி (அறுகோணம், ஆறிதழ்). சமுத்திரத்தினுருவம் எழுகோடி (ஏழுகடல்), நெய்தல்மலருக்கு இதழ் ஏழாதல்வேண்டும். வெள்ளத்தினுருவம் எண்கோடி எட்டுத்திக்கிலும் பரவுவது. இவை யாவும் காரணப்பெயராதல காண்க. சங்கநிதி கோடிகோடி பொன். பதுமநிதி கோடிகோடிகோடிகோடிகோடிபொன். இவை எண்ணினல் எய்திய பெயர்கள்.

இப்பேரெண்களை வழங்கும் வான நூன்முடிபுகள்சிலவற்றைத் தருவாம். அண்டத்திலுள்ள எப்பொருளினும் ஒளியே மிகுந்த வேகமுடையது. அது ஒருசெக்கண்டில் (Second, இருநொடிப்பொழுது) ஓரிலட்சத்து எண்பத்தாறுயிரம் (1,86,000) மைல் செல்லும். ஒருமணிநேரத்திலே அறுபத்தாறுகோடியே தொண்ணூற்றாறு இலட்சம் (66,96,00,000) மைல் செல்லும். ஒருநாளிலே ஓராயிரத்தறுநூற்றேழுகோடியே நாலுலட்சம் (1,607, 04,00,000 மைல் செல்லும். ஓராண்டிலே ஐந்திலட்சத்து எண்பத்தாறுயிரத்து ஐஞ்ஞூற்றறுபத்தொன்பதுகோடியே அறுபதிலட்சம்

(5,86,569,60,00,000) மைல் செல்லும். ஆதிரை (Sirins) எனப்படும் விண்மீனிலிருந்து பூமிக்கு ஒளிவர எட்டுவருடமும் எட்டு மாதமும் செல்லுமென்பர். ஆதலின் அவ்விண்மீனின் தூரம் ஏறத்தாழ ஐம்பத்தோரிலட்சகோடிமைலாகும். அந்திரமீதா (Andromeda) என்னும் விண்மீனிலிருந்து பூமிக்கு ஒளிவர எட்டிலட்சத்து ஐம்பத்தையாயிரம் ஆண்டு செல்லுமெனக் கணக்கிட்டிருக்கின்றனர். ஆதலின் அவ்விண்மீனின்தூரம் ஐம்பதினாயிரம் சங்கமைலுக்குமேலாமென அறிகின்றோம். அண்டகோளத்திலுள்ள விண்மீன்களின்தொகை இருபதினாயிரகோடியெனக் கணிதநூலார் கணக்கிட்டிருக்கின்றனர். இவையனைத்தினையும் அடக்கிய அண்டகோளமும் அளவினுட்பட்டதெனக் கணிதநூற்பேரறிஞராகிய எயின்ஸ்தேயின் (Eiustein) என்னும் ஆசிரியர் கூறுவர். இவர் கருத்தின்படி அண்டகோளத்தினெல்லையிலிருந்து புறப்பட்ட ஒளி பூவுலகத்தை அடைய மூவாயிரத்திருநூறுகோடி ஆண்டுகள் செல்லும். அங்ஙனமாதலின் அண்டகோளத்தின் அச்சுநீளம் முந்நூற்றெழுபத்தைந்து விந்தமே நாற்பதுலட்சத்து நாற்பத்தையாயிரத்து நானூற்றுநாற்பதுசங்கம் (375,40,45,440,00,00,000, 00,00, 000) மைல் ஆகும்.

அண்டத்தின் அளவைக் காண்பதற்குப் பேரெண்கள் கருவியாதல்போல அணுவினளவைக் காண்டதற்குக் கீழ்வாயெண்கள் கருவியாவன.

ஏகத்தின் பத்திலொருகூறு .1 என எழுதப்படும், இதனைப் 'புள்ளி ஒன்று' என வாசிப்பாம். ஏகத்தின் நூற்றிலொருகூறு .01 என எழுதப்படும். இதனைப் 'புள்ளி வெற்றிலக்கம் ஒன்று' என்பாம். ஏகத்தின் ஆயிரத்திலொருகூறு .001 என எழுதப்படும். இதனைப் 'புள்ளி வெற்றிலக்கம் 'வெற்றிலக்கம் ஒன்று' என வாசிப்பாம் பிறவும் இப்படியே.

$$.1 = \frac{1}{10} = 10^{-1}$$
$$.01 = \frac{1}{100} = 10^{-2}$$

$$.001 = \frac{1}{1000} = 10^{-3}$$
$$.0001 = \frac{1}{10000} = 10^{-4}$$

மேலேகுறித்த படியெண்களை, 'குறையொன்று,' 'குறையிரண்டு,' 'குறைமூன்று,' 'குறைநான்கு' என்பாம். ஏகத்தின்படியெண் வெற்றிலக்கம் ஆகும். இது இங்ஙனம் ஆதலைக் கீழே காண்க. எண்ணினை வைத்துப் பத்தினாற் பிரித்துச்செல்ல ஒவ்வொரு பிரித்தலுக்கும் படியெண் ஒவ்வொன்று குறையும். ஆயிரத்திற்றொடங்கி ஆயிரத்திலொருகூறு (கீழ்வாய் ஆயிரம்) வரையும் செல்வாம்.

$$1000 = 10^{3}$$ பத்துமுப்படி
$$100 = 10^{2}$$ பத்து இருபடி
$$10 = 10^{1}$$ பத்து ஒருபடி
$$1 = 10^{0}$$ பத்து வெற்றுப்படி
$$.1 = 10^{-1}$$ பத்துக்குறையொருபடி
$$.01 = 10^{-2}$$ பத்துக்குறையிருபடி
$$.001 = 10^{-3}$$ பத்துக்குறைமுப்படி

அங்ஙனமாதலின்,

$$1000 \times .001 = 10^{3} \times 10^{-3}$$
$$= 10^{0}$$
$$= 1$$

கணிதகிருத்தியத்திலே கூட்டற்குறி +, கழித்தற்குறி —, இவற்றைக் 'கூட்டு', 'கழி' எனவும், 'நிறை', 'குறை' யெனவும் வாசிக்கலாம். பிரித்தற்குறி ÷, இதனைப் பிரியென வாசிக்கலாம். பின்னவெண்களில் கீழ் உறுப்புப் 'பகுதி'யெனவும் மேலுறுப்புத் 'தொகுதி'யெனவும்படுவ. $\frac{3}{4}$ என்பதில் 4 பகுதி, 3 தொகுதி. ஏகத்தை 4 கூறுசெய்து 3 கூறு எடுத்ததென்பதை இப்பின்னவெண் குறிக்கும். பின்னவெண்ணின் பகுதியையும் தொகுதியையும் ஒரே எண்ணினாற் பெருக்கினாலோ பிரித்தாலோ பின்னவெண்ணின்மதிப்பு வேறுபடாது.

$$\frac{3}{4}=\frac{15}{20}=\frac{75}{100}=\cdot75$$

$$\frac{1}{8}=\frac{5}{40}=\frac{25}{200}=\frac{125}{1000}=\cdot125$$

மேலே பின்னவெண்களோடு ஒத்த மதிப்புடைய கீழ்வாயெண்களைப் பெற்றோம்.

$$.125 = .1 + .02 + .005$$
$$= \frac{1}{10} + \frac{2}{100} + \frac{5}{1000}.$$

பத்திலொருகூறும், நூற்றிலிருகூறும், ஆயிரத்தில் ஐந்துகூறும் சேர்ந்து எட்டிலொருகூற்றுக்குச் சமமென்பது பெறப்பட்டது.

$10^1=10$, $10^2=100$ ஆதலின், இவற்றினிடையே உளவாய இருதானத்தெண்களின் படியெண் 1 உடன் ஒரு கீழ்வாயெண் சேர்ந்ததாதல்வேண்டும். $10^2=100$, $10^3=1000$ ஆதலின், இவற்றினிடையே உளவாய மூன்றுதானத்தெண்களின் படியெண் 2 உடன் ஒரு கீழ்வாயெண் சேர்ந்ததாதல்வேண்டுமென இவ்வாறு கொண்டு கணிதமுறையினாலே எவ்வெண்ணுக்கும் படியெண்ணைக் கணித்துக் கண்டிருக்கிறார்கள்.

நூறு நூறாயிரம் = கோடி

$$100\times100\times1000 = 1,00,00,000$$

$$10^2\times10^2\times10^3 = 10^7$$

சினைகளின் படியெண்களாகிய 2, 2, 3 என்பவற்றைக் கூட்டப் பெருக்கவெண்ணின் படியெண்ணாகிய 7 வருகிறது.

$$1,00,00,000\div1,000 = 10,000$$

$$10^7\div10^3 = 10^4$$

பிரிக்கப்படுமெண்ணின்படியெண்ணாகிய 7 இலிருந்து பிரிக்குமெண்ணின்படியெண்ணாகிய 3 ஐக் கழிக்க ஈவின்படியெண்ணாகிய 4 வருகிறது.

அங்ஙனமாதலின் படியெண்ணின் உபயோகத்தினாலே பெருக்கற்கிருத்தியம் கூட்டற்கிருத்தியமாகவும் பிரித்தற்கிருத்தியம் கழித்தற்கிருத்தியமாகவும் எய்திகின்றன. கணிதகிருத்தியங்களை இலகுப்படுத்துதல் காரணமாகப் படியெண்ணினை 'இலகுவெண்' (Logarithm) என்பர். இவற்றின்விரிவை வல்லார்வாய்க் கேட்டுணர்ந்துகொள்க. 'Log 100' என ஆங்கிலத்தில் வருவதனை 'லகு 100' எனத் தமிழில் எழுதுவாம்.

லகு 100 = 2

லகு 1000 = 3

லகு ·1 = —1

லகு ·01 = —2

லகு ·001 = —3

லகு 10 = 1

லகு 1 = 0

என்பன வெளிப்படை.

லகு 2 = ·3010

லகு 3 = ·4771

லகு 7 = ·8452

என்பன கணிதநூலார் கண்ட முடிபுகள்.

$2 \times 2 = 4$

$2 \times 3 = 6$

$10 \div 2 = 5$

$2 \times 4 = 8$

$3 \times 3 = 9$

ஆதலின்

லகு 4 = லகு 2 + லகு 2
= ·3010 + .3010
= ·6020

$$\text{லகு } 5 = \text{லகு } 10 - \text{லகு } 2$$
$$= 1 - .3010$$
$$= \cdot 6990$$

$$\text{லகு } 6 = \text{லகு } 2 + \text{லகு } 3$$
$$= \cdot 3010 + .4771$$
$$= \cdot 7781$$

$$\text{லகு } 8 = \text{லகு } 4 + \text{லகு } 2$$
$$= \cdot 6020 + .3010$$
$$= \cdot 9030$$

$$\text{லகு } 9 = \text{லகு } 3 + \text{லகு } 3$$
$$= \cdot 4771 + \cdot 4771$$
$$= \cdot 9542$$

$$\text{லகு } 12 = \text{லகு } 4 + \text{லகு } 3$$
$$= \cdot 6020 + \cdot 4771$$
$$= 1 \cdot 0791$$

$$\text{லகு } 15 = \text{லகு } 5 + \text{லகு } 3$$
$$= \cdot 6990 + \cdot 4771$$
$$= 1 \cdot 1761$$

$$\text{லகு } \tfrac{3}{2} = \text{லகு } 3 - \text{லகு } 2$$
$$= \cdot 4771 - \cdot 3010$$
$$= \cdot 1761$$

$$\text{லகு } \tfrac{4}{3} = \text{லகு } 4 - \text{லகு } 3$$
$$= \cdot 6020 - \cdot 4771$$
$$= \cdot 1249$$

இம்முடிபுகள் இசையாராய்ச்சிக்குப் பயன்படுதலை 'இசைக் கிரம'த்துப் பிற்பகுதியிலே காட்டுவாம்.

# சங்கீத மகரந்தம்



[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

'கதிர்திகிரி யான்மறைத்த கடல்வண்ண னிடத்துளாள்
மதிபுரையு நறுமேனித் தன்முன்னோன் வலத்துளாள்
பொதியவிழ் மலர்க்கூந்தற் பின்னைசீர் புறங்காப்பார்
முதுமறைதேர் நாரதனார் முந்தைமுறை நரம்புளர்வார்'

'மயிலெருத் துறழ்மேனி மாயவன் வலத்துளாள்
பயிலிதழ் மலர்மேனித் தன்முன்னோ னிடத்துளாள்
கயிலெருத்தங் கோட்டியநம் பின்னைசீர் புறங்காப்பார்
குயிலுவருள் நாரதனார் கொளைபுணர்சீர் நரம்புளர்வார்'

(சிலப்பதிகாரம்-ஆய்ச்சியர்குரவை)

'முதியவேதத்தின் சிக்கையென்னும் அங்கத்தை ஆராயும் நாரதனார்' என அடியார்க்குநல்லாருரை கூறுதலின், நாரதீசிக்ஷா என்னும் வடமொழியிசைநூல் இளங்கோவடிகள்காலத்திலே வழக்கிலிருந்ததென அறிகின்றோம். 'நாரதன்வீணை நயந்தெரிபாடலும்' எனக் கடலாடுகாதையினுள்ளே குறிப்பிட்டதும் இவ்வுண்மையினை வலியுறுத்துவனவாம்.

ராகநிரூபணம், ஸாரஸம்ஹிதா எனப் பெயரிய இசைநூல்களையும் நாரதீசிக்ஷாநூலாசிரியர்தாமே இயற்றினார் என வடமொழி வல்லார் கூறுவர். அடியார்க்குநல்லார் உரைப்பாயிரத்தினுள்ளே 'தேவவிருடி நாரதன் செய்த பஞ்சபாரதீய முதலாவுள்ள தொன்னூல்கள் இறந்தன' என்னுமிடத்துக் கூறிய பஞ்சபாரதீயம் மேற்கூறிய மூன்றனுள் ஒன்றோ, வேறோ? என அறிந்துகொள்ளமுடியவில்லை. அநாகுலன் என்னுந் தெய்வப்பாண்டியன்புதல்வன் ஸாரகுமாரன் இசையறிதற்குச் சிகண்டியார் இசைநுணுக்கம் என்னும் நூலினை இயற்றித்தந்ததுபோல, அக்குமரன்பொருட்டாக நாரதமுனிவர் ஸாரஸம்ஹிதா என்னும் நூலினை இயற்றியளித்தனரோ என்பதும் ஆராய்தற்குரியது.

'நாடகத்தமிழ்நூலாகிய பரதம், அகத்தியம் முதலாவுள்ள தொன்னூல்களுமிறந்தன' என அடியார்க்குநல்லார் கூறுதலின், வடமொழிப் பரதநூலின் வேறாகிய தமிழ்ப்பரதம் ஒன்று இருந்து இறந்தது எனவும் எண்ணவேண்டியிருக்கிறது.

நாரதீசிக்ஷா என்னும் பெயரினை 'நாரதசிக்ஷை' எனவும் 'சிக்ஷைநூல்' எனவும் இவ்வுரையினுள் வழங்குவாம். சிக்ஷைநூல் கருவியாகப் பழந்தமிழிசையாராய்ச்சியிலே சில ஐயப்பாடுகளை நீக்கிக்கொள்ளலாமென எண்ணி, அந்நூற்பிரதியினைத் தேடிச்சென்றவிடத்து நாரதப்பெயரினராகிய மற்றொருவர் இயற்றிய சங்கீதமகரந்தம் என்னும் நூற்பிரதிகிடைத்தது. இது, பரோடாமஹாராஜாவின் ஆதரவிலே அச்சேறி வெளியாகும் 'கெய்க்வாட் கீழைத்தேசநூல் வெளியீட்டு' வரிசையிலே 16-ஆம் இலக்கமாக வெளியிடப்பட்டது. பதிப்பாசிரியராகிய மங்கேஷ் ராமகிருஷ்ண தேலாங் என்பவர் இந்நூலின் காலத்தையாராயுமிடத்தால், இது சங்கீதரத்நாகர நூலாசிரியராகிய சாரங்கதேவர்காலத்திற்கு முந்தியதெனவும், பரதமுனிவரது நாட்டியசாஸ்திரத்துக்கு உரைவகுத்தோருள் ஒருவராகிய மாத்ரிகுப்தர்காலத்திற்குப் பிந்தியதெனவும் காட்டுகின்றார். மாத்ரிகுப்தர் மாளவதேசத்துச் சீலாதித்ய பிரதாபசீலன் (கி. பி. 550—600) காலத்தினர். சாரங்கதேவர்காலம் கி. பி. 1210-1247 ஆகும். அங்ஙனமாதலின் இந்நூல் கி. பி. ஏழாம்நூற்றாண்டு பதினோராம்நூற்றாண்டுகளின் இடையெல்லையிலே தோன்றியிருக்க வேண்டுமென்பது பதிப்பாசிரியரது முடிபு.

சிக்ஷைநூலாசிரியர் மகரந்தநூலாசிரியரின் வேறுவார் என்பதற்குப் பதிப்பாசிரியர் காட்டும் காரணங்கள்: சிக்ஷைநூல் வைதிகச்சொன்னடையினது; சாமகானமரபினைப் பெரிதும் கூறுவது; ஆதலினாலே பழமையானது. சிக்ஷைநூலாசிரியர் இயற்றியவாகக் குறிப்பிட்ட ராகநிரூபண, ஸாரஸம்ஹிதா நூற்பிரதிகள் கிடைத்திலவெனவும் பதிப்பாசிரியர் கூறுகின்றார்.

ஹிந்துஸ்தானத்தின் இசை (The Music of Hindostan by A. H. Fox Strangways, Oxford Press) என்னும் ஆங்கிலநூலினுள்ளே நாரதசிக்ஷையென்னும் நூலினைக்குறித்துச் சொல்லப்பட்

டிருப்பவற்றைப் பின்னர்ச் சுருக்கமாகத் தருவாம். சங்கீதமகரந்தத்தினுள்ளுறைபொருளைக்குறித்து முதலிலே ஒருசில கூறுவாம்.

இந்நூற்பதிப்பு ஓரேயொரு கையெழுத்துப்பிரதியினை ஆதாரமாகக்கொண்டதாதலின், மூலபாடத்திலே தெளியாத இடங்களும் பலவுள எனப் பதிப்பாசிரியர் கூறுகின்றார். கையெழுத்துப்பிரதி வித்யாபுரம் எனப் பெயரிய விஜயநகரத்தில் வசித்த கிருஷ்ணஜி தத்தர் என்பவரால் சகவருடம் 1599 (கி. பி. 1677)-ல், அஃதாவது இற்றைக்கு இருநூற்றறுபத்துநான்கு வருடங்களுக்குமுன்பு எழுதப்பட்டது.

சங்கீத அத்தியாயம், முதல் இரண்டாம் மூன்றும் நான்காம் பாதங்கள், நிருத்த அத்தியாயம், முதல் இரண்டாம் மூன்றும் நான்காம் பாதங்கள் என எண்பிரிவினதாக இந்நூல் நடக்கின்றது.

ஆசிரியர் வீணைக்கருவி பதினெட்டு உள எனக்கூறி, அவற்றின் பெயர்களைத் தருகின்றார். 'கச்சபி, குப்ஜிகா, சித்ரா, வஹந்தீ, பரிவாதிநீ, ஜயா, கோஷாவதீ, ஜ்யேஷ்டா, நகுலீ, மஹதீ, வைஷ்ணவீ, ப்ராஹ்மீ, ரௌத்ரீ, கூர்மீ, ராவணீ, ஸாரஸ்வதீ, கிந்நரீ, ஸைரந்த்ரீ, கோஷகா' என்னும் இவற்றுள் பரிவாதிநீ என்பதைப் பொதுப்பெயரென நீக்க, எஞ்சிநின்றன பதினெட்டு. கோஷாவதீ என்பது உதயணனது வீணையாகிய கோடபதியினை நினைவுறுத்துகின்றது. கோஷகா என்பது நால்வகையாழ்களுள் ஒன்றாகிய சகோடயாழ்ப்பெயரினை ஒருபுடை ஒத்துநிற்கின்றது.

இருபத்திரண்டுசுருதிகளுக்கும் இந்நூலிலே தரப்பட்டிருக்கும் பெயர்கள் பரதம், சங்கீதரத்நாகரம் முதலிய நூல்கள் கூறும் பெயர்களினின்றும் வேறுபட்டன.

பழந்தமிழ்மரபிலே இளிக்கிரமம், குறற்கிரமம், தாரக்கிரமம் என வழங்கப்பட்ட ஷட்ஜக்கிராமம், மத்திமக்கிராமம், காந்தாரக்கிராமம் என்பவற்றின் இலக்கணங்களை இந்நூல் விரித்துக்கூறுகிறது.

தாரக்கிரமமெனநின்ற காந்தாரக்கிராமம் இருமொழிமரபிலும் மிகப்பழையகாலத்திலே வழக்கு வீழ்ந்தது. ஆயினும், அதன் இலக்கணம் இந்நூலுட் கூறப்பட்டது. இந்நூற்சூத்திரத்தினையே

சங்கீதரத்நாகரம் எடுத்தாளுகின்றது. தமிழ்மரபிலே தாரக் கிரமம் அலகுக்கணக்கில் வடமொழிக் காந்தாரக்கிரமத்தின் வேறு பட்டதென்பது கணிதவாயிலாக அறியக்கிடக்கின்றது.

மத்திமக்கிராமஸ்வரங்கள் மகரிஸநிதப என ஆளப்படுவன என இந்நூல் கூறும் முடிபு நாரதசிக்ஷை கூறும் முடிபினோடு ஒத்து நிற்கிறது. ஹிந்துஸ்தானத்தின் இசை என்னும் ஆங்கிலநூலிலே ஏழிசைகளின் பெயர், முறை, ஓசையென்றிவற்றைக் கூறும் நாரத சிக்ஷச்சுருதிப்பொருளினைத் தொகுத்தெழுதியதனை மொழி பெயர்த்துத் தருவாம்.

| | | | |
|---|---|---|---|
| கருஷடம | ம | கொக்கு | ஸ்வரிதம் |
| ப்ரதமம் | க | ஆடு | உதாத்தம் |
| த்விதீயம் | ரி | பசு | அநுதாத்தம் |
| த்ருதீயம் | ஸ | மயில் | ஸ்வரிதம் |
| சதுர்த்தம் | நி | யானை | உதாத்தம் |
| மந்த்ரம் | த | குதிரை | அநுதாத்தம் |
| அதிஸ்வாரம் | ப | குயில் | ஸ்வரிதம் |

பழந்தமிழ்மரபில் வழங்கிய ஏழிசையின் பெயர், மாத்திரை (அலகு, சுருதி), ஓசையென்றுமிவற்றைக் கூறும் சூடாமணி நிகண்டுச்செய்யுட்பாகங்களைத் தருவாம்.

'களையறு குரலே துத்தங் கைக்கிளை யுழையி னோடே
இளியொடு விளரி தார மென்பயே ழிசையி னாமம்'

'நான்கொடு நான்கு மூன்று நலம்பெறு மிரண்டி னோடு
நான்குமூன் றிரண்டி னோடு நல்லமாத் திரைக ளாகும்'

'வண்டொடு கிள்ளை வாசி மதயானை தவளை தேனு
ஒண்டிற லாடென் றேழு மோதுமே ழிசையி லோசை'

| | | | | |
|---|---|---|---|---|
| குரல் | ... | 4 | ... | வண்டு |
| துத்தம் | ... | 4 | ... | கிளி |
| கைக்கிளை | ... | 3 | ... | குதிரை |
| உழை | ... | 2 | ... | யானை |
| இளி | ... | 4 | ... | தவளை |
| விளரி | ... | 3 | ... | பசு |
| தாரம் | ... | 2 | ... | ஆடு |

இருமொழிமரபினையும் ஒப்பவைத்து நோக்குமிடத்து,

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தாரம் | - | காந்தாரம் | (க) | - | ஆடு |
| விளரி | - | ரிஷபம் | (ரி) | - | பசு |
| உழை | - | நிஷாதம் | (நி) | - | யானை |
| கைக்கிளை | - | தைவதம் | (த) | - | குதிரை |

என நான்கு பெயரொற்றுமை ஐயப்பாடின்றித் தெளிவாகின்றது.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| குரல் | - | மத்திமம் | (ம) | - | கொக்கு | - | வண்டு |
| இளி | - | ஷட்ஜம் | (ஸ) | - | மயில் | - | தவளை |
| துத்தம் | - | பஞ்சமம் | (ப) | - | குயில் | - | கிளி |

எனும் மூன்று பெயரொற்றுமைக்கு வேறுகாரணங்களுமுள; அவற்றினைத் தருவாம்.

'வண்ணப்பட்டடை யாழ்மேல்வைத்து' (அரங்கேற்றுகாதை 63-ஆம் அடி) என்பதற்கு அடியார்க்குநல்லார் உரைகூறுமிடத்து, 'பட்டடை - நரம்புகளில் இளிக்குப் பெயர். என்னை? எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின்...... இளிக்கிரமத்தாலே பண்களை யாழ்மேல்வைத்து......' என்றனர்.

'ஷட்ஜம்' என்பதும் எஞ்சிய ஆறினுக்கும் அடிமணையெனப் பொருள்தரும். ஆதலின், ஷட்ஜம்—இளி, ஷட்ஜக்கிராமம்—இளிக் கிரமம் எனநின்றமை தெளிவாகின்றது.

'மகரத்தினொற்றுச் சுருதிவிரவும்' என்றமையின் குரல் நரம்பி னுக்கு ஆளத்தியெழுத்து 'ம' என்பது பெறப்பட்டது.

ஷட்ஜக்கிராமத்திலே (இளிக்கிரமத்திலே) ஸ-ரி-க-ம-ப-த-நி என்னும் ஏழிற்கும் சுருதிகள் 4-3-2-4-4-3-2 என வடமொழிநூல் கூறும். குரன்முதலேழினுக்குங்கூறிய 4-4-3-2-4-3-2 மேலையத னோடு நிரல்ஒத்து வாராமையையும், இளி விளரி தாரம் குரல் துத்தம் கைக்கிளை உழை யென வைக்குமிடத்து 4-3-2-4-4-3-2 என நிரல் ஒத்துவருதலையும் நோக்குக.

இங்ஙனம் ஆராயுமிடத்துக் குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் என்பன முறையே ம-ப-த-நி-ச-ரி-க என்னும் ஏழுமாம் என்பது தெளிவாகின்றது.

நால்வகைப் பெரும்பண்ணிற்கும் பண்டையோர்கண்ட நரம்பு அடைவினைநோக்க இம்முடிபு மேலும் தெளிவாகும். பதினான்கு நரம்பினையெடுத்து மெலிவு நான்கு, சமன் ஏழு, வலிவு மூன்று எனக் கொண்டார்கள்.

'தாரத்து உழைதோன்றப் பாலையாழ்'
மெலிவு "க" முதல், சமன் "நி" முதல்

'தண்குரல் ஓரும் உழைதோன்றக் குறிஞ்சியாழ்'
மெலிவு "நி" முதல், சமன் "ம" முதல்

'நேரே இளி குரலிற்றோன்ற மருதயாழ்'
மெலிவு "ம" முதல், சமன் "ச" முதல்

'துத்தம் இளியிற்பிறக்க நெய்தல்யாழ்'

[இங்கு நெய்தல்யாழ் என்றது செவ்வழியாழ் என்றும் பெரும்பண்ணினை]

மெலிவு "ச" முதல், சமன் "ப" முதல்

மேற்கண்ட முடிபுகளை அட்டவணைப்படுத்தக் கிடைப்பது:

| | மெலிவு | சமன் | வலிவு |
|---|---|---|---|
| பாலை | க ம ப த | நி ச ரி க ம ப த | நி ச ரி |
| குறிஞ்சி | நி ச ரி க | ம ப த நி ச ரி க | ம ப த |
| மருதம் | ம ப த நி | ச ரி க ம ப த நி | ச ரி க |
| செவ்வழி | ச ரி க ம | ப த நி ச ரி க ம | ப த நி |

நாற்பெரும் பண்ணிலுமுள்ள ஸ்வரங்கள் எந்த எந்த ஸ்வரஸ்தானங்களில் நின்றனவென்பதையும் பெரும்பண் நான்கும் இக்காலத்தில் வழங்கும் எந்த எந்த மேளகர்த்தாராகங்களுக்கு ஒப்பாவன என்பதையும் நரம்புகளாக்கைக் கணிதமுறையாக ஆராய்ந்து தன்பின்னர்த் தொடர்ந்துவரும் பொருளுரையொன்றினுள்ளே ஆராய்வாம்.

குரவைக்கூத்தாடுதற்கு இயைந்துநின்ற இளமகளிர் எழுவரை யும் இடைமுதுமகள் தொன்றுதொட்டுவரும் முறையில் நிறுத்தி, அவர்தமக்குப் பெயரிடுவாளாய்க் குரல்நரம்பினை (ம) மாயவன் என்றாள்; இளிநரம்பினை (ச) வெள்ளையாயவன் (பலதேவர்) என்றாள்; துத்தநரம்பினை (ப) பின்னை என்றாள்.

'குரன்மந்த மாக இளிசம னாக
வரன்முறையே துத்தம் வலியா—உரனிலா
மந்தம் விளரி பிடிப்பா ளவணட்பின்
பின்றையைப் பாட்டெடுப் பாள்'

மெலிவுத்தானத்திலே குரல்(ம), சமன்தானத்திலே இளி(ச), வலிவுத்தானத்திலே துத்தம்(ப), மீட்டும் மெலிவுத்தானத்திலே விளரி (ரி) எனப்பொருந்தி நிற்பது மேலே நாம் நாற்பெரும்பண்ணுக் கும் காட்டிய நரம்புநிரலிலே செவ்வழியாழ் என்னும் பெரும்பண் நிரலில்மாத்திரமேயாம். பாடிய முல்லைத்தீம்பாணியும் செவ்வழி யாழிற்கு உரியது.

எழுவர்மகளிரும் நின்ற முறையினைப் பாலைத்திரிபு உரைக்கும் மற்றொரு பொருளுரையினுள்ளே ஆராய்வாம். 'இடமுறை,' 'வல முறை' என்பவற்றைக் குறித்துச் சுருக்கமாக இங்கு ஆராய்வாம்.



இப்பொருளுரையின்றொடக்கத்திலே தந்த இருபாடல்களுள் முதற்பாடலிலே, பின்னைப்பிராட்டி கடல்வண்ணனிடத்துளாள், தன்முன்னோன் வலத்துளாள் எனக் கூறப்பட்டது. அனைவரும் நடுவிடத்தைநோக்கிநிற்க இஃது அமையும். இரண்டாம்பாடலினுள்ளே, பின்னைப்பிராட்டி மாயவன் வலத்துளாள், தன்முன்னோன் இடத்துளாள் எனக் கூறப்பட்டது. அனைவரும் புறம்நோக்கிநிற்குங்கால் இஃது அமையும். நடுவிடத்தைநோக்கியநிலையில், குரலுக்கு இடப்புறத்திலே துத்தம், துத்தத்திற்கு இடப்புறத்திலே கைக்கிளை யென் றிவ்வாறு அமைதலின் குரற்கிரமத்திலே (மத்திமக்கிராமத்திலே) ம—ப—த—நி—ச—ரி—க இடமுறையாகும்; ம—க—ரி—ச—நி—த—ப வலமுறையாகும். சிக்ஷையிலும், மகரந்தத்திலும் இம்முறையே கூறப்பட்டிருத்தலை மேலே காட்டினோம்.

மத்திமக்கிராமத்திலே பஞ்சமம் மூன்றுசுருதியும், தைவதம் நான்குசுருதியும் பெறுமென மகரந்தநூல் கூறுகின்றது. மூவகைக் கிராமங் (கிரமங்)களின் இயல்பையும் கிளைநரம்பு, நட்புநரம்புகளின் சீர்மையையும் பிறவற்றையும் "இசைக்கிரமம்" என்னுந் தலைப் பெயர்க்கீழ்த் தனியாக ஆராய்வாம்.

---

ഉ

# உயிரைக் காணலாமா?

[பண்டிதர். க. பொ. இரத்தினம் அவர்கள்.]

இது என்ன வினு? உயிரைக் காணமுடியாதென்பது சிறுவருக்குந் தெரியுமே என்று இலேசாகப் பதிலிறுக்கலாம். ஆனுல் "காண்கிறோம், கண்டோம்" என்று சொல்லுகிறவர்கள் இருக்கிருர்கள். அவர்கள் சொல்லுகிறமாதிரியைப் பார்த்தால் திகைப்புண்டாகிறது. ஆச்சரியங்கூட உண்டாகிறது. ஏன்? உயிரைக் காணமுடியாதென்கிறவர்களையும் அவர்கள் நன்கு அறிந்திருக்கிருர்கள். அவர்களுங்கூட உயிரைக் காணமுடியாதென்றுதான் முன் எண்ணியிருந்தார்கள். பின்பு, தம் கண்ணுரக்கண்டு, காணமுடியாதென்பவர்களையும் பழிக்கிருர்கள். தம்முயிரையே தாம் காண்கிருர்களாம். அந்த உயிர் பேசுகின்றதாம். அசைகின்றதாம்.................. என்ன ஆச்சரியம்!

இச்செய்தி இக்காலத்தில் பத்திரிகைமூலம் அறிந்ததொரு புதினமன்று. எங்களுடைய பழந்தமிழ்நூல்களிலே கூறப்பட்டிருக்கின்றது. ஒரு காதலனும் காதலியும் வினைவசத்தாற்கூடி இன்பத்தை அடைகின்றனர். தலைவன் தன் உயிரைத் தன் தலைவியிடத்திற் காண்பதாகக் கூறுகிறுன். அவளைத் தன் உயிரென வியக்கிருன். அகப்பொருள் நுதலிய பழந்தமிழ்நூல்களிலும் பிற்காலக் கோவைநூல்களிலும் பல தலைவர்கள் தங்கள் உயிர்களைக் காதலிகளிடத்திற் கண்டு பலவாறு கூறிய கூற்றுக்கள் காணப்படுகின்றன. அக்கூற்றுக்கள் உண்மையாகுமா? என்பதைப்பற்றி ஆராயுமுன் அக்கூற்றுக்களிற் சிலவற்றையாகுதல் ஈண்டு நோக்குவோம்.

களவியற்காரிகையுரையில் மேற்கோளாகப் பின்வரும் சிறு செய்யுள் காட்டப்பட்டிருக்கிறது.

"புலனன் றென்ப இன்னுயிர் அதுவே
அலர்முலை யாகம் தாங்கி
நிலவொளி மதியின் நிலவுமென் உயிரே"

தொல்காப்பியக் களவியற்சூத்திரமொன்றுக்கு நச்சினார்க்கினியரால் மேற்கோளாகக் காட்டப்பட்ட செய்யுள் வருமாறு:—

"காணு மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே
யாம் காண்டுமெம் அரும்பெற லுயிரே
சொல்லும் ஆடும் மென்மெல இயலும்
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே"

"தேயத் தவருயி ரைப்புல னன்றென்பர் செர்நிலத்தே
காயக் கனலெதிர்க் காரேறு மாற்றுக் கடுங்கணைகள்
பாயச் சிலையொட்ட பஞ்சவன் வஞ்சிப்பைம் பூம்பொழிற்கண்
ஆயத் திடையிது வோநின்ற தென்ற னருயிரே"

என்பதூஉம்,

"இன்னுயிர் கண்டறி வாரில்லை யென்பர் இகன்மலைந்தார்
மன்னுயிர் வான்செலச் சென்றடையக் கடையாற்றுள் வென்றவையாம்
தன்னுயிர் போலின்று தாங்குமெங் கோன்கொல்லித் தாழ்பொழில்வாய்
என்னுயிர் ஆயத் திடையிது வோநின் றியங்குவதே"

என்பதூஉம் பாண்டிக்கோவை.

"என்னுயிர் ............இளமலையும் வேய்த்தோளாரும்
பொன்னிறமுங் கொண்டு புனமயில்போல்—மன்னி
வயங்குகின்ற நெய்தல்வாய் வானவன்றன் வெற்பில்
இயங்குகின்ற தாயத் திடை"

என்பது கிளவிவிளக்கம்.

இனி, மணிவாசகர் திருவாய்மலர்ந்தருளிய செய்யுளையும் கடைசியாகக் காண்பாம்.

"நேயத்த தாய்நென்னல் என்னைப் புணர்ந்துநெஞ் சுநெகப்போய்
ஆயத்த தாயமிழ் தாயணங் காயர னம்பலம்போல்
தேயத்த தாயென்றன் சிந்தைய தாய்த்தெரி யிற்பெரிதும்
மாயத்த தாகி யிதோவந்து நின்றதென் மன்னுயிரே"

மேலேகுறிப்பிட்ட செய்யுட்களிற் கூறப்பட்டன ஏற்றுக் கொள்ளத்தக்கனவா?

பூதக்கண்ணுடியின் துணைகொண்டு கண்ணுக்குத் தெரியாத ஒருபொருளைப் பார்க்கின்றோம். அக்கண்ணுடியின் துணையின்றிப் பார்த்து அப்பொருளைக் காணமுடியாத ஒருவர் நாம் சொல்வது உண்மையல்லவென்றால் அஃது ஏற்றுக்கொள்ளத்தக்கதாம். இன்னும், நாம் பூதக்கண்ணுடிமூலம் பார்க்கும்படி ஏவினால், அதைப் பிழையாக உபயோகித்துப் பொருளைப் பார்க்கமுடியாது, நாம் சொல்வது பொய்: என்று சொல்லுகிறவர்களை என் செய்யலாம்?

தம் உயிர்க்காதலியிடத்தில் தம் உயிரைக் கண்டதாகக் காதலர் சொல்லுகின்றார்கள். அவர்கள் அன்பாகிய கண்ணுடிமூலம் கண்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட அன்பாகிய கண்ணுடியை அணிந்துபார்த்தபின்பே நாம் ஒரு முடிபுக்குவரவேண்டும். இனிக் கண்ணுடியிற்கூடச் சக்திவேறுபாடுகள் (Power) உண்டல்லவா? ஆகவே நாம் அணியும் அன்புக்கண்ணுடி போதிய சக்தியுடையதா? என்பதையும் நாம் தெரிந்துகொள்ளவேண்டும். இதனை நாம் நுணுகி ஆராயும்போது "அன்பு" என்ற பொருள் குறுக்கே கிடக்கின்றது. இந்த அன்பின் தத்துவத்தை—சக்தியை—அளவிட்டறிவது இலேசானகாரியமன்று.

"அன்புடையார் பிறர்க்கு என்புமுரியர்" என்றார் திருவள்ளுவர். இன்னும், அவரே

"அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு"

என்று அறைந்தனர். காதலன்புமிக்க காதலன் தன்னுயிரைக் காதலியிடத்துக் காண்கின்றான். காதலி தன்னுயிரைக் காதலினிடத்திற் காண்கிறாள். இவர்களுக்குத் தத்தம் உயிரைக் காட்டிக் கொடுப்பது காதலன்பே.

இன்னும், இவ்வன்பு முதிர்ந்துமுதிர்ந்து அருளாக மாறுகிறது. அருளை அன்பு ஈனும் மகவு என்று திருவள்ளுவர் அறிவிக்கிறார். இந்த முதிர்ந்த அன்பினால் - அருளினால் - ஒருவன் தன்

உயிரை மற்றைய பிராணிகளிடத்திலெல்லாம் காண்கின்றான். இவன்தான் தன்னுயிர்போல் மன்னுயிரைப் போற்றலாம்.

"அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்"

என்று திருக்குறளிற் கூறப்பட்ட அந்தணன் இவனே. இவனிடமிருந்துதான் "தாம்வளர்த்ததோர் நச்சுமாமரமாயினும் கொல்லார்" எனும் அருள்வாக்கியம் பிறக்கும். இவன்தான் கடந்தபொருளை - கடவுளைக் காண்கின்றான். அவனை "அன்பினில்விளைந்த ஆரமுதே" என்று போற்றுகின்றான்.

ஆகவே, ஒருவனுக்குத் தன் உயிரைக் காதலியிடத்துக் காட்டிக்கொடுப்பதும், மற்றப்பிராணிகளிடத்தெல்லாம் காட்டிக் கொடுப்பதும், அன்றியும், கடவுளைக் காட்டிக்கொடுப்பதும் அன்பே. இதனாலேயே திருமூலரும்,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே" என்றார்.

"அன்பே சுவர்க்கம், சுவர்க்கமே அன்பு" (Love is Heaven, Heaven is Love.) என்றார் ஆங்கிலப்புலவரொருவர்.

உயிரைக் காணலாமா? என்று தொடங்கி, கடவுளையுங் காணலாம் என்று முடிபுக்குவரச்செய்த அன்பின்தன்மைதனை யாரால் அளவிடமுடியும்?

"என்பெனப்படுவ யாக்கை என்ப உயிரென்ப நிலைகளெல்லாம்
பின்பென்ப அல்லவேனும் தம்முறை நிலையிற் போர
முன்பென்ப உளதென்றாலும் முழுவதும் தெரிந்து வாழ்நாள்
அன்பென்ப தொன்றின் றன்மை அமரரும் அறிந்த தன்றால்"

(கம்பர்.)

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—௩௮.] விக்கிரம ௵ பங்குனி மீ [பகுதி—௫.

Vol. 38. March—April 1941. No. 5.

## நாடும் நகரும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

பெருங்காப்பியத்திற்கு இலக்கணங்கூறிய தண்டியாசிரியர்,

‘மலைகடல் நாடு வளநகர் பருவம்
இருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து’

என்றார்.

‘அலையாழி மேன்மை யருட்புயலின் செய்கை
மலையாறு நாடூரின் வண்மை—தொலையா
இருசுடரின் றோற்ற மிருதுவளம் பானம்
பொருபுனல்புக் காடல் பொழில்’

என மாறனலங்காரம் கூறும்.

ஐம்பெருங்காப்பியங்களுள்ளே தலைமைபெற்ற சீவகசிந்தாமணி உதித்தகாலத்திலே* வடமொழிமரபு தமிழிலே இடையீடின்றிப் புகுந்து வழங்குவதாயிற்று. சமணமுனிவருட் பலர் இருமொழியிலும் சிறந்த பாண்டித்தியம் படைத்தவராயிருந்தனர். வடமொழி அலங்காரசாஸ்திரம் வகுத்த இலக்கணமனைத்தும் நிரம்பிய சீவகசிந்தாமணி அன்றுமுதல் இன்றுவரை கற்றோர்சிந்தையைக் கவருமியல்பினதாயிற்று. அக்காலத்திற்குப்பின்பு எழுந்த காப்பியங்கள் நாட்டுவருணனை, நகரவருணனையளவிலே சீவகசிந்தாமணியைப் பின்பற்றுவவாயின.

---

* இது கி. பி. பத்தாம்நூற்றாண்டென்பது அறிஞரது முடிபு.

சிலப்பதிகார மணிமேகலைகள் எழுநூற்றாண்டுக்குமுன்பு உதித்தவாயினும், அடிபலவாக நடக்கும் ஆசிரியப்பா, கலிப்பா விளாலமைந்தமையின் பின்பற்றுதற்கு அரியவாயின.

நான்கடிச்செய்யுளால் முதலிலேநடந்த தொடர்நிலைச்செய்யுள் சீவகசிந்தாமணியேயாம். திருத்தக்கதேவரது செய்யுள்நடையைப் பின்பற்றிக் கந்தியாரேன்பார் நானூற்றுக்குமேற்பட்ட செய்யுட்களைச் சீவகசிந்தாமணியினுள்ளே நுழைத்துவிட்டமையை நோக்கும்போது இந்நூலினைப் பின்பற்றுதல் எளிதென்பது தெளிவாகின்றது.

சிலப்பதிகாரம் தனது முப்பது உட்பிரிவுகளுள்ளே க0-ஆம் கச-ஆம் உட்பிரிவுகளாக நாடுகாண்காதையையும் ஊர்காண்காதையையும் அமைத்துச்செல்லுகிறது. (மாறனலங்காரம் 'நகர்' என்றது 'ஊர்' என்பதை நோக்குக)

நாட்டுவருணனையும் நகரவருணனையும் காப்பியமெனவழங்கும் தொடர்நிலைச்செய்யுளில்மாத்திரமல்ல, அடிபலவாகநடந்த மதுரைக் காஞ்சிபோன்ற தனிச்செய்யுட்களினும் அடியளவாற் குறுகிய பிற தனிச்செய்யுட்களினும் நின்று அழகுபயப்பன. இவ்வழகு எவ்வெக்காரணங்களான் ஆயிற்று என ஆராய்ந்துணர்வதே இப் பொருளுரையின் நோக்கமாகும்.

அழகு அனைத்தும் இன்பந்தரும் நீர்மைய என்பதை முன்னர்க் காட்டினும். ஏனைய மெய்ப்பாடுகளும் அழகுவாய்ந்துநிற்பவாயினும் மக்கள் அழகினை அவாவுவது பெரிதும் இன்பப்பொருட்டேயாம்.

'செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டென்
றல்லல் நீத்த உவகை நான்கே'

என ஆசிரியர் தொல்காப்பியனார் இன்பச்சுவைக்கு இலக்கணங் கூறுகின்றார்.

ஆசிரியர் திருவள்ளுவனார் நாட்டிற்குக்கூறிய இலக்கணத்தினுள்,

'தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு'

'பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து'

என்பவை கூர்ந்துநோக்கத்தகும்.

இன்பச்சுவைக்குக்கூறிய இலக்கணத்தை யொருபுடையாக வும் நாட்டிற்குக்கூறிய இலக்கணத்தை ஒருபுடையாகவும்வைத்து ஒப்புநோக்குவோமாக. செல்வம் இரண்டினும் உளது. புலன் என்பது கல்விப்பயனாகிய அறிவுடைமை; தக்கோர் என்போர் அறவோர், துறவோர், அந்தணர் முதலியோர். தக்கோரைக்கூறவே புலன் கூறியதாயிற்று.

'செற்ற நீக்கிய மனத்தின ரியாவதும்
கற்றோ ரறியா அறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர்'.

எனும் நக்கீரனாருரையையும் நோக்குக.

நாட்டிற்குரிய அழகுகளுள் இன்பம் என்றது விழவும் வேள்வி யும் சான்றோரும் உடைமையானும், நுகர்வன உடைமையானும், நில நீர்களது நன்மையானும் வாழ்வார்க்கு உண்ணிகழும் மகிழ்ச்சி யாம். இன்பச்சுவையுட் கூறிய புணர்வும் விளையாட்டும் இதனுள் அடங்குவ.

இங்ஙனம் நோக்குமிடத்து இருபுடையும் ஒத்துநிற்றல் காண் கின்றோமாதலின், நாடு இன்பத்திற்கும் அழகிற்கும் நிலைக்களமென் பது பெறப்பட்டது. தள்ளாவிளையுள், பிணியின்மை, ஏமம் என்பன இன்பநுகர்ச்சிக்குத் துணைக்காரணமாவன.

'இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு'

என்றமையின் நாட்டுவருணனையானது மழைவருணனை, ஆற்று வருணனை, மலைவருணனை, அரண்வருணனை எனும் இவைதம்மை யும் உறுப்பாகக்கொண்டுவருமென்பது பெறப்படுகின்றது.

ஏமாங்கதநாட்டினது வளத்தைக் கூறுவானெடுத்துக்கொண்ட தேவர் அந்நாடு கல்வி கேள்விகளான் விழுப்பமெய்திய அரசனை யுடையது என்பதை முதலிலே தெரிவிக்கின்றார்.

'ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு'

எனத் திருவள்ளுவனார் கூறினாராதலின், வேந்தமைவு நாட்டுக்கு இன்றியமையாததென்றாம்.

'நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற்
பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல'

என்றமையின் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் அந்நாட்டிலுளர் என்பது குறிப்பிடப்பட்டது; அரசன் நாமகளும் திருமகளும் நாடோறும் வெறுப்பின்றிப் புல்லும்படி வீற்றிருந்தானென்னவே, அவன்வழி நின்ற குடிகளும் அந்நீர்மையாராமென்பது போதரும்.

மேலும் தேவர் நாட்டுவளங்கூறிய செய்யுட்களுள், ஈற்றில் நின்ற செய்யுளிலே ஏமாங்கதநாடு வீடுபேறுகருதித் தவஞ்செய்வார்க்கும் இடம், மறுமைகருதி இல்லற நடாத்துவார்க்கும் இடம், நற்பொருளைப் பயக்குங் கல்வியைக் கற்பார்க்கும் இடம், நிலையாத பொருட்செல்வத்தைத் தேடுவார்க்கும்இடம் என்னும் பொருள்தர,

'நற்ற வஞ்செய் வார்க்கிடம் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொ ருள்செய் வார்க்கிடம் பொருள்செய் வார்க்கு மஃதிடம்'

எனக் கூறித் தக்காரும் தாழ்விலாச் செல்வரும் அந்நாட்டில் உள்ளனர் என்னும் உண்மையினை வெளிப்படுத்தினார். தெங்கு, கமுகு, மா, பலா, வாழை செறிந்துநிற்றலின் பிறதேயத்திலுள்ளாரும் விழையுந்தரத்ததாய், இசையால் திசைபோயது இந்நாடு.

மழைபெய்தல், புனல்பாய்தல், உழவருழுதல், கடைசியர் நாற்றுநடுதல், கள்ளுண்டு மகிழ்தல், நெல்லரிதல், போர்குவித்தல் என்னுமிவற்றைக் கூறுஞ்செய்யுட்களும், கரும்பு, இளநீர், வெற்றிலை, பழம், கடல்வளம் இவற்றைக் கொண்டுசெல்லும் பண்டிகளைக் குறிக்குஞ் செய்யுட்களும், மயில், குயில், அன்னம், வாளைமீன், மேதி, அடிசிற்சாலை என்றின்னவற்றைக்கூறுஞ் செய்யுட்களும் தள்ளாவிளையுளினது நிறைவினையும் செல்வவளத்தினையும் காட்டுவ.

பின்னுளிலெழுந்த காப்பியங்களும் புராணங்களும் திருத்தக்க தேவர் காட்டியவழியிற் செல்வனவேயாம்.

தேவர் நகர்வளங்கூறியமரபினை ஒரு சிறிது ஆராய்ந்துணர் வாம். 'முனிவரது தவப்பயன்போலே செல்வமோங்கிய இராசமா புரத்தின் நிறைவுகூறுவாம்' என எடுத்து, முதலிலே நகரினைச் சூழ்ந்த பொழிலின்வனப்பைக் கூறுகின்றார். அதன்மேற் கன்மதி லின் உட்புடைநிலையிலேயமைந்த யானைக்கூடம், தேரேறுமிடம், குதிரையேறுமிடம், வாட்டொழில் விற்றொழில் செய்யுமிடம் என்னுமிவற்றைக்கூறி, இடைநகர்ப்புறமாகிய மருதத்தைக் கூறு கின்றார். பதினெட்டுப்பாடைமாக்களும் ஈண்டி நிறைதலால் எழுந்த ஓசையும், மகளிரது ஊடல்தீர்க்கும் ஆடவரது செய்கையும், செல்வமிகுதியும், பிறவும் இடைநகர்க்குரியவாகக் கூறப்பட்டன. அதன்பின்பு தாமரைக்கிடங்கின் இயல்பும் நீராடுவோர் செய்கையும் கூறிக் காவன்மதிலினையும் அதன்மீதியைந்த பலவகை இயந்திரப் பொறிகளையும் கூறுகின்றார். மதிலின் நான்கு வாயில்களையும் கூறி, உள்நகரத்திலே பரத்தையரிடத்தைக் கூறுகின்றார். சிலம் பொலியோடே கலையொலி யாழொலி பாட்டொலி குழலொலி முழவி னொலியாகிய ஒழியா ஒலிகளினாலே இச்சேரிக்குத் துறக்கமு மொவ்வாதென்கின்றார். அதன்மேல் அங்காடித் தெருவினியல் பைக் கூறுகின்றார். அதன்மேற் பீடிகைத் தெருவொழிந்த ஏனைய வீதிகளினியல்பும் தாழ்விலாச் செல்வரது போகநுகர்ச்சியும், விழ வும், வேள்வியும் பிறவும் கூறி மன்னவனது கோயிலியல்பு கூறுகின் றார். செய்குன்றும், சுனையும், மலர்க்காவும், குயிலொலியும், வண்டி னது ரீங்காரமும், பந்தாடுபூமியும், மாடமும், கூடமும், நாடகசாலை யும், திருக்கோயிலும் பிறவும் கூறுகின்றார். பிற்காலத்திலெழுந்த நூல்கள் இம்மரபையே பெரிதும் பின்பற்றுவன.

வனப்புமிக்க இம்மரபினைத் தேவர் தாமாகவே படைத்துக் கொண்டாரா? அன்றேல் தமக்கு முன்னிருந்த புலவரது நூலிற் கண்ட மரபினைப் பின்பற்றினாரா? என்பது அடுத்த வினா. முன்னோராகிய மாங்குடிமருதனார் மதுரைக்காஞ்சியிலே பூம்பொழி லும் பொழிற்புறத்தமைந்த பெரும்பாணிருக்கையும், மணிநீர்க் கிடங்கும், பல்படைப்புரிசையும், போர்க்கதவும், மேகமுலாவும்

மலைபோலோங்கின மாடமும், வையையாறுபோன்று இடையறுது வழங்குதலையுரிய வாயிலும், தெருவும், மனையும், பகற்கடைத்தெருவும், மாலையிலே கூடும் கடைத்தெருவும், யானையும் தேரும் புரவியும் களமர் செருமயக்கமும், கல்லாமாந்தரது காமநுகர்ச்சியும், அறங்கூறவையமும், மன்னவன்கோயிலும், மன்னவன்செயலும், மாந்தர்செயலும் என்றின்னவற்றையெல்லாம் அழகுறக் கூறியிருப்பதினும், இளங்கோவடிகள் ஊர்காண்காதையினும் பிற இடத்தினும் காவற்காடு, அகழி, மதில்வாயில் என்றின்னவும், எண்ணெண் கலையோராகிய பரத்தையர்வீதியும், பலவகைத் தொழிற்சாலையும், சந்தியும், சதுக்கமும், ஆவணவீதியும், மன்றமும், கவலையும், மறுகும், அங்காடிவீதியும், அறுவைவீதியும், கூலவீதியும் என்றிவை தம்மையும் கூறியிருத்தலினும், திருத்தக்கதேவர் முன்னோர் மொழிப்பொருளைத் தொகுத்தும் வகுத்தும் வேண்டுவன சேர்த்தும் சொல்லின்பமும் ஓசையின்பமும் நிறைந்த நான்கடிச்செய்யுளாலே நலம்பெறத் தமது நூலினை யாத்துத் தமிழர்க்கு இனிய விருந்துதவல்கினுரென அறிகின்றோம்.

சீவகசிந்தாமணியிலும், சிலப்பதிகாரத்திலும், மதுரைக்காஞ்சியிலுமிருந்து சில அழகிய செய்யுட்களையும் செய்யுட்பாகங்களையும் தந்து இப்பொருளுரையைமுடிப்பாம்.

'காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போய துண்டே' (சீ-சி—31.)

'சொல்லரும் சூற்பசும் பாம்பின் றோற்றம்போல்
மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்
செல்வமே போற்றலை நிறுவித் தேர்ந்தநூற்
கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே' (சீ-சி—53.)

'காவி யன்ன கண்ணினார் கயந்தலைக் குடைதலின்
ஆவி யன்ன பூந்துகி லணிந்த வல்குற் பல்கலை
கோவை யற்று திர்ந்தன கொள்ளு நீர ரின்மையின்
வாவி யாவும் பொன்ன ணிந்து வானம் பூத்த தொத்தவே'
(சீவகசிந்தாமணி—67.)

'கண்வலைக் காமுக ரென்னு மாபடுத்
தொண்ணிதித் தசைதழீஇ யுடலம் விட்டிடும்
பெண்வலைப் படார்தவர் பீடி னோங்கிய
அண்ணலங் கடிநக ரமைதி செப்புவாம்' (சீ-சி–78.)

'பொற்சிறு தேர்மிசைப் பைம்பொற் போதகம்
நற்சிறு ரூர்தலி னங்கை மார்விரீஇ
யுற்றவர் கோழிமே லெறிந்த வொண்குழை
மற்றத்தே ருருள்கொடா வளமை சான்றவே' (சீ-சி–89.)

'வரிவளை யரவமு மணிமுழ வரவமு
மரிவளர் கண்ணிய ரணிகல வரவமும்
புரிவளர் குழலொடு பொலிமலி கவினிய
திருவிழை கடிமனை திறவிதின் மொழிவாம்' (சீ-சி–124.)

'வைத்த பங்தெ டுத்தலும் மாலை யுட்க ரத்தலும்
கைத்த லத்தி னோட்டலும் கண்ணி நெற்றி தீட்டலும்
பத்தி யிற்பு டைத்தலும் பைய ரவ்வி னூடலும்
இத்தி றத்த பந்தினோ டின்ப மெல்லை யில்லையே' (சீ-சி–151.)

'பெற்ற செல்வம் பிறழா வாழ்க்கைப்
பொற்றொடி மடந்தையர் புதுமணம் புணர்ந்து
செம்பொன் வள்ளத்துச் சிலதிய ரேந்திய
அந்தீந் தேறல் மாந்தினர் மயங்கிப்
பொறிவரி வண்டினம் புல்லுவழி யன்றியும்
நறுமலர் மாலையின் வறிதிடங் கடிந்தாங்கு
இலவிதழ்ச் செவ்வாய் இளமுத் தரும்பப்
புலவிக் காலத்துப் போற்றா துரைத்த
காவியங் கண்ணார் கட்டுரை யெடுக்குநர்
நாவொடு நவிலா நகைபடு கிளவியும்
அஞ்செங் கழுநீ ரரும்பவிழ்த் தன்ன
செங்கய னெடுங்கட் செழுங்கடைப் பூசலும்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை சுருளத்
திலகச் சிறுநுத லரும்பிய வியரும்
செவ்வி பார்க்குஞ் செழுங்குடிச் செல்வரொடு
வையங் காவலர் மகிழ்தரு வீதியும்' (சிலப்பதிகாரம்–14.)

'செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை
செல்சுடர்ப் பசுவெயிற் றோன்றி யன்ன
செய்யர் செயிர்த்த நோக்கினர் மடக்கண்
ஐஇய கலுழு மாமையர் வையெயிற்று
வார்ந்த வாயர் வணங்கிறைப் பணைத்தோட்
சோர்ந்துகு வன்ன வயக்குறு வந்திகைத்
தொய்யில் பொறித்த சுணங்கெதி ரிளமுலை
மையுக் கன்ன மொய்யிருங் கூந்தல்
மயிலிய லோரு மடமொழி யோருங்
கைஇ மெல்லிதி னொதுங்கி
கல்லா மாந்தரொடு நகுவனர் திளைப்பப்
புடையமை பொலிந்த வகையமை செப்பிற்
காம ருருவிற் றாம்வேண்டு பண்ணியங்
கமழ்நறும் பூவொடு மனைமனை மறுக
மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
கரைபொரு திரங்கு முந்நீர் போலக்
கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது
கழுநீர் கொண்ட வெழுநா ளந்தி
ஆடுதுவன்று விழவி னாடார்த் தன்றே
மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடல்'.

(மதுரைக்காஞ்சி 410-429.)

௨

# மலையும் கடலும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமிவிபுலாநந்தரவர்கள்.]

'நடுக்கின்றி நிலியரோ வத்தை யடுக்கத்துச்
சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை
அந்தி யந்தணர் அருங்கட னிறுக்கும்
முத்தீ விளக்கிற் றுஞ்சும்
பொற்கோட் டிமயமும் பொதியமும் போன்றே'

(புறநானூறு–௨.)

'இமயமலையும் பொதியின்மலையும் போன்று ஒழியாது நெடுங் காலம் விளங்கித் துளக்கமின்றிநிற்பாயாக' என முரஞ்சியூர் முடிநாகராயர் சேரமான் பெருஞ்சோற்றுதியன் சேரலாதனை வாழ்த்தினார். மலைக்கும் அரசற்கும் பொதுத்தன்மை அசைவின்றி நீடு வாழ்தல்.

'பொதியி லாயினு மிமய மாயினும்
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினும்
நடுக்கின்றி நிலைஇய வென்ப தல்லதை
யொடுக்கங் கூறார் உயர்ந்தோ ருண்மையின்
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே'

(சிலப்பதிகாரம்–க.)

என இளங்கோவடிகள் பொதியில், இமயம், புகார் என்ற மூன்றினையும் ஒருவாற்றான் ஒப்புரைத்தார். ஆதியில் தோன்றுதலும் சலிப்பின்றி நிலைபெறுதலும் பொதுத்தன்மைகள்.

'அன்றியிரு பூதலமு மிருதட் டாக
அகத்தியன்வாழ் குன்றினையும் அணிமுக் கோணக்
குன்றினையும் சீர்தூக்கி நிறுப்ப தாகக்
கோகனத னமைத்ததுலைக் கோலும் போலும்'

(வில்லிபாரதம்-அருச்சுனன் தீர்த்தயாத்திரைச் சருக்கம்.)

என வில்லிபுத்தூராழ்வார் கூறுதலின், தமிழ்முனிவன்குன்றும், ஈழநாட்டுத் திரிகோணக்குன்றும் ஒப்புநோக்குதற்குரியவாயின.

கோணமலை தேவாரம்பெற்ற தலமாதலின், 'திரு' என்னும் அடையடுத்துத் திருக்கோணமலை என வழங்கவும் பெறும். அலை கடல் நடுவண் நிலைபெறநிற்றல் திருக்கோணமலைக்குச் சிறப்பியல்பு.

'கரைகெழு சந்துங் காரகிற் பிளவும் அளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகடல் ஓதம் நித்திலங் கொழிக்குங் கோணமாமலை'

'கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமுன் நித்திலஞ் சுமந்து
குடிதனை நெருக்கிப் பெருக்கமாய்த் தோன்றுங்
கோணமாமலை'

'தெழித்துமுன் அரற்றுஞ் செழுங்கடல் தரளம்
செம்பொனும் இப்பியுஞ் சுமந்து
கொழித்துவன் திரைகள் கரையிடைச் சேர்க்குங்
கோணமாமலை'

'கோயிலுஞ் சுனையுங் கடலுடன் சூழ்ந்த கோணமாமலை'

'விரிந்துயர் மௌவல் மாதவி புன்னை
வேங்கைவன் செருந்திசெண் பகத்தின்
குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில்சூழ்
கோணமாமலை'

'குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங் கோணமாமலை'

என்றெல்லாம் திருஞானசம்பந்தசுவாமிகள் அகத்தியன்வாழ்குன்றினுக்கு ஒப்பான அணிமுக்கோணக்குன்றினைச் சிறப்புறவுரைக்கின்றார்.

'மாயோன் மேய காடுறை யுலகமும்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமும்'

என வகுத்த நானிலத்தினும் இரண்டு ஒருங்கியைந்துநிற்றலின், இரண்டினுக்குமுரிய அழகினையும் தாங்கி 'ஒண்கானல் வாசம்வந் துலவும்' மலையாயிற்றுத் திருக்கோணமாமலை.

மலைவருணனை கூறுநீர்மையிற் சம்பந்தசுவாமிகளது தேவாரத்திற்கு ஒரு தனிச்சிறப்புண்டு. முதுகுன்றம், செங்குன்றம், முழுநீலக்குன்றம் (இந்திரநீலப்பருப்பதம்), முருகனுறை பரங்குன்றம், கொடுங்குன்றம், குறும்பலா, காளத்தி, கேதாரம், கைலை, கோகரணம், குற்றாலம், இடைச்சுரம், கற்குடி, ஈங்கோய்மலை, திருப்பருப்பதம் எனும் மலைகள் தமக்குரிய இயற்கை வனப்போடு தேவாரச்செழும்பாடலளிக்கும் தெய்வவனப்பும் பொருந்தியன.

'நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் பறுத்த தண்புனல் நன்னாடு' (சிலப். எ.)

என்றமையின் மலையும் கடலும் தமிழ்நாட்டிற்கு வரம்பாயின.

'நீலத் திரைக்கட லோரத்தி லேநின்று
நித்தந் தவஞ்செய் குமரி யெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடை யேபுகழ்
மண்டிக் கிடக்குந் தமிழ்நாடு'

எனச் சுப்பிரமணியபாரதியார் இவ்வுண்மையினை அழகுறக் கூறுகின்றார்.

'வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்—அடி
மேலைக் கடல்முழுதுங் கப்பல்விடுவோம்'

என அக்கவிஞர் நம் நாடு வருங்காலத்தில் அடையப்போகின்ற உயர்நிலையை யெடுத்துகூறுமிடத்துப் பனிமலையையும் அலைகடலையும் குறிப்பிடுகின்றார்.

வேள்பாரி ஆண்ட பரம்புமலையும், குமணவள்ளலுக்குரிய முதிரமலையும், வல்விலோரியினது கொல்லிமலையும், எழினி அதியமான் ஆண்ட குதிரைமலையும், கண்டீரக்கோப்பெருநற்கிள்ளியினது தோட்டிமலையும், மலையமான் திருமுடிக்காரிக்குரிய முள்ளூர்மலையும், நாஞ்சில்வள்ளுவன் ஆண்ட நாஞ்சில்மலையும், நன்னனது நவிரமலையும் தம்மையுடையோரது கொடைவென்றியினாலே புலவர் பாடும் புகழுடையவாயின.

'புலவரை யறியாப் புகழொடு பொலிந்து
நிலவரைத் தாங்கிய நிலைமையிற் பெயராத்
தொலையா நேமிமுதல் தொல்லிசை யமையும்
புலவராய் புரைத்த புனைநெடுங் குன்றம்
பலவெனின் ஆங்கவை பலவே பலவினும்
நிலவரை ஆற்றி நிறைபயன் ஒருங்குடன்
நின்றுபெற நிகழுங் குன்றவை சிலவே
சிலவினுஞ் சிறந்தன தெய்வம் பெட்புறு
மலரகன் மார்பின் மைபடி குடுமிய
குலவரை சிலவே குலவரை சிலவினும்
சிறந்தது,
கல்லறை கடலும் கானலும் போலவும்
புல்லிய சொல்லும் பொருளும் போலவும்
எல்லாம்,
வேறுவேறு உருவின் ஒருதொழி லிருவர்த்
தாங்கு நீணிலை ஓங்கிருங் குன்றம்' (பரிபாடல்–15.)

என இளம்பெருவழுதியாராலே திருமாலிருஞ்சோலைமலையினது சிறப்புக் கூறப்பட்டது.

பயன்தருதலும் தெய்வத்திற்கு இருப்பிடமாதலும் மலைக்குரிய சிறப்பாகக் கூறப்பட்டன. உழவருழாத பயனுடைமை, வறப்பினும் வளந்தரும் வண்மை, பகைவரால் தாக்குதற்கரிய காவலுடைமை என நின்ற இயல்புகளைநோக்கி மன்னர் மலையினை இருக்கையாக்கினரெனலாம். அளத்தற்கருமை, அசைவின்மை, மாவும் மரனும் பூவும் புள்ளுமென் றின்னவற்றின் இயற்கைவனப்பு, அரிதுமுயன்றாரானன்றிப் பிறரால் அணுகுதற்கருமை, நீரருவியுடைமை என்னும் இவ்வியல்புகளினாலே மலைகள் தெய்வக்கோயில்களாகத் திகழ்ந்தன. மேலையவற்றோடு உழவருழாது விளையும் உணவுடைமையும்பற்றி முனிவர் மலைக்குகைகளை இருப்பிடமாக்கினர்.

மலையை வருணித்துக்கூறும் அழகிய செய்யுட்கள் தமிழ்மொழியில் நிரம்பவுள்ளன. ஆன்றோர் வகுத்த பத்துப்பாட்டிலே திருமுருகாற்றுப்படையும், குறிஞ்சிப்பாட்டும், மலைபடுகடாமும்,

தொகைநூல்களிலே குறிஞ்சித்திணைப்பாலவாய பன்னூற்செய்யுட்களும் சீவகசிந்தாமணியிலே பதுமையாரிலம்பகம், விமலையாரிலம்பகம், மண்மகளிலம்பகம், என்றின்னவும், சிலப்பதிகாரத்திலே குன்றக்குரவை, காட்சிக்காதை என்றின்னவும், பெருங்கதையிலே உஞ்சைக்காண்டத்துக் குறிஞ்சிநிலங்கடந்தது என்னும் பகுதியும், திருத்தொண்டர்புராணத்துத் திருமலைச்சிறப்பு, கண்ணப்பநாயனார்புராணம் என்றின்னவும், நாலாயிரதிவ்யப்பிரபந்தத்துள் திருவேங்கடம், சிங்கவேள்குன்றம், வதரியாச்சிரமம், திருப்பிருதி என்றித்தொடக்கத்த தலங்களைக்கூறும் பாடல்களும், சூளாமணி, கம்பராமாயணம், வில்லிபாரதம், கந்தபுராணம் எனநின்ற காப்பியங்களிற் சிலபகுதிகளும், திருக்கைலாயஞானவுலா பொன்வண்ணத்தந்தாதி, கயிலைபாதி காளத்திபாதியந்தாதி, திருவீங்கோய்மலையெழுபது, திருக்கண்ணப்பதேவர்திருமறம் என்றின்னவும் பிறவும் மலைவருணனை தந்துநின்றனவென்றால், மலைக்கும் தமிழுக்குமுள்ள தொடர்பினை விரித்துக்கூறவும் வேண்டுமா? யாம் அறிந்த பிறமொழிகளிலே மலைவருணனைகூறுஞ் செய்யுட்கள் இவ்வளவு அதிகமில்லை.

ஆங்கிலமொழியிலே கடலைவருணித்துக்கூறுஞ் செய்யுட்கள் அதிகமாக உள்ளன. நமதுமொழியிலுள்ள நெய்தற்றிணைச்செய்யுட்கள் கடல்மீதுசெல்லாது கடலையடுத்த நிலத்தின்மீதுசெல்வன. நெய்தற்கருப்பொருளாகிய இரங்கலினைக் குறித்தனவாதலின், இச்செய்யுட்கள் அவலச்சுவை பயப்பனவாய்க் கழிக்கானலிலுள்ள புள்ளினையும் பூவினையும் முன்னிலைப்படுத்தினவாய், எற்பாட்டு வருணனையோடு கூடிவருவன.

'புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழவாய் துயிலப் பெறுதியால்
இன்கள்வாய் நெய்தால்நீ யெய்துங் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ'

(சிலப்பதிகாரம்—எ)

என்பது போல்வன.

தமிழ்நாட்டினர் கலத்திற்சென்று பிறநாடுகளைத் தம்வயப் படுத்தி வெற்றிக்கொடிநாட்டினரெனத் தேசசரித்திரம் கூறுகின்றது. தமிழ்வணிகர் பண்டமாற்றுநோக்கமாகக் கலமேறிப் பிறநாடுகளுக்குச் சென்றதுண்டு. அங்ஙனமாயினும், அந்நிகழ்ச்சிகளைக் கூறுஞ்செய்யுட்கள் தமிழ்மொழியில் அதிகம் இல்லை. சீவகசிந்தாமணியிலும், மணிமேகலையிலும் காணப்படும் வரலாறுகள் வணிகர் கலத்திற்சென்ற நிகழ்ச்சிகளை ஓரளவாகக் கூறுகின்றன.

'திரைகடலோடியும் திரவியந்தேடு' என்றமையின், பொருளீட்டுதல் கருதிய ஸ்ரீதத்தன் என்னும் வணிகன், நன்னாளிலே வறியோர்க்கு வேண்டுவன நல்கிக் கோடும் பறையும் முழங்கக் கலத்திலேறுகின்றான். கொடியணிந்த கூம்பிலே கட்டிய மூன்று பாய்கள் காற்றினைமுகக்கக் கப்பல் நன்றாக ஓடி அழகியதீவொன்றினைச் சேருகிறது. அந்தீவில் இறங்கிய வணிகன் அரசனுக்கு முத்தாரங்கொடுத்து, அவனது தலையளியைப்பெற்று, மகளிரது ஆடல் பாடலினைக் கண்டும் கேட்டும் அகமகிழ்வுற்றுச் சின்னாள் தங்கிப், பண்டங்களை விற்று விலையாகப்பெற்ற நிதிக்குப்பையைக் கப்பலிலேற்றி, அரசனிடம் விடைபெற்று, இரேவதி வியாழவோரையிலே ஊர்க்குத் திரும்பப் புறப்படுகின்றான். பெருங்காற்று வீசுதலினாலே கப்பல் கூம்பு முறிந்து நீரினுள் அமிழ்கின்றது. வணிகன் இற்ற கூம்பினது துண்டினைத் தழுவி, நடுயாமத்திலே, கடலலையினை நீந்திக் கரைசேருகின்றான். தரன் என்பான் தோன்றி வணிகனைக் கலுழவேகனிடம் இட்டுச்செல்லுகின்றான். இவ்வரலாற்றினைத் திருத்தக்கதேவர் சுவைநிறைந்த கவியாக அமைத்துத் தமிழர்க்கு நல்கினார்.

இக்காலத்திலே நிக்கபார் (Nicobar) என வழங்கும் நக்கவாரத்திலே கலங்கவிழ்ந்து கரைசேர்ந்த சாதுவன் என்னும் வணிகனது செய்தி மணிமேகலையினுட் கூறப்பட்டது.

தேவையர்கோனாகிய காங்கேயன் இயற்றிய கண்ணகியார் வழக்குரை என்னும் சிறுகாப்பியத்திலே கண்ணகியாரது காற்சிலம்புக்கு நாகமணி கொணரும்பொருட்டு மீகாமன் கப்பலேறிச்

சென்ற செய்தியும், வெடியாசனோடு கடற்போர்செய்த செய்தியும் கூறப்பட்டன.

எந்திரக்கப்பல்கள் எழுகடலையும் தாண்டி உலகினை வலம்வருத லும், ஒருநாட்டிலே விளையும்பொருள், பலகாவதங்களுக்கப்பா லுள்ள பலப்பலநாடுகளுக்குச் செல்வதற்குக் கடலே பாதையாக அமைந்திருத்தலும், நிலத்திலுள்ள வசதிகளிலும்பார்க்கப் பன் மடங்கு அதிகமான வசதிகளோடு கலத்திற் செல்லுதலும், பீரங்கி யேந்திய மிதக்குங்கோட்டைகளைப்போன்ற போர்க்கப்பல்கள் கடற் போர்புரிதலும் பிறவும் இக்காலத்து நிகழ்ச்சிகள்.

மேற்றிசைநாடுகளிலே, புதுமணத்த மென்மகளிரும் புருட ரும் வரைவுக்காலத்தையடுத்துவருவதாகிய இன்பநுகர்ச்சிக்குரிய தலைத்திங்களிலே கடற்பிரயாணஞ்செய்வதுண்டு. இன்பநுகர்ச்சித் தலைத்திங்களினை அந்நாட்டார் 'தேன்மதி' (Honeymoon) என்பர். பசிபிக்சமுத்திரத்திலே, தெங்கம்படப்பையோடுகூடிய பவளத் தீவுகள் அளவிற்சிறியவாயினும் பேரழகுவாய்ந்தன. இவற்றைக் குறித்து ஆங்கிலமொழியிலே கற்பனைக்கதைகளும் உண்மைக்கதை களும் எத்தனையோ பல உள.

பைரன் (Byron) என்னும் ஆங்கிலமகாகவி கடலைப் பொரு ளாகக்கொண்டுபாடிய பாடல்கள் வனப்புவாய்ந்தன. வங்கமொழி யிலே கடலைச் சிறப்பித்துப்பாடியவர் சிறந்த தேசாபிமானியாகிய சித்தரஞ்சனதாசர்.

மலையிற்பிறந்த ஆறு கடலிற் கலத்தலின் ஆற்றுவளம் கூறப் புகுந்த புலவர் மலையையும் கடலையும் பாடுதல் இயல்பு. எல்லை யில்லாத பரம்பொருளுக்கு மலையும் கடலும் உவமப்பொருளாயின.

ஓர்க்கோலை, சங்கு, பவளம், முத்து, உப்பு என்னும் ஐந்தினை யும் கடல்வளனென்ப.

'தக்கோலந் தீம்பூத் தகைசா லிலவங்கம்
கப்பூரஞ் சாதியோ டைந்து'

என மலைவளன் கூறப்பட்டது.

'மலைப்பஃ றாரமுங் கடற்பஃ றாரமும்
வளந்தலை மயங்கிய துளங்குகல விருக்கை'

(சிலப்பதிகாரம்—சு)

என்னுஞ் செய்யுளடிகளிலே காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்றுறை முகத்திலே அசைகின்ற மரக்கலங்களும் குவிந்துகிடக்கின்ற பண்டங்களின் மலிவும் கூறப்பட்டன.

'கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
வேலைவா லுகத்து விரிதிரைப் பரப்பிற்
கூல மறுகிற் கொடியெடுத்து நுவலும்
மாலைச் சேரி' (சிலப்பதிகாரம் சு.)

என்னும் அடிகளுள் பரதேசிகள் கலத்திலே பல்வகைச்சரக்குகளைக் கொண்டுவருதலும், தம்மிடத்து இன்னசரக்கு உள என்பதைக் கொடிகளாற் சொல்லுதலும் கூறப்பட்டன.

'கலஞ்சமைத் ததற்கு வேண்டுங் கம்மிய ருடனே செல்லும்
புலங்களில் விரும்பு பண்டம் பொருந்துவ நிரம்ப வேற்றிச்
சலந்தரு கடவுட் போற்றித் தலைமையாம் நாய்கன் றானும்
நலந்தரு நாளில் ஏறி நளிதிரைக் கடல்மேற் போனான்'

(காரைக்காலம்மையார்புராணம் கூ.)

என்னுஞ் சேக்கிழார்பாடலினாலே கடற்பிரயாணஞ்செய்வோர் வருணனைப்போற்றுதல் கூறப்பட்டது. மேனாட்டுப்புராணங்களிலே கடற்றெய்வத்திற்கு நெப்தியூன் (Neptune) என்பது பெயர். இவர் கைப் படைக்கலம் மூவிலைச்சூலம். கடல்மீது ஆணைசெலுத்தும் பிரித்தானியாநாட்டினை உருவகித்த பிரித்தானியா என்னும் பெண் தெய்வத்தின்கையிலும் மூவிலைச்சூலம் உளது. முருகவேள்வழிபாடு சிறந்துவிளங்குந் தமிழ்நாட்டுப்புலவர் மலையைச் சிறப்பித்துப் பாடியதும், வருணன்வழிபாடு வழக்குவீழ்ந்தமையின் கடலினைப் பாடாதொழிந்ததும் இயல்பேயாம்.

# கவியும் சால்பும்

[பிரபுத்தபாரத ஆசிரியர் ஸ்ரீ. சுவாமி விபுலாநந்தரவர்கள்.]

'திருமலி யழகுடைச் செழும்பொருள் தானே
உவகை நீர்மைய து; ஆங்கவ் வுவகை
பன்னாட் கழியினும் கழியா வியல்பிற்
றண்டா வின்பந் தந்துநிற் பதுவே'

என ஆங்கிலமொழிப் பெரும்புலவராகிய கீற்சு (Keats) என்பவர் தாம் இயற்றிய எந்திமியோன் (Endymion) என்னும் பெருங்காப் பியத்திற்குத் தோற்றுவாய்கூறினர். 'அழகுடைப்பொருள் என்றும்உவகைதருவது; அழியாவின்பத்தின் நீர்மையது; ஆதலின், அதுவே புலவராற் பாடுதற்கமைந்தது' என்பது கீற்சு நிறுவிய முடிபு. இப்புலவர் தாமே மற்றொருசெய்யுளகத்து,

'அழகே உண்மை, உண்மை அழகென
உலகினில் அறிந்தோர் அறிவுபிற வேண்டார்'

எனக் கூறினர். ஈண்டு அழகிற்கு உண்மை ஒப்புடைப்பொரு ளாகக் கூறப்பட்டது.

அறிவு, இச்சை, செயல் (ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியா சத்தி) எனும் மனநீர்மை மூன்றனுள் அறிவு உண்மைப்பாலது; இச்சை அழகின்பாலது; செயல் செம்மைப்பாலது. உண்மை, அழகு, செம்மை என்பன முறையே அறிவு, இச்சை, செயலுக்கு எல்லையாகவும் நிலைக்களமாகவும் அமைந்தன.

மனநீர்மை மூன்றாயினும் மனம் ஒன்றே. ஆதலினாலே உண்மை, அழகு, செம்மையென்பன தம்முள்ளே ஒப்புடைய வாயின. அழகே உண்மை, உண்மையே அழகு; அழகே செம்மை, செம்மையே அழகு; உண்மையே செம்மை, செம்மையே உண்மை.

செம்மை, உண்மை, அழகென்னும் இவற்றை வடநூலார் சிவம், சத்தியம், சுந்தரம் என்பர்; ஆங்கிலநூலார் Goodness, Truth, Beauty என்பர்.

'நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையாற் கல்வி யழகே யழகு' என்புழி 'நெஞ்சத்து நல்லம்' எனச் செம்மையும், 'கல்வியழகு' என அறிவும், அழகின் வேறின்மையாதல் கூறப் பட்டது. 'உருவின்மிக்கதோர் உடம்பி'னைப் பெற்றோரும் கல்வியறி வில்லாதவழி அறிவுடையோரால் அழகிலரெனக் கருதப்படுவ ராதலின், 'கல்வியழகே யழகு' என்னுமிடத்து வந்த ஏகாரம் பிரிநிலையும் தேற்றமுமாயிற்று.

அழகும் உண்மையும் கவிப்பொருளாயினவாறுபோலச் செம்மைவயத்ததாகிய சால்பும் கவிப்பொருளாயிற்று. காப்பியத் தலைவனிடம் காணப்படும் சால்பே காப்பியக்கவிகள் விரித்துக் கூறும் பெரும்பொருள்.

வாழ்க்கையிலே சால்புவாய்ந்தோனாகிய கவிஞனொருவன் சால் பினைக் கவிப்பொருளாகக்கொண்டு செய்யுள்செய்வானாயின், அச் செய்யுள் இனிமையும் மாண்பும் உறுதியுந்தந்து மிளிருமென்பது அறிஞராயினோருக்கு உடம்பாடேயாம்.

வேள்ளகால் சுப்பிரமணியமுதலியார் என்னும் தமிழ்ப்பெருங் கவியினது தனிப்பாடல்களின் தொகுதியும், அப்பெரியாரது எண்பதாம் ஆண்டுநிறைவுவிழாவிலே, மதுரைத்தமிழ்ச்சங்கத் தாரையுள்ளிட்ட தமிழறிஞர் கூறிய வாழ்த்துரை, வாழ்த்துச் செய்யுட்களின் தொகுதியும் கையகத்துள்ளன.

'புதுவதுகிளந்த யாப்பின்மேற்'றாகிய கவிதை பெருவாவிற் றாகிய இக்காலத்திலே, தொன்மைநலஞ் சிறிதுங் குன்றாத செய்யுள் செய்யும் புலவர் மிகச் சிலரேயாவர். அப்புலவர்வரிசையிலே முதற் கண்வைத்து எண்ணுதற்குரிய வெள்ளகால்கிழார் இயற்றிய தனிச்

செய்யுளகத்துக் காணப்படும் கவியழகுகள் பல துறைய. அவை அனைத்தினையும் ஆராய்ந்துகூறப்புகின் உரை பெருகுமாதலின், மக்களைத் தேவராக்கும் நீர்மையதாகிய 'சால்பு' என்னும் பெரும் பொருளினைக் குறித்து, வாழ்க்கையிலே சால்புவாய்ந்த இப்பெருங் கவி கூறிய பலகவிதைகளிலே ஒரு சிலவற்றை யாராய்ந்து அவை தம்முட் பொதிந்த அழகினை எடுத்துக்காட்டுதலே 'கவியும் சால்பும்' என்னும் இப்பொருளுரையின் நோக்கமாகும்.

'அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ, டைந்து சால் பூன்றிய தூண்,' என ஆசிரியர் திருவள்ளுவனார் சால்பிற்கு நிலைபேறுவன இவையெனக் கூறுமுகத்தாற் சால்பினது வரைவிலக் கணங் கூறினார். சுற்றத்தார்மேலேயன்றிப் பிறர்மேலு முளதாய அன்பும், பழிபாவங்களினாணலும், யாவர்மாட்டும் ஒப்புரவுசெய்த லும், பழையார்மேற் கண்ணோடலும், எவ்விடத்தும் மெய்ம்மை கூறலுமே சால்பிற்கு நிலைபேறுவன.

'என்றும், நல்லோ ரிணக்கமே நான்இணங் கிடுக
நல்லோர் நினைவே நான்நினைந் திடுக;
நல்லோர் உரையே நான்உரைத் திடுக;
நல்லோர் நடையே நான்நடந் திடுக;
.............................................
உயிர்களை வருத்தல் ஒழிவே னாக;
உயிர்போ மெனினுமெய் உரைப்பே னாக;
களவினைக் கனவினுங் கருதே னாக;
.................................
அயலவர் பொருளினை அவாவே னாக;
அவர்கள்தம் வாழ்வுகண் டழுக்கறே னாக;
அவர்செயும் நன்றியை அயர்த்திடே னாக;
முன்புபின் பவர்பழி மொழியே னாக;
எங்கணும் அவர்புகழ் இயம்புவே னாக;
அவர்குறை காண்டலிற் குருடனே னாக;
அவர்மறை கேட்டலிற் செவிடனே னாக;

அவர்க்கின்னா கூறலில் ஊமனே னாக;
அவர்க்கூறு செய்தலில் முடவனே னாக;
அவர்கேடு சூழ்தலில் அறிவிலே னாக;
எனைக்கெடுத் தவர்க்குமநன் றியற்றுவே னாக;
வைதவர் தம்மையும் வாழ்த்துவே னாக;
வெறுத்தவ ரெவரையும் விரும்புவே னாக;
ஒறுத்தவ ருக்கும் உதவுவே னாக;
பகைவர்க்கும் அன்புசெய் பண்பினே னாக;
இத்தனை நல்லொழுக் கியைந்துளே மென்று
பெருமைபா ராட்டிடும் பிழையிலே னாக;
........
என்னை எவரும இகழினும புகழினும
செல்வம் என்னைச் சேரினும் தீரினும்
இன்றே இறககினும் என்றும் இருக்கினும்
எவ்வெவ் வின்பையும் எய்துதற் கெனினும்
எவ்வெத் துன்பையும் இரித்தற் கெனினும்
உண்மை வழுவி ஒழுகே னாக;
.........................................
எச்செய லெனினும்யான் இயற்றிட நேருமேல்
என்மனம் அமைதியை இழந்திடா தாக;
வருத்தம்என் மனத்தினை வருத்திடா தாக;
கடல்மலை வனம்இடு காடுகள் முதலா
வெருவிடு தனியிடம் மேவினே னயினும்
பாய்புலி பிடிக்கினும் பாம்பு கடிக்கினும்
என்மனம் நடுக்கினை எய்திடா தாக;
அலையா உறுதியுற் றசைக்க வொண்ணேனாய்
வச்சிர வெற்பென வற்பினை உற்று
விருப்புறு பொருள்கள் விட்டு விலகினும்
வெறுப்புறு பொருள்கள் மேவிச் சேரினும்
ஒழுக்கம் வழுக்கா உளத்தே னாக;'

எனக் கவி ஆண்டவனை வேண்டுமுகத்தால் மேலும் மேலும் பெறுதற்குத் தாம் அவாவிய சால்பு எனும் அழியாச்செல்வத்தின் நல்லியல்புகளை வகுத்துரைக்கின்றார்.

யாம் முன்னர்க் காட்டிய ஐந்திறேடு 'அழுக்கா றவாவெகுளி யின்னுச்சொன் னுன்கும் இழுக்காவியன்ற அற'மும், 'அஞ்சாமை யீகை அறிவு ஊக்கம்' எனும் நான்கும், குடிமையும், மானமும், பெருமையும், பண்புடைமையும் இதனுட் கூறப்படுதல் காண்க.

'நல்லொழுக் கத்துடன் வாழ்தலே நீடித்த
நல்வாழ்க்கை யாகும் நடைபிறழ்ந்த
புல்லொழுக் கம்முடை யோர்நீடு வாழ்ந்தாலும்
பொன்றின வர்களே யென்றறிவீர்' எனவும்,

'உண்மைக்கு மேலாம் மதமில்லை; எல்லா
உயிர்க்கன்பின் மிக்கதோர் பத்தியில்லை;
வண்மைக்கு மேலுப காரமில்லை; நல்
வசனத்தின் மேலுப சாரமில்லை' எனவும்,

'ஒக்க ஊக்கமோ டுறுதிநம் உளத்தினுக் குதவி' எனவும்,

'விண்ணி டிந்து விழுந்திடு மாயினும்
மண்ணில் நீதி வழங்கக் கடவதே' எனவும்,

'மெய்ம்மைதேர் அறிவினை மேவி யுள்ளவர்
செம்மனப் பாக்கியச் சிறப்பின் ஒப்பிலார்;
தம்மைத்தாம் உடையர்; அத்தகைமை சார்ந்திலா
மம்மர்மன் னவரினும் சிறந்த மன்னரே' எனவும்,

மெயி னும்முய ரொருமத மும்மிலை;
அனைத்துண் மையினுக் களவிலை யாதலால்
உண்மை யனைத்தும் உடைய மதமிலை;
உண்மை யொன்றும் உறுமத மும்மிலை;
எம்மதம் எவ்வள வுண்மையொ டியையுமோ
அம்மதம் அவ்வள வுயர்வின தாமால்;
மெய்யர் இவர்,பொய் வேடத் தினர்இவர்,
என்ன ஐயுற வின்றி அறியுமாறு
உள்ளத் துள்ளதை உணரவல் லார்க்கலால்

மற்றவர் உண்மை மதமறி வரிதால்;
மனிதனை மதத்தால் மதியா தொழுக்கால்
மதித்தலே உண்மை மதிப்பா குங்காண்;
"கருமமே யல்லது பிறிதென் கண்ட" தென்
றுரைசெய் கம்பன் உட்கருத் திதுவே,'

எனவும் வருபவற்றுள்ளே சால்பின்றுறை பல செவ்வியுறத் தரப் பட்டிருத்தல் காண்க.

வெள்ளகால்கிழாரது வாழ்க்கையிலும் செய்யுளிலும் இயைந்து நின்ற சால்பின்பொலிவினை உற்றுநோக்குங்கால்,

'ஆற்றுத லென்பதொன் றலந்தவர்க் குதவுதல்
போற்றுத லென்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொன்னோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை

பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்,'

எனும் நல்லந்துவனார்கூற்று நினைவிற்கு வருகிறது.

இக்குடிப்பெரும்புலவர் தம்மனோரை நோக்கி, ரொபேர்ட் பிரவுணிங் (Robert Browning) எனும் ஆங்கிலமகாகவியின் உரையே தம்முரையாக,

'என்றெறு
யாண்டுபல வாக நீவிரும் வாழுமின்;
காண்டரு செம்மை ஈண்டுநும் துரிய;
நாள்பல வாக நலம்பல பெறுதவீர்;
வர்னுள்,
பின்னவைக் காக முன்னவை யியைந்தன;

"அனைத்தும் ஒருபிழம் பதனுள் இளமை
ஒருபாற் பயனை உணர்த்தும்; மற்றொருபால்
அமைதியுங் காண்மின்; அச்சம் அகற்றுமின்;
நாதனை நம்புமின்;" என அவன் நவின்ற
போதம் உளநம் வாணுள் அனைத்தும்
அவன்திருக் கரத்தில் அமைந்தன கண்டீர்,'

என அறிவுரை கூறி வாழ்த்துவார்போலும்.

இவரை வாழ்த்திய தமிழ்ப்புலவரது செய்யுட்பாகங்கள் சில வற்றைத் தருகின்றோம்.

'தொண்டை மண்டல முதன்மையோர் மரபினிற் றோன்றி
எண்டி சைச்சுணும் தன்பெயர் வழங்கவத் திருநீர்
மண்ட லத்தையாள் மன்னவர் மகிழ்வுடன் வழங்கு
திண்டி றற்பெறு பட்டமும் புனைதரு சீலன்'

'செந்த மிழ்க்கொரு தாயக மெனப்புவி செப்ப
வந்த மாமது ரைத்தமிழ்ச் சங்கசா வலரொ
டெந்த நாளுநற் றமிழ்தழைத் திடமுயன் றிடலே
முந்து மாதவ மெனக்கொளு முத்தமிழ்ப் புலவன்'

'மிக்க கேளிருங் கிளைஞரு மெய்ந்நெறி வழுவா
மக்க ளும்பிறர் யாவரு மாண்புபெற் றுயர்தற்
கொக்கு மென்றுதன் சொற்செயல் குணமெலா மொருங்கு
தக்க கட்டளை யாக்கொளத் திகழ்ந்திடு சதுரன்'

'மாசில் உள்ளம் தூய ஒழுக்கம்
ஈசற் கன்பு தேசுறு செல்வம்
என்னும் பெருமைகள் துன்னும்
...............................
திருவுடைச் சீர்சால் பெரியர்'

'தொண்டை மண்டலத் தொல்வே ளாண்குலப்
பண்டைநற் பண்புகள் பலவும் பாங்கினில்
விளங்கும் குலநல விளக்கே'

'பணத்தால் மேன்மைக் குலத்தால் நல்வங்
கணத்தால் உயர்கவி மணத்தால் ஆயிரம்
முழுமதி நோக்கிய செழுமையாற் பெரியோன்'

என அவையகத்தார் கூறிய இவையனைத்தும் இவர்க்கு ஒவ்வுவ வாதலின், யாமும் இவர்தாம்,

'குடிப்பிறப் புடுத்துப் பனுவல் சூடி
விழுப்பே ரொழுக்கம் பூண்டு காமுற
வாய்மைவாய் மடுத்து மாந்தித் தூய்மையிற்
காதலின்பத்துத் தூங்கித் தீதறு
நடுவுநிலை நெடுநகர் வைகி வைகலும்
அழுக்கா றின்மை அவாவின் மையென
இருபெரு நிதியமும் ஒருநா மீட்டும்
தோலா நாவின் மேலோர்'

ஆமென அறிந்து உளமகிழ்வெய்துகின்றோம்.

உ
கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி—ங௯.] சித்திரபானு-ஹு ஆவணி மீ [பகுதி—கo.
Vol. 39. August–September 1942. No. 10.

## மதுரை இயற்றமிழ்மகாநாட்டுத் தலைவர்பேருரை

[இது, இம்மதுரைமாநகரில் நிகழும் சித்திரபாநு யாண்டு ஆடித்திங்கள் கஎ, கஅ, கக (1942-ஆம்ஹு ஆகஸ்டுமீ 1, 2, 3)-ஆம் நாட்களிலேகூடிய முத்தமிழ்மகாநாட்டு இயற்றமிழ்ப்பகுதிக்குத்தலைவராகிய சுவாமி விபுலாநந்தரவர்கள் வகுத்துரைத்தது.]

"தொடுக்குங் கடவுட் பழம்பாடற்
றொடையின் பயனே! நறைபழுத்த
துறைத்தீந் தமிழி னொழுகுநறுஞ்
சுவையே! அகந்தைக் கிழங்கையகழ்ந்
தெடுக்குந் தொழும்ப ருளக்கோயிற்
கேற்றும் விளக்கே! வளர்சிமய
இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே! எறிதரங்கம்
உடுக்கும் புவனங் கடந்துநின்ற
ஒருவன் றிருவுள் ளத்திலழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே! மதுகரம்வாய்
மடுக்குங் குழற்கா டேந்துமிள
வஞ்சிக் கொடியே! வருகவே
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே! வருக வருகவே!"

# செந்தமிழ்

மாட்சிமைதங்கிய சேதுபதிமன்னரவர்களே! முத்தமிழ்த்துறையின் முறைபோகிய உத்தமப்புலவர்களே! தமிழணங்கின் செல்வப் புதல்வர்களே! புதல்வியர்களே!

வையைப் பேரியாறு வளஞ்சுரந்தூட்டப்-பொய்யாவானம் புதுப்பெயல்பொழியத் தென்னர்குலத்தோர் செவ்விதிற்புரந்த இச்செழும்பதியானது தொன்றுதொட்டுத் தமிழ்ப்புலவரும் புரவலரும் ஒருங்குகூடி உரையாடித் தாமின்புறுவது உலகு இன்புறக் கண்டு காமுறுதற்கு இயைந்த இடமாதலின, கூடல் என்னும சிறப்புப்பெயர் எய்திநின்றது. அத்தகைய கூடலம்பதியிலே இம் மங்கலநாளிலே ஒருங்குகூடியிருக்கும் நம்மனைவருக்கும் தமிழணங்கின் பேரருள் உளதாகுக.

இமிழ்கடல்வேலியைத் தமிழ்நாடாக்கி வடபாலிமயத்திலே கயலும் வில்லும் புலியும் பொறித்த மூவேந்தரின் அறமும் மறமும் ஆற்றலும் நம் உள்ளத்திலே நீங்காதுநின்று ஒளிபரப்புவவாகுக.

தொன்மைநலஞ்சான்ற இந்நன்னகரிலே கன்மாப்பலகையேறியிருந்து தமிழாராய்ந்த செந்நாப்புலவர்தம் செழும்பனுவலிலே கற்போர் காணும் செம்மையும் அழகும் உண்மையும் நம் நெஞ்சகம் புகுந்து பொய்தீர்ந்து இருள்கடிந்து நம்மை நன்னெறிப்படுத்துவவாகுக.

இரண்டரைக்கோடியென்னும் எண்ணினராகிய நம் தமிழ்க்குலத்தார் அனைவரும் பசியும் பிணியும் பகையும் நீங்கிப் பொருட்செல்வமும் செவிச்செல்வமும் அருட்செல்வமும் ஏற்றபெற்றியெய்தப்பெற்று மண்ணகமாந்தர்க்கு அணியெனச் சிறந்து வாழ்வாராக.

இயலிசை நாடக முப்பாற்பொருளை ஆராய்தல்கருதி இப்பேரவையிலே வந்திருக்கும் நாமெல்லாம் காய்தல் உவத்தல் அகற்றி, நுண்மாணுழைபுலமுடைய நம் முன்னோரைப்போல நடுவுநிலை நெடுநகர்வைகி, உண்மைவழிச்செல்லும் உறுதிப்பாடுடையேமாகுக.

வரவேற்புக்கழகத்தாரது கேள்விக் கியைந்து இப்பேரவையிலே எழுந்தருளியிருக்கும் கல்வி கேள்விகளான்மிக்க பேரறிஞர்பலர் தாம் அரிதின் ஆராய்ந்துகண்ட செம்பொருண் முடிபுகளை அவைக்களத்து எடுத்துரைக்க நாமெல்லாம் கேட்டு மகிழ்வுறப்போகின்றோம். அங்ஙனம் மகிழ்வுறுத்தும் நீர்மையவாகிய அறிஞர்பேருரைக்குத் தோற்றுவாயாக ஒருசிலகூறுதல் இன்றியமையாததாயிற்று. அத்தகைய தோற்றுவாய்தானே சென்றகாலத்தில் நம் முன்னோரெய்திய சீரினையும், இனி எதிர்காலத்தில் நம்குலத்துதிப்போர் எய்தப்போகின்ற சிறப்பினையும், ஆங்கவர் சிறப்பெய்தும்வண்ணம் இன்று நாம்செய்தற்குரிய தமிழ்த்தொண்டினையும் வகுத்துக் கூறுமியல்பினதாகவேண்டும். சென்ற காலத்துச் சீரினை எதிர்காலத்தாருக்கு இயைவிக்கும் நிகழ்காலத்து வினையாகிய தமிழ்த்தொண்டானது மும்மையினையும் தழுவி நின்றது; ஆதலின் அத்தொண்டினை ஓரளவிற்கு விரித்துக்கூற முற்படுவாம்.

பள்ளியிற்பயிலும் தமிழ்ச்சிறார்முதற் பலகலை கற்றுத்தேறிய முதுதமிழ்ப்புலவர் ஈறாக அனைவரும் தமிழ்க்குலத்தாரின் உண்மை வரலாற்றினை உளங்கொண்டுணர்தற்குவேண்டிய சிறியவும் பெரியவுமாகிய வரலாற்று நூல்கள் பல தமிழ்மொழியிலே எழுதப்படல் வேண்டும். இதுவே நாம்செய்யவேண்டிய தமிழ்த்தொண்டுகளுள்ளே முதலில்வைத்து எண்ணுதற்குரியதென்பது எனது உள்ளக் கிடக்கை.

இற்றைக்கு ஏறத்தாழப் பதினாலாயிரம் யாண்டுகளுக்குமுன்பு நம்முன்னோர், பஃறுளியாற்றுக்கும் குமரியாற்றுக்கும் இடையே கிடந்த பெருநிலப்பரப்பிலே சீருறவாழ்ந்து எண்ணூலும் இசைநூலும் இயல்நூலும் வானநூலும் மனையமைப்புநூலும் கலமமைப்பு நூலும் பிறநூலும் வல்லாராய், இந்நகர்க்கு மதுரைப்பெயரளித்த தொன்னகராகிய (கடல்கொண்ட) தென்மதுரையிலே நிலந்தரு திருவினெடியோனையுள்ளிட்ட அருந்திறன்மன்னர்தம் அவைக்களத்திலே சிறந்துவிளங்கினரென்பதும், இற்றைக்கு ஏறத்தாழ ஒன்பதினாயிரமாண்டுகளின்முன்னே கடல்கோளினாலே குமரிநாடு

அழிந்தபின்னர், உவணன் ஓதக்கோன் என்னும் தலைவர்கள் வழிப் படுத்தக் கலத்திற்சென்று பாரசீகக்குடாவின் வடபாலதாகிய சுமேருநாட்டிற் குடியேறினரென்பதும், மேலும் அராபிநாட்டின் தென்பாலதாகிய ஏமநாட்டிலும், நீலநதிவளம்பெருக்கும் மிசிரி என்னும் எகிப்துநாட்டிலும், சுமேருநாட்டினையடுத்த ஏலநாட்டிலும் சிந்துநதிக்கரையில் விளங்கிய மீனாட்டிலும், ஆங்கதற்கு வடபாலதாய்ப் பனிபடர்ந்த மலைகளாற் சூழப்பட்ட மரங்கோத்திநாட்டிலும், பிறநாடுகளிலும் வாழ்ந்தார்கள் என்பதும், சுமேருநாட்டின்வடக்கே சோழர்குடியேறிச் சோழதேயம் எனப் பெயரிட்டு வாழ்ந்த நாடே மொழிச்சிதைவினாலே சால்டியா எனப்பட்டதென்பதும், பண்டைக் காலத்திலே கலத்திற்சென்று பண்டமாற்றினாலே நிதிக்குவை யீட்டிய பாணிகள் தமிழ்நாட்டு வணிகராமென்பதும் ஐரோப்பாவுக்கும் ஆப்பிரிக்காவுக்கும் இடையே கிடக்கும் மத்தியதரைக் கடலின் இருகரையிலும் வாழ்ந்து பண்டை யவனரும் உரோமரும் வருதற்குமுன்பு நாகரிகம் பரப்பிய மீனவர், எத்துருஸ்கர், நுமிதியர், பேர்பெரியர், ஐபீரியர் ஆதியோர் தமிழ்க்குலத்தினராமென்பதும், வில்லவராகிய சேரமன்னர் கலத்திற்சென்று மத்தியதரைக் கடலிலுள்ள கிரீத் (Creat) என்னும் தீவினைக் கைப்பற்றி ஆளுகை புரிந்தசெய்தியே 'வன்சொல் யவனர் வளநாடாண்டு' எனச் சிலப்பதிகாரத்துள்ளும், 'நயனில் வன்சொல் யவனர்ப் பிணித்து' எனப் பதிற்றுப்பத்தினுள்ளும் கூறப்பட்டதென்பதும் பிறவும் பண்டைக் காலவரலாறு (Ancient History) கூறும்நூல்களினுள்ளும் நம் நாட்டு மேனாட்டுப் பண்டையிலக்கியநூல்களினுள்ளும் பரவிக்கிடக்கின்ற முடிபுகளாம். இம்முடிபுகளுள் ஒருசில உலகபுராணம் என்னும் தலைப்பெயர்க்கீழ்ச் "செந்தமிழ்"ப்பத்திரிகையிலும் பிற வெளியீடுகளிலும் வெளிவந்தனவாத் தமிழன்பர்கள் அறிவார்கள்.

அலைதன்றியும் ஒருசாராசிரியர் தமிழ்க்குலத்தார், பசிபிக் பெருங்கடலினைக் கடந்துசென்று மத்திய அமெரிக்காவிலே குடியேறி, மெக்ஸிக்கோ பீரு யுக்காட்டன் முதலிய இடங்களிலே வாழ்ந்து மாயாநாகரிகத்தைத் தோற்றுவித்தனரெனக் கூறுவர்.

இவற்றையெல்லாம் ஒருங்குவைத்து நோக்குமிடத்து உலகசரித்திரமே தமிழ்க்குலத்தாரோடு தொடங்குகிறதென்பதும், இற்றைக்கு ஒன்பதினாயிரம் ஆண்டுகளின்முன்னே பூவலயத்தின் நடுப்பாகம் முழுவதிலும் தமிழ்க்குலத்தார் சீரும் சிறப்புமுற்று வாழ்ந்தார் என்பதும் பெறப்படுகின்றன. கடல்கொண்ட அத்லாந்திஸ் (Lost Atlantic) தெங்கமரமும் யானையுமுடையதாயிருந்ததெனக் கூறப்படுதலின், கடல்கொண்ட குமரிநாட்டின் வரலாறே மத்திய அமெரிக்காவினின்று ஐரோப்பாவினையடைந்தனொன்று கடல்கொண்ட அத்லாந்திஸ் வரலாறாக உருத்திரிந்ததெனக்கொள்வதும் ஒருதலை. இவைபோன்ற முடிபுகளையெல்லாம் வரலாற்று நூற்றுறையிலே வல்லுநராயுள்ளோர் "காய்தல் உவத்தல் அகற்றி" நடுவுநிலைமையோடாராய்ந்து பொருட்டொடர்நிலையினமைந்த நூல் வடிவாக்கித் தருதல்வேண்டும்.

காலமும் கடலும் செல்லும் கவர்ந்தனபோக எஞ்சிநிற்கும் அருந்தமிழ்நூல்களின் வரலாற்றினைச் செவ்வியமுறையிலே ஆராய்ந்தறிந்து நமதுமொழியிலும் பிறமொழியிலும் தமிழிலக்கியவரலாறுகள் சிறியவும் பெரியவுமாக எழுதித் தமிழ்நூல்களின் மதிப்பினை உலகிற்கு அறிவுறுத்த முயலவேண்டும். ஆங்கிலமொழியிலே நிகண்டுநூல் ஒன்றினை யாத்தமைத்த ரோஜேட் (Rojet) என்பாரோராசிரியர் அத்தகையநூல் பிறமொழியொன்றினும் இலதென முதற்பதிப்பிலே கூறினர். இரண்டாம்பதிப்பு முகவுரையிலே அமரசிங்கர் என்பாரியற்றிய நிகண்டுநூலொன்று வடமொழியிலே உளதெனக் குறிப்பிட்டார். பிங்கலம் திவாகரம் முதலிய நிகண்டுநூல்கள் தமிழ்மொழியிலுள வென்னும் உண்மையினை அவர் அறிந்திலர்; தமிழராகிய நாம் அறிவித்திலேமாதலின்.

பாரதநாட்டு இசையினைக்குறித்து ஆங்கிலத்திலே நூலெழுதிய பக்ஸ் ஸ்டிராங்குவேய்ஸ் என்னும் பேராறிஞரும் பிறரும் வடமொழியிசைநூல்களையே குறிப்பிட்டுச்சென்றனர்; தமிழராகிய நாம் நமது இசைக்கலையினைக்குறித்து அவர்போன்றாருக்கு அறிவித்திலேமாதலின். சாரங்கதேவரியற்றிய சங்கீதரத்நாகரம்

தேவாரத்திற் பொதிந்த தெய்வ இசையினைப் பெருகக் குறிப்பிடுகிற தென அறிந்திருந்தும் நம்மவருள் ஒருசாரார் அவ்வுண்மையினை உலகிற்குணர்த்தாது மறைக்கமுயல்கின்றனர்.

இனி, நம் கைக்கு எட்டாது அழிந்துபோனநூல்களைக்குறித்துப் பழையவுரையாசிரியர் கூறுகின்ற வரன்முறைகளையும் மேற்கோட்சூத்திரங்களையும் பொன்னேபோற்போற்றி நூல்வடிவாக்கி அச்சேற்றிப் பாதுகாக்கவேண்டும். இவ்வாறு செய்தற்குரியன:— குண்டலகேசி, வளையாபதி, தகடூர்யாத்திரை, இசைநுணுக்கம், சயந்தம், குணநூல், செயிற்றியம், பாதசேனுபதியம், பஞ்சமரபு, இந்திர காளியம், மதிவாணர்நாடகத்தமிழ்நூல், ஆசிரியமாலை, மாபுராணம் என்று இத்தொடக்கத்தன. "நாடகத்தமிழ்நூலாகிய பரதம், அகத்தியம் முதலாவுள்ள தொன்னூல்களும் இறந்தன:" என்று அடியார்க்குநல்லார்கூறுதலின், தமிழ்மொழியிலே பரதம் எனப் பெயரியநூலொன்று இருந்து இறந்த உண்மை புலப்படுகின்றது. இதற்கும் வடமொழிப் பரதத்துக்கும் உள்ள தொடர்பு அறிஞர் ஆராய்ந்தறிதற்குரியது. வரன்முறையாராய்ச்சி சிறிதும்வாய்க்கப் பெறாத அரபத்தநாவலர் என்னும் பிற்காலத்துநூலாசிரியர் தமது தமிழ்முன்னோர்வழித் தமக்குக்கிடைத்த அரும்பொருண்முடிபு களைப்பொதிந்து தாமியற்றிய பரதம் என்னும் நூலுக்கு வடமொழி முதனூல் கற்பிக்கும் விழைவினாலே பதின்மூன்றாநூற்றாண்டி லிருந்த சாரங்கதேவரை அகத்தியர்க்குமுன் இருந்தவராக்கிச் சுத்த பௌராணிகமதத்தில் நிற்பாராய், வடமொழியிலே சாரங்கதேவ முனிவர் பரதநூலை ஒரிலக்ஷம் கிரந்தங்களாற் கூறினர் எனவும், அவர்நூற்கு வழிநூல்செய்த அகத்தியனார் ஆறாயிரஞ்சூத்திரத் தினால் அமைந்தனரெனவும், சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின் மாந்தர்பொருட்டாகத் தாம் சுருக்கநூல்செய்ததாகவும் கூறிச் செல்கின்றார். அவர்கூற்று, எனது அருமைநண்பரொருவர் பௌராணிகமனப்பான்மையினை எள்ளி நகையாடும் கருத்தினொடுவெளியிட்ட 'பள்ளியகரப் பழங்கதை'யை நினைவுக்குக்கொண்டுவருகிறது.

பரதம் என்னும் பெயர்க்காரணத்தையாராய்தற்குச் சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்கூறிய முடிபுகள் நமக்கு உதவுகின்றன. ஒன்பான்சுவையும் எண்வகைமெய்ப்பாடும் என்னும் இவற்றோடு இயைபுடைய "இரதம்" என்னும் மொழியினை அரும்பதவுரையாசிரியர் பலகால் வழங்குகின்றார். வடமொழியலங்கார நூலார்கண்ட "ரஸம்", "பாவம்" என்னும் மொழிகளின் பொருளினை இம்மொழி தந்துநின்றது. "பண்", "இரதம்", "தாளம்" என்னும் மூன்றுறுப்படங்கிய பிண்டம் 'பரதம்' எனலாகும். முத்தமிழ்விரகாகிய ஆளுடையபிள்ளையாரது தேவாரத்திருப்பதிகத்திலே,

> "பண்ணும்பதமேழும்பலவோசைத்தமிழவையு
> முண்ணின்றதோர்சுவையும்முறுதாளத்தொலிபலவும்
> மண்ணும்புனலுயிரும்வருகாற்றுஞ்சுடர்மூன்றும்
> விண்ணும்முழுதானானிடம்வீழிம்மிழலையே."

என இறைவனது இசையுருவினையும் எண்பேருருவினையும் கூறிய அருமைத்திருப்பாடலிலே, "பண்ணும் பதமேழும் பலஓசைத் தமிழவையும்" எனப் பண்ணீர்மையும், "உண்ணின்றதோர்சுவையும்" என இரதமும், "உறுதாளத்தொலிபலவும்" எனத் தாளக்கூறுபாடுகளும் மேற்காட்டிய முறையிலே அமைந்துநிற்றல் காண்க. "பரதமுனிவர்செய்தலிற் பரதமாயிற்று. அப்பெயரினார் தமிழுக்குரியரல்லர்" எனின், "அரசகுமாரும் பரதகுமாரும்" என அரசரோடு உடன்வைத்தோதிய பரதர்குலம் தமிழுக்குரியது; அக்குலத்தினரொருவர் தமிழ்ப்பரதத்தைச் செய்தாரெனக்கொள்ளுதலில் நேர்ந்த இழுக்கென்னை? என்போம்.

பாவம் இராகம் தாளம் எனும் இவற்றைக் கூறும்நூல் "பரதம்" எனப் பெயரெய்தியது எனப் பிற்காலத்தார் கூறினர். வடமொழி நான்காம் பகரத்தை முதனிலையாகக்கொண்ட "பாவம்" என்னும் சொல், யாமறிந்தவரையிலே பழந்தமிழ்வழக்கில் வந்திலது. அங்ஙனமாதலின், அடியார்க்குநல்லார்கூறும் தமிழ்ப்பரதத்தின் முதனிலையெழுத்து இருமொழிக்கும் பொதுவாகிய முதற்பகரமேயாகுமென்பதும், அது பண்ணைக்குறித்ததென்பதும் அறிதற்குரிய.

அவ்வண்ணமே இடைநின்ற "ர" கரம் பழந்தமிழ்வழக்கிலுள்ள இரதத்தினைக் குறித்ததெனவும், அவ்வழக்கிற் காணப்படாத "இராக"த்தினைக் குறித்திலதெனவும் அறிதல்வேண்டும். "பண்ணும் இரதமும்" என்னும் முறையினை மறந்த பிற்காலத்தார் இரதமாகிய பாவத்தினை முன்னும் பண்ணீர்மையாகிய இராகத்தினைப் பின்னுமாக மாறிவைத்து இடர்ப்படுவாராயினர்.

வடமொழிப் பரதமும் சங்கீதரத்நாகரமும் சிறந்தமுறையிலே தமிழில் மொழிபெயர்க்கப்படுவவாயின், அம்மொழிபெயர்ப்புநூல்கள் தமிழிசையின் மறுமலர்ச்சிக்குப் பெரிதும் உதவுவ என்பது எனதுகருத்து. பல்கலைக் கொடைவள்ளலாகிய செட்டிநாட்டரசரவர்கள் தங்கள் பல்கலைக்கழகத்தின்மூலமாகவோ பிறவாயிலாகவோ தமிழ்வளர்ச்சிக்குவேண்டிய இப்பணியினையும் செய்து நிறைவேற்றுவார்களெனத் தமிழுலகம் எதிர்பார்க்கின்றது.

இயற்றமிழ்த்துறைக்குத் தலைமைதாங்கும் யான் அத்துறையோடமையாது இசைத்தமிழினைக் குறித்துப் பேசப்புகுந்தது பொருத்தமாமோ என இப்பேரவையோர் ஐயுறலாம். அவ்வையுறவினை நீக்குதற்பொருட்டு இசைக்கலைக்கு உறையுள் எனப் போற்றற்குரிய தஞ்சைமாநகரிலே பரம்பரை யிசைச்செல்வர்குலத்துதித்தவர்களும் சென்னைப் பல்கலைக்கழகத்து இசைப்பகுதியாசிரியராகக் கடமைபுரிபவர்களுமாகிய திரு. K. பொன்னையாபிள்ளையவர்கள் அண்மையில் வெளிவந்த "குமரன்" இசைமலரிலே கூறியதோர் சீரியவாசகத்தினை எடுத்துக்காட்ட விரும்புகிறேன். அது வருமாறு:—

"இனி, இயற்புலவர்கள் இசைப்புலவர்களோடு ஒத்துழைக்க வேண்டும். இயற்புலவர்கள் இசையுணராமலும் 'இசைப்புலவர்கள் இயலையுணராமலுமிருந்ததுதான் தமிழிசைமறைவிற்கு முதற்காரணம். இயலின்றி இசையில்லை; இசையின்றி இயலில்லை. வாய்க்காலும் அதன்வழியே ஓடுகின்ற நீரும்போல் இயலும் இயல்வழியோடும் இசையும் இருக்கின்றன. தண்ணீரில்லாதபோது வாய்க்காலிருந்தும் பயனில்லை. வாய்க்கால் இல்லாத தண்ணீர் சரியாகப் பயன்படாமல் பரந்தோடிக் கெட்டுவிடும். இரண்டும் இருந்து

தண்ணீர் பாயுமானால் வயல் நன்றாகவிளையுமாறுபோல, இயலும் இசையும் கலந்து மிளிருமானால், கேட்போருள்ளத்தை மகிழ்விக்கும். ஆகவே இயற்புலவர்களும் இசைப்புலவர்களும் ஒன்றுபட்டால்தான் தமிழிசையினிமையைக் காணமுடியும்." ஆதலினாலே இயற்புலவர்களை விளித்து, "ஓ இயற்புலவர்களே! இசைவளர்போம் வம்மின்" எனவும், இசைப்புலவர்களைநோக்கி, "ஓ இசைப் புலவர்களே! இயல்வளர்ப்போம் வம்மின்" எனவும் நாம் கூறுவோமாக. கதைதழுவிய கூத்தாகிய நாடகமானது இயல் இசை யிரண்டினையும் தன்னுள் அடக்கியதாதலின், நாடகத்துறைவல்லோர் முத்தமிழ்வளர்ச்சிக்கு விரைந்து முன்னிற்பாரென்பது சொல்லாமலே அமைகின்றது.

இயற்புலவர் கற்றற்குரியநூல்களிலே இசைநாடகமுடிபுகளும் விரவிவருதலை ஒருசிறிது காட்டப்புகுவாம். அருந்தமிழ்ப்புலவர் வகுத்துரைத்த அகத்திணைத்துறைபலவும் நிரனுறவமைந்த தஞ்சைவாணன்கோவைபோல்வன, தலைவன் தலைவி செவிலி நற்றாய் பாங்கன் பாங்கி அறிவர் கண்டோர் காதற்பரத்தையர் காமக்கிழத்தியர் என்று இன்னோர் நாடகபாத்திரங்களாகத் தோற்றி நடிக்கும் காதல்நாடகங்களேயாம். காளிதாசப்பெருங்கவி யாத்த சாகுந்தல நாடகத்தோடு இவை ஒத்த பொருண்மைய. ஆனிரைகவர்தலும், போர்விழைந்தேகலும், அரணங்கோடலும், மலைதலும், வென்றி மாலைசூடலும் என்று இத்தொடக்கத்த புறத்துறைகளை நிரனுறக் கூறும் வெண்பாமாலைபோல்வன அறனும் மறனும் தழுவிய வீர நாடகங்களேயாம். வடநூற்புலவர்வகுத்த நால்வகைவிருத்திகளுள்ளே கைசிகி, பாரதிவிருத்திகள் அகநாடகங்களுள்ளும் ஆரபடி சாத்துவதிவிருத்திகள் புறநாடகங்களுள்ளும் வருவன.

தொல்லாசிரியர் விரிவுறக்கூறிய மெய்ப்பாட்டியல் இயற்றமிழுக்கு அணியாந்தகைமையது, இசைநாடகங்களுக்கு இன்றியமையாத உறுப்பாந்தகைமையது. செய்யுளியலுட்கூறிய வண்ண விகற்பங்களும் எழுத்தினுட்கூறிய மாத்திரை அளபெடை என்றின்னவும் இசைப்பகுதிக்கும் உரிய. வீரசோழியநூலும் உரையும்

சந்தி சுவை யுள்ளிட்ட நாடகவியல் விலக்குறுப்புக்களையும் செந்துறை வெண்டுறை மார்க்கங்களையும் சிந்து திரிபதை சவலை சமபாதவிருத்தம் தாண்டகம் என்னும் இசைப்பாவகைகளையும் வண்ணக்கூறுபாடுகளையும் தெள்ளிதின் உரைப்பன. எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் இயற்பகுதியைந்தும் இசைநாடகத்துக்கு அடிப்படையான உண்மைகளும் தொல்லாசிரியர் வகுத்த எழுத்து சொல் பொருள் என்னும் மூன்றுறுப்படங்கிய பிண்டத்தினுள்ளே ஒருவாறு அடங்கிநிற்பவாதலினன்றே இயலிசைநாடகத் தொடர்நிலைச்செய்யுளாகிய சிலப்பதிகாரத்துக்கு உரைவகுத்த அடியார்க்குநல்லார்,

"எழுத்தின் றிறனறிந்தோ இன்சொற் பொருளின்
அழுத்தந் தனிலொன் றறிந்தோ—முழுத்தும்
பழுதற்ற முத்தமிழின் பாடற் றுறையின்
றெழுதத் துணிவதே யான்"

எனக் கூறியமைந்தார்.

அவர் அவ்வாறு கூறினாரேனும், சிலப்பதிகார நூலினை முழுதும் படித்து உவகையுறும் விழைவுடையோர் இசை நாடக நூற்றுறைகளை அறிந்துகொள்வது இன்றியமையாததென்பதை யாவரும் உணர்வர். சேரமுனிவன் செய்தளித்த சிலப்பதிகாரத்தை உளங்கொள்ளும் ஆர்வமானது பிடர்பிடித்துந்தப் பதினெட்டாண்டுகளின்முன்னே நாடகநூன்முடிபுகளை ஓரளவிற்குக்கூறும் மதங்க சூளாமணியினைக் குருவருளும் தமிழ்க்குலமுதல்வர்தம் ஆசிமொழியும் உறுதுணையாகக்கொண்டு ஒருவாறு எழுதிமுடித்தேன். மதுரைத் தமிழ்ச்சங்கத்தார் அதனை உவந்தேற்று வெளியிட்டனர். கழிந்த பத்தாண்டுகளாகப் பழந்தமிழிசைமரபினை யான் ஆராய்ந்து கொண்டுவருதலை இப்பேரவையானது நன்கறியும். இமயவல்லியாகிய அங்கயற்கண்ணம்மையின் பேரருளினாலே இமயத்தில் உறைந்த நாட்களிலே முன்பு தெளிவுபடாத உண்மைகள் பல நன்கு தெளிவாயின. அதனாற் பத்தாண்டுகளாகச்செய்துவரும் ஆராய்ச்சி

முற்றுப்பெறும்நிலையிலிருக்கிறது. தமிழ்ப்பெருமக்களின் உளங் கனிந்த அன்பாகிய அருந்துணையும் எனக்குப் பெருகக் கிடைத் துளது என்பதை யான் உணருகிறேன். ஆதலினாலே பழந்தமி ழிசைமரபு விரைவிலே நூலுருவமாக வெளிவரலாம்.

கண்டத்தினாலோ கருவியினாலோ இசைமரபு தவறாது பாடு கின்ற ஆற்றலை இயற்புலவரெல்லாரும் பெறுதல் அரிதெனினும், இசைப்புலவன் அமைத்துத்தந்த ஆளத்திக்குத் தக, இசைப் பாடல்களைச் சுவையமைய ஆக்குந்திறமையினை இயற்புலமை நிரம்பும் விருப்புடையோரனைவரும் முயன்றுபெறுதல்வேண்டும். அஃதன்றியும் தமிழணங்கிற்கு அணிகலனாகச் சேரமுனிவன் செய் தளித்த சிலப்பதிகாரச் செழும்பனுவலினை அரங்கேற்றுகாதை, ஆய்ச் சியர்குரவை என்றித்தொடக்கத்த புறநீங்கலாகப் படித்தோமென இயற்புலவர் சொல்வது அவர்க்குப் பெருமையாகாது. முத்தமிழ்க் காப்பியத்தினை முற்றும் படித் தின்புறுதற்குக் கருவியாக இசை யியல் நாடகவியல்களை ஆராய்ந்து தெளியவேண்டும்.

இனி, இடைக்காலத்திலே சமண பௌத்த ஆதிக்கம் கழிந்த பின்னர்ச் சைவ வைணவ மதங்கள் மறுமலர்ச்சியடைதற்குக் காரணராயிருந்த நாயன்மார்களும் ஆழ்வார்களும் இன்னிசைப் பாடல்களினாலே தொண்டருள்ளத்திலே அன்புநீர்பாய்ச்சி அருள் வெள்ளம் பரவச்செய்தார்கள். "பண்ணீர்மைமொழிப் பரவையார் கொழுந" ராகிய சுந்தரமூர்த்திநாயனார், தாம்பாடிய திருக்கோலக் காத்திருப்பதிகத்திலே,

"நாளுமின்னிசையாற்றமிழ்பரப்பும்
ஞானசம்பந்தனுக்குலகவர்முன்
தாளமீந்தவன்பாடலுக்கிரங்குந்
தன்மையாளனை"

என்னுமிடத்து முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையா ரது தமிழ்த்தொண்டினைக் குறிப்பிடுகின்றார். அத்தொண்டு

எந்நீர்மையது? இன்னிசையே கருவியாக நாடெங்கும் இயற்றமி ழினைப் பரப்பிய நீர்மையது. சுருங்கிய காலவெல்லையினுள்ளே ஆளுடையபிள்ளையார் தமிழ்நாடு விழித்தெழுமாறுசெய்த அற்புதச் செயலுக்கு உறுதுணையாகநின்றன ஆண்டவனதுபேரருளும் இசையோடியைந்த இயலும் எனக் கூறுவது மிகையாகாது. "மருவியவேழிசைபொழிய மனம்பொழியும் பேரன்பாற் பெருகிய கண்மழைபொழி"யும் புகலிப்பெருந்தகையாரும், மற்றைய குர வர்களும் அருளிச்செய்த இன்னிசைச்செழும்பாடல்கள் தமிழ் மக்களுடைய வுள்ளத்திற் புகுந்து ஊக்கியகாரணத்தினாலேதான், தமிழர் மனவலியும் உடல்வலியும்பெற்றுச் சோழமன்னரது படைத்தலைமையிலே கலத்திலும் காலினும் சென்று வேற்றுநாடு களை வென்று எத்திசையிலும் தமிழ்முழங்கச்செய்தார்கள்.

நம்முன்னோர் இயல் இசை நாடக முத்தமிழ்த்துறைகளை மாத்திரமல்ல; கலைத்துறைகள் வேறுபலவற்றையும் போற்றினார்க ளென்பதைப் பழைய நூல்களால் அறிகின்றோம். சிற்பத்துறை யிலும் ஓவியத்துறையிலும் நம் முன்னோர் நிரம்பிய புலமைபடைத் திருந்தாரென்பதற்குத் தென்னிந்தியாவிலுள்ள அழகிய கோயில்க ளே சான்றுபகருகின்றன. மருத்துவநூலிலே அவர் படைத்துள்ள ஆற்றலினைச் சித்தவைத்தியமுறை கண்கூடாகக் காட்டுகிறது. மரக்கலமமைக்கும்நூலும் வானநூலும் பிறவும் முழுதும் அழிந்து போகவில்லை. ஆதலினாலே அவைதம்மையெல்லாம் பண்டைப் பெருநிலைக்குக் கொண்டுவருதல்கூடும்.

காலநீரோட்டம் விரைந்து ஓடுகின்றது. தமிழர் பழங்காலத் துச்சிறப்பினைமாத்திரம் பறையறைந்துகொண்டிருப்பாரெனின் நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் முழுதும் இழந்தநீர்மைய ராதலும் கூடும். சென்ற நூற்றாண்டிலே ஐரோப்பாவிலும் அமெரிக்கா விலும் விஞ்ஞானநூல் மிகவும் விருத்தியடைந்து விளங்குகின்றது. அந்த அறிவுச்செல்வத்தைத் தமிழ்மொழி பெறுதற்காவன செய்தல் சிறந்த தமிழ்த்தொண்டாகும்; லண்டன்மாநகரிலுள்ள

வேத்தவை (Royal Society) என்னும் அறிவுநூற்புலவர்குழு வானது, நமது தமிழ்நாட்டிலே பிறந்து தமிழ்நாட்டுக் கலைக்கழகங் களிலே கல்விபயின்று கணிதநூலினும் விஞ்ஞானநூலினும் பெரும் புலமையடைத்த திரு. இராமாநுசம், திரு. இராமன், திரு. கிருஷ் ணன் என்று இன்னோருடைய புலமையைப் பாராட்டி அவையகத்தா ராக்கியசெய்திகேட்டு நாமெல்லாம் பெருமகிழ்வடைந்தோம். கணித விஞ்ஞான அறிவு நிரம்பிப் பூவுலகத்துப் பேரறிஞர்குழுவினி லே தலையணியிலிருக்குமாற்றல் தமிழனுக்கு உண்டு என்பதை அறிந்துகொண்டோம். அண்ணுமலை பல்கலைக்கழகத்தாரின் சிறந்த முயற்சியினாலே தமிழ்மொழியிலே பூதநூல் (Physics), வேதிநூல் (Chemistry), புதிய தருக்கநூல் (Logic) என்று இவை வெளி வந்துவிட்டன. ஆட்சியும் குணமும் காரணமாகக் கலைச்சொற்கள் நாளடைவிலே செம்மையுறுந் தன்மையின. அங்ஙனமாதலின் வடமொழி தென்மொழி மேற்றிசைமொழி யென்னும் மும்நீர மொழிகளும் இற்றைநாளிலே அறிவுப்பெருங்கடலிலே கலத்தலை யாமெல்லாம் விருப்பொடு ஏற்றுக்கொள்வோமாக. தமிழ்நாடு தனக்குரிய ஆக்கத்தினைப் பெறுகிற நன்னாளிலே அறிவுக்கடலி லிருந்து எழப்போகின்ற தமிழ்முகிலானது புன்மையாகிய உவர்த் தன்மையினை முழுதும்நீக்கித் தூய தமிழ்நீரினை நாடெங்கும் பொழி யக் காண்போம். அந்நாள் மிகவும் அணுகிவருகிறதென்பதற்கு இம் முத்தமிழ் மகாநாடே சான்றுபகருகின்றது. மூடநம்பிக்கை யோடு கூடிய பௌராணிக மனப்பான்மையென்னும் இருள் அகல் கின்றது. அறிவுக்கதிரோனுடைய இளவெயிலானது நம் உள்ளத் துக்கு உவகையையும் உடலத்துக்குப் புதிய வலிமையையும் தரு கின்றது. புத்தம்புதியநூல்கள் பலவற்றைப் புனைந்து தமிழன்னை யின் திருவடிகளிலே காணிக்கையாக வைப்போமாக. சோமுனிவன் செய்தளித்த சிலம்பினையணிந்த அச்சீறடிகள் நம் நாவிலே களிநடம் புரிபவாகுக. உறக்கம்நீங்கி விழித்தெழுந்த தமிழராகிய நாம் ஓய் வின்றியுழைத்து உலகனைத்தினும் நம் மொழிச்செல்வத்தைப் பரப்புதற்கு முயல்வோமாக.

தமிழ்நூற்பரப்பினை உளங்கொண்டுநோக்குமிடத்துக் கடைச் சங்கத் திறுதிக்காலம்முதல் இதுவரையும் தமிழ்மொழியிலே வெளி வந்தநூல்களுட் பெரும்பாலன பலவாகிய சமயங்களைத் தழுவிய நூல்களாமெனக் காண்கின்றும். சமண பௌத்த முனிவர்களும் சைவ வைணவப் பெரியார்களும் செய்ததுபோலவே அண்மையிலே இந் நாட்டினரொடு கலந்த இஸ்லாமிய கிறிஸ்தவ சகோதரர்களும் தத்தம் சமயவுண்மைகள் பொதிந்த நூல்களைத் தமிழ்மொழியிலே இயற்றி வெளியிட்டனர். அங்ஙனமாதலின் தமிழ்வளர்க்கும் மகா நாடுகளும் கழகங்களும் உண்மைஞானிகளைப்போலவே சாதி மத வேறுபாடின்றி மன்பதையோரனைவரையும் ஒப்பநோக்குமியல்பின வாதல்வேண்டுமென்பது வெளிப்படை. சமயக்கணக்கர்தந்திறங் கேட்ட மணிமேகலை பல்வேறு சமயவாதிகளும் உரைத்த பொருளினை உளங்கொளக் கேட்டதுபோல, உண்மைத்தமிழன்ப ராயினர் தமிழிலுள்ள தலையாய சமயப்பெருநூல்களை அவ்வந்நூலினு லுணர்த்தப்படும் சமயங்களுக்குரியராகிய அறிஞர்பாற் கேட் டமைவது சாலச்சிறப்புடையதாகும். சாதி மத வேறுபாடின்றியும் அரசியற்கட்சிப் பிரிவினையின்றியும் செய்தற்குரியதொண்டு தமிழ்த் தொண்டு.

தமிழ்மொழியை முறைதவறாது ஆராய்ந்து கற்றோரும் அவ் வாறு கற்றுத்தேறியவரை வழிபடுவோருமாகிய இருசாராருமே உண்மைத் தமிழ்த்தொண்டிற்கு உரியோராவர். "கற்றலிற் கற்றாரை வழிபடுதல் சிறந்தன்று" என்னும் அறிஞருரையும் இவ் வுண்மையினையே வலியுறுத்துகின்றது. முறையாகக் கற்றலுஞ் செய்யாது கற்றுவல்லாரையடைந்து வழிபாடியற்றிப் பெறுதற் குரிய கேள்விச்செல்வமும் எய்தப்பெறாது தமிழ்த்தொண்டுசெய்ய முற்படுதல் பயனில்செயலாகும். முன்னோர்மொழி பொருளை யும் மரபுபட்ட இலக்கணமுடிபுகளையும் ஆராய்ந்தறிந்துகொள்ளாது நெறியறியாதாரைக் மயக்கி, அவர்தம்மை நெறியல்லாநெறியிற் புகுத்தி ஆரவாரிப்போர்செயலானது குருடனைக் குருடன் வழி நடத்துவதுபோலாகும்.

அவைக்களத்துச் செல்லுதற்குரிய வரம்பினமைந்த ஆங்கில மொழியினை "வேந்தன்மொழி" (King's English) என அம் மொழிப்புலவர் விதந்துகூறுவர். அப்பரிசே யாமும் அவைக்களத் திற் செல்லுதற்குரிய வரம்பினமைந்த தமிழினைப் "பாண்டியன் தமிழ்" என்போம். "எது தமிழ்?" என வினவுவாருக்குப் "பாண்டியன்றமிழே தமிழ்" என்பது விடையாகும். அதுவே நிலை பேறுடையது, அறிஞர் போற்றற்குரியது. பொருள்வருவா யொன்றினையே கருதி மனம்போனவாறு மரபுதவறியெழுதும் மொழிவழக்கானது மழைக்காலத்திலேதோன்றி அக்காலங்கழிய மறைந்துபோகின்ற சிறு பூடுகளைப்போல் நிலைபேறில்லாதது. நிலை பேறுடைய உண்மை (Truth), அழகு (Beauty), செம்மை (Goodness) என்னும் இவைதம்மையே அறிஞரது உள்ளம் என் றும் அவாவிநிற்கும். முத்தமிழுள் இயற்றமிழானது உண்மையினை யும், இசைத்தமிழானது அழகினையும், நாடகத்தமிழானது செம் மையினையும் சிறப்புற வெளிப்படுத்திக்காட்டுவன. பேருண்மையும் பேரழகும் வரம்புகடந்த செம்மையும் இறைவனுக்குரிய குணங்க ளாகச் சமயநூல்களாற் கூறப்பட்டன. இவைதம்மை வெளியிட் டுரைக்கும் ஆற்றலுடைமையினாலேதான் மொழிகள் தெய்வத் தன்மையுடையவாகக் கருதப்பட்டன. யாம் முதலிலே கூறிய தெய்வவணக்கச்செய்யுளினுள்ளே, குமரகுருபரமுனிவரர், தெய் வத்தினைப் "பழம்பாடற்றொடையின்பயனே" எனவும், "நறை பழுத்த துறைத்தீந்தமிழி னொழுகு நறுஞ்சுவையே!" எனவும், "தொழும்பருளக்கோயிற் கேற்றும்விளக்கே!" எனவும் போற்றி வழிபடுகின்றார். இத்தகைய வழிபாடு சமயங்கடந்த சமரஸநிலை யினைத் தருவது.

" கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றா டொழாஅ ரெனின் "

என்னும் பொய்யாமொழியின்படி ஆராய்ந்து அமைவரக்கற்ற கல்வியின்பயன் வாலறிவனாகிய இறைவன்பால் உள்ளத்தைச் செலுத்துதலேயாம்.

தமிழ்மொழிக்கு நலனளிக்கும் பெருங்காப்பியங்களும் அந் நீர்மையவாகிய மதுரைக்காஞ்சிபோன்ற சங்கச்செய்யுட்களும், காப்பியத்தலைவனது அருள் வலி ஆண்மை கல்வி அழகு அறிவு இளமை ஊக்கம் ஈகை போகம் புகழ் நண்பு சுற்றம் என்னும் இவைதம்மை விரித்துக்கூறுமுகத்தான் அத்தகைய செம்மை நலங்களை நாமும் நமதுவாழ்க்கையிலே இயன்றவரை வெளிப்படுத்து மாறு நம்மை ஊக்குகின்றன. கவிச்சக்கரவர்த்தியாகிய கம்ப ருடைய வாக்கின்வலிமையினால் அளத்தற்கரிய பெருமைவாய்ந்த காப்பியத்தலைவனது குணமாகிய கடலிலே யாமும் படிந்தாடி நல மடைகின்றோம். இளங்கோவேந்தன் உவந்தளித்த தொடர்நிலைச் செய்யுள்துணையாக "உரைசால்பத்தினியை உயர்ந்தோரேத்தும்" உண்மையினைக் காண்கின்றோம். அஃதன்றியும் பழந்தமிழ்நாட் டினையாண்ட சேர சோழ பாண்டியரென்னும் முடியுடைவேந்தர் மூவரது அறனும் மறனும் ஆற்றலும் பிறவும் நம் உளத்துக்கு ஒளி யைத் தருகின்றன.

சமயக்கணக்கர் தந்திறஞ்சாராது நடுநிலைமேவி எப்பாலார்க்கும் பொதுவாகிய நெறியினைக்காட்டிய வள்ளுவர்வாய்மொழியானது யாம் எல்லாநலனையும் அடைதற்குரிய வழியினைக் காட்டுகின்றது. இவை இவ்வாறாதலினன்றோ அண்மையிலிருந்த பெருந்தமிழ்ப்புலவ ராகிய சுப்பிரமணியபாரதியார்,

"யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல் வள்ளுவர்போல்
இளங்கோவைப்போற்
பூமிதனில் யாங்கணுமே கண்டதில்லை யுண்மைவெறும்
புகழ்ச்சி யில்லை"

என நமக்கு உறுதிமொழிகூறுகின்றார். இம்மகாநாடு செவ்விதின் நடக்கும்பொருட்டு ஆண்டவனுடைய திருவருளினை வேண்டித் தோற்றுவாயாக யான் சொல்லுதற்கு எடுத்துக்கொண்ட இவ்வுரை யினை நிறைவுசெய்கின்றேன்.

---

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

| | | |
|---|---|---|
| தொகுதி—௩௯.] | சித்திரபானு-ஹு புரட்டாசி மீ | [பகுதி—௧௧. |
| **Vol. 39.** | **September–October 1942.** | **No. 11.** |


## இசைக்கிரமம்

சுவாமி விபுலாநந்தர்

(இந்த 39-ஆம் தொகுதியின் ௬௮-ஆம் பக்கத் தொடர்ச்சி)

அரங்கேற்றுகாதையுரையினுள்ளே அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்குநல்லாரும் தந்த ஏழ்பெரும்பாலைகளை அவைதமக்கியைந்த குரல்நரம்புகளோடு நிரல்படவைப்போமாக.

| | | |
|---|---|---|
| உழை | குரலாகச் | செம்பாலை |
| கைக்கிளை | ,, | படுமலைப்பாலை |
| துத்தம் | ,, | செவ்வழிப்பாலை |
| குரல் | ,, | அரும்பாலை |
| தாரம் | ,, | கோடிப்பாலை |
| விளரி | ,, | விளரிப்பாலை |
| இளி | ,, | மேற்செம்பாலை |

ஆய்ச்சியர்குரவையினுள்ளே தந்த ஏழ்பெரும்பாலைகளையும் அவ்வாறே வைப்போமாக.

| | | |
|---|---|---|
| குரல் | குரலாகச் | செம்பாலை |
| துத்தம் | ,, | படுமலைப்பாலை |
| கைக்கிளை | ,, | செவ்வழிப்பாலை |
| உழை | ,, | அரும்பாலை |
| இளி | ,, | கோடிப்பாலை |
| விளரி | ,, | விளரிப்பாலை |
| தாரம் | ,, | மேற்செம்பாலை |

பின்னையதிற் குரல்முதலேழும் நிரலாகநிற்றலையும் முன்னையதில் இளிமுதலேழும் எதிர்படுகிழமையாகநிற்றலையும் காண்கின்றோம். இரண்டும் இருவேறுகிரமங்களுக்கு உரியவென்பது வெளிப்படை. பின்னையது தாரக்கிரமத்தின் நிரனிறைப்பாலை. தாரக்கிரமமே முதலிற் றோன்றியது. மற்றக் கிரமங்களிலே ஏழ்பெரும்பாலைகளும் எவ்வாறு அமைவனவென்பதை ஆராய்ந்து காணப்புகுவாம்.

செம்பாலையென்பது நிலையானதோரிசையுருவம். அவ்வாறே ஏனையவும். கிரமந்தோறும் வேறுபடுவது பாலைக்கு முதலில் நிற்கும் இசைநரம்பு. தாரக்கிரமத்திலே குரல்நரம்பு முதல்நரம்பாகச் செம்பாலை பிறக்கும். இக்கிரமத்தில் உழையும் தாரமும் ஒவ்வோரலகுபெற ஏனைய ஐந்தும் தனித்தனி நான்கு அலகு பெறுவ. இவ்வுண்மையினை உளங்கொண்டு செம்பாலையின் அலகுநிலையெண்களை யெழுதுவோமாக. முதல்நரம்பு நிற்குமிடத்தை வெற்றிலக்கமாகக்கொண்டு அடுத்துவரும் நரம்புகளின் அலகெண்களை ஒன்றின்பின் ஒன்றாகக் கூட்டிச்செல்லவேண்டும். முதலில்நின்ற நரம்பு ஈற்றிலும் நின்றதாதலின் அதன் அலகெண் ஈற்றிலே கூட்டப்படும்.

தாரக்கிரமம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | கு | து | கை | உ | இ | வி | தா | கு |
| அலகுநிலையெண்கள் | 0 | 4 | 8 | 9 | 13 | 17 | 18 | 22 |
| அலகெண்கள் | | 4 | 4 | 1 | 4 | 4 | 1 | 4 |

இவ்வாறே ஏனைய ஆறுபாலைகளின் உருவங்களை எழுதுவோமாக.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| படுமலைப்பாலை | து | கை | உ | இ | வி | தா | கு | து |
| | 0 | 4 | 5 | 9 | 13 | 14 | 18 | 22 |
| | | 4 | 1 | 4 | 4 | 1 | 4 | 4 |
| செவ்வழிப்பாலை | கை | உ | இ | வி | தா | கு | து | கை |
| | 0 | 1 | 5 | 9 | 10 | 14 | 18 | 22 |
| | | 1 | 4 | 4 | 1 | 4 | 4 | 4 |
| அரும்பாலை | உ | இ | வி | தா | கு | து | கை | உ |
| | 0 | 4 | 8 | 9 | 13 | 17 | 21 | 22 |
| | | 4 | 4 | 1 | 4 | 4 | 4 | 1 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| கோடிப்பாலை | இ | வி | தா | கு | து | கை | உ | இ |
| | 0 | 4 | 5 | 9 | 13 | 17 | 18 | 22 |
| | | 4 | 1 | 4 | 4 | 4 | 1 | 4 |
| விளரிப்பாலை | வி | தா | கு | து | கை | உ | இ | வி |
| | 0 | 1 | 5 | 9 | 13 | 14 | 18 | 22 |
| | | 1 | 4 | 4 | 4 | 1 | 4 | 4 |
| மேற்செம்பாலை | தா | கு | து | கை | உ | இ | வி | தா |
| | 0 | 4 | 8 | 12 | 13 | 17 | 21 | 22 |
| | | 4 | 4 | 4 | 1 | 4 | 4 | 1 |

ஏழுபாலைக்குமுரிய அலகெண்களை ஒருங்குவைப்போமாக.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| செம்பாலை | 4 | 4 | 1 | 4 | 4 | 1 | 4 |
| படுமலைப்பாலை | 4 | 1 | 4 | 4 | 1 | 4 | 4 |
| செவ்வழிப்பாலை | 1 | 4 | 4 | 1 | 4 | 4 | 4 |
| அரும்பாலை | 4 | 4 | 1 | 4 | 4 | 4 | 1 |
| கோடிப்பாலை | 4 | 1 | 4 | 4 | 4 | 1 | 4 |
| விளரிப்பாலை | 1 | 4 | 4 | 4 | 1 | 4 | 4 |
| மேற்செம்பாலை | 4 | 4 | 4 | 1 | 4 | 4 | 1 |

ஒவ்வொருபாலையிலும் ஐந்துமுற்றிசைகளும், இரண்டு குற்றிசைகளும் உள்ளன. முற்றிசை 4 அலகுகொண்டது; குற்றிசை 1 அலகுகொண்டது. செம்பாலையிலே குற்றிசையிரண்டும் மூன்றும் ஆறும் இடங்களில் நின்றன; படுமலைப்பாலையிலே இரண்டாம் ஐந்தாம் இடங்களில் நின்றன. பிற பாலைகளினமைதியினையும் குற்றிசை நிற்கும் இடத்தினை நோக்கி அறிந்துகொள்ளலாம்.

அலகு, மாத்திரையெனவும் வழங்கப்படும். பாலைநிரல்களில் முதலில் நிற்கும் அலகெண்ணனது முதல்நரம்பிலெழுந்த ஓசையினிறுதிக்கும் இரண்டாம்நரம்பினோசையினிறுதிக்கும் இடையிலமைந்த மாத்திரையைக் குறிப்பது. ஆரோகணத்திலே இதனை இரண்டாம்நரம்புக்குரிய அலகெண்ணாகக்கொள்வது மரபு. குரல் குரலாகிய செம்பாலையிலே முதலில்நிற்கும் அலகெண் துத்தத்திற் குரியது. குரலின் அலகெண் ஈற்றில் நிற்கிறது. செம்பாலையின்

அவரோகணத்திலே அலகெண்கள் எவ்வாறு அமைவன வென்பதை நோக்குவாம். பழந்தமிழர் ஆரோகணத்தை ஆரோசை யெனவும் அவரோகணத்தை அமரோசை யெனவும் வழங்கினர்.

செம்பாலையின் அமரோசை

| | கு | தா | வி | இ | உ | கை | து | கு |
|---|---|---|---|---|---|---|---|---|
| அலகுநிலையெண்கள் | 22 | 18 | 17 | 13 | 9 | 8 | 4 | 0 |
| அலகெண்கள் | 4 | 1 | 4 | 4 | 1 | 4 | 4 | |

அமரோசையிலே குரலுக்கும் தாரத்துக்கும் இடையேயுள்ள மாத்திரையினைக் குரலுக் குரியதாகக்கொள்வது மரபு. பிறவும் இவ்வாறே. அலகெண்நிரலிலே குற்றிசையிரண்டும் அமைந்துநிற்பதை நோக்கச் செம்பாலையின் எதிர்நிரனிரை படுமலைப்பாலையாகநிற்றலைக் காண்கின்றும். நிரனிறையின்குரல்நரம்பே இதற்கும் குரல்நரம் பாகும். தாரக்கிரமத்தின் 'எதிர்படுகிழமை'யிலே குரல்குரலாயது படுமலைப்பாலையெனத் தெளிந்துகொண்டோம். படுமலைப்பாலையின் அமரோசை செம்பாலையுருப்பெறுதலைப் படுமலைப்பாலையின் அலகெண்களை எதிர்நிரனிறையாக எழுதிக் காணலாம்.

4 4 1 4 4 1 4 எனவரும் இந்நிரலுக்குரிய அலகுநிலையெண்களைப்பெறுதற்கு 22 ஐ நிறுத்தி அலகெண்களைக் கழித்துச்செல்ல வேண்டும். அவ்வாறுசெய்யக் கிடைப்பது,

22 18 14 13 9 5 4 0.

இது படுமலைப்பாலையின் அமரோசையாதல் காண்க. செவ்வழிப் பாலையின் எதிர்நிரனிறை மேற்செம்பாலையாகும்; அரும்பாலையின் எதிர்நிரனிறை விளரிப்பாலையாகும். மேற்செம்பாலையின் எதிர்நிரனிறை செவ்வழிப்பாலையாகும்; விளரிப்பாலையின் எதிர்நிரனிறை அரும்பாலையாகும்.

| செவ்வழிப்பாலை | | மேற்செம்பாலை |
|---|---|---|
| 1 4 4 1 4 4 4 | — | 4 4 4 1 4 4 1 |
| விளரிப்பாலை | | அரும்பாலை |
| 1 4 4 4 1 4 4 | — | 4 4 1 4 4 4 1 |

கோடிப்பாலையானது 'விகடகவி'போன்று நிரனிறையும் எதிர்நிரனிறையும் ஒத்தபான்மையது.

கோடி 4 1 4 4 4 1 4 கோடி

இருகோடியும் ஒத்திருத்தலின் இது கோடிப்பாலை யென்னும் பெயரினை யெய்தியிருக்கலாம். நிரனிறைப்பாலைகளையும் எதிர்நிரனிறைப்பாலைகளையும் அவைதமக்குப் பொதுவாகிய குரல்நரம்பு (ஆதாரசுருதி)களோடு ஒருங்குவைப்போமாக.

தாரக்கிரமம்

| நிரனிறை | | குரனரம்பு | | எதிர்நிரனிறை |
|---|---|---|---|---|
| செம்பாலை | — | குரல் | — | படுமலைப்பாலை |
| படுமலைப்பாலை | — | துத்தம் | — | செம்பாலை |
| செவ்வழிப்பாலை | — | கைக்கிளை | — | மேற்செம்பாலை |
| அரும்பாலை | — | உழை | — | விளரிப்பாலை |
| கோடிப்பாலை | — | இளி | — | கோடிப்பாலை |
| விளரிப்பாலை | — | விளரி | — | அரும்பாலை |
| மேற்செம்பாலை | — | தாரம் | — | செவ்வழிப்பாலை |

தாரக்கிரமத்தின் எதிர்நிரனிறைப்பாலைகளைச் செம்பாலை முதல் முறையாக எழுதி அவற்றின் குரனரம்புகளையும் உடனெழுதி அக் குரல்நரம்புகளி னமைதியினை நோக்குவோமாக.

தாரக்கிரமத்தெதிர்நிரனிறைப்பாலைகள்.

| | | | |
|---|---|---|---|
| செம்பாலை | — | துத்தங் | குரலாக |
| படுமலைப்பாலை | — | குரல் | ,, |
| செவ்வழிப்பாலை | — | தாரம் | ,, |
| அரும்பாலை | — | விளரி | ,, |
| கோடிப்பாலை | — | இளி | ,, |
| விளரிப்பாலை | — | உழை | ,, |
| மேற்செம்பாலை | — | கைக்கிளை | ,, |

கைக்கிளைமுதலாகிய எதிர்படுகிழமையின தாரக்கிரமத்தெதிர்நிரனிறைப்பாலைகள் என அறிந்துகொண்டோம். இனி இளிக்கிரமத்தின்நிரனிறை எதிர்நிரனிறைப்பாலைகளை ஆராய்வாம்.

பன்னிரண்டு சுவரஸ்தானங்களிலும் இருபத்திரண்டு சுருதிகளும் நிற்குமிடத்து ஆதாரசுருதி நிற்கும் முதல்வீடொழிந்த பதினொருவீட்டிலும் ஒருவீட்டிற்கு இரண்டுசுருதியாக நிற்பன. கன்னிப்பாலையையும் கும்பப்பாலையையும் ஒருங்குவைத்தலினாலே இருபத்திரண்டுசுருதிகளையும் பன்னிரண்டு சுவரஸ்தானங்களிலும் நிறுத்தலாம்.

| சுவர ஸ்தானங்கள் | ஷட்ஜம் | சுத்த ரிஷபம் | சதுச்சுருதி ரிஷபம் | சாதாரண காந்தாரம் | அந்தர காந்தாரம் | சுத்த மத்திமம் | பிரதி மத்திமம் | பஞ்சமம் | சுத்த தைவதம் | சதுச்சுருதி தைவதம் | கைசிகி நிஷாதம் | காகலி நிஷாதம் | ஷட்ஜம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னிப்பாலைச் சுருதிகள். | 0 | 3 | 4 | 7 | 8 | 11 | 12 | 13 | 16 | 17 | 20 | 21 | 22 |
| அசைவெண் விகிதங்கள் | 1 | $\frac{16}{15}$ | $\frac{9}{8}$ | $\frac{6}{5}$ | $\frac{81}{64}$ | $\frac{27}{20}$ | $\frac{64}{45}$ | $\frac{3}{2}$ | $\frac{8}{5}$ | $\frac{27}{16}$ | $\frac{9}{5}$ | $\frac{243}{128}$ | 2 |
| கும்பப்பாலைச் சுருதிகள் | 0 | 1 | 2 | 5 | 6 | 9 | 10 | 11 | 14 | 15 | 18 | 19 | 22 |
| அசைவெண் விகிதங்கள் | 1 | $\frac{256}{243}$ | $\frac{10}{9}$ | $\frac{32}{27}$ | $\frac{5}{4}$ | $\frac{4}{3}$ | $\frac{45}{32}$ | $\frac{40}{27}$ | $\frac{128}{81}$ | $\frac{5}{3}$ | $\frac{16}{9}$ | $\frac{15}{8}$ | 2 |

சுருதிகளின் அசைவெண் விகிதங்களையும் நரம்பு நீளங்களையும் கணித்தறியும்முறை 'சுருதிவீணை' என்னும் சிறுநூலிலே தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இங்குத் தந்த அசைவெண் விகிதங்கள் வடமொழிப்பரதத்திற்கும் பழந்தமிழிசைமரபிற்கும் ஒத்தன.

இடைக்காலத்தாரும் பிற்காலத்தாரும்கொண்ட முறை வேறு. நாம் ஆராய்வது பழந்தமிழிசையாதலின் பண்டையோர்கொண்ட முறையினையே கொள்வாம். கன்னிப்பாலையில்வரும் 11-ஆம் சுருதி தீவிரமத்திமமாகும்; கும்பப்பாலையில்வரும் 11-ஆம் சுருதி கோமள பஞ்சமமாகும். முன்னையது கிளை 11; பின்னையது நட்பு 11. நட்பு 2 கும்பப்பாலையில்வருவது. இதன் அசைவெண் விகிதம் $\frac{10}{9}$. இதனை நெட்டிசையென வழங்குவாம். இது இரண்டு குற்றிசைகளின் சேர்க்கையினாலானது. மேலே அட்டவணையிலே குற்றிசையாகிய 1-ஆம் சுருதியின் அசைவெண் விகிதம் $\frac{256}{243}$ எனத் தரப்பட்டது; இதற்கு $\frac{135}{128}$ என்னும் மற்றொரு மதிப்பும் உண்டு. $\frac{256}{243} \times \frac{135}{128} = \frac{10}{9}$ ஆதலின் இரண்டு குற்றிசைகளின் சேர்க்கையினாலே நெட்டிசைபிறக்கும் என்பது பெறப்பட்டது. கிளை 2-ஆம் சுருதி $\frac{81}{80}$ என்னும் மதிப்புடையது. இதனைப் பரதமுனிவர் பிரமாணசுருதியென்பர்; நாம் விதியிசையென்பாம். குற்றிசை விதி

யிசையின் சேர்க்கையினாலே எய்துவது 3-ஆம் சுருதி $\frac{256}{243}\times\frac{81}{80}=\frac{16}{15}$; இதனைப் பற்றிசையென வழங்குவாம். 4-ஆம் சுருதியின் அசைவெண்விகிதம் $\frac{9}{8}$. இது முற்றிசையெனப்படும்.

சுருதிகளிற் 'கூட்டல்' அசைவெண்விகிதங்களிற் 'பெருக்க' லாகும். சுருதிகளிற் 'கழித்தல்' அசைவெண்விகிதங்களிற் 'பிரித்தல்' ஆகும். குற்றிசையும் பற்றிசையும் சேர முற்றிசைபிறக்கும் 1+3=4 அசைவெண்விகிதங்களை நோக்குமிடத்து $\frac{135}{128}\times\frac{16}{15}=\frac{9}{8}$ ஆம். நெட்டிசையும் விதியிசையும் சேருமிடத்தும் முற்றிசைபிறக்கும் 2+2=4. அசைவெண்விகிதங்களைப்பெருக்க $\frac{10}{9}\times\frac{81}{80}=\frac{9}{8}$ என வருதல் காண்க.

மேலேகாட்டிய அட்டவணையின்படி சுத்தரிஷபம் குற்றிசையாகவோ, பற்றிசையாகவோ நிற்கலாம். சதுசுருதிரிஷபம் முற்றிசையாகவோ நெட்டிசையாகவோ நிற்கலாம். தீவிரமத்திமமும் கோமளபஞ்சமமும் மூர்ச்சனைகளிலே சுத்தமத்திம, சுத்தபஞ்சம ஸ்தானங்களில் ஒரோவழிவருவன. (இளிக்கிரமத்தின் அரும்பாலையிலும் குரற்கிரமத்தின் செம்பாலையிலும் கோமளபஞ்சமம் வரும்.)

ஷட்ஜக்கிராமம் என வடநூலார் வழங்கிய இளிக்கிரமத்திலே குரல், துத்தம், இளி தனித்தனி நான்கு அலகு பெறுவ. விளரி கைக்கிளை மும்மூன்று அலகு பெறுவ. தாரமும் உழையும் இவ்விரண்டு அலகு பெறுவ.

| இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை |
|---|---|---|---|---|---|---|
| ச | ரி | க | ம | ப | த | நி |
| 4 | 3 | 2 | 4 | 4 | 3 | 2 |

இவற்றிலே பிறக்கும் பாலைகளின் அலகெண்கள்:

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| உழை | குரலாக | 4 | 3 | 2 | 4 | 4 | 3 | 2 |
| இளி | ,, | 3 | 2 | 4 | 4 | 3 | 2 | 4 |
| விளரி | ,, | 2 | 4 | 4 | 3 | 2 | 4 | 3 |
| தாரம் | ,, | 4 | 4 | 3 | 2 | 4 | 3 | 2 |
| குரல் | ,, | 4 | 3 | 2 | 4 | 3 | 2 | 4 |
| துத்தம் | ,, | 3 | 2 | 4 | 3 | 2 | 4 | 4 |
| கைக்கிளை | ,, | 2 | 4 | 3 | 2 | 4 | 4 | 3 |

அலகுநிலையெண் (சுருதிஸ்தானங்)களைப் பெறுதற்கு வெற்றிலக்கத்தை நிறுத்தி அலகெண்களை ஒவ்வொன்முகக் கூட்டிச் செல்லவேண்டும்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| உழை குரலாக | 0 | 4 | 7 | 9 | 13 | 17 | 20 | 22 |
| இளி ,, | 0 | 3 | 5 | 9 | 13 | 16 | 18 | 22 |
| விளரி ,, | 0 | 2 | 6 | 10 | 13 | 15 | 19 | 22 |
| தாரம் ,, | 0 | 4 | 8 | 11 | 13 | 17 | 20 | 22 |
| குரல் ,, | 0 | 4 | 7 | 9 | 13 | 16 | 18 | 22 |
| துத்தம் ,, | 0 | 3 | 5 | 9 | 12 | 14 | 18 | 22 |
| கைக்கிளை ,, | 0 | 2 | 6 | 9 | 11 | 15 | 19 | 22 |

இவையும் முன்பு தாரக்கிரமத்திற் கணித்துக்கண்ட ஏழுபாலையும் இக்காலவழக்கிலே என்ன இராகங்களை ஒத்தன எனக் காண்பதற்கு இவைதம்மைப் பன்னிரண்டு சுவரஸ்தானங்களிலே நிறுத்துவாம்.

| சுவரஸ்தானங்கள் ... | ஷ. | சு.ரி. | ச.ரி. | சா.கா. | அ.கா. | சு.ம. | பி.ம. | ப. | சு.தை. | ச.தை. | கை.நி. | கா.நி. | ஷ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கன்னிப்பாலைச்சுருதிகள்... | 0 | 3 | 4 | 7 | 8 | 11 | 12 | 13 | 16 | 17 | 20 | 21 | 22 |
| கும்பப்பாலைச்சுருதிகள் ... | 0 | 1 | 2 | 5 | 6 | 9 | 10 | 11 | 14 | 15 | 18 | 19 | 22 |
| இளிக்கிரமம்: உழை குரலாக | 0 | – | 4 | 7 | – | 9 | – | 13 | – | 17 | 20 | – | 22 |
| இளி ,, | 0 | 3 | – | 5 | – | 9 | – | 13 | 16 | – | 18 | – | 22 |
| விளரி ,, | 0 | – | 2 | – | 6 | – | 10 | 13 | – | 15 | – | 19 | 22 |
| தாரம் ,, | 0 | – | 4 | – | 8 | 11 | – | 13 | – | 17 | 20 | – | 22 |
| குரல் ,, | 0 | – | 4 | 7 | – | 9 | – | 13 | 16 | – | 18 | – | 22 |
| துத்தம் ,, | 0 | 3 | – | 5 | – | 9 | 12 | – | 14 | – | 18 | – | 22 |
| கைக்கிளை ,, | 0 | – | 2 | – | 6 | 9 | – | 11 | – | 15 | – | 19 | 22 |

| தாரக்கிரமம் | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | செம்பாலை | 0 | - | 4 | - | 8 | 9 | - | 13 | - | 17 | 18 | - | 22 |
| | படுமலைப்பாலை | 0 | - | 4 | 5 | - | 9 | - | 13 | 14 | - | 18 | - | 22 |
| | செவ்வழிப்பாலை | 0 | 1 | - | 5 | - | 9 | 10 | - | 14 | - | 18 | - | 22 |
| | அரும்பாலை | 0 | - | 4 | - | 8 | 9 | - | 13 | - | 17 | - | 21 | 22 |
| | கோடிப்பாலை | 0 | - | 4 | 5 | - | 9 | - | 13 | - | 17 | 18 | - | 22 |
| | விளரிப்பாலை | 0 | 1 | - | 5 | - | 9 | - | 13 | 14 | - | 18 | - | 22 |
| | மேற்செம்பாலை | 0 | - | 4 | - | 8 | - | 12 | 13 | - | 17 | - | 21 | 22 |

முதலிலே தாரக்கிரமத்துப் பாலைகளை நோக்குவாம். இவற்றுள்ளே செம்பாலையானது சதுசுருதிரிஷபம் அந்தரகாந்தாரம் சுத்தமத்திமம் பஞ்சமம் சதுசுருதிதைவதம் கைசிகிநிஷாதம் என நிற்றலின் அரிகாம்போதியாயிற்று. படுமலைப்பாலை சதுசுருதிரிஷபம் சாதாரணகாந்தாரம் சுத்தமத்திமம் பஞ்சமம் சுத்ததைவதம் கைசிகிநிஷாதம்பெற்று நடபைரவியாயிற்று. செவ்வழிப்பாலையானது பஞ்சமசுவரம்பெறாது இரு மத்திமமும் சுத்தரிஷப சாதாரண காந்தார சுத்ததைவத கைசிகிநிஷாதங்களும் பெற்றுவரும் சம்பூரணராகம். இதனைச் சுத்ததோடியென்பர். பஞ்சமம் பெறாது இருமத்திமமும் பெற்றுவரும் மேளகர்த்தாராகங்கள் இக்காலத்துக் கருநாடகசங்கீதவழக்கி லில்லை; வடநாட்டுவழக்கில் உள்ளன. அரும்பாலையானது சதுசுருதிரிஷபம் அந்தரகாந்தாரம் சுத்தமத்திமம் பஞ்சமம் சதுசுருதிதைவதம் காகலிநிஷாதம் பெற்றுத் தீரசங்கராபரணமாய்நின்றது. கோடிப்பாலையானது சதுசுருதிரிஷபம் சாதாரணகாந்தாரம் சுத்தமத்திமம் பஞ்சமம், சதுசுருதிதைவதம் கைசிகிநிஷாதம் பெற்றுக் கரஹரப்பிரியாவாயிற்று; வேங்கடமகி இதனை ஸ்ரீராகமேளம் என்பார். பழந்தமிழ்ப்பண்களிலே செவ்வழியாழ் என்னும் பெரும்பண்ணின் அருகியற்சாதி சீராகம் என்னும் பெயரினது. விளரிப்பாலையானது சுத்தரிஷபம் சாதாரணகாந்தாரம் சுத்தமத்திமம் பஞ்சமம் சுத்ததைவதம் கைசிகிநிஷாதம் வரப்பெற்று ஹநுமத்தோடியாயிற்று. இதனை வேங்கடமகி பூபாளமேள

மென்பர். மேற்செம்பாலையானது பிரதிமத்திமம்பெற்று ஏனைய சுவரங்கள் அரும்பாலையைப்போலப் பெற்று மேசகல்யாணி யாயிற்று. இவையே ஏழ்பெரும்பாலைகளின் உருவங்கள்.

இனி இளிக்கிரமத்தைநோக்க உழைகுரலாகக் (கரஹரப் பிரியா) கோடிப்பாலையும், இளிகுரலாக (ஹநுமத்தோடி) விளரிப் பாலையும், விளரிகுரலாக (மேசகல்யாணி) மேற்செம்பாலையும், தாரம் குரலாக (அரிகாம்போதி) செம்பாலையும், குரல்குரலாக (நடபைரவி) படுமலைப்பாலையும், துத்தங்குரலாகச் (சுத்ததோடி) செவ்வழிப் பாலையும், கைக்கிளை குரலாக (தீரசங்கராபரணம்) அரும்பாலையும் வருதல் காண்க. அரும்பாலை கோமளபஞ்சமம்பெற்றுநின்றது. அரங்கேற்றுகாதையினுள்ளே 'இறுதியாதியாக' என அடிகள் கூறியது இளிக்கிரமத்திலே தாரம்முதலாகச் செம்பாலைபிறக்கும் என்பதைக் குறித்தது.

தாரக்கிரம இளிக்கிரமங்களின் ஏழ்பெரும்பாலைகளின் அலகெண்களைக் கோடிப்பாலைமுதலாக நிரலாக வைத்து ஒப்புநோக்குவாம்.

| பாலைகள் | தாரக்கிரமம் | இளிக்கிரமம் |
|---|---|---|
| கோடிப்பாலை | 4 1 4 4 4 1 4 | 4 3 2 4 4 3 2 |
| விளரிப்பாலை | 1 4 4 4 1 4 4 | 3 2 4 4 3 2 4 |
| மேற்செம்பாலை | 4 4 4 1 4 4 1 | 2 4 4 3 2 4 3 |
| செம்பாலை | 4 4 1 4 4 1 4 | 4 4 3 2 4 3 2 |
| படுமலைப்பாலை | 4 1 4 4 1 4 4 | 4 3 2 4 3 2 4 |
| செவ்வழிப்பாலை | 1 4 4 1 4 4 4 | 3 2 4 3 2 4 4 |
| அரும்பாலை | 4 4 1 4 4 4 1 | 2 4 3 2 4 4 3 |

தாரக்கிரமத்திலே குற்றிசை (1) நின்றவிடங்களிலெல்லாம் இளிக்கிரமத்திலே பற்றிசை (3) நிற்றலை நோக்குக. இவை யொழிந்த இடங்களிலே முற்றிசையாவது நெட்டிசையாவது நிற்றலையும் நோக்குக. இனி இளிக்கிரமத்து எதிர்நிரனிறையாகிய ஏழ்பெரும்பாலைகளையும் காண்பாம்.

## இளிக்கிரமம்

| | நிரனிறை | குரல்நரம்பு | எதிர்நிரனிறை | |
|---|---|---|---|---|
| கோடி- | 4 3 2 4 4 3 2 | உழை | 2 3 4 4 2 3 4 | கோடி- |
| விளரி- | 3 2 4 4 3 2 4 | இளி | 4 2 3 4 4 2 3 | அரும்- |
| மேற்செம்- | 2 4 4 3 2 4 3 | விளரி | 3 4 2 3 4 4 2 | செவ்வழி- |
| செம்- | 4 4 3 2 4 3 2 | தாரம் | 2 3 4 2 3 4 4 | படுமலை- |
| படுமலை- | 4 3 2 4 3 2 4 | குரல் | 4 2 3 4 2 3 4 | செம்- |
| செவ்வழி- | 3 2 4 3 2 4 4 | துத்தம் | 4 4 2 3 4 2 3 | மேற்செம்- |
| அரும்- | 2 4 3 2 4 4 3 | கைக்கிளை | 3 4 4 2 3 4 2 | விளரி- |

இளிக்கிரமத்து எதிர்நிரனிறைப்பாலைகளைச் செம்பாலைமுதல் மேற்செம்பாலை யீறாக நிரல்படவைக்குமிடத்து அவைபெறும் குரல் நரம்புகளாவன:

| | | | |
|---|---|---|---|
| செம்பாலை | — | குரல் | குரலாக |
| படுமலைப்பாலை | — | தாரம் | ,, |
| செவ்வழிப்பாலை | — | விளரி | ,, |
| அரும்பாலை | — | இளி | ,, |
| கோடிப்பாலை | — | உழை | ,, |
| விளரிப்பாலை | — | கைக்கிளை | ,, |
| மேற்செம்பாலை | — | துத்தம் | ,, |

இவை துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரம் குரல் எனக் கீழிருந்து மேனோக்கிச்செல்லுதலின் துத்தம் முதலாகிய எதிர்படுகிழமையாதல் காண்க.

இனி, மத்திமக்கிராமம் என வடநூலார் வழங்கிய குரற்கிரமத்தின் நிரனிறை எதிர்நிரனிறைப்பாலைகளை ஆராய்வோமாக.

இக்கிரமத்திலே குரல் கைக்கிளை இளி தனித்தனி நான்கு அலகு பெறுவ. துத்தமும் விளரியும் மும்மூன்றலகு பெறுவ. தாரமும் உழையும் இவ்விரண்டு அலகு பெறுவ.

| குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
|---|---|---|---|---|---|---|
| ம | ப | த | நி | ச | ரி | க |
| 4 | 3 | 4 | 2 | 4 | 3 | 2 |

இவற்றிலே பிறக்கும் பாலைகளின் அலகெண்கள்.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| தாரங் குரலாக | | 4 | 3 | 4 | 2 | 4 | 3 | 2 |
| குரல் | ,, | 3 | 4 | 2 | 4 | 3 | 2 | 4 |
| துத்தம் | ,, | 4 | 2 | 4 | 3 | 2 | 4 | 3 |
| கைக்கிளை | ,, | 2 | 4 | 3 | 2 | 4 | 3 | 4 |
| உழை | ,, | 4 | 3 | 2 | 4 | 3 | 4 | 2 |
| இளி | ,, | 3 | 2 | 4 | 3 | 4 | 2 | 4 |
| விளரி | ,, | 2 | 4 | 3 | 4 | 2 | 4 | 3 |

இவற்றது அலகுநிலையெண்களை முன்போலக் கணித்து இவை தமக்கு ஒப்பாகிய இக்காலத்து இராகங்களையும் குறிப்பிடுவோமாக.

| தூல்நரம்பு | | இசைநிலை | இராகம் | பாலை |
|---|---|---|---|---|
| தாரம் குரலாக | | 0 4 7 11 13 17 20 22 | கரஹரப்பிரியா | (கோடி-) |
| குரல் | ,, | 0 3 7 9 13 16 18 22 | ஹநுமத்தோடி | (விளரி-) |
| துத்தம் | ,, | 0 4 6 10 13 15 19 22 | மேசகல்யாணி | (மேற்செம்-) |
| கைக்கிளை | ,, | 0 2 6 9 11 15 18 22 | அரிகாம்போதி | (செம்-) |
| உழை | ,, | 0 4 7 9 13 16 18 22 | நடபைரவி | (படுமலை-) |
| இளி | ,, | 0 3 5 9 12 16 18 22 | சுத்ததோடி | (செவ்வழி-) |
| விளரி | ,, | 0 2 6 9 13 15 19 22 | தீரசங்கராபரணம் | (அரும்-) |

செம்பாலை கோமளபஞ்சமம்பெற்றுவருதல் காண்க.

இனிக் குரற்கிரமத்தின் எதிர்நிரனிறைப்பாலைகளைக் காண்போமாக.

குரற்கிரமம்

| | நிரனிறை | தூல்நரம்பு | எதிர்நிரனிறை | |
|---|---|---|---|---|
| கோடி- | 4 3 4 2 4 3 2 | தாரம் | 2 3 4 2 4 3 2 | கோடி- |
| விளரி- | 3 4 2 4 3 2 4 | குரல் | 4 2 3 4 2 4 3 | அரும்- |
| மேற்செம்- | 4 2 4 3 2 4 3 | துத்தம் | 3 4 2 3 4 2 4 | செவ்வழி- |
| செம்- | 2 4 3 2 4 3 4 | கைக்கிளை | 4 3 4 2 3 4 2 | படுமலை- |
| படுமலை- | 4 3 2 4 3 4 2 | உழை | 2 4 3 4 2 3 4 | செம்- |
| செவ்வழி- | 3 2 4 3 4 2 4 | இளி | 4 2 4 3 4 2 3 | மேற்செம்- |
| அரும்- | 2 4 3 4 2 4 3 | விளரி | 3 4 2 4 3 4 2 | விளரி- |

குரற்கிரமத்தின் எதிர்நிரனிறைப்பாலைகளைச் செம்பாலை முதல் மேற்செம்பாலையீறாக நிரல்படவைக்குமிடத்து அவை பெறுங் குரல்நரம்புகளாவன:

| | | |
|---|---|---|
| செம்பாலை | உழை | குரலாக |
| படுமலைப்பாலை | கைக்கிளை | ,, |
| செவ்வழிப்பாலை | துத்தம் | ,, |
| அரும்பாலை | குரல் | ,, |
| கோடிப்பாலை | தாரம் | ,, |
| விளரிப்பாலை | விளரி | ,, |
| மேற்செம்பாலை | இளி | ,, |

இவை இளி விளரி தாரம் குரல் துத்தம் கைக்கிளை உழையெனக் கீழிருந்து மேனோக்கிச்செல்லுதலின், இளிமுதலாகிய எதிர்படுகிழமையவாதல் காண்க. அரங்கேற்றுகாதையுரையினுள் அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்குநல்லாரும் எடுத்தாண்ட ஏழ்பெரும்பாலைகள் இவையே.

[தொடரும்.]

---

[குறிப்பு:—'செந்தமிழ்' 39-ஆம் தொகுதியின் ௬எ-ஆம் பக்கத்திலே கன்னி, மேடம், விருச்சிகம், மிதுனம், மகரம், கற்கடகம், கும்பம் என்னும் அடைவிலே இளிக்கிரமத்து ஏழ்பெரும்பாலைகளையும் நிறுத்தி அவைதம்மை முறையே மேற்செம்பாலை, அரும்பாலை, செம்பாலை, கோடிப்பாலை, படுமலைப் பாலை, விளரிப்பாலை, செவ்வழிப்பாலையென முறைதவறிக் குறியீடுசெய்து விட்டோம். செம்பாலை, கோடிப்பாலை, படுமலைப்பாலை, விளரிப்பாலை, செவ் வழிப்பாலை, மேற்செம்பாலை, அரும்பாலையென நிற்றல் முறையாகும். 'செந்தமிழ்' அன்பர்கள் குறித்தபகுதியைத் திருத்தஞ்செய்துகொள்வார்க ளாக.]

---

# மதிப்புரை

விருத்தப்பாவியல்:—இது, சென்னை உயர்தரநீதிமன்றத்து வழக்குரையாளர் திரு. வீரபத்திரமுதலியார் B.A., B.L. அவர்களால் இயற்றப்பட்டது; புரசை அஷ்டாவதானம் சபாபதிமுதலியாரவர்களாலும் சென்னைச் சருவகலாசங்கத்துத் தலைமைத்தமிழ்ப்புலவராயிருந்த கோ. இராசகோபாலபிள்ளையவர்களாலும் பாயிரம்வழங்கிப் பாராட்டப்பெற்றது; தமிழ் யாப்பிலக்கணங்கள் பொதுவகையாற் சீர்வரையறைகொண்டு கூறிய விருத்தவகைகளைச் சிறப்புவகையாற் சீரும் தளையும்பற்றி விகற்பித்து வகுத்து விரித்து இலக்கணங்கூறுவது.

பன்னிரண்டுபடலங்களுடையதாக ஆக்கப்பெற்ற இதனுள், முதற்படலத்தாற் சந்தமின்றிவரும் அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தவகைகளும், இரண்டாவது படலத்தாற் கலித்துறைவகைகளும், மூன்று நான்காம் படலங்களால் முறையே எழுசீர் எண்சீர் ஆசிரியவிருத்தவகைகளும், ஐந்தாம் படலத்தால் கலிவிருத்தவகைகளும், ஆறாம் படலத்தால் வடநூன்முறைபற்றிய சந்தவுறுப்புக்களும், ஏழாம் படலத்தால் தனித்தமிழ்மரபுபற்றியும் வடமொழிமரபுபற்றியும்வரும் சந்தக்கலிவிருத்தவகைகளும் அவற்றின் பெயர்களும், எட்டாம் படலத்தாற் சந்தக்கலித்துறைவகைகளும், 9, 10, 11-ஆம் படலங்களால் முறையே அறுசீர் எழுசீர் எண்சீர்ச் சந்தவிருத்தவகைகளும் விரிக்கப்பட்டுள்ளன. 12-ஆம் படலமாகிய ஒழிபியலால் விருத்தங்களுக்குப் பொதுவான சில செய்திகள் உரைக்கப்பட்டன.

இதனுள், தாம் கூறக்கருதிய விருத்தஇலக்கணங்களை ஆசிரியர் அவ்வவ் விருத்த அடிகளில் உடம்பொடுபுணர்த்தலென்னும் உத்திவகையாலும் வெளியிட்டுச்செல்லும் அழகு உற்றுநோக்கி உவத்தற்

குரியது. அன்றியும், சூத்திரப்பொருள்விளங்க உரைவிரித்து, தேவாரம், திருவாசகம், பெரியதிருமொழி, பெரியபுராணம், கம்ப ராமாயணம், பாரதம், கந்தபுராணம், தணிகைப்புராணம், திரு விளையாடற்புராணம், பட்டினத்தார்பாடல், திருப்போரூர்ச்சந்நிதி முறை, நீலகேசி, திருக்கலம்பகம் முதலியவற்றிலிருந்து உதாரணம் எடுத்துக்காட்டியிருப்பதும் அமைவுடையதாகும். இடையிடையே அமைந்த குறிப்பு, ஆங்காங்கு விளக்கவேண்டியவற்றைச் சுருங்கிய சொற்றொடர்களால் விளக்குகிறது. அடிக்குறிப்புக்கள், உதாரணப் பாடல்கள் இன்னஇன்னநூலின் இன்னஇன்ன பகுதிகளில் உள்ள வை என்று காட்டுவதோடு அவ்வவ்விடங்களில் அறியவேண்டிய பிறபொருள்களை அறிவிப்பனவாகவும் உள்ளன.

உரையும் பாட்டுமாகப் புதிய புதிய நூல்களை இயற்றுதலும், அவற்றுக்கும் பழையநூல்களுக்கும் உரைவிரித்தலும், விளக்கங் கள் வரைதலும், அரியநூல்கள் இறந்தொழியாது அவற்றை ஆராய்ந்து அச்சிட்டுப்பாதுகாத்தலும் சிறந்த தமிழ்ப்பணிகளாகும். அம்முறையில், ஆங்கில அறிவொடு தமிழிலக்கிய இலக்கண அறிவும் வாய்ந்து, வடமொழிவிருத்தவகைகளையும் ஆய்ந்து, தமிழ்ச்செய்யுளாகிய கடலிலே திளைத்துப் பண்டைத் தண்டமிழ் யாப்பிலக்கணங்களோடு இயையுமாறு தமிழ்விருத்தங்களுக்குப் புதியஇலக்கணம் செய்யுளுருவில் வகுத்து உரையும் விரித்து இந்நூலை யியற்றித்தந்த ஆசிரியர்திறத்தும், இதனை யாவரும் பெற் றுப் படித்துணருமாறு ஆங்கிலத்தில் எழுதப்பட்ட நூன்முகம், நூலாசிரியர்சரிதக்குறிப்பு, தமிழ்விருத்தவளர்ச்சிபற்றிய ஆராய்ச்சி முதலியவற்றுடன் அச்சிட்டு வெளியிட்டுதவிய பதிப் பாசிரியர்திறத்தும் தமிழ்மக்கள் பெரிதும் கடப்பாடுடையராவர்.

இதன் விலை அணா 12. வேண்டுவோர், இதன் பதிப்பாசிரிய ராகிய சென்னை உயர்தரநீதிமன்றத்து வழக்குரையாளர் திரு. E. N. தணிகாசலமுதலியார் B.A., B.L. அவர்களிடம் பெறலாம்.

ஸ்ரீராமன்:- இது மதசம்பந்தமான கட்டுரைகளுடன் ஸ்ரீரங்கத்தி லிருந்து மாதந்தோறும் வெளிவருவது. இதன் ஆசிரியர் ஸ்ரீ M. V. வரதாசாரியரவர்கள். இதன் முதலிரண்டு பகுதிகள் வந்தன. இது தன் பெயர்க்கேற்பப் பெரும்பாலும் இராமன் விஷயமான கட்டுரை களையும் சிறுபான்மை நீதி முதலிய கட்டுரைகளையும் பொதுச் சமாசாரக்குறிப்புக்களையும் கொண்டுள்ளது. வடமொழியி லுள்ள சில சிறந்த பிரபந்தங்கள் தமிழுரையுடன் தனிப்புத்தகவுரு வில் அச்சிட்டு இதனுடன் இணைக்கப்பட்டுள்ளன. இதற்குப் பல அறிஞர்கள் கட்டுரை வழங்கியுள்ளார்கள். இராமன் விஷயமாக எத்தனை பத்திரிகைகள் தோன்றினும் அவற்றுக்கு அவனுடைய குணவிசேடங்களே போதிய விஷயங்களாய் அமையும். 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ' என்பது திருவாய்மொழி. உத்தமபுருஷன் பெயரொடு தோன்றியுள்ள இது நீடுநின்று நல்ல பொருளுரைகளை வழங்கி விளங்குக. இதன் வருடச்சந்தா ரூபா. 2. தனிப்பிரதி அணா 2. வேண்டுவோர் 'ஸ்ரீராமன்பத்திராசிரியர், ஸ்ரீரங்கம்' என்ற விலாசத்திற் பெறலாம்.

உ

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி—௩௯.] சித்திரபானு-௵ ஐப்பசி ௴ [பகுதி—௧௨.

Vol. 39. October–November 1942. No. 12.


## சங்கீத பாரிஜாதம்

சுவாமி விபுலாநந்தரவர்கள்.

அஹோபலபண்டிதர் என்னும் பெரியார் வடமொழியில் வகுத்த சங்கீத பாரிஜாதம் என்னும் இசைநூலானது காளிவரவேதாந்த வாகீசர், சாரதாபிரசாதகோஷர் எனப் பெயரிய அறிஞரிருவரால் 1879-ஆம் ஆண்டிலே கல்கத்தாநகரத்து நூதன ஸம்ஸ்க்ருத யந்திரசாலையிலே அச்சிட்டு வெளியிடப்பட்டது. அச்சிட்டு அறுபது ஆண்டுகளுக்குமேலாகிவிட்டமையினாலே இந்நூற்பிரதிகள் கிடைப்பது அரிதாயிற்று. நூலாசிரியரதுகாலம் வரலாறு முதலியன அறிதற்கில்லையெனப் ப

ஓர் ஏட்டுப்பிரதியினின்றும் பதிப்பிக்கப்பட்டமையின் இடையிடையே சிலபாகங்கள் விடப்பட்டிருக்கின்றன. இந்நூலின் நேர்மொழிபெயர்ப்பு, பாரசீக (இரானிய) மொழியிலே ஆக்கப்பட்டதென்றும் அம்மொழிபெயர்ப்புப் பிரதியொன்று ஸர் உவில்லியம் ஜோண்ஸ் என்னும் பேரறிஞரால் லண்டன்மாநகர்க்கு அனுப்பப்பட்டதென்றும் அம்மொழிபெயர்ப்புப்பிரதியின்பிரதி கிடைத்தாலன்றி விடுபட்ட பாகங்களை நிறைவித்தற்கு வழியில்லையென்றும் பதிப்பாசிரியர் முகவுரையிற் குறிப்பிடுகின்றனர்.

இந்நூலிற் கூறப்பட்டிருக்கின்ற இசைமரபு சங்கீதரத்நாகர மரபினின்று வேறுபட்டது. வீணைக்கு மெட்டுவைத்தற்கு இந்நூலாசிரியர் தருகின்ற கணக்கினைத் தனியாகப் பின்பு ஆராய்வாம். இடைக்காலத்திலிருந்த இவ்வாசிரியர் நரம்புக்கருவிகளை வாசிப்போர்க்குப் பெரிதும் பயனளிக்கின்ற அலங்காரங்களை விரித்துக் கூறுகின்றார். அவற்றை உளங்கொளப்புகுமுன் அழகுக்கலையனைத்தினுக்கும் பொதுவாகிய சில இலக்கணங்களை ஆராய்ந்தறிவாம்.

அகரமுதல் னகரவிறுவாகிய முப்பதும், சார்ந்துவரன்மரபினவாகிய மூன்றும் என்னும் முப்பத்துமூன்று எழுத்துக்களைத் தொழிற்படுத்துதலினாலே இயற்றமிழானது, பொருள்பொதிந்த சொற்களை ஆக்கி அவை கருவியாகப் பாரகாவியங்களையும் நீதி நூல்களையும் வகுத்து இம்மைமறுமைப் பயனளிக்கின்றது.

சரிகமபதநி என்னும் ஏழு ஓசை கருவியாக இசைத்தமிழானது ஏழ்பெரும்பாலைகளை வகுத்து அவை நிலைக்களமாக நூற்றுமூன்று பண்களைப் பிறப்பித்து அவைதமது விரிவாகப் பதினோராயிரத்துத் தொளாயிரத்துத்தொண்ணூற்றொன்று என்னுந் தொகையினவாகிய ஆதியிசைகளையமைத்து இம்மையின்பமும் தேவர்ப்பாராவுதலானெய்தும் மறுமையின்பமும் பெறுமாறுசெய்கின்றது.

நகை அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்னும் மெய்ப்பாடுகளை நிலைக்களமாகக்கொண்டு உள்ளத்துணர்வினாலும், உடலுறுப்பினாலும், மொழித்திறத்தினாலும், நடையுடையினாலும் (இவற்றை முறையே சாத்விக, ஆங்கிக, வாசிக, ஆகார்ய அவிநயங்களென வடமொழிப்பரதங்கூறும்) அவை தம்மைத் தொழிற்படுத்தி இருவகைக்கூத்து, பத்துவகைநாடகம் என்னுமிவற்றைத் தோற்றுவித்து நாடகத்தமிழ் உள்ளத்திற்கு உவகையளிக்கின்றது.

குரு, லகு, எனநின்ற இருவகையசைகள் நிலைக்களமாகத் தோன்றிய விருத்தவிகற்பங்கள் ஆயிரக்கணக்காகப் பெருகுகின்றன. நேர்கோடு வட்டம் முக்கோணம் ஆகிய மூன்று மூலவடிவங்

கூனின்றுதோன்றிய உருக்கள் எண்ணிறந்தன. எல்லாவகை யான வர்ணங்களும் அமைந்த அழகிய படங்களை அச்சியற்று வோர் பயன்படுத்தும்நிறங்கள் நீலம், மஞ்சள், சிவப்பு என்னும் மூன்றுமேயாம்.

இவ்வாறு ஆராயுமிடத்துக் கண்ணினுலும், செவியினுலும், உள்ளத்தினுலும் உணர்ந்து இன்புறற்பாலவாய அழகுக்கலையுருக்க ளெல்லாம் ஒருசில மூலவுருக்கள் காரணமாகத்தோன்றிநின்றன வென்பது தெளிவாகின்றது.

உருக்களை ஆக்கிக்கொள்ளும் முறையினைக்கூறும்நூல்கள் பொதுவியல்புகளை வகுத்துக்காட்டுவன. புலவன், இசையோன், கூத்தன், ஓவியனென்று இன்னோர் தமது சொந்த ஆற்றலினுலே நுண்ணிய விகற்பங்களைத் தோற்றுவித்துச் செம்மைநலஞ்சான்ற உருக்களைப் பெருக்குதலினுலே அழகுக்கலைகள் விருத்தியடை கின்றன.

பிற்காலத்தாரால் துறை தாழிசை விருத்தம் என வகுக் கப்பட்ட பாவினங்கள் பெரிதும் இசைத்தமிழ்ப்பாலவாதலின் இயற் றமிழ் கூறப்புகுந்த ஆசிரியர் தொல்காப்பியனுர் அவையனைத்தினை யும் அவைதம்முள் அடங்காத சிலவற்றையும் ஒருபிழம்பாகக் கொச்சகவொருபோகெனக்கூறியமைந்தார். குறித்த மூன்றினு ளொன்ருகிய விருத்தமானது கம்பர், சேக்கிழார், வில்லிபுத்தூரர் என்னும் உத்தமக்கவிகளது கையிலே எத்தனையோபலவாகிய அழகிய உருவங்களைப்பெற்றுத் தனிச்சிறப்புடையதாகவிளங்கு கின்றது. விருத்தத்தின் ஒருபிரிவாகிய வண்ணவிருத்தம். அருண கிரிநாதரது இசையொடுமருவிய அருட்புலமைகாரணமாக ஆயிரக் கணக்கான அழகிய உருவங்களைப் பெற்றுநிற்கிறது.

இவ்வாறு நோக்குமிடத்துப் புத்தம்புதிய உருவங்களைப்படைத் துத்தருதலே கவிஞர் முதலிய அழகுக்கலையோரியற்றுதற்குரிய அருந்தொழில் என்பது புலனுகின்றது. மரபுபட்டுவந்த உருவங் களிற் பயின்ருேர் நுண்ணுணர்வுடையராயின் புதிய உருவங்களை எளிதின் அமைப்பர். முன்னிருந்து இறந்துபட்ட உருவங்களை ஆராய்ந்துகண்டறிதற்கும் அத்தகைய பயிற்சியும் நுண்ணுணர்வும் வேண்டப்படுபவேயாம்.

அஹோபலர் வகுத்துக்காட்டிய இசையுருவங்களை எழுதப் புகுவாம். எழுதுமிடத்து ஜ ஷ ஸ ஹ க்ஷ எனத் தமிழ்வழக்கிற் கலந்துள்ள வடவெழுத்துக்களை உருத்திரியாது கைக்கொண்டும் ஏனைய எழுத்துக்களை வடமொழியாக்கவிதிகட்கியையத் திரித்தும் எழுதுவாம். ஓரிடத்தில் ஶ்யேந: என்பதை ஒலியொற்றுமை பற்றி ஸ்யேநம் எனக்கொண்டாம்.

1. பத்த்ரம்

ஸ ரி ஸ    ரி க ரி    க ம க    ம ப ம
ப த ப    த நி த    நி ஸ நி    ஸ நி ஸ

2. நந்தம்

ஸஸ ரிரி ஸஸ    ரிரி கக ரிரி
கக மம கக    மம பப மம
பப தத பப    தத நிநி தத
நிநி ஸஸ நிநி    ஸஸ நிநி ஸஸ

3. ஜீதம்

ஸ க ரி ஸ    ரி ம க ரி    க ப ம க
ம த ப ம    ப நி த ப    த ஸ நி த

4. ஸோமம்

ஸஸ கக ரிரி ஸஸ    ரிரி மம கக ரிரி
கக பப மம கக    மம தத பப மம
பப நிநி தத பப    தத ஸஸ நிநி தத

5. கிரீவம்

ஸ க ரி க ம க ரி ஸ    ரி ம க ம ப ம க ரி
க ப ம ப த ப ம க    ம த ப த நி த ப ம
ப நி த நி ஸ நி த ப

6. பாலம்

ஸ க ரி ம ம க ரி ஸ    ரி ம க ப ப ம க ரி
க ப ம த த ப ம க    ம த ப நி நி த ப ம
ப நி த ஸ ஸ நி த ப

## 7. பிரகாசம்

ஸஸ ரிரி கக மகரி கரிஸ
ரிரி கக மம பமக மகரி
மம பப தத நிதப தபம
பப தத நிநி ஸநித நிதப

## 8. விஸ்தீர்ணம்

ஸா ரீ கா மா பா தா நீ ஸா

## 9. நிஷ்கர்ஷம்

ஸஸ ரிரி கக மம பப தத நிநி ஸஸ

## 10. காத்திரவர்ணம்

ஸ ஸ ஸ ரி ரி ரி க க க ம ம ம
ப ப ப த த த நி நி நி ஸ ஸ ஸ
ஸ ஸ ஸ ஸ ரி ரி ரி ரி க க க க ம ம ம ம
ப ப ப ப த த த த நி நி நி நி ஸ ஸ ஸ ஸ

## 11. விந்து

ஸா ஸா ஸா ரி ரீ ரீ ரீ க கா கா கா ம மா மா மா ப
பா பா பா த தா தா தா நி நீ நீ நீ ஸ

## 12. ஹஸிதம்

ஸ ஸ ரி ஸ ரி க ஸ ரி க ம ஸ ரி க ம ப
ஸ ரி க ம ப த ஸ ரி க ம ப த நி ஸ ரி க ம ப த நி ஸ

அல்லது

ஸ ரி ரி க க க ம ம ம ம ப ப ப ப ப
த த த த த த நி நி நி நி நி நி நி ஸ ஸ ஸ ஸ ஸ ஸ ஸ ஸ

## 13. பிரேங்கிதம்

ஸாரீ ரீகா காமா மாபா பாதா தாநீ நீஸா

## 14. ஆக்ஷிப்தம்

ஸஸகக ரிரிமம ககபப மமதத பபநிநி ததஸஸ

## 15. ஸந்திப்ரச்சாதநம்

ஸரிகா ரிகமா கமபா மபதா பதநீ தநிஸா

## 16. உத்கீதம்

ஸஸரிகா ரிரிகமா ககமபா மமபதா
பபதநீ ததநிஸா

## 17. உத்வாஹிதம்

ஸ ஸ ஸ ஸ ரி ரி க ம ரி ரி ரி ரி க க ம ப
க க க க ம ம ப த ம ம ம ம ப ப த நி
ப ப ப ப த த நி ஸ

## 18. திரிவர்ணம்

ஸ ரி க க க ரி க ம ம ம க ம ப ப ப
ம ப த த த ப த நி நி நி த நி ஸ ஸ ஸ

## 19. பிருதக்வேணி

ஸஸஸ ரிரிரி ககக ரிரிரி ககக மமம
ககக மமம பபப மமம பபப ததத
பபப ததத நிநிநி ததத நிநிநி ஸஸஸ

[8 முதல் 19 வரையுமுள்ள பன்னிரண்டினையும் அவரோஹணத்திலுங் கொள்க. அவரோஹணக்கிரமங்களைக் கற்போர் முறைப்படி எழுதிக்கொள்ளலாம். இவை 20 முதல் 31 வரையுமுள்ள எண்களைப் பெறுவ.]

## 32. மந்திராதி

ஸ ரி க ம ம க ரி ஸ ஸ ரி க ரி ஸ ரி க ம
ரி க ம ப ப ம க ரி ரி க ம க ரி க ம ப
க ம ப த த ப ம க க ம ப ம க ம ப த
ம ப த நி நி த ப ம ம ப த ப ம ப த நி
ப த நி ஸ ஸ நி த ப ப த நி த ப த நி ஸ

## 33. மந்திரமத்யம்

| | | | |
|---|---|---|---|
| ஸ க ரி க | ம க ரி க | ரி க ரி ஸ | ஸ ரி க ம |
| ரி ம க ம | ப ம க ம | க ம க ரி | ரி க ம ப |
| க ப ம ப | த ப ம ப | ம ப ம க | க ம ப த |
| ம த ப த | நி த ப த | ப த ப ம | ம ப த நி |
| ப நி த நி | ஸ நி த நி | த நி த ப | ப த நி ஸ |

## 34. மந்திராந்தம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஸஸ | ரிரி | கக | மக | ரிக | ரிஸ |
| ரிரி | கக | மம | பம | கம | கரி |
| கக | மம | பப | தப | மப | மக |
| மம | பப | தத | நித | பத | பம |
| பப | தத | நிநி | ஸநி | தநி | தப |

## 35. பிரஸ்தாரம்

ஸம ரிப கத மநி பஸ

## 36. பிரஸாதம்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஸரி | ஸரி | ஸரி | கரி | ரிக | ரிக | ரிக | மக |
| கம | கம | கம | பம | மப | மப | மப | தப |
| பத | பத | பத | நித | தநி | தநி | தநி | ஸநி |

## 37. வியாவிருத்தம்

ஸகரிம ஸரிகம ரிமகப ரிகமப
கபமத கமபத மதபநி மபதநி
பநிதஸ் பதநிஸ

## 38. சலிதம்

| | | |
|---|---|---|
| ஸகரிக | மரிகஸ | ஸரிகம |
| ரிமகப | பகமரி | ரிகமப |
| கபமத | தமபக | கமபத |
| மதபநி | நிபதம | மபதநி |
| பநிதஸ | ஸதநிப | ஸநிதப |

### 39. பரிவர்த்தம்

ஸகமரி ரிமபக கபதம
மதநிப பநிஸத தஸரிநி

(நூற்பதிப்பிலே ஈற்றுச்சீர் 'தஸரிஸ' எனத் தரப்பட்டிருக்கிறது)

### 40. ஆக்ஷேபம்

ஸரிக ரிகம கமப பமத மதநி தநிஸ

### 41. விந்து

ஸா ஸா ஸாரிஸா கா ரீ ரீ ரீகரீ மா
கா கா காமகா பா மா மா மாபமா தா
பா பா பாதபா நீ தா தா தாநிதா ஸா

### 42. உத்வாஹித:

ஸரிகரி ரிகமக கமபம
மபதப பதநித தநிஸநி

(மேலே 11. விந்து, 17. உத்வாஹிதமெனப் பெயரொத்தி நின்றனவாதலின், இங்குக்கூறிய இரண்டும் அவற்றின் விகற்பமெனக் கொள்ளவேண்டியிருக்கிறது.)

### 43. ஊர்ம்மி

ஸ மமம ஸம ரி பபப ரிப க ததத கத
ம நிநிநி மநி ப ஸஸஸ பஸ

### 44. ஸமம்

ஸரிகம மகரிஸ ஸரிகம
ரிகமப பமகரி ரிகமப
கமபத தபமக கமபத
மபதநி நிதபம மபதநி
பதநிஸ ஸநிதப பதநிஸ

### 45. பிரேங்கம்

ஸஸமம ரிரிபப ககதத மமநிநி பபஸஸ

## 46. நிஷ்கூஜிதம்

ஸம ஸம ஸரிகம ரிப ரிப ரிகமப
கத கத கமபத மநி மநி மபதநி
பஸபஸ பதநிஸ

## 47. ஸ்யேநம்

ஸரி ஸக ஸம ஸப ஸத ஸநி ஸஸ
ரிக ரிம ரிப ரித ரிநி ரிஸ
கம கப கத கநி கஸ
மப மத மநி மஸ
பத பநி பஸ
தநி தஸ
நிஸ

## 48. கிரமம்

ஸ ரி ரி க க ம ரி க க மமப
க ம ம ப ப த ம ப ப ததநி
பதத நிநிஸ

## 49. உத்காடிதம்

ஸக ஸக ஸரிகம ரிம ரிம ரிகமப
கப கப கமபத மத மத மபதநி
பநி பநி பதநிஸ

## 50. ரஞ்ஜிதம்

ஸக ரிக ஸரிகம ரிம கம ரிகமப
கப மப கமபத மத பத மபதநி
பநிதநி பதநிஸ

## 51. ஸந்நிவ்ருத்தம்

ஸரிக ரிகம கரிஸ ரிகம
ரிகம கமப மகரி கமப
கமப மபத பமக மபத
மபத பதநி தபம பதநி
பதநி தநிஸ நிதப தநிஸ

## 52. பிரவிருத்தகம்

மேலே ஸங்கிவிருத்தத்திற்குத்தந்த ஸ்வரங்களை இரட்டித்து எழுதிக்கொள்க.

## 53. வேணு

ஸமகம ஸரிகம ரிபமப ரிகமப
கதபத கமபத மநிதநி மபதநி
பஸநிஸ பதநிஸ

## 54. லலிதஸ்வரம்

ஸஸ மம கக ரிஸ ஸரிகரி ஸரிகம
ரிரி பப மம கரி ரிகமக ரிகமப
கக தத பப மக கமபம கமபத
மம நிநி தத பம மபதப மபதநி
பப ஸஸ நிநி தப பதநித பதநிஸ

## 55. ஹூங்காரம்

ஸஸ பப ரிரி தத கக நிநி மம ஸஸ

## 56. ஹ்லாதமானம்

ஸமகரி ரிபமக கதபம மநிதப பஸநித

## 57. அவலோஹிதம்

ஸஸஸ மமம ரிரிரி பபப கககு ததத
மமம நிநிநி பபப ஸஸஸ

## 58. இந்திரநீலம்

ஸரி கம கரி ஸரிகரி ஸரிகம
ரிக மப மக ரிகமக ரிகமப
கம பத பம கமபம கமபத
மப தநி தப மபதப மபதநி
பத நிஸ நித பதநித பதநிஸ

## 59. மஹாவஜ்ரம்

ஸரி கரி ஸரி ஸரிகம ரிக மக ரிக ரிகமப
கம பம கம கமபத மப தப மப மபதநி
பத நித பத பதநிஸ

## 60. நிர்த்தோஷம்

ஸரி ஸரி கம ரிக ரிக மப
கம கம பத மப மப தநி
பத பத நிஸ

## 61. ஸீரம்

ஸரி ஸரிக ஸரிகம ரிக ரிகம ரிகமப
கம கமப கமபத மப மபத மபதநி
பத பதநி பதநிஸ

## 62. கோகிலம்

ஸரிக ஸரிகம ரிகம ரிகமப
கமப கமபத மபத மபதநி
பதநி பதநிஸ

## 63. ஆவர்த்தம்

ஸரி கரி ஸரி ஸரி ஸரிகம
ரிக மக ரிக ரிக ரிகமப
கம பம கம கம கமபத
மப தப மப மப மபதநி
பத நித பத பத பதநிஸ

## 64. ஸதாநந்தம்

ஸரிகம ரிகமப கமபத மபதநி பதநிஸ

## 65. சக்ராகாரம்

ரிரிரிரி ஸரிரிரி
கககக ரிககக
மமமம கமமம
பபபப மபபப
தததத பததத
நிநிநிநி தநிநிநி
ஸஸஸஸ நிஸஸஸ

## 66. ஜவம்

ஸ ரி க ம ப த நி ஸ நி த ப ம க ரி ஸ

ஸ ரி க ம ப த நி த ப ம க ரி ஸ

ஸ ரி க ம ப த ப ம க ரி ஸ

ஸ ரி க ம ப ம க ரி ஸ

ஸ ரி க ம க ரி ஸ

ஸ ரி க ரி ஸ

ஸ ரி ஸ

## 67. சங்கம்

ஸா ஸா நித நீ நீ தப தா தா பம

பா பா மக மா மா கரி கா கா ரிஸ

## 68. பத்மாகாரம்

ஸ ரி ஸ ஸ ஸ ரி க க

ரி க ரி ரி ரி க ம ம

க ம க க க ம ப ப

ம ப ம ம ம ப த த

ப த ப ப ப த நி நி

த நி த த த நி ஸ ஸ

## 69. வாரிதம்

ஸ நிநிநி ஸ ததத ஸ பபப ஸ மமம

ஸ ககக ஸ ரிரிரி ஸ ஸஸஸ

‘இவ்வாறு அறுபத்தெட்டு அலங்காரங்கள் கூறப்பட்டன’ என நூலாசிரியர் உரைத்தார். 44 ஸமம், 45 ப்ரேங்கம் என்னும் இரண்டினையும் பதிப்பாசிரியர் ஒரே இலக்கங்கொடுத்து நிறுத்தித் தொகையினை அறுபத்தெட்டு ஆக்குகின்றார்.

இவற்றைத் தொழிற்படுத்துமுறைகள் நூலினுள் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன.

உ

கடவுள் துணை.

# செந்தமிழ்.

தொகுதி-சு௦.] சித்திரபானு-ஆ கார்த்திகை மீ [பகுதி-க.
Vol. 40. November—December 1942. No. I.

## தில்லிமாநகர்த்

# திருவமர்மார்பன் திருக்கோயிற் காட்சி

[சுவாமி விபுலாநந்தரவர்கள்]

தொன்மைவளஞ்சான்ற மகதநாடு, புத்ததேவர்காலத்துக்கு முன்னுகவே நாகரிகம் படைத்த நாடாக விளங்கியது. புத்தர் காலத்திலும் அதற்குப் பின்னும் அமைந்த அழகிய கட்டிடங்கள் பல அழிவுற்றநிலையிலே இந்நாட்டினில் இன்றும் காணப்படுகின்றன. இந்நாட்டுமன்னன் கொடுத்த ஒலக்கமண்டபம் பழைய புகார்நகரத்தினை அழகுசெய்ததெனச் சிலப்பதிகாரநூல்வாயிலாக அறிகின்ருேம்.

'இமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யொற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்
கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரும்
மகதநன் ணுட்டு வாள்வாய் வேந்தன்
பகைப்புறத்துக் கொடுத்த பட்டிமண் டபமும்
அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்
பொன்னினும் மணியினும் புனைந்தன வாயினும்
நுண்வினைக் கம்மியர் காணு மரபின
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு
மயன்விதித்துக் கொடுத்த மரபின விவைதாம்
ஒருங்குடன் புணர்ந்தாங் குயர்ந்தோ ரேத்தும்
அரும்பெறன் மரபின் மண்டபம்'

என இந்திரவிழவூரெடுத்தகாதை கூறும். குறித்த மூன்றுநாட்டு மன்னராலும் அனுப்பப்பட்ட நுண்வினைக்கம்மியர் வச்சிரநாட்டு முத்துப்பந்தர்போல்வதோர் முத்துப்பந்தரையும் மகதநாட்டு ஓலக்கமண்டபம்போல்வதோர் ஓலக்கமண்டபத்தையும் அவந்தி நாட்டுத் தோரணவாயில்போல்வதோர் தோரணவாயிலையும் ஒருங்கமைத்து அரும்பெறன்மண்டபமாக்கினரெனக்கொள்வதில் இழுக்கில்லை.

மகதநாட்டுப் பழைய சிற்பநலத்தினை ஆராய்ந்து நூலியற்றிய வங்கநாட்டறிஞராகிய ஸ்ரீஷ் சந்திர சட்டர்ஜீ என்னும் சிற்பநூற் புலவர், தாம் மனக்கண்ணினாற் கண்டு துய்த்த அழகினைப் பிறர் புறக்கண்ணினாற் கண்டு துய்த்தல்வேண்டுமென்னும் எண்ணமானது உள்ளமீதூரத் தென்னாட்டிலும் குணகடற்கப்பாலுள்ள தீவுகளிலும் அமைந்த கோயில்களையும் பார்வையிட்டு மகதநாட்டுச் சிற்பநலம்வாய்ந்த அழகிய கோயிலொன்றினைப் பழைய இந்திரப்பிரஸ்தமாய் இந்நாளிலும் பாரதநாட்டின் தலைநகராய் விளங்கும் புதிய தில்லியிலே அமைத்தற்கு விரும்பினார்.

பெருங்குடிவாணிகராகிய பிர்லா என்னும் புகழாளர் சிற்பநூற்புலவர்கருத்தோ டொன்றிய கருத்தினராய்க் கோயிலமைத்தற்குவேண்டிய பெரும்பொருளை வழங்கினார். பழைய மகதக் கம்மியரின்வழிவந்தோரும், வங்கநாட்டினின்றும் பிறநாட்டினின்றும் வந்த கம்மியரும் ஒருங்குகூடித் தூய வெள்ளிய சலவைக் கல்லினாலே புலவர்கருத்திற்கியைய அழகிய கோயிலைக் கட்டி முடித்தார்கள். லக்ஷ்மீநாராயணமந்திர் என வடநாட்டார்வழங்கும் இத்திருக்கோயிலின் நடுவி லமைந்தது திருமகளாரும் திருவமர் மார்பனும் வைகும் ஆலயம். அதற்கு வலப்புறத்தது உலகமாதா ஜகத்தாத்திரி என்னும் மூர்த்தமாக வைகும் ஆலயம்; இடப்புறத்தது சிவாலயம்: மூன்று ஆலயங்களுக்கும் இடையிலமைந்தன இரண்டு சதுக்கங்கள்; மேன்மாடத்திலும் இவ்வாறே.

முழுக்காட்டி அமுதூட்டும் வழிபாட்டுமுறையின்றி மலர் தூவி வழிபடுதற்கியைந்த இந்நியமத்திலே எப்பாலாருஞ் சென்று வழிபடலாம். இதனை உலகுபுகழ்ந்தேத்தும் காந்தியடிகள் திறந்து வைத்தார்கள்.

# திருவமர்மார்பன் திருக்கோயிற் காட்சி

மூன்றாண்டுகளின்முன் புதியடில்லிக்குப் போயிருந்தபொழுது இத்திருக்கோயிலைச் சென்று தரிசித்தேன். கோயிலினமைப்பும் ஓவியங்களின் வனப்பும் பழைய புகார்நகரத்தினை நினைவுறுத்தின வாதலின் அவைதம்மைத் தமிழ்ப்பாடலிலமைத்துக் கூறப்புகுந்தேன். அறிஞர் ஏற்று அருள்புரிவாராக.

தண்ணிலவின் கதிர்க்கற்றை தனைத்திரட்டி யுருவாக்கி
உண்ணிலவும் அமிழ்தத்தை உகுத்ததென, மணிவண்ணன்
கண்ணிலவு துயில்புரியும் கருதரிய திருமனையாம்
பண்ணிலவு பாற்கடலே பாரின்மிசைப் படர்ந்ததென,

வெண்மையும் பொலிவும் விழைதகு வனப்பும்
ஒண்மையும் மரீஇ, உரவோர் மனமெனக்
களங்கமற் றோங்கி, விளங்குமிந் நியமம்
பொன்னி னாழி பொருந்திய குடுமி
வெள்ளிக் குன்றென வெண்ணிறச் சலவைக்
கல்லிற் சமைந்த கவினுடைத் தம்ம!
சீரியல் நாரணன் திருவொடும் பொலிந்த
பேரியற் கோயிலஃது ஈரியன் மருங்கும்
உலகு தாங்கிய ஒருத்தி கோயிலும்
கலைமதி புனைந்த கண்ணுதல் கோயிலும்
மூவிலைச் சூலம் மேவிய குடுமிக்
குன்றிரண் டிருபால் நின்றதோற் றத்த.

திருவாயி லிருமருங்கும் செழுங்காத்திற் றண்டேந்தி
ஒருவாத படிமங்கள் ஓரிரண்டு நின்ற; இவை
ஓரிரண்டும் எழின்முகத்தில் உவகையொடு நகையரும்பி
வாருமிவண் வாருமென வலிந்தழைக்கும் நீர்மையவே.

மெருகிட்ட சலவைக்கல் வீதியினை வலம்வந்தே,
உருகிட்ட மெழுகென்ன உளந்ததும்ப உட்புகுந்தேன்;
உளந்ததும்பப் புகுந்தாங்கே உலகுபுரந் திடுமொருவன்
வளந்ததும்புந் திருவோடு மன்னியதோற் றங்கண்டேன்.

ஆரணங் கணிந்தது அரத்தப் பூந்துகில்;
நாரணன் உடீஇயது பீதக ஆடை.
இருவர் மார்பினும் இலங்கிய தாமம்
பன்னிற நன்மலர் பயின்று விளங்குவ.

இருவர் சிரத்திலும் அருமணி மகுடம்;
செம்மலர்ப் பதத்திற் சிலம்பும் கழலும்;
அம்மலர் நோக்கி அகங்குளிர்ந் தப்பால்,

வேங்கைவரிப் புறத்தியைந்து விறல்வாளும் படைக்கலமும்
தாங்கியநல் லெழிலுருவைத் தாயுருவ மெனக்கண்டேன்;

தாயுருவாய் உலகளிக்குந் தூயவுணர்ந்து மனமாசு
தேயஅவள் சீறடியைச் சிந்தையினில் இருத்தியப்பால்,

கல்லாலின் புடையமர்ந்து கருத்தொன்றி யோகுசெய
வல்லானல் லருளாளன் மதிமிலைந்த முடிச்சென்னி,

மதிமிலைந்த முடியானை மனநெகிழ்ந்து வழுத்தியபின்
விதிபுனைந்த மணிவாயில் விளங்கியவீ ருருக்கண்டேன்.

ஆரழல் மாமகம் அழிதர அடர்த்த
வீரனும் விண்ணவர் வெந்துய ரகலச்
சூருரங் கிழித்த சுடரிலை நெடுவேல்
ஏரகந் தவனும் இருபால் இலங்கினர்;
கண்ணுறு நல் வாயிற் காவலர் இவர்க்கண்டு,
உலகு தாங்கிய ஒருத்தி கோயிலில்
நடம்பயில் வைரவர் யோகினி யெனுமிவர்
இடம்பெயர்ந் துறையும் இயல்புங் கண்டேன்;
நாரணன் கோயில் ஏர்புனை வாயிலில்
நாரத முனியும் பாரதிப் பெயர்கொள்
சொல்லின் மடந்தையும் நல்லியல் வீணை
ஏந்திய கரத்தினர் இலங்கக் கண்டேன்.

அப்பால், இருபெருஞ் சதுக்கம் இயைந்தன; அவற்றுள்,

வேத வியாதனும் இடப தேவனும்
சாங்கியக் கபிலனும் தன்வந் திரியும்
மன்னிய சதுக்கம் வலப்பா லதுவே.

வையந்தா னுய்யும்வகை மாமறையை வகுத்துரைத்த
ஐயன்றன் திருக்கரத்தில் அருஞ்சுவடி பொலிந்ததுவே;

அருஞ்சுவடிப் பொருள்தேரின் ஆரணநூன் முடிந்தவிடம்
பொருந்துபொருள் ஒன்றென்னப் புலங்கொள்ள உரைப்பதுவே;

சீரிடப தேவனெனுஞ் சினனுரைத்த வாசகந்தான்
ஓரினைந்து பெருநோன்பின் உண்மையினை உரைப்பதுவே;

உண்மைநிலை கொலைகளவி னொழிந்தநிலை கொடுங்காமம்
எண்ணுபொரு ணசைநீக்கல் இவைசீலம் இயமமெனல்,

அறுநான்கு தத்துவமும் ஆய்ந்துரைக்குங் கபிலமுனி;
மறுநீங்க உடலோம்பு மரபினிற்றன் வந்திரியே,

மரபினில்ஐ யைந்தாண்டின் மணமகன்றன் எண்ணிரண்டு
விரவியவள் பாலின்பம் விழையுமெனும் உரைகூறும்.

இடப்பாற் சதுக்கத்து மழுப்படை ராமனும்
சீதை கேள்வனும் யாதவ ரிறையும்
அருளறம் பகர்ந்த பெருவிறற் புத்தனும்
தத்தம் உயர்மொழி தந்துநின் றனரே.

ஆங்கு, நெடுநிலை மாடத் தரமிய மேறிச்
சுவரி லெழுதிய சித்திரம் நோக்க
மாமனு வேந்தனும் ரகுவும் போசனும்
தாமவிக் கிரமனுந் தங்கின ரொருபால்;
கங்கையும் யமுனையும் கலந்தன ஒருபால்;
மாபா ரதத்தும் இராமன் கதையுளும்
மேவிய தொன்மை விரிந்தன ஒருபால்;
திருத்தகு ராம கிருட்டிண தேவனும்
சங்கரா சிரியனும் சார்ந்தன ரொருபால்;
சந்திர குப்தனும் அசோக மன்னனும்
சுந்தர உருவிற் றோன்றின ரொருபால்;
இங்கிப் பரிசின் இயைந்த ஓவிய
நலங்கண் டுவக்கும் நகர மாந்தர்
மாட்சியும் ஒருபெருங் காட்சி யாகும்:

முளையெயிற்றுச் செய்யவாய் முதிராத பசுங்குதலை
இளமகார் தமையேந்தும் இளநல்லார் குழுவொருபால்;
தண்டூன்றி நடுக்குறூஉம் தளர்நடையும் நரைமுடியும்
கொண்டேன்ற முதுமகளிர் குழுவொருபாற் குலவுமே.

அலர்கதிர் ஆழியும் அந்தண் மதியம்
நிகர்திருச் சங்கமும் நீள்கரத் தேந்தி
மலர்மக ளொருபால் மருவ மன்னிய
தாமரைக் கண்ணன் சேவடி
மேவிய தில்லி வியனகர் பெரிதே.

௨

# மகாமகோபாத்தியாய டாக்டர்
# சாமிநாதையர்

[திருவல்லிக்கேணி தமிழ் இளைஞர் சங்கத்தினர் டாக்டர். சாமிநாதையரவர்களுடைய திருவுருவப்படத்தையும், பாரதியாருடைய திருவுருவப்படத்தையும் தங்கள் சங்கத்தில் அமைத்த விழாவில் சென்னைப் பல்கலைக்கழகத்துத் தமிழாராய்ச்சித் துறைத்தலைவர் ராவ்ஸாஹிப் ஸ்ரீ. S. வையாபுரிப்பிள்ளையவர்கள் B.A., B.L. பேசியது.]

டாக்டர் சாமிநாதையரவர்கள் நம்மிடையேயின்று மறைந்து சில மாதங்களாயின. அவர்கள் குடும்பத்தினர் வடித்த கண்ணீர்த் துளிகள், அவர்கள் உறவுமுறையினர் சிலகாலம் அடைந்த அருந் துயரம், அவர்கள் நண்பர்களுடைய சிலகாலத் துக்கம், அவர்களைத் தெரிந்தவர்களின் மனத்துயரம், அங்கங்கே தமிழ்க்கழகங்களில் நிறைவேற்றப்பட்ட அநுதாபத் தீர்மானங்கள், பத்திரிகைகளிற் கறுப்புக்கோடுகளில் அடைத்த துக்கச்செய்தி: இவற்றோடு அவர்களைக் குறித்த ஞாபகம் மறைந்துவிடக்கூடியதா? அன்று. அவர்களுடைய திருவுருவப்படத்தை அங்கங்கே அமைத்துப் போற்றுதல் வேண்டும். இச்செயல் மிகவும் பாராட்டத்தக்கதே.

ஐயரவர்கள் பூர்விகத் தமிழிலக்கியத்தின் பிரதிநிதி. தற்காலத் தமிழிலக்கியத்தின் பிரதிநிதி பாரதியார். இவ்விருவரும் திருவல்லிக்கேணியோடு தொடர்புடையவர்கள். பாரதியார் சென்னை ராஜதானியின் தென்கோடியிலுள்ள திருநெல்வேலியைச் சார்ந்தவர்கள்; ஐயரவர்கள் இந்த ராஜதானியின் மத்திய பகுதியிலுள்ளவர்கள். பாரதியார் தமிழன்னையின் உக்ரமூர்த்தமாகவுள்ளவர்; ஐயரவர்கள் அவ்வன்னையின் சாந்தமூர்த்தமாகவுள்ளவர்கள். பாரதியாரின் சொற்கள் தேசபக்தியும் தமிழ்ப்பற்றும் கொழுந்துவிட்டெரிந்து, கேட்போரின் மனத்திலே அளவற்ற பக்திக்கனலை அள்ளியெறிந்து, அம்மனத்தைப் பற்றியெரியச்செய்கின்றன; ஐயரவர்களின் சொற்கள்

ஆழ்ந்த தமிழறிவினால் பரிபக்குவமெய்திக் குளிர்ந்த நிலவொளியை வீசுகின்றன. பாரதியார் வாழ்க்கைப்போராட்டத்தில் துன்புற்று நைந்து வருந்தியவர்; ஐயரவர்கள் இவ்வகைப் போராட்டத்தால் துன்புறாதுவாழ்ந்தமை நமது பாக்கியமே. பாரதியார் பெருங் கவிஞர்; ஐயரவர்கள் பெரும்புலவர்: இவ்விருபெருந்தகைமையாள ரின் திருவுருவங்களும் நமது இளைஞர்கள் எப்பொழுதும் தியானித்து வரத்தக்கன. இவ்விருவரது வாழ்க்கைகளும் நம்நாட்டு இளைஞர் களுக்குப் பயன்படக்கூடிய பல உபதேசங்களைத் தரத்தக்கன.

ஐயரவர்கள் குறுந்தூறுநிரம்பிய குறுங்காட்டில் தனிநின்றோங்கிய பெருமரமல்லர். அவர்கள்காலத்தில்சிறந்த வித்துவான்கள் இருந்தார் கள். உதாரணமாக ராவ்பகதூர் சி. வை. தாமோதரம்பிள்ளை, வி.கோ.சூரியநாராயணசாஸ்திரியார்,ரா. இராகவையங்கார்,பின்னத் தூர் நாராயணசாமிஐயர் முதலிய பெரும்புலவர்கள் செழித்தோங் கியகாலம் இவர்கள் காலமேயாகும். ஆராய்ச்சியிற் சிறந்த கனக சபைப்பிள்ளையவர்களும்,ஆராய்ச்சியிலும்கவித்துவத்திலும்சிறந்து விளங்கிய ஆசிரியர் சுந்தரம்பிள்ளையவர்களும் இவர்கள்காலத் தினரேயாவர். இப்பெரும்புலவர்தொகுதிக்கு இப்போது பிரதிநிதி யாக வாழ்ந்திருப்பவர்கள் ரா. இராகவையங்காரவர்களே. இப் பெருமக்களிடையே வாழ்ந்து தமக்கெனவுரிய தனிப்பெருமையிற் சிறந்தோங்கியவர்கள் ஐயரவர்கள். இத்தனை பெரியோர்களுக்கிடை யிற் சிறந்துவாழ்வதென்றால் ஐயரவர்களுடைய தனிப்பெருமை எவ்வளவாகவுள்ளதென ஒருவாறு ஊகித்துக்கொள்ளலாம்.

ஐயரவர்கள் 60 வருஷகாலமாகத் தமிழையே சிந்தித்துவந் தார்கள்; தமிழ்நூல்களையே ஓதிவந்தார்கள்; தமிழ்நூல்களையே போதித்துவந்தார்கள்; தமிழ்நூலாராய்ச்சியே செய்துவந்தார்கள்; தமிழ்நூல்களையே பதிப்பித்துவந்தார்கள்; தமிழ்நூல்களையே தேடிப் பெற்றுத் தொகுத்துவந்தார்கள்; அவர்கள் கிருகத்தைத் தமிழ்த்தெய்வத்தின் திருக்கோயில் என்றுதான் சொல்லவேண்டும்.

எத்தனை அரியநூல்களை அவர்கள் அழகுற-கல்வியாளர்கள் மெச்சும்படி, நல்லமுறையிற் பதிப்புத்தந்திருக்கிறார்கள். பத்துப் பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல்,

புறநானூறு, ஐம்பெருங்காப்பியங்களிற் கிடைப்பன: இவையெல்லாம் ஐயரவர்கள் நமக்குத்தந்த தமிழ்க்கருவூலங்கள். பதிப்புப் பேராசிரியர் என்ற பெயர்க்கு இவர்களே தக்கவர்கள்.

இவர்கள் பதிப்புக்களால் தமிழன்னையின் நல்லணிகள் மாசு நீக்கப்பட்டு அவள் திருமேனியில் அணியப்பட்டன. தமிழரசர்கள் சரித்திரம், தமிழ்ப்புலவர்சரித்திரம், தமிழ்நாட்டுச்சரித்திரம். இவைகளெல்லாவற்றிலும் பல அம்சங்கள் தெரியவந்தன. இவைகளை முற்றும் பரிசோதனைசெய்தால், தமிழுக்குரிய புராதனசரித்திரம் இன்னும் வெளிவருவதாயிருக்கும்.

இவர்கள் தேடித் தொகுத்துவைத்திருக்கும் அரியநூல்களைத் திருந்தியமுறையிற் பதிப்பிடுவதானால் சிறந்த தமிழறிஞர்களுக்குப் பல தலைமுறைக்காலம் உளங்கூர்ந்தவேலை இருந்துகொண்டேயிருக்கும். ஐயரவர்கள் முயற்சியெடுத்துத் தொகுத்துவையாமற்போனால், நமது பழந்தமிழ்க் கருவூலங்களிற் பலவற்றை நாம் இழந்துபோக நேரிட்டிருக்கும். நமது நல்வினைப்பயனாகத்தான் ஐயரவர்கள் தோன்றினார்கள்.

தமிழிலக்கியசரிதத்தின் காலப்பகுப்பில், ஐ ய ர வ ர் க ள் தொண்டுபுரிந்துவந்த 60 ஆண்டுகளையும் 'சாமிநாதையர்காலம்' என்றுதான் பிற்காலத்தில்வரும் தமிழ்ச்சரித ஆசிரியர்கள் கூறுவார்கள்.

'தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று'

௨

# தென்னாட்டில் ஊற்றெடுத்த அன்புப்பெருக்கு வடநாட்டிற்பரவிய வரன்முறை

சுவாமி விபுலாநந்தர்

'பிரபுத்தபாரத' 1941 நவம்பர்மாத வெளியீட்டில் 'ஆசிரியர் கருத்துரை'யாக யான் எழுதிய (Religious Revival in Medieval India' என்னும்) பொருளுரையினைத் தமிழன்பர்கள்பொருட்டு ஈண்டு மொழிபெயர்த்துத் தருகின்றேன்.

வேதஇருடிகள் அறிவுநெறிநின்று மேலான உண்மைப்பொருளைக் காணமுயன்றார்கள். உபநிடதகாலத்து அறிஞரும் வாதராயணரென்னும் பெரியாரும் போற்றிவளர்த்த வைதிகஞானநெறியானது சங்கரரது அத்வைதஞானமாக நிறைவுபெற்றது. ஆதலினாலே, சங்கரர் பழைய இந்தியாவில் வைதிகத் தொன்னெறி நிறுவிய பெரியோர்வரிசையிலே இறுதியில் நிற்றற்குரியர். இராமாநுஜர் (கி. பி. 1027-1137) ஒரு புதிய யுகத்தினைத் தொடங்குகிறார். தமிழரது அறிவுச்செல்வம் இராமாநுஜருக்கு முதுசொத்தாகக் கிடைத்த வரன்முறையினைத் தமிழ்நாட்டிற்குப் புறத்தேயுள்ளோர் அதிகம் அறியார். சடகோபர் எனப் பெயரிய நம்மாழ்வார் ஞானக் கடலினுள்ளே முழுகித் தமிழ்மொழிக்கு அணியாகத் திரட்டி வைத்த அருமணிக்களஞ்சியம் இராமாநுஜருக்கு உரிமைப்பொருளாயிற்று. திருநெறித்தொண்டர் பலரைத் தோற்றுவித்த செழுமைமிக்க தமிழ்க்குடியானது பாவலர்க்குப் பாவலராகவும், நுண்ணறிவினருள் நுண்ணறிவினராகவும், தொண்டர்பரவும் தொண்டராகவும் விளங்கிய சடகோபரை உலகிற்கு அளித்தது. அவரது திருவாய்மொழி தமிழ்க்கவிச்செல்வத்திற்குத் தலையணியாயிற்று. 'வாய்மை'யென்பது 'உண்மை' ஆதலின், 'வாய்மை+மொழி' என நின்ற 'வாய்மொழி' 'உண்மையுரை' என்னும் பொருளினது.

அவ்வுண்மையும் தருக்கமுறையினாற் பெறப்படும் சிற்றுண்மை யாகாது, ஞானயோகநெறியினால் எய்துதற்குரிய பேருண்மையா கும். பரிபாடல் முதலிய சங்கத்தமிழ்நூல்களிலே 'வாய்மொழி' வேத நூலுக்குப் பெயராக வழங்கப்பட்டது. 'திரு' என்பது 'செம்மை,' 'நன்மை'யினைக் குறிக்கும் அடைமொழியாகும். செம்மைநலம் வாய்ந்த தமிழ்ச்சொற்களினாலே மேலான உண்மையறிவினை யுணர்த்தும் திருவாய்மொழியானது தென்னாட்டு வைணவப்பெரியா ரால் வேதநூலுக்கு ஒப்பாக மதிக்கப்பட்டது. கோயில்களிலும் கழகங்களிலும் அதனை நெறிமுறையிலே ஓதவேண்டுமென இரா மாநுஜர் ஏற்பாடுசெய்துள்ளார். பதின்மூன்றாம் பதினான்காம் நூற்றாண்டிலே வாழ்ந்த வேதாந்ததேசிகர் திருவாய்மொழியினைத் திரமிடோபநிடதம் எனப் பெயரிட்டுப் போற்றுவாராயினர். திருவிருத் தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி என்னும் நூல்களும் நம்மாழ்வா ரால் ஆக்கப்பெற்றன.

*          *          *

ஆழ்வாருள் ஒருவராகிய மதுரகவி என்னும் பெரியார் வட நாட்டிலே யாத்திரைசெய்வாராய்க் கங்கைக்கரையிலேநிற்கும் எல்லையிலே, தெற்குத்திசையிலே ஒரு பேரொளிவிளக்கத்தினைக் கண்டு இறும்பூதெய்தித் தெற்குநோக்கிச்செல்வாராயினர். முன் னாளிலே பலஸ்தீனநாட்டு பெத்லகேம் நகரிலே ஒருதெய்வக்குழந் தை பிறந்தபோது கீழ்த்திசையிலே ஒரு விண்மீன் தோற்றக்கண்டு அதனைப் பின்தொடர்ந்துசென்ற ஞானவான்களைப்போலத் தென் திசையிலேதோன்றிய பேரொளிவிளக்கத்தினை நாடிச் சென்ற மதுரகவியார் ஆழ்வார்திருநகரியெனப் பின்னாளிலே பெயர்பெற்ற திருக்குருகூரை அடைந்தார். ஆங்குப் பரந்த கொம்புகளையுடைய திருப்புளியின்கீழே யோகநிலையில் வீற்றிருந்த பதினாறாட்டைப் பிராயத்து இளைஞரொருவரைக் கண்டார். யோகங்கலைந்து விழித்த இளைஞர் முதியோராகிய மதுரகவியாரது வினாக்களுக்கு விடை யிறுத்தார். மதுரகவியார் மனமகிழ்வெய்தி ஆண்டிலிளைய அப் பெரியாருக்கு மாணவராயினர். சடகோபர் வேளாண்குலத்தவர்.

வேளாண்குலம் வங்கநாட்டுக் காயஸ்தகுலத்தினை ஒத்த தரத்தது. சடகோபரது தந்தையார் திருக்குருகூருக்குத் தலைமைதாங்கிய காரிமாறர்; தாயார் உடையநங்கையார். இவர் தமது தவப்பயனாக உதித்த சடகோபர் பிறந்தநாள் சாக்கியகுலத்தோன்றலாய்ப் புத்ததேவரெனவிளங்கிய சித்தார்த்தகுமாரர் உலகிலே தோன்றிய நாளாகிய வைகாசித்திங்கள் நிறைமதிநாளாகும். சடகோபர் உதித்த ஆண்டு இதுவென்பது இன்னும் வரையறையாக அறியப் பட்டிலதெனினும் அதனை ஐந்தாம்நூற்றாண்டின் பிற்பகுதியில் உளதெனக் கொள்ளலாம். நம்மாழ்வார் திருவாய்மலர்ந்த அருட் பாடல்களை மதுரகவியார் ஏட்டிற் பொறித்துவைத்தார். அவை தம்மை உலகிற்பரப்பிய பெருமை நாதமுனிகளுக்கு உரியது. நாத முனிகள் (கி. பி. 824–924) வேதம், மிருதி முதலிய கலைகளில் வல்ல யோகி. தற்செயலாகத் திருவாய்மொழிப்பாடல்கள் சில இவர் செவியில் வீழ்ந்தன. அன்பு கசிந்த அவ்வின்னிசைப்பாடல்களி னாலே ஆண்டவனைத் தொழுதல் யோகத்திலும் சிறந்தசெயலென நாதமுனிகளது உள்ளத்திற்குப் பட்டது. அன்புநெறி இஸ்லாமிய கிறிஸ்தவ மதங்களின்வழியாகப் பாரதநாட்டிற்குவந்ததென எண் ணுங் கலைவல்லார் திருவாய்மொழி, தேவார, திருவாசகச் செழும் பாடல்களைச் செவிமடுப்பார்களாயின் அன்புநெறி தமிழ்நாட்டிலே தோன்றியதென அறிந்துகொள்வர்.

இஸ்லாமிய சமயகுரவராகிய முகம்மதுநபி அராபிநாட்டிலே தோன்றிய காலத்திலே, தமிழ்நாட்டில்வாழ்ந்த திருநாவுக்கரசர் (கி. பி. 574–655, சீகாழிப்பதியிலே தோன்றிய இளஞாயிறாகிய திருஞானசம்பந்தர் (கி. பி. 639–655), கொல்லம் ஆண்டினைத் தொடங்கிய கேரளமன்னராகிய சேரமான்பெருமாளுக்கு ஆசிரிய ரும் நண்பருமாகிய சுந்தரமூர்த்திகள் (கி. பி. 807–825), மந்திரித் தொழிலை நீத்துத் துறவுபூண்ட மாணிக்கவாசகர் (இவர்காலம் பத்தாம்நூற்றாண்டாயிருக்கலாம்) என்னும் நால்வரும் அன்பு

கலந்த ஞானப்பாடல்களை உலகிற்கு நல்கினார்கள். இவர்களது செவ்விய வாழ்க்கையினாலும் செழும்பாடல்களினாலும் ஏற்பட்ட எழுச்சியின்பயனாகச் சோழமன்னர்கள் பதினோராம் பன்னிரண்டாம்நூற்றாண்டுகளிலே பல தேசங்களைத் தங்கள்கைப்படுத்தி ஆழிவேந்தர்களாக விளங்கினார்கள். தமிழ்நாட்டு அழகுச்செல்வத்திற்கு அறிகுறியாகிய திருக்கோயில்கள் நாடெங்கும் திகழ்ந்தன. கி. பி. மூன்றாம்நூற்றாண்டுமுதல் ஆறாம்நூற்றாண்டுவரையுமுள்ள காலத்திலே தமிழ்நாட்டு வரன்முறையிலே ஒரு வெற்றிடம் காணப்படுகிறது. மூன்றாம்நூற்றாண்டின் இடைக்காலத்திலே பல்லவ மன்னர்கள் காஞ்சியிலே அரசுபுரிந்தார்கள். வடநாட்டிலே குப்த குலத்து ஆழிவேந்தர் அரசுபுரிந்தனர். சேர சோழ பாண்டிய குலங்கள் அரவுதீண்டிய பரிதிமதியத்தைப்போல ஒளியிழந்திருந்தன. இப்பழங்குடிகள் புத்துயிர்பெற்று எழுந்தது ஏழாம்நூற்றாண்டின் நடுவில் என்னலாம். கி. பி. 641-ஆம் ஆண்டிலே பல்லவமன்னனாகிய நரசிங்கவர்மன் வாதாபிப் போர்க்களத்திலே இரண்டாம் புலிகேசி யென்னும் சளுக்கியமன்னனை வென்று வாகைமாலை சூடினான். இச்சளுக்கியமன்னனாகிய புலிகேசி வடநாட்டுக் கன்னியாகுப்ஜத்து முடிமன்னனாகிய ஹர்ஷமன்னனைப் புறமுதுகிடச்செய்த வீரன். ஹர்ஷனது அவைக்களத்தினைப் புகழ்ந்து சீனதேசயாத்திரிகராகிய ஹியுன்சாங் எழுதியிருக்கிறார். ஹர்ஷனை வென்ற வீரனாகிய புலிகேசியைப் போர்க்களத்திலே வென்றபெருமை பல்லவப் படைகளின் சேனைத்தலைவராகிய சிறுத்தொண்டருக்குரியது. சிறுத்தொண்டர் சீகாழிப்பிள்ளையாருக்கு நண்பர்; பிள்ளையாரது அருண்மொழியமிழ்தினையுண்டு உடல்வலியும் மனவலியும் பெற்றவர். ஒளியிழந்த பவுத்த சமண மதங்கள் மக்களது மனத்தினைக் கலக்கிச் செயலின்மையிற் புகுத்தியகாலத்திலே நாயன்மாரும் ஆழ்வார்களும் தோன்றித் தமிழ்மக்களுக்கு எல்லா உடைமைகளிலும் மிக்க 'உள்ளமுடைமை' என்னும் ஊக்கத்தினை நல்கி நாடு நலமடையும்வழிகளிலே செலுத்தினார்கள். சம்பந்தரும் சுந்தரரும்

ஆண்டில் இளையாராயினும் செயற்கருஞ் செயல்களைச் செய்து முடித்த பெரியாரானவர். மன்னர்களோடு நட்புரிமையுடையாராய் இவ்விருவரும் செய்த 'அரசியற்கிளர்ச்சி'யும் அதனால் எய்திய பயனும் பதினெண்காம் நூற்றாண்டுவரையும் நாட்டிற்கு ஆக்கமளித்தன. ஆண்டவனது திருவடிக்கன்பர் அவனது அருள்வலியினாலே உடல்வலியும், மனவலியும் எய்திச் செயற்கருஞ்செயல்களைச் செய்வார்களென்னும் உண்மையானது ஆழ்வார் நாயன்மாரது வரலாற்றினாலே தமிழ்நாடு எய்திய சிறப்பினை நோக்குமிடத்துத் தெளிவாகப் புலப்படுகிறது. ஆழ்வார் நாயன்மாருக்குப்பின் சைவ வைணவ ஆசாரியர்கள் தோன்றி அருண்மொழிகளைக் கோவைப்படுத்தியும், குருநிலையங்களை ஏற்படுத்தியும் தொண்டாற்றினர். அங்ஙனமாயினும் முன்னோராகிய பெரியோர் உலகிற்கு அளித்த தெய்வீக விடுதலையினைப் பின்னோர் அறிந்தும் அறியாமலும் எல்லைப்படுத்தினர். அதனை ஓர் எடுத்துக்காட்டினாலே சிறிது விளக்குவாம்.

* * *

தம்மை ஆண்டவனுக்கு மக்களாகவும், உற்ற நண்பராகவும், தொண்டராகவும், உடன் உழைப்பவராகவும் கருதிய மூதறிஞர் வகுப்புவேற்றுமைகாட்டாது 'எல்லோரும் ஓர்குலம்' என்னும் உண்மையினைக் கடைப்பிடித்து வாழ்ந்துவந்தனர். அவரது சீரிய ஒழுக்கமும் தெய்விகச்செயலும் நம் உள்ளத்தை உருக்கும்நீர்மைய. திருஞானசம்பந்தப்பிள்ளையார் கவுணியகுலத்தில் உதித்து வேத வேள்விகளைப் போற்றியவரெனினும் பாணராகிய திருநீலகண்டரையும் அவருடைய மனைவியாராகிய விறலியாரையும் தமது நட்புக்கு உரியாராக்கித் திருக்கோயில்களுக்கு உடனழைத்துச்சென்றனர். பிள்ளையார் பாடிய இசைத்தமிழ்த் தேவாரப்பதிகங்களைப் பாணரும் பாடினியாரும் இசையிலமைத்து அன்பருள்ளத்தை இன்புறுத்தினர். திருநீலநக்கநாயனாரது திருமனைக்குச்சென்றஞான்று, பிள்ளையார் அந்தணராகிய நீலநக்கரைநோக்கிப் பாணர்க்கும்

பாடினியார்க்கும் உள்மனையிலே இருக்கையமைத்துத்தரும்படி திருவாய்மலர்ந்தருளினார். நீலநக்கர் பெறற்கரும் விருந்தினராகிய பாணர்தலைவரது குலநலமாராயாது, பிள்ளையாரது திருவுள்ளக் கருத்திலும் ஒருபடி உயரவொழுகுவாராய் வேள்வித்தீயிருந்தமிகத் தூய மனைக்கட்டினகத்துப் பாணர்க்கும் பாடினியார்க்கும் இருக்கை யளித்தார். தீக்கடவுள் தொண்டர்செயலினைப் பாராட்டியதற் கறிகுறியாகத் தீ வலஞ்சுழித்து எழுந்தது. ஆண்டில் இளையராய் அறிவில் முதியரான பிள்ளையார் ஆண்டிலும் அறிவிலும் முதியரான திருநாவுக்கரசரை 'அப்பரே' என அழைத்தார். அன்பு கனிந்த இவ்வுரிமைச்சொல் தவமுதியாரது திருநாமங்களுள் ஒன்றாக இன்றுவரையும் நிலைபெற்றது. நம்மாழ்வாரைப்போல அப்பரும் வேளாண்குலத்தில் உதித்தவர். ஆண்டவன் திருவடிநீழலை அடையும்பொழுது அப்பருக்கு வயது எண்பத்தொன்று. சம்பந்தப் பிள்ளையார் நிலவுலகில்வாழ்ந்தது ஈரெட்டாண்டு எல்லையாகும். எழுபதாண்டின்மிக்க முதியவரும் ஏழாண்டுப்பாலகரும் முதன்முத லிலே ஒருவரையொருவர் கண்ட காட்சி படிப்போர்சிந்தையை யுருக்கும்நீர்மையது. அந்தணர்குலத்தவராகிய அப்பூதியடிகள் வேளாண்குலத்தவராகிய அப்பரை வழிபடுகடவுளாகச் சிந்தையுள் வைத்துப் பெறற்கரும்பேற்றினை யடைந்தார். அந்தணராகிய மதுரகவியார் வேதந்தமிழ்செய்த மாறனாகிய நம்மாழ்வாரையன்றி வேறு தெய்வத்தை அறியேனென அழுகிய சொற்பாடல் பத்தி னால் நமக்கு அறிவுறுத்துகின்றார். பாணர்குலத்தில் உதித்த திருப்பா ணாழ்வார் அந்தணமுனிவர்தோளிலேறிவந்து திருமுன்னிலைக்குவர வேண்டுமென்பது திருவரங்கத்தம்மானது திருவுள்ளக்கருத் தாயிற்று. சுந்தரமூர்த்திநாயனாருடைய நண்பராகிய சேரமான் பெருமாள் திருநீற்றுப்பொலிவினைக்கண்டு வண்ணான்முன்னிலை யிலே தலைவணங்கினார். இத்தகைய உளப்பாங்கு பெரியோருக்கு அண்மையாண்காலத்திலிருந்த ஆசாரியரிடத்தும் அமைந்திருந்தது. பதின்மூன்றும் நூற்றாண்டிலே சகலாகமபண்டிதராக விளங்கிய

அருணந்திசிவாசாரியர் வேளாண்குலத்து மெய்கண்டதேவரைத் தமக்குக் குருவாகக்கொண்டார். அம்மரபில் நான்காங்குரவராகிய உமாபதிசிவாசாரியர் தம் உறவினரால் ஒதுக்குண்டு தில்லை நகர்ப்புறத்திலே கொற்றவன்குடியில் வதிந்தார். இவர் பெற்றான் சாம்பானுக்குப் 'பேதமறத் தீக்கைசெய்து' உண்மைஞானத்தை உணர்த்தினார். இராமாநுஜரது சீரிய உளப்பாங்கினை உலகம் நன்கு அறியும். தாம் நரகம்புகினும், உலகம் உய்தல்வேண்டும் என்னும் கருத்தினோடு கோபுரத்தின்மீதுநின்று மறைமொழியை அனைவர்க்கும் உணர்த்தினார். இவரது அருட்கடைக்கண்ணோக்கின்லே தீண்டாதாரும் பிறரும் உயர்வெய்தினர். இவரது போதனைகள் வடநாட்டிற் பரவியபோது அங்குள்ள பெரியாரும் சாதிக்கட்டுப் பாட்டினைத் தகர்த்தெறிந்து சமயவுண்மைகளை அனைவர்க்கும் உரிமையாக்கினர்.

* * *

நாயன்மாரதுசெல்வாக்குத் தென்னாட்டோடு நின்றுவிட்டது. வடக்கே காசுமீரம், நேபாளம், திபேத்து நாடுகளிலே சைவம் முன்பே நிலைத்திருந்தது. மெய்கண்டதேவருக்கு உண்மையுணர்த்திய பரஞ்சோதிமுனிவர் திபேத்துநாட்டிலுள்ள திருக்கைலாய மலையினின்றும் தென்னாட்டுக்குச் சென்றதாகக் கூறுவர். வடநாட்டிலெழுந்த பாசுபத, காபாலிக, மாவிரத சைவநெறிகள் நாயன்மார்காலத்திலே தமிழ்நாட்டில் நிலைபெற்றிருந்தன. அக்காலத்திற்கு முற்பட்டகாலத்திலே தமிழ்நாட்டில் வாழ்ந்தவராகக்கருதப்படும் திருமூலநாதர் நாதயோகிகள்கூட்டத்து முதற்குரவராக இருக்கலாம். இவரும் வடநாட்டிலிருந்து தெற்கே சென்றவர். சைவாகமங்கள் இருபத்தெட்டு என்னுந் தொகையினவாக வடமொழியில் உள்ளன. ஆலயஅமைப்பு வழிபாட்டுமுறை யென்னும் இவற்றை விரித்துக்கூறும் ஆகமங்களுட் சில கௌடதேசத்துப் பிராமணரைக் குறிப்பிடுகின்றன. சோழமன்னர்கள் அளித்த சாசனங்கள் சிலவற்றிலும் கௌடப்பிராமணர் குறிப்பிடப்பட்டனர்.

இவ்வாறு நோக்கும்போது தென்னாட்டுச் சைவம் வடநாட்டினை நாடிநின்றதென்னும் உண்மை வெளியாகின்றது. நாயன்மாரது அருண்மொழிகள் ஒருபுறமாக வடநாட்டு வைதிக தாந்திரிகக் கொள்கைகள் மற்றொருபுறமாகநின்று தென்னாட்டுச் சைவத்தை வளர்த்தன. தென்னாட்டு வைணவமோவென்றால் ஆழ்வார்களாகிய ஊற்றினின்று உதித்து அன்புவெள்ளம்பெருக்கி வடக்குநோக்கி அலையெறிந்துபாய்ந்து பாரதநாடுமுழுவதும் பரவியது. முன்னாளிலே பகீரதர் என்னும் பெரியார் கங்கையாகிய வானதியினைப் பூவுலகிற்குக் கொணர்ந்தாரெனப் புராணங் கூறும். இராமாநுஜமுனியாகிய பகீரதர் தென்னாட்டுத் தெய்வக் காவிரிவெள்ளத்தினை வடநாட்டுக் கங்கையிலே கலக்குமாறுசெய்தார். இத்தகைய கலப்புக்கங்கைநதி யூற்றெடுக்கும் திருமலைக்கும் சென்றுசேரும் கடலுக்கும் இடையே கிடந்த பலவிடங்களிலும் நிகழ்ந்தது. கலப்பினால் ஏற்பட்ட அன்புவெள்ளம் பாரதநாட்டின் மேற்குத்திசையிலும் பரவியது. மும்மையும் செம்மைவாய்ந்த இப்பாரதநாட்டிலே அரியின் திருநாமம் ஆயிரமும் யாங்கணும் முழங்குவவாயின.

௨

கடவுள் துணை.


# செந்தமிழ்.

தொகுதி—௪௰.] சித்திரபானு-ஹு மார்கழி மீ [பகுதி – ௨.

Vol. 40. December-1942 January-1943 No. 2.


# இசைக்கிரமம்




சுவாமி விபுலாநந்தர்



(39-ஆம் தொகுதியின் ௫௨௧-ஆம் பக்கத் தொடர்ச்சி)


பண்டையோர்கண்ட இருபத்திரண்டு சுருதிகளுக்கும் அமைந்த நரம்புநீளங்கள் அசைவெண்விகிதங்கள் என்னுமிவற்றைக் கணித்தறியும் முறையினை ஆராய்ந்து காணப்புகுவாம்.

நரம்புக்கருவிகளிலே விசித்துக்கட்டப்பட்ட நரம்பானது இயக்கமுறும்பொழுது ஒரு பிழம்பாக இயங்குதலோடு பின்னமாகவும் இயங்குமெனப் பூதநூலோர் முடிவுசெய்துள்ளார்.

தம்புரு (தம்பூரா) என்னும் வாத்தியத்திலே கட்டப்பட்ட நான்கு நரம்புகளுள் ஒன்று ஒருபிழம்பாக இயங்கும்போது மந்தர ஷட்ஜம் (மெலிவு இளி) என்னும் சுவரத்தைத் தருகின்றது. இந் நரம்புதானே செம்பாலாக இயங்கி மத்திய ஷட்ஜம் (சமன் இளி) என்னும் சுவரத்தையும், வாரமாக இயங்கித் தார ஷட்ஜம் (வலிவு இளி) என்னும் சுவரத்தையும் தரும். ஒருபிழம்பினை இருசமகூறு செய்துபெற்ற ஒருகூறு செம்பால் எனப்படும்; நான்கு சமகூறு செய்துபெற்ற ஒருகூறு வாரம் எனப்படும். அங்ஙனமாதலிற்

செம்பாலின் செம்பால் வாரம் என்பது தெளிவாகின்றது. எட்டுச் சமகூறுசெய்துபெற்ற ஒருகூறு வாரச்செம்பால் எனவும், பதினாறு சமகூறுசெய்துபெற்ற ஒருகூறு வாரவாரம் எனவும் வழங்குதற்குரிய. மூன்று சமகூறுசெய்துபெற்ற ஒருகூற்றினை முப்பால் எனவும், ஐந்து சமகூறுசெய்துபெற்ற ஒருகூற்றினை ஐம்பால் எனவும், ஏழுசமகூறுசெய்துபெற்ற ஒருகூற்றினை எழுபாலெனவும் வழங்குவாம். முப்பாற் செம்பால், முப்பால் வாரம், ஐம்பாற் செம்பால், ஐம்பால் வாரம் என்பன முறையே ஆறிலொன்று, பன்னிரண்டிலொன்று, பத்திலொன்று, இருபதிலொன்றினைக்குறித்து நிற்பனவென்பது வெளிப்படை.

மந்தரஷட்ஜநரம்பு முப்பாலாக இயங்குமிடத்து மத்தியபஞ்சமம் (சமன்றாத்தம்) பிறக்கும். மத்தியபஞ்சமநரம்பின் இரட்டிநீளமுள்ள நரம்பிலே மந்தரபஞ்சமந்தோன்றுமாதலின் மந்தரஷட்ஜநரம்பின் முப்பாலில் இருபாலிலே மந்தரபஞ்சமந்தோற்றுமென்பது தெளிவாகின்றது.

மந்தரஷட்ஜநரம்பு ஐம்பாலாக இயங்கும்போது தாரஸ்தாயீயில் (வலிவுத்தானத்தில்) அமைந்த அந்தரகாந்தாரம் தோற்றும். ஐம்பாலில் இருபாலிலே மத்தியஸ்தாயீ (சமன்தானத்து) அந்தரகாந்தாரமும், ஐம்பாலில் நாற்பாலிலே மந்தரஸ்தாயீ (மெலிவுத்தானத்து) அந்தரகாந்தாரமும் தோற்றுவ.

மந்தரஷட்ஜநரம்பு ஆறிலொருகூறாக, அஃதாவது முப்பாற்செம்பாலாக இயங்கும்போது தாரஸ்தாயீ (வலிவுத்தானத்துப்) பஞ்சமம் தோன்றும். எழுபாலாக இயங்கும்பொழுதுதோன்றும் சுவரம் பண்டையோர்கண்ட இருபத்திரண்டுசுருதியில் அடங்காது. அவ்வாறே பதினொன்றின்பால் பதின்மூன்றின்பால் பதினான்கின்பால் என்னும் இவையும் அடங்கா. எட்டின்பாலாகிய வார[illegible]ர ஷட்ஜத்தைத் தரும். ஒன்பதின்பால் அதிதா

(சதுசுருதி) ரிஷபத்தைத் தரும். அதிதாரம் இரட்டித்த நரம்புநீளம் தாரசுவரத்தையும், அஃது இரட்டித்த நரம்புநீளம் மத்தியசுவரத்தையும், அஃது இரட்டித்த நரம்புநீளம் மந்தரசுவரத்தையும் தருவவாதலின், மந்தரசதுசுருதிரிஷபத்தின் நரம்புநீளம் ஒன்பதில் எட்டு ஆகும். பத்தின்பால் அதிதாரஸ்தாயியிலமைந்த அந்தரகாந்தாரத்தைத் தரும். பன்னிரண்டின்பால் அதிதாரஸ்தாயீ பஞ்சமத்தைத் தரும். பதினைந்தின்பால் அதிதாரஸ்தாயீக் காகலிநிஷாதத்தைத் தரும். பதினாறின்பால் அதியதிதார ஷட்ஜத்தைத் தரும். இதற்கப்பால் தோன்றுவன செவிவாயிலாக ஓர்ந்துணரற்பாலவல்லவாதலின் ஆராய்ச்சியுட்படா. நாம் மேலே கண்ட முடிபுகளை அட்டவணைப்படுத்துவாம்.

நரம்புநீள விகிதங்கள்

| சுவரம் / ஸ்தாயீ | ஷட்ஜம் | சதுசுருதி ரிஷபம் | அந்தர காந்தாரம் | பஞ்சமம் | காகலி நிஷாதம் |
|---|---|---|---|---|---|
| மந்தரம் ... | 1 | $\frac{8}{9}$ | $\frac{4}{5}$ | $\frac{2}{3}$ | $\frac{8}{15}$ |
| மத்தியம் ... | $\frac{1}{2}$ | $\frac{4}{9}$ | $\frac{2}{5}$ | $\frac{1}{3}$ | $\frac{4}{15}$ |
| தாரம் ... | $\frac{1}{4}$ | $\frac{2}{9}$ | $\frac{1}{5}$ | $\frac{1}{6}$ | $\frac{2}{15}$ |
| அதிதாரம் ... | $\frac{1}{8}$ | $\frac{1}{9}$ | $\frac{1}{10}$ | $\frac{1}{12}$ | $\frac{1}{15}$ |
| அதியதிதாரம் | $\frac{1}{16}$ | | | | |

மேலே கணித்துக்கண்ட சுவரங்களும், பண்டையோர் கண்டவற்றுள் அடங்காவென யாம் ஒதுக்கியனவும் ஆகிய அனைத்தும் ஒருபிழம்பாக இயங்கும் நரம்பு பின்னமாகவும் இயங்குதலினாலே பெறப்படுவ. இவற்றுள் ஷட்ஜசுவரங்கள் ஐந்தும் ஒருங்கிசைத்து ஷட்ஜசுவரமாகச் செவிக்குப் புலப்படுவ. அவற்றுக்

செம்பாலின் செம்பால் வாரம் என்பது தெளிவாகின்றது. எட்டுச் சமகூறுசெய்துபெற்ற ஒருகூறு வாரச்செம்பால் எனவும், பதினாறு சமகூறுசெய்துபெற்ற ஒருகூறு வாரவாரம் எனவும் வழங்குதற்குரிய. மூன்று சமகூறுசெய்துபெற்ற ஒருகூற்றினை முப்பால் எனவும், ஐந்து சமகூறுசெய்துபெற்ற ஒருகூற்றினை ஐம்பால் எனவும், ஏழுசமகூறுசெய்துபெற்ற ஒருகூற்றினை எழுபாலெனவும் வழங்குவாம். முப்பாற் செம்பால், முப்பால் வாரம், ஐம்பாற் செம்பால், ஐம்பால் வாரம் என்பன முறையே ஆறிலொன்று, பன்னிரண்டிலொன்று, பத்திலொன்று, இருபதிலொன்றினைக்குறித்து நிற்பனவென்பது வெளிப்படை.

மந்தரஷட்ஜநரம்பு முப்பாலாக இயங்குமிடத்து மத்தியபஞ்சமம் (சமன்துத்தம்) பிறக்கும். மத்தியபஞ்சமநரம்பின் இரட்டிநீளமுள்ள நரம்பிலே மந்தரபஞ்சமந்தோன்றுமாதலின் மந்தரஷட்ஜநரம்பின் முப்பாலில் இருபாலிலே மந்தரபஞ்சமந்தோற்றுமென்பது தெளிவாகின்றது.

மந்தரஷட்ஜநரம்பு ஐம்பாலாக இயங்கும்போது தாரஸ்தாயியில் (வலிவுத்தானத்தில்) அமைந்த அந்தரகாந்தாரம் தோற்றும். ஐம்பாலில் இருபாலிலே மத்தியஸ்தாயீ (சமன்தானத்து) அந்தரகாந்தாரமும், ஐம்பாலில் நாற்பாலிலே மந்தரஸ்தாயீ (மெலிவுத்தானத்து) அந்தரகாந்தாரமும் தோற்றுவ.

மந்தரஷட்ஜநரம்பு ஆறிலொருகூறாக, அஃதாவது முப்பாற்செம்பாலாக இயங்கும்போது தாரஸ்தாயீ (வலிவுத்தானத்துப்) பஞ்சமம் தோன்றும். எழுபாலாக இயங்கும்பொழுதுதோன்றும் சுவரம் பண்டையோர்கண்ட இருபத்திரண்டுசுருதியில் அடங்காது. அவ்வாறே பதினொன்றின்பால் பதின்மூன்றின்பால் பதினான்கின்பால் ஒன்றும் இவையும் அடங்கா. எட்டின்பாலாகிய வாரச்செம்பால் அதிதார ஷட்ஜத்தைத் தரும். ஒன்பதின்பால் அதிதார

(சதுசுருதி) ரிஷபத்தைத் தரும். அதிதாரம் இரட்டித்த நரம்பு நீளம் தாரசுவரத்தையும், அஃது இரட்டித்த நரம்புநீளம் மத்திய சுவரத்தையும், அஃது இரட்டித்த நரம்புநீளம் மந்தரசுவரத்தையும் தருவவாதலின், மந்தரசதுசுருதிரிஷபத்தின் நரம்புநீளம் ஒன்பதில் எட்டு ஆகும். பத்தின்பால் அதிதாரஸ்தாயியிலமைந்த அந்தரகாந்தாரத்தைத் தரும். பன்னிரண்டின்பால் அதிதாரஸ்தாயீ பஞ்சமத்தைத் தரும். பதினைந்தின்பால் அதிதாரஸ்தாயீக் காகலிநிஷாதத்தைத் தரும். பதினாறின்பால் அதியதிதார ஷட்ஜத்தைத் தரும். இதற்கப்பால் தோன்றுவன செவிவாயிலாக ஓர்ந்துணரற்பாலவல்லவாதலின் ஆராய்ச்சியுட்படா. நாம் மேலே கண்ட முடிபுகளை அட்டவணைப்படுத்துவாம்.

நரம்புநீள விகிதங்கள்

| சுவரம் / ஸ்தாயீ | ஷட்ஜம் | சதுசுருதி ரிஷபம் | அந்தர காந்தாரம் | பஞ்சமம் | காகலி நிஷாதம் |
|---|---|---|---|---|---|
| மந்தரம் ... | 1 | $\frac{8}{9}$ | $\frac{4}{5}$ | $\frac{2}{3}$ | $\frac{8}{15}$ |
| மத்தியம் ... | $\frac{1}{2}$ | $\frac{4}{9}$ | $\frac{2}{5}$ | $\frac{1}{3}$ | $\frac{4}{15}$ |
| தாரம் ... | $\frac{1}{4}$ | $\frac{2}{9}$ | $\frac{1}{5}$ | $\frac{1}{6}$ | $\frac{2}{15}$ |
| அதிதாரம் ... | $\frac{1}{8}$ | $\frac{1}{9}$ | $\frac{1}{10}$ | $\frac{1}{12}$ | $\frac{1}{15}$ |
| அதியதிதாரம் | $\frac{1}{16}$ | | | | |

மேலே கணித்துக்கண்ட சுவரங்களும், பண்டையோர் கண்டவற்றுள் அடங்காவென யாம் ஒதுக்கியனவும் ஆகிய அனைத்தும் ஒருபிழம்பாக இயங்கும் நரம்பு பின்னமாகவும் இயங்குதலினாலே பெறப்படுவ. இவற்றுள் ஷட்ஜசுவரங்கள் ஐந்தும் ஒருங்கிசைத்து ஷட்ஜசுவரமாகச் செவிக்குப் புலப்படுவ. அவற்றுக்

கடுத்தபடியாகப் பஞ்சமம் நான்கும் ஒருங்கிசைத்துப் பஞ்சமமாகச் செவிக்குப் புலப்படுவ. ஆகையினாலே ஷட்ஜத்தினின்று பஞ்சமம் தோற்றுமென இசையாராய்ச்சிசெய்த எல்லாத்தேசத்தினரும் கைக்கொண்டனர். பஞ்சமத்தின் பஞ்சமமாக அமைந்தது சது சுருதிரிஷபம் (விளரிநரம்பு); அங்ஙனமாயினும் ஒருபிழம்பாகவும் பின்னமாகவும் இயங்கும் நரம்பிலே பஞ்சமத்திற்கு அடுத்தபடியாக அந்தரகாந்தாரம் (தாரநரம்பு) செவிக்குப்புலப்படும்; அதன்மேல் காகலிநிஷாதமும் (உழைநரம்பும்) சதுசுருதி ரிஷபமும் புலப்படுவ. இருபத்திரண்டுசுருதியுள் அடங்காவென ஒதுக்கியனவும் இசையுட் கலந்துநிற்பவாதலின், நரம்பினியக்கத்தினால் ஏற்படும் சுவரம் கலப்புச்சுவரமாம் என்பது தெளிவாகின்றது.

நரம்பினியக்கத்தினாலே சூழவிருக்கும் பவனத்திலெழுகின்ற சிற்றலைகள் செவியினைச்சென்று சேர்தலினாலே இசைச்சுவரங்கள் செவியிந்திரியத்திற்குப் புலப்படுகின்றன. நரம்பின் நீளங்குறுகச் சிற்றலைகளின் தொகை பெருகும். முழுநரம்பினியக்கத்தினாலே ஒரு செக்கண்டு என்னும் காலவெல்லையிலே 256 சிற்றசைவுகள் தோற்றுமிடத்து அதே காலவெல்லையிலே செம்பாலினியக்கத்தினாலே 256 இன் இரட்டியாகிய 512 சிற்றசைவுகளும் வாரத்தின் இயக்கத்தினாலே 256 இன் நான்மடியாகிய 1024 சிற்றசைவுகளும் தோற்றுவன. முழுநரம்பு இரட்டிக்குமிடத்து அசைவுத்தொகை செம்பாலாகுமாதலின் 128 சிற்றசைவுகள் தோற்றுவன. மத்திய ஷட்ஜத்தின் அசைவெண் 256 ஆயின், தாரஷட்ஜம் 512, அதிதாரஷட்ஜம் 1024, மந்தரஷட்ஜம் 128 என அசைவெண் பெறுவ. மந்தரஷட்ஜத்தின் அசைவெண்விகிதம் 1 என நின்றால் மத்திய ஷட்ஜம் 2, தாரஷட்ஜம் 4, அதிதாரஷட்ஜம் 8 என அசைவெண் விகிதங்கள் அமைவன. நரம்புநீளவிகிதத்தின் தலைகீழெண் அசைவெண்விகிதமாம் என்னும் விதி மேற்கண்ட முடிபுகளால் அமை

கின்றது. மேலே நாம் கணித்தறிந்த நரம்புநீளவிகிதங்களுக்கு இயைந்த அசைவெண்விகிதங்களை அட்டவணைப்படுத்துவாம்.

அசைவெண்விகிதங்கள்

| ஸ்தாயீ \ சுவரம் | ஷட்ஜம் | சதுசுருதி ரிஷபம் | அந்தர காந்தாரம் | பஞ்சமம் | காகலி நிஷாதம் |
|---|---|---|---|---|---|
| மந்தரம் ... | 1 | $\frac{9}{8}=1\frac{1}{8}$ | $\frac{5}{4}=1\frac{1}{4}$ | $\frac{3}{2}=1\frac{1}{2}$ | $\frac{15}{8}=1\frac{7}{8}$ |
| மத்தியம் ... | 2 | $\frac{9}{4}=2\frac{1}{4}$ | $\frac{5}{2}=2\frac{1}{2}$ | 3 | $\frac{15}{4}=3\frac{3}{4}$ |
| தாரம் ... | 4 | $\frac{9}{2}=4\frac{1}{2}$ | 5 | 6 | $\frac{15}{2}=7\frac{1}{2}$ |
| அதிதாரம் ... | 8 | 9 | 10 | 12 | 15 |
| அதியதிதாரம் | 16 | | | | |

யாம் கொள்ளாதொதுக்கிய எழுபால், பதினொன்றின்பால், பதின்மூன்றின்பால், பதினான்கின்பால் என்பவும், பதினாறின்மேல் இருபதுவரையும் அமைந்த பதினேழின்பால், பதினெட்டின்பால், பத்தொன்பதின்பால், இருபதின்பால் என்பவும் எவ்வெவ்விடத்து அமைந்துநிற்பனவென்பதை மேற்றந்த அட்டவணையினுதவியினால் அறிதல்கூடும். 18 அதியதிதாரசதுசுருதிரிஷபமாகும், 20 அதியதிதாரஅந்தரகாந்தாரமாகும். 17 அதியதிதாரஷட்ஜத்திற்கும் அதியதிதாரசதுசுருதிரிஷபத்திற்குமிடையில் நிற்கும், மந்தரஸ்தாயீயில் இது $\frac{17}{16}$ என்னும் அசைவெண்விகிதம் பெறும். 19 அதியதிதாரசதுசுருதிரிஷபத்திற்கும் அதியதிதார அந்தரகாந்தாரத்திற்கும் இடையில் நிற்கும், மந்தரஸ்தாயீயில் இது $\frac{19}{16}$ என்னும் அசைவெண்விகிதம் பெறும். 13 அதிதாரபஞ்சமத்திற்கும் அதிதாரகாகலிநிஷாதத்திற்குமிடையில் நிற்கும், மந்தரஸ்தாயீயில்

இது $\frac{13}{8}$ என்னும் அசைவெண்விகிதம் பெறும். 11 அதிதார அந்தரகாந்தாரத்திற்கும் அதிதாரபஞ்சமத்திற்கும் இடையில் நிற்கும், மந்தரஸ்தாயீயில் இது $\frac{11}{8}$ என்னும் அசைவெண்விகிதம் பெறும். 14 உம் 7 உம் முறையே அதிதாரஸ்தாயீயிலும் தாரஸ்தாயீயிலும் பஞ்சமத்திற்கும் காகலிநிஷாதத்திற்கும் இடையே நிற்பன, மந்தரஸ்தாயீயில் இவை $\frac{7}{4}$ என்னும் அசைவெண்விகிதம் பெறுவ. மந்தர ஸ்தாயீயில் புதுவதாகத்தோன்றிய சுவரங்களின் அசைவெண்விகிதங்களை முன்னின்றவற்ரோடுசேர்த்து ஒரு தொடராகவைக்குமிடத்து 1, $\frac{17}{16}=1\frac{1}{16}$, $\frac{9}{8}=1\frac{1}{8}$, $\frac{19}{16}=1\frac{3}{16}$, $\frac{5}{4}=1\frac{1}{4}$, $\frac{11}{8}=1\frac{3}{8}$, $\frac{3}{2}=1\frac{1}{2}$, $\frac{13}{8}=1\frac{5}{8}$, $\frac{7}{4}=1\frac{3}{4}$, $\frac{15}{8}=1\frac{7}{8}$ என்னும் எண்கள் பெறப்படுகின்றன. இவையனைத்தும் 1 இல் மிக்கும் 2 இல் குறைந்தும் நிற்கக் காண்கின்ரேம். மந்தரஷட்ஜத்தின் அசைவெண் 128 எனக்கொண்டு மேல்நின்ற மந்தரஸ்தாயீச்சுவரங்களின் அசைவெண்களைக் கணிக்குமிடத்து, 128, 136, 144, 152, 160, 176, 192, 208, 224, 240 என்னும் அசைவெண்கள் பெறப்படுகின்றன. இவையனைத்தும் மத்தியஷட்ஜத்தின் அசைவெண்ணுகிய 256 இற் குறைந்தும் மந்தரஷட்ஜத்தின் அசைவெண்ணுகிய 128 இன் மிக்கும் நின்றன. மந்தரஸ்தாயீ அசைவெண்விகிதங்களனைத்தும் 1 இற்கும் 2 இற்கும் இடைநின்றன. மேலே தந்தவற்றை இரட்டித்துப்பெற்ற அசைவெண்களாகிய 256, 272, 288, 304, 320, 352, 384, 416, 448, 480 என்பன மத்தியஸ்தாயீயில் மேற்கண்ட சுவரங்கள்பெறும் அசைவெண்களாம். இவை மத்தியஷட்ஜத்தின் அசைவெண்ணுகிய 256 இன் மிக்கும் அதன் இரட்டியாய்த் தாரஷட்ஜத்தின் அசைவெண்ணுகிய 512 இற் குறைந்தும் நின்றன. மத்தியஷட்ஜ அசைவெண்விகிதத்தை 1 எனக்கொண்டால் தாரஷட்ஜ அசைவெண்விகிதம் 2 ஆகும். மேற்காட்டிய சுவரங்களின் அசைவெண்விகிதங்களனைத்தும் 1 இற்கும் 2 இற்கும் இடைநிற்பன. எந்த ஸ்தாயீயிலும் ஆதாரஷட்ஜத்தின் அசைவெண்விகித

தினை 1 எனக்கொள்ளுமிடத்து அந்த ஸ்தாயீயின் சுவரங்களினைத் திற்கும் அமைந்த அசைவெண்விகிதங்களினைத்தும் 1 இன் மிக்கும் 2 இற் குறைந்தும் நிற்பன. ஒரு ஸ்தாயீயிலமைந்த சுருதிகள் 22 என்பது வடமொழி தென்மொழி இசைநூல்களிற் கண்ட முடிபு. கணிதமுறையாக யாம் செய்த ஆராய்ச்சியினாலும் அம்முடிபே பெறப்பட்டது. அரைச்சுருதிகள் 42 என ஆராய்ச்சியாற் பெறப் படுகின்றது. இவற்றின் அசைவெண்விகிதங்களே உரியவிடத்திற் றருவாம். மேல்நாட்டு இசைமரபைத்தழுவிச் சுருதி 24, அரைச் சுருதி 48, காற்சுருதி 96 எனக்கொண்டாரும் பிறவாறுகொண்டா ரும் உளர். யாவர் எவ்வாறுகொள்ளினும் ஒரு ஸ்தாயீயில் (தானத் தில்) உள்ள எல்லாச் சுருதிகளின் அசைவெண்விகிதங்களும் 1 இன் மிக்கும் 2 இற் குறைந்தும் நிற்பன வென்பது அனைவர்க்கும் ஒப்ப முடிந்த முடிபு ஆகும்.

1, 2 என்னும் எண்களின் இடைவெளியினை நுணித்துநோக்கு தற்குச் சாதாரணஎண் கணிதமுறைகள் வாய்ப்புடையனவல்ல வாதலின் லகுவெண் கணிதமுறையினைக் கைக்கொள்வது இன்றி யமையாததாகின்றது. 'செந்தமிழ்' 38-ஆந்தொகுதி 11-ஆம்பகுதி யில் (விஷு ஆடி புரட்டாசிமீ வெளியீட்டில்) 'எண்ணலளவை' என்னும் தலைப்பெயர்க்கீழ் (Logarithm என்னும்) லகுவெண்ணைக் குறித்துப் பொதுவகையாகக்கூறினும். எண்கணிதப்பெருக்கல், பிரித்தல் இலகுவெண்கணிதத்தில் முறையே கூட்டல் கழித்தல் ஆகுமெனக் காட்டினும். மேலே மந்தரஸ்தாயீயில்நின்ற $1, \frac{9}{8}, \frac{5}{4}, \frac{3}{2}, \frac{15}{8}$ என்னும் ஐந்து அசைவெண் விகிதங்களுக்கும் அமைந்த லகுவெண் களைக் காண்பாம். 1 இன் லகுவெண் வெற்றிலக்கம் 0, லகு 9= ·9542, லகு 8=·9030, ஆதலினாலே லகு $\frac{9}{8}$=·9542—·9030= ·0512. லகு 5=·6990, லகு 4=·6020, ஆதலினாலே லகு $\frac{5}{4}$=·0970 லகு 3=·4771, லகு 2=·3010, ஆதலினாலே லகு $\frac{3}{2}$=·1761. லகு 15 = 1·1761, லகு 8 = ·9030, ஆதலினாலே லகு $\frac{15}{8}$ = ·2731.

மேலே யாம் எடுத்தாண்ட லகுவெண் மதிப்புக்களெல்லாம் குறித்த 'எண்ணலளவை' என்னும் பொருளுரையினின்று எடுக்கப்பட்டன. பிறவற்றைப்போலவே லகு 1 நான்கிலக்கம் பெற்றுநிற்குமாறு அதன் மதிப்பை 0000 என நான்கு வெற்றிலக்கங்களாற்குறித்து மேற்கண்ட முடிபுகளை அட்டவணைப்படுத்துவாம்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| அசைவெண்விகிதம் | 1 | $\frac{9}{8}$ | $\frac{5}{4}$ | $\frac{3}{2}$ | $\frac{15}{8}$ | 2 |
| இலகுவெண் | ·0000 | ·0512 | ·0970 | ·1761 | ·2731 | ·3010 |

எல்லாச்சுருதிகளின் இலகுவெண்களும் வெற்றிலக்கத்திற்கும் ·3010-க்கும் இடைநிற்பன.

மேனாட்டார் பன்னிரண்டு சுவரஸ்தானங்களையும் ஒத்தநீர்மையவாக்கி ஒரு ஸ்தானக்கு 100 சென்ற் (Cent) ஆக ஒரு ஸ்தாயீயில் 1200 சென்ற் கொண்டார்கள். ஈழநாட்டினர் ஒருரூபாவில் 100 சதமென நாணயமாற்றுமுறைகொள்வார். ஒரு சுவரஸ்தானம் ஒருரூபாவெனவைப்பின் சென்ற் சதமாகும். ஆதலினாலே சென்ற் என்பதைச் சதமென வழங்குவாம். மேனாட் டிசைச்சதக்கணக்கு லகுவெண் நிலைக்களமாகப்பிறந்தது. லகு 2 ஆகிய ·3010 இனை 1200 சதமாக்குதற்கு அதனை 3986 இனாற் பெருக்கவேண்டும்.

| | |
|---|---|
| ·3010× 6= 1·8060 | ......................1·8060 |
| ·3010× 10= 3·010 | ·3010× 80= 24·080 |
| ·3010× 100= 30·10 | ·3010× 900=270·90 |
| ·3010×1000=301·0 | ·3010×3000=903·0 |
| | 1199·7860 |

தசமப்புள்ளியையடுத்துவரும் இலக்கம் 5 அல்லது 5 இன் மேற்பட்டுநிற்பின் ஒன்றன் தானத்திலக்கத்திற்கு 1 கூட்டிப் புள்ளியையடுத்துவரும் எல்லா இலக்கங்களையும் நீக்கிவிடலாம். அவ்வாறு செய்யக்கிடைப்பது 1200 சதம்.

இவ்வாறே பிற அசைவெண் விகிதங்களது சதவிலக்கங்(சென்ற்) களையும் கணித்து அட்டவணைப்படுத்துமிடத்து அவை,

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| அசைவெண் விகிதம் | 1 | $\frac{9}{8}$ | $\frac{5}{4}$ | $\frac{3}{2}$ | $\frac{15}{8}$ | 2 |
| சதவிலக்கம் | 0000 | 204 | 386 | 702 | 1088 | 1200 |

என நிற்பன. கணிதமுறையினாற் பெறப்படுவதும், மேனாட்டார் பெரிதும் வழங்குவதுமாகிய சதவிலக்க (சென்ற்) முறையினைத் தென்னாட்டிசைவாணரும் எளிதின் உணர்ந்து வழங்குதல்கருதி ஒரு கருவிச்சூத்திரம் அமைத்துத்தருவாம்.

சதவிலக்கச்சூத்திரம்

ஓஓஓஓ ஒன்றின்பாலே
கோனோர்நாதம் கூறுமிரண்டே
வானோர்வையம் மன்னும் மூன்றே
போதோநீதா புல்லும் நான்கே
பூவேயென்றுள் பொற்புடையைந்தே
நாளோரந்தி நல்கியதாறே
மையூடிப்பி வரினஃதேழே
ஓரோரூழி யொன்றியதெட்டே
கீழோர்மேலில் கேளொன்பதுவே
ஊடேவைம்மின் ஒப்புறுபத்தே
நல்குமத்தீ நவில்பன்னொன்றே
யாரோநின்றீர் கூர்பனிரண்டே
கோண்டீர்மீளீர் பன்மூன்றுகும்
பைங்கூழுண்டீர் பத்தொடுநாலே
வேறேகூறீர் சேர்பதினைந்தே
கோடோடேகீர் கொள்பதினாறே
உள்ளோவைத்தீர் ஓர்பதினேழே
நீரோமோதும் மூவாறுகும்
எல்லேபோடும் சொல்பத்தொன்பான்
கூடேகட்டும் நாலைந்தென்ப

ஒன்றுமுதல் இருபதுவரையுமுள்ள எண்களின் வருவெண்களைத் தனித்தனி 3986 இனுற் பெருக்கிப்பெற்ற பேறுகிய சதவிலக்கங்கள் மேலேதந்த கருவிச்சூத்திரத்திற் காணப்படுவன.

தமிழிலே சோதிடநூல் வகுத்துரைத்த அறிஞர் கைக்கொண்ட மரபினைப் பின்பற்றி எண்கள் 'வாக்கியங்'களில்வைத்துக் கூறப்பட்டன. வாக்கியங்களை எண்ணுக்குமிடத்துத் தனிமெய்கள் மதிப்புப்பெறு. உயிர்கள் தனித்தும் மெய்யொடு மருவியும்நின்று மதிப்புப்பெறுமிடத்து ஒகர ஓகாரங்கள் வெற்றிலக்கம் (0) ஆக மதிக்கப்படுவ. அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ என்னும் ஒன்பதும் முறையே 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9 என்னும் மதிப்பினைப்பெறுவ. வாக்கியங்களில் ஒன்றின்தானம் பத்தின்தானம் நூற்றின்தானம் ஆயிரத்தின்தானம் என எண்கள் நிற்பனவாதலின் அவைதம்மை எதிர் நிரலாக எழுதி ஆயிரத்தின்தானம் நூற்றின்தானம் பத்தின்தானம் ஒன்றின்தானமென நின்ற எண்மானமுறையில் வைக்கவேண்டும். இளமையிற்கற்ற சூடாமணியுள்ளமுடையான் நினைவினைக்கொண்டு மேற்போந்தவற்றை எழுதினும். சோதிடநூன்மரபு வேறுயிருப்பினும் மேலேகாட்டிய முறையினையே இவ்வாராய்ச்சிக்குரியதென அறிஞர் ஏற்றுக்கொள்வாராக. இம்முறையினின்று சூத்திரத்துட் பொருளை அட்டவணைப்படுத்தி நிறுவுவாம். சூத்திரம் நினைவில் நிற்குமெனில் அட்டவணையினை நோக்காமலே சுருதிகளுக்கியைந்த சதவிலக்கங்களை எளிதிற் பெற்றுக்கொள்ளலாம்.

| எண் | வாக்கியம் | சதவிலக்கம் |
|---|---|---|
| 1 | ஓஓஓஓ | 0000 |
| 2 | கோஞேர்நாதம் | 1200 |
| 3 | வாஞேர்வையம் | 1902 |
| 4 | போதோரீதா | 2400 |
| 5 | பூவேயென்றுள் | 2786 |

| | | |
|---|---|---|
| 6 | நாளோரந்தி | 3102 |
| 7 | மையூடிப்பி | 3369 |
| 8 | ஓரோரூழி | 3600 |
| 9 | கீழோர்மேவில் | 3804 |
| 10 | ஊடேவைம்மின் | 3986 |
| 11 | நல்குமத்தி | 4151 |
| 12 | யாரோநின்றீர் | 4302 |
| 13 | கொண்டீர்மீளீர் | 4440 |
| 14 | பைங்கூழுண்டீர் | 4569 |
| 15 | வேறேகூறீர் | 4688 |
| 16 | கோடோடேகீர் | 4800 |
| 17 | உள்ளோவைத்தீர் | 4905 |
| 18 | நீரோமோதும் | 5004 |
| 19 | எல்லைபோடும் | 5097 |
| 20 | கூடேகட்டும் | 5186 |

சதவிலக்கங்கள் லகுவெண் நிலைக்களமாகப் பிறந்தனவாத லின் அவற்றைப்போலவே சாதாரண எண்களின் பெருக்கல் பிரித்தல் சதவிலக்கங்களில் முறையே கூட்டல் கழித்தலாகும். உதாரணமாக 6 இன் சதவிலக்கம் 3 இன் சதவிலக்கத்தையும் 2 இன் சதவிலக்கத்தையும் கூட்டிப் பெறப்படுவது. 14 இன் சதவிலக்கம் 7 இன் சதவிலக்கத்தையும் 2 இன் சதவிலக்கத்தையும் கூட்டிப் பெறப்படுவது. இங்குத்தரப்படாத 21 இன் சதவிலக்கம் 7 இன் சதவிலக்கத்தையும் 3 இன் சதவிலக்கத்தையும் கூட்டிப்பெறப்படுவது. $\frac{4}{3}$ இன் சதவிலக்கம் 4 இன் சதவிலக்கத்திலிருந்து 3 இன் சதவிலக்கத்தைக் கழித்துப்பெறப்படுவது. 25 இன் சதவிலக்கம் 5 இன்

சதவிலக்கத்தை இருபடிவைத்துக் கூட்டிப்பெறப்படுவது. பிறவு மிவ்வாறே. பின்வருஞ் செய்கைமுறைகள் இதனைத் தெளிவு படுத்துவன.

$\frac{21}{20} = \frac{7\times3}{20}$ ஆதலின் $\frac{21}{20}$ இன் சதவிலக்கம் 3369+1902—5186 = 85 சதம் ஆகும்

$\frac{25}{24} = \frac{5\times5}{6\times4}$ ஆதலின் $\frac{25}{24}$ இன் சதவிலக்கம் 5572—5502 = 70 சதம் ஆகும்

இதனை மற்றொருவகையாகவும் நோக்கலாம்

$\frac{25}{24}=\frac{5}{4}\div\frac{6}{5}$. $\frac{5}{4}$ அந்தரகாந்தாரத்தின் அசைவெண்விகிதம். இதன் மதிப்பு 2786—2400=386 சதம்

$\frac{6}{5}$ சாதாரணகாந்தாரத்தின் அசைவெண்விகிதமாகும். இதன் மதிப்பு 3102—2786=316 சதம். இவற்றின் இடைவிகிதம் 386—316=70 சதம்.

$\frac{27}{25}=\frac{9}{5}\div\frac{5}{3}$. $\frac{9}{5}$ கைசிகிநிஷாதத்தின் அசைவெண்விகிதம். இதன் மதிப்பு 'ஈமேழார்மேலில்' என்னும் வாக்கியத்திலிருந்து 'பூவேயென்றாள்' என்னும் வாக்கியத்தைக்கழித்துப் பெறப்படுவது 3804 — 2786 = 1018 சதம்.

$\frac{5}{3}$ சதுசுருதிதைவதத்தின் அசைவெண்விகிதம். இதன் மதிப்பு 'பூவேயென்றாள்' என்னும் வாக்கியத்திலிருந்து 'வாஞோர்வையம்' என்னும் வாக்கியத்தைக் கழித்துப்பெறப்படுவது 2786 — 1902 = 884 சதம். இவற்றின் இடைவிகிதம் 1018—884 = 134 சதம்.

$\frac{27}{16} = \frac{9}{8}\times\frac{3}{2}$ ஆதலின் $\frac{27}{16}$ இன் சதவிலக்கம் $\frac{9}{8}$ இன் சதவிலக்கத்தையும் $\frac{3}{2}$ இன் சதவிலக்கத்தையும் கூட்டிப்பெறப்படுவது.

$\frac{9}{8}$ சதுசுருதிரிஷபத்தின் அசைவெண்விகிதம். இது 'ஓரோருழி' குறைந்த 'ஈமேழார்மேலில்' ஆகுமாதலின்

இதன் மதிப்பு 204 சதம். $\frac{3}{2}$ பஞ்சமசுவரத்தின் அசைவெண்விகிதம்; இதன் மதிப்புக் 'கோனோர் நாதம்' குறைந்த 'வானோர்வையம்' 702 சதம். ஆதலின் $\frac{27}{16}$ இன் மதிப்பு 702+204 = 906 சதம்.

$\frac{27}{16}$, $\frac{27}{25}$, $\frac{25}{24}$, $\frac{21}{20}$ என்னும் விகிதவெண்கள் முறையே 27: 16, 27: 25, 25: 24, 21: 20 என்னும் உருவமாகவும் எழுதப்படுவ.

இனி இருபத்திரண்டு சுருதிகளின் சதமதிப்புகளைக் காணப் புகுவாம். கணிதநூல் கருவியாக யாம் ஆராய்ந்துகண்ட இருபத்திரண்டு சுருதிகளின் அசைவெண்விகிதங்கள் பண்டைத்தமிழிசையாசிரியர் வகுத்தோதிய பாலைத்திரிபுகளுக்கும் வடமொழிப் பாதம்வகுத்த கிராமமூர்ச்சனைகளுக்கும் ஏற்புடையன. சாரங்கதேவருரைத்த சங்கீதரத்நாகர நூன்முடிபுகளுக்கும் பொருந்துவன. அகோபலபண்டிதரும் வேங்கடமகியும் கொண்ட சுருதிகள் பிறிதொரு மரபினைத் தழுவியன. அவைதம்மைத் தனியாக மற்றொருதருணத்தில் ஆராய்வாம்.

சுருதிகளைப் பிறப்பிக்கும் முறையினைச் 'சுருதிவீணை'யென்னும் சிறுநூலிலே சுருக்கமாகக் காட்டினும். யாம் எழுதிவரும் 'யாழ்நூலி'லே பெருக ஆராய்ந்திருக்கின்றும். 'செந்தமிழ்' அன்பர்கள்பொருட்டும், இம்முடிபுகள் இயற்றமிழ்வல்லாரிடையிலும் பரவவேண்டுமென்னும் பெருவிருப்பினுலும் அடுத்துவரும் 'செந்தமிழ்ப்பகுதியொன்றிலே இப்பொருளினைச் சுருக்கிவிளக்க எண்ணியிருக்கின்றும்.

இருபத்திரண்டுசுருதிகளிலே நட்பிற்பிறந்தன பதினொன்று, கிளையிற் பிறந்தன பதினொன்று. நட்பிற்பிறப்பினை வடநூலார் 'ஷட்ஜமத்திம சம்வாதித்வம்' என்பர், கிளையிற் பிறப்பினை 'ஷட்ஜ பஞ்சம சம்வாதித்வதம்' என்பர்.

இருபத்திரண்டின் அசைவெண் விகிதங்களையும் மேற்காட்டிய செய்கைமுறையின்படி ஒவ்வொன்றினுக்கும் கணித்துக்கண்ட சதவிலக்கங்களையும் கீழே தருகின்றோம். பிறவிவரங்களை மேற்குறித்தபடி மற்றொரு பகுதியிலே சுருக்கி விளக்குவாம்.

| நட்பு | | கிளை | |
|---|---|---|---|
| அசைவெண் விகிதம் | சதவிலக்கம் | அசைவெண் விகிதம் | சதவிலக்கம் |
| 256 : 243 | 90 | 16 : 15 | 112 |
| 10 : 9 | 182 | 9 : 8 | 204 |
| 32 : 27 | 294 | 6 : 5 | 316 |
| 5 : 4 | 386 | 81 : 64 | 408 |
| 4 : 3 | 498 | 27 : 20 | 520 |
| 45 : 32 | 590 | 64 : 45 | 610 |
| 40 : 27 | 680 | 3 : 2 | 702 |
| 128 : 81 | 792 | 8 : 5 | 814 |
| 5 : 3 | 884 | 27 : 16 | 906 |
| 16 : 9 | 996 | 9 : 5 | 1018 |
| 15 : 8 | 1088 | 243 : 128 | 1110 |

[தொடரும்]

---